உ

செந்திலாண்டவன் துணை

திருச்சிற்றம்பலம்

கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள்

அருளிச்செய்த

# கந்த புராணம்

(முதற்பகுதி)

*

நந்தன ஆண்டு கந்த சஷ்டி.

24—10—1952

*

ஸ்ரீ காசிமடம் :—: திருப்பனந்தாள்

திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்து வெளியீடு

உ

செந்திலாண்டவன் துணை

திருச்சிற்றம்பலம்

கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள்

அருளிச்செய்த

# கந்த புராணம்

[முதல் மூன்று காண்டங்கள்]

⁂

திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்துத் தலைவர்

ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள்

அவர்களுடைய ஆணையின் வண்ணம்

⁂

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் ஜூனியர்

வித்துவான் ஸ்ரீமத் மகாலிங்கத் தம்பிரான் சுவாமிகள்

அவர்களால் வெளியிடப்பெற்றது.

⁂

தணிகை மணி

இராவ்பகதூர் வ. சு. செங்கல்வராய பிள்ளை, M. A., அவர்கள்

எழுதிய வரலாற்று ஆராய்ச்சியும் திறனாராய்ச்சியும்

அடங்கியது.

⁂

பதிப்பாசிரியர்

வித்துவான் தி. பட்டுச்சாமி ஓதுவார்

திருச்சிராப்பள்ளி

[நந்தன - ஐப்பசித் திங்கள் 8-ம் நாள்]

*

 [அக்டோபர்—1952

உ
செந்திலாண்டவன் துணை

# பதிப்புரை

———o———

திருவடி யுந்தண்டை யுஞ்சிலம் புஞ்சிலம் பூடுருவப்
பொருவடி வேலும் கடம்பும் தடம்புயம் ஆறிரண்டும்
மருவடி வான வதனங்கள் ஆறும் மலர்க்கண்களும்
குருவடி வாய்வந்தென் உள்ளங் குளிரக் குதிகொண்டவே.

—**கந்தர் அலங்காரம்.**

"சைவத்தின் மேற் சமயம் வேறிலை" எனவும், "சைவ சமயமே சமயம்" எனவும் ஆன்றோர்களால் சிறப்பிக்கப்படுவது **சைவ சமயமே** ஆகும். இத் தலைசிறந்த சைவ சமயத்தின் உயரிய பண்புகளை உலகுக்கு எடுத்துக் காட்டுவன **சைவத் திருமுறைகள், சைவ புராணங்கள்** முதலியனவாம். சைவ புராணங்களுள் சொல்லழகாலும் பொருட் பொலிவாலும் நடைச் சிறப்பாலும் பொலிவு பெற்று விளங்குவன **பெரிய புராணம், திருவிளையாடற் புராணம், கந்த புராணம்** என்ற மூன்றும். இவை, சிவபெருமானுடைய முச்சுடர் விழி போன்று முதன்மை பெற்று விளங்குவனவாகும். இம்மூன்றுள் முருகக்கடவுளின் கருணைப் பெரு வெள்ளத்தினை உலகத்தார் எளிதிற் பெற்றுய்யுமாறு வாரி வழங்குவதும், பக்திச் சுவை நனி சொட்டச் சொட்ட அமைதி யான ஆற்று நீரோட்டம் போன்று தூய தமிழ் நடையில் அமைந்ததும், பிற்கால இலக்கியங்களில் மிகச் சிறப்புற்று விளங்கு வதும், மெய்யடியார்களால் நாடோறும் பக்தியுடன் பாராயணம் செய்யப்பெறுவதும் ஆகிய நூல் **கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள்** இயற்றிய **இக் கந்த புராணமே** ஆகும். இத்தகைய அரிய பெரிய கந்த புராணம் **திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்து வெளியீடாகக் கந்தசஷ்டி நன்னாளாகிய** இன்று வெளிவருகிறது.

இவ்வெளியீடு கந்த புராணத்தின் முதற் பகுதியாக **முதல் மூன்று காண்டங்களை** மாத்திரம் கொண்டுள்ளது. இது யாழ்ப் பாணத்து நல்லூர் **ஸ்ரீ-ல-ஸ்ரீ ஆறுமுக நாவலர்** அவர்களின் பதிப்பு, திரு வோத்தூர் **திரு. ம. தி. பானுகவி** அவர்களின் பதிப்பு முதலியவற்றை அடிப்படையாகக் கொண்டு பதிப்பிக்கப் பெற்றதாகும். 'சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்' என்றபடி யாவரும் எளிதிற் பொருளுணர்ந்து படித்ததற்கு ஏற்றவாறு சீர் பிரித்தும், ஓசை கெடா வண்ணம் சிற்சில இடங்களில் பதங்களைப் பிரித்துக் காட்டியும் அமைக்கப் பெற்றுள்ளது. சென்னை **தணிகை மணி திரு. வ.சு. செங்கல்வராயப்பிள்ளை M.A.** அவர்கள் எழுதியுள்ள கந்த புராண

வரலாற்று ஆராய்ச்சியும், சிற்றாராய்ச்சியும் இணைக்கப் பெற்றுள்ளது; செய்யுள் முதற் குறிப்பு அகராதி ஒன்றும் புதியதாகச் சேர்க்கப் பெற்றுள்ளது.

திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்தில் அருளாட்சியுடன் எழுந்தருளியிருக்கும் **ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்** சைவ சமயப் பணிகட்கும், தமிழ் மொழி வளர்ச்சிக்கும், பிற பொது நலத் தொண்டுகட்கும் இயைய புரியும் திருவருள் சுரந்து வருதலைச் சைவ நன்மக்களும் தமிழறிஞர்களும் நன்கு அறிவர். ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள் முதலிய அன்பர்களுடன் சைவத் திருமுறைகள் பன்னிரண்டினையும், சைவ புராணங்கள் பலவற்றையும், பல தமிழ்ப் பிரபந்தங்களையும் பிற பல சிறு நூல்களையும் நல்ல முறையில் வெளியிட்டுப் பல்லாயிரக் கணக்கான தமிழ் மக்களைத் திருவருள் நெறியில் நிறுத்தி அவர்களை நல்வாழ்வு பெறப் பேரருள் புரிந்துள்ளார்கள். ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள் அருள் வழி நின்று, அவர்களுடைய பேரறச் செயல்கள் அனைத்திலும் ஈடுபாடு கொண்டு அறம்பல வளர்த்தருளும் ஸ்ரீ காசிமடத்து ஆசிரியர் **வித்துவான் ஸ்ரீமத் மகாலிங்கத் தம்பிரான் சுவாமிகள்** அவர்கள் இந்நூலினை ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள் ஆணையின் வண்ணம் வெளியிட்டுள்ளார்கள். அவர்கட்குத் தமிழகம் என்றும் நன்றி செலுத்தும் கடப்பாடுடையதாகும்.

இந்நூல் நல்ல முறையில் வெளி வருதற்கு உறுதுணை புரிந்த அன்பர், திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரித் தலைமை யாசிரியர் (பிரின்ஸிபால்) **உயர்திரு கே. எம். வேங்கடராமையா எம். ஏ., பி. ஓ. எல்.,** அவர்கட்கும், இந்நூலின் செய்யுள் முதற் குறிப்பு அகராதியினைப் புதியதாக அமைத்துத் தந்த என் நண்பர் **வித்துவான் கோ. இரத்தினம் பிள்ளை** அவர்கட்கும், கந்த புராண வரலாற்று ஆராய்ச்சியும், சிற்றாராய்ச்சியும் எழுதி உதவிய **தணிகைமணி திரு. வ. சு. செங்கல்வராயப் பிள்ளை எம். ஏ.,** அவர்கட்கும் என் நன்றி உரியதாகும்.

சைவத்துடன் தமிழ் வளர்த்து அறம்பல போற்றும் **ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களும்,** அவர்கள் அருள்வழி நின்றொழுகும் **ஸ்ரீமத் சுவாமிகள் அவர்களும்,** அடியேனை இச்சிறிய சிவபுண்ணியத் தொண்டில் ஈடுபடுத்தியருளிய பெருங்கருணைப் பெருக்கினைப் பெரிதும் போற்றி, அவர்கள் திவ்ய திருவடிமலர்களை அடியவன் என்றும் மனமொழி மெய்களால் வந்தித்து வழிபடுகின்றேன்.

வரக நகர்<br>
**திருச்சிராப்பள்ளி**<br>
***24—10—1952***

இங்ஙனம்,<br>
**இ. பட்டுச்சாமி ஓதுவார்**

உ

செந்திலாண்டவன் துணை

# முன்னுரை

—o—

" உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்க்
கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே "

—**கந்தர் அநுபூதி.**

உலகின்கண் நின்று நிலவும் வேத சிவாகமங்கள் அனைத்தின் சாரங்களை உள்ளடக்கிப் பரந்து காணப்படுவது வடமொழி ஸ்காந்த மாகும். அதனுள் ஒருபிரிவாகிய சங்கர சங்கிதையினுள் முற் பட்டு விளங்குவது **சிவரகசிய கண்டமாம்.** அஃது உற்பத்தி காண் டம், அசுர காண்டம், மகேந்திர காண்டம், யுத்த காண்டம், தேவ காண்டம், தக்ஷ காண்டம், உபதேச காண்டம் என ஏழு காண்டங் களைக் கொண்டுள்ளது. அவற்றுள் முதல் ஆறுகாண்டங்களையும் தமிழ்மொழியில் **கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள்** அவர்கள் **கந்த புராணம்** எனப் பெயரிட்டு அருளிச் செய்தனர்.

முருகப்பெருமான் கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள் கனவில் தோன்றி, " அன்பனே நம்மைத் தமிழில் பாடுவாயாக " எனப் பணித் தருளி, " **திகட சக்கர** " என்று முதலும் எடுத்துக் கொடுத்து மறைந் தருளினர். அதன்படியே அவர் அத் தொடக்கத்தையே முதலில் அமைத்து, இந்நூலைப் **பத்தாயிரத்து முந்நூற்று நாற்பத்தாறு** விருத்தப் பாக்களால் பாடி முடித்தனர் என்பது வரலாறு. இது, முருகக் கடவுளின் திருவவதார வரலாறும், சூரபன்மன் சிவபெருமானிடம் ஆயிரத்தெட்டு அண்டங்களை நூற்றெட்டு யுகம் வரை ஆட்சிபுரியும் பெருவரம் பெற்றுத் தேவர்களைச் சிறை செய்த வரலாறும், சண் முகக் கடவுள் சூரபன்மனுடன் போர்புரிந்து வென்று ஆட்கொண்ட வரலாறும், தேவர் சிறைநீக்கி அவரை விண்குடி ஏற்றிய வரலாறும், முருகக்கடவுள் தெய்வயானை வள்ளியம்மை இவர்களைத் திருமணம் புரிந்தருளிய வரலாறும் பிறவும் கூறுவதாகும்.

இந்நூல், முருகக்கடவுளின் அருட்டிறங்களை யெல்லாம் அங்கை நெல்லிக் கனிபோல் அழகுபெற எடுத்து விரித்துரைக்கும் தமிழ்ப்

பெருங்காப்பியமாய் நிலவுவது. இது தெய்வத்தமிழ் மொழியில் நின்று நிலவும் புராணங்களுள் தலைசிறந்து நிற்பதும், நவில்தொறும் நவில்தொறும் நூல்நயம் போல்வதும், பயில்தொறும் பயில்தொறும் முருகக் கடவுளின் பக்தி ஞானத்தினை விளைவிப்பதுமாகும். இதன் செய்யுட்கள் யாவும் **திராட்ச, கதலி, இக்ஷு, நாளிகேர** பாகங்களைக் கொண்டு விளங்குவன.

இத்தகைய தெய்வத்தன்மை வாய்ந்த இந்நூல் தமிழ் மக்களிடையே நன்றாகப் பரவி யாண்டும் செந்நெறியாம் சைவநெறி தழைத்தோங்க வேண்டும் என்ற அருட் பெருங்கருணைத் திறத்தால் **ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்** ஆணையிட்டருளிய வண்ணம் **கந்த சஷ்டியாகிய இந்நாளில் ஸ்ரீ காசிமடத்து** வெளியீடாக வெளி வருகின்றது.

இந்நூலினைச் செவ்விய முறையில் அமைத்துப் பதிப்பித்துக் கொடுத்த திருப்பனந்தாள் **வித்துவான் தி. பட்டுச்சாமி ஓதுவார்** அவர்கட்கும், ஏனைய அன்பர்கட்கும் ஸ்ரீ செந்திலாண்டவன் திருவருள் என்றும் நின்று நிலவுவதாக.

இந்தச் சீரிய சிவத்தொண்டினைச் செய்யப் பணித்தருளிய எங்கள் தலைவர் **ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சுவாமிகள்** அவர்கள், பொன்னார் திருவடிமலர்களை வந்தித்து வணங்குகின்றோம்.

## வாழ்த்து

"ஆறிரு தடந்தோள் வாழ்க; அறுமுகம் வாழ்க; வெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்க; குக்குடம் வாழ்க; செவ்வேள்
ஏறிய மஞ்ஞை வாழ்க; யானைதன் அணங்கு வாழ்க;
மாறிலா வள்ளி வாழ்க; வாழ்கசீர் அடியார் எல்லாம்".

இங்ஙனம்,

ஸ்ரீ காசிமடம்,
திருப்பனந்தாள்,
நந்தன, ஐப்பசி - 8.

**வித்துவான் மகாலிங்கத் தம்பிரான்**

உ

திருத்தணிகேசன் துணை

# கந்தபுராண வரலாற்று ஆராய்ச்சி

தமிழ்ப் புராணங்கள் பலவற்றுள்ளும் நடைச் சிறப்பாலும், பொருட் சிறப்பாலும், சொல்லழகாலும் சிறந்து நிற்பன **ஒன்பது புராணங்கள்** என்று ஆன்றோர் கூறுவர். அவைதாம் பெரிய புராணம், கந்தபுராணம், திருவிளையாடற் புராணம், கோயிற் புராணம், சேது புராணம், காஞ்சிப் புராணம், காஞ்சிப் புராணம், தணிகைப் புராணம், திருக்குற்றாலத்தல புராணம். 'இறைவரோ தொண்டர் உள்ளத் தொடுக்கம், **தொண்டர்தம் பெருமை** சொல்லவும் **பெரிதே**' என ஔவைப் பிராட்டியார் கூறியவாறு, **தொண்டர்தம் பெருமையைக்** கூறும் **திருத்தொண்டர்** புராணம் **பெரிய** புராணம் ஆயிற்று. இறைவன் பெருமையைக் கூறும் **கந்தபுராணமோ "புராண நன்னுயகம்"** ஆயிற்று. "**புராண நன்னுயகமா**மெனக் கொள்க இஞ்ஞாலமெல்லாம்" எனக் கந்தபுராண நூலாசிரியரே கூறியுள்ளார். மேலும், பெரிய புராணத்தை அருளிய சேக்கிழார் பெருமான் அப்புராணத்தை "**மாக்கதை**" என "எடுக்கு **மாக்கதை** இன்தமிழ்ச் செய்யுளாய் நடக்கு மேன்மை" என்னும் பாவடியிற் சிறப்பித்தவாறு, கந்தபுராண ஆசிரியரும் கந்தபுராணத்தை "அறுமுகம் உடையவோர் அமலன் **மாக்கதை**" எனச் சிறப்பித்துள்ளார். பின்னும் "உலகெலாம்" என ஆண்டவன் எடுத்துத்தந்த முதலைக்கொண்டு எத்தகைய கலிவிருத்தத்திற் சேக்கிழார் பெருமான் '**உலகெலாம்** உணர்ந்தோதற் கரியவன்' எனப் பாடினரோ, அதே வகையான கலிவிருத்தப் பாவகையில், ஆண்டவன் எடுத்துத்தந்த '**திகட சக்கர**' என்பதை முதலாகக்கொண்டு "திகட சக்கரச் செம்முகம் ஐந்துளான்' எனக் கச்சியப்பரும் பாடியுள்ளார். அதுவன்றி, சேக்கிழார் பெருமான் 'உலகெலாம்' எனத் தொடங்கி 'உலகெலாம்' என முடித்தவாறே, கச்சியப்பரும் கடவுள் வாழ்த்து முதற் செய்யுளில் 'திருவந்த தொல்லைப் **புவனத்**தொடு' எனத் தொடங்கி, "**பாராசி**" என உலகின் மேலதாகவே நூலை முடித்துள்ளார்.

'திருவந்த தொல்லை' என்னும் கடவுள் வாழ்த்துச் செய்யுள் கவனிக்கற்பாலது. இந்தப் பாடல் 'தேமா புளிமா புளிமாங்கனி தேமா தேமா' என ஐந்து சீரால் **கலிநிலைத்துறை**யாக அமைந்துள்ளது. இத்தகைய விருத்தப்பாவை வடநூலார் "**வசந்த திலகம்**" என்பர். காப்பியங்களில் (முக்கியமாய் சைன நூல்களில்) இத்தகைய விருத்தப் பாவையே கடவுள் வாழ்த்துக் கூறுமிடத்தெல்லாம் பெரியோர் ஆண்டுள்ளார்கள் என்பது சீவகசிந்தாமணி, சூளாமணி, நீலகேசி, மேருமந்தர புராணம் என்னும் நூல்களிற் காணலாகும். கடவுளால்

(ii) இவ்வாசிரியரது உள்ளத்தில் முருகவேள் உலவி விளையாடினார். அவரே இவரது வழிபடு கடவுள் என்பது திருவிளையாட்டுப் படலத்தில் முருகவேள் எங்கெங்கு உலவி விளையாடினார் எனக் கூறவந்த இடத்தில் "என் உளத்தின் உலவும் சிவன் உமைக்கினிய மைந்தன்" (I-14-1) "என் நாயகன் - வேற்படைநாயகன்"—(வள்ளியம்மை திருமணப் படலம்) என இவரே கூறியுள்ளமையால் அறிகின்றோம்.

இவர் தேவாரம், திருவாசகம், திருக்குறள் ஆகிய செந்தமிழ் நூல்களை நன்கு பயின்றவர் என்பதும் அறியலாகும். ஓதி உணர்ந்து அடங்கிய புலமையாளர் இவர் என்பது இவரது அவையடக்கப் பாக்களில் "சிறியதோர் அறிவிலேன்", "வெளிற்றுரை முற்றுமாக மொழிந்த என் பாடல்", "கற்றிலா என்கவி" என வருவனவற்றால் அறியக்கிடக்கின்றது.

**புறச்சான்றாற் புலப்படுவன :**

இவர் சிவவேதியர் என்பதும், காஞ்சியில் வாழ்ந்தவர் என்பதும், இவர் தந்தை **காளத்தியப்ப சிவாசாரியர்** என்பதும், இவர் பெயர் **கச்சியப்ப சிவாசாரியர்** என்பதும், இவர் வேதம், அங்கம், சிவாகமம் முதலிய பல் நூல் கற்ற புலமையாளர் என்பதும், வாதஞ் செய்ய வல்ல புலவர் குழாம் போற்றக் காஞ்சிக் குமர கோட்டத்தில் கந்த புராண நூலை அரங்கேற்றினார் என்பதும், இவர் காலம் **சகாத்தம் எழுநூற்றின்பின்** என்பதும், தொண்டை நாட்டு இருபத்து நான்கு கோட்டத்தாரும் இவரைத் தந்தப் பல்லக்குச் சிவிகையிலேற்றித் தாங்கி வரக் **கந்தபுராணம்** பதினாயிரம் பாடலும் அரங்கேற்றப்பட்டதென்பதும்—

"சிவவேதியன் **காளத்தி** மைந்தன் கச்சியப்பன்", 'வேதமொடு வேதாங்கம் பயின்று வல்லோன்', 'விரிந்த சிவாகம முணர்ந்து மேன்மை பூண்டோன்', 'போதநிறை **சிவ மறையோன்** காஞ்சி வாழும் புனிதமிகு கச்சியப்ப குரவன்', 'வாதமுறு புலவர் குழாம் மகிழ்ந்து போற்ற...குமர கோட்டத்து...சகாத்தம் எழுநூற்றின் மேலாய்...கந்த புராணம் அரங்கேற்றினான்' எனவரும் பெரியோர் வாக்காலும், "அறுநான்கு கோட்டகத்தாரும் ஒன்றாய்க்...கந்த புராணம் பதினாயிரஞ் சொன்ன கச்சியப்பர் தந்தப் பல்லக்குச் சிவிகையுந் தாங்கி பச்சுங்கிதிக்கே வந்தப் புராணம் அரங்கேற்றினார்" எனவரும் தொண்டைமண்டல சதகத்தாலும் தெரிகின்றன.

திகழ் தசக்கரம்—திகட சக்கரம் என வருமா என்பதற்கு ஒரு புலவர் அரங்கேற்றத் தொடக்கத்தில் இலக்கணம் கேட்டனர் என்பதும், அதற்கு இலக்கணம் (வீரசோழியம் என்னும் நூலில்) முருகனே புலவராக வந்து காட்டினர் என்பதும் (சமாஜப்பதிப்பு) பின்வரும் திருப்புகழ்ப் பாக்களாலும் கர்ணபரம்பரைச் செய்தியாலும் தெரிகின்றன :

"மருவு புலவரோர் கவிக்குறேனை ஈறு
வாறுவ தனையாகா எனைக்குறேனையோ
வகைபெறாத இலக்கணவிதி மொழிமேனிமேனை (525)

"முற்பட்ட இலக்கண நூலியை
தப்புற்ற கவிகளைமேவி அவை
முற்பட்டு புகுத்துரைமாற்றிய புலமேனைமேனை. (793)

இனி, ஆசிரியர் காலத்தைச் சிறிது ஆராய்வாம் :

சகாத்தம் ஏழுநூற்றின்மேல் என மேற்கூறியபடி ஆராயத்தக்கது. ஆசிரியர் கந்தபுராணத்தில் காலங்களைக் குறித்துள்ளதால் இவர் காலம் கம்பர் காலத்துக்குப் பிற்பட்டதாகும். கம்பர் காலம் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டு என ஆராய்ச்சியாளர் கூறுவதால் சகாத்தம் ஏழுநூற்றின்மேல் என்பது பொருந்தியதன்று. கச்சியப்பரைக் குறித்துள்ள பெரியோர்கள் :—

1. உபதேச காண்டம் பாடிய **ஞானவரோதயர்**

2. கந்தபுராணச் சுருக்கம் பாடிய **சம்பந்த சரணலயர்**

3. செய்யூர் முருகன் பிள்ளைத்தமிழ் பாடிய **அந்தகக் கவி வீரராகவர்**

உபதேச காண்டம் பாடிய **கோனேரியப்பர்** காலம் கண்டுபிடிப்பதற்கில்லை. ஒரு சாரார் இவர் கச்சியப்பர் மாணாக்கர் என்பர்; ஒருசாரார் இவர் கி. பி. 17-ஆம் நூற்றாண்டினர் என்பர்.

ஞானவரோதயர் கச்சியப்பரை,

"காஞ்சி வளர் கச்சியப்பக் கற்பகத் தாருவை
இறைஞ்சிக் கருத்துள் வைப்பாம்"

எனத் துதித்துள்ளார். **ஞானவரோதயர்** காளமேகப் புலவர் காலத்தவர் என்று தமிழ் நாவலர் சரிதை கூறுகின்றது. ஞானவரோதயர் 'வயலூரில் அருள்பெற்ற எந்தை' என அருணகிரிநாதரையும் குறித்துள்ளார். சமாஜத் திருப்புகழின்படி அருணகிரிநாதர் 'திகடசக்கரம்' என்பதைக் குறித்து வாதம் நிகழ்ந்ததைக் குறித்துள்ளபடியால், **கச்சியப்பர் காலம் காளமேகர், அருணகிரிநாதர் காலத்துக்கு முற்பட்டதாகும்.** அருணகிரிநாதர் காலம் கி. பி. 14-ஆம் நூற்றாண்டின் இறுதியிலும் 15-ஆம் நூற்றாண்டின் முதலிலும் ஆகும். வீர சோழிய இலக்கணத்தின் காலம் கி. பி. 11-ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதி என்பர்.

இனிக் கர்ண பரம்பரைச் செய்தியாகக் கம்பரே கந்தபுராணம் பாட இருந்தனர் என்றும், கச்சியப்பர் முன்னரே பாடியுள்ளார் என்பதை அறிந்து 'கச்சியப்பர் என்னும் சுறுவா கந்த புராணம் என்னும் பெருங்கடலைக் கலக்கிற்று' எனக்கூறி, இராமாயணத்தைப் பாடத் தொடங்கினர் என்றும் கூறுவதுண்டு. இதன்படி கம்பர் காலத்துக்கு

முன்பு கச்சியப்பர் காலம் என்பது ஏற்படும். **கம்பர் காலம் கி. பி.** 12-ஆம் நூற்றாண்டு என்பர். ஆகவே **கச்சியப்பர்** வீரசோழிய காலத்துக்குப் பின்னும், கம்பர் காலத்துக்கு முன்னும் அதாவது **கி. பி. 11-வது நூற்றாண்டின் இறுதியிலோ அல்லது 12-ஆம் நூற்றாண்டின் துவக்கத்திலோ** இருந்தனர் எனக் கொள்ளலாம். இதுவே தமிழ் இலக்கிய வரலாறு எழுதிய பெரியார் **திரு. கா. சுப்பிரமணியபிள்ளை** அவர்களின் முடிவு. தமிழ் நாவலர் சரிதை கச்சியப்பர் காலம் அந்தகக்கவி வீரராகவர் காலமெனக் காட்டுகின்றது. அது பொருந்தாது. ஏனெனில் அந்தகக்கவி கி. பி. 17-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியினர்; ஸ்ரீ சம்பந்த சரணாலயரும் கி. பி. 17-ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியினர்.

இனி, **கந்தபுராண** நூலின் **மேன்மையைச்** சிறிது குறிப்பாம்:

கச்சியப்ப சிவாசாரியாரின் கனவில் முருகப்பெருமான் தோன்றி "அன்ப! நமது புராணத்தைத் தமிழில் தருக" எனக் கட்டளையிட்டுத் "**திகடசக்கர**" என முதலும் எடுத்துத்தந்து மறைந்தனரெனவும், அக்கட்டளைக்கு இணங்கித் தாம் பாடி எழுதிய ஓலைச் சுவடிகளை முருகன் சந்நிதியில் அர்த்தஜாம பூஜை முடிந்ததும் வைத்துத் திருக்கதவம் மூடி அடுத்த நாள் காலை பூஜைக்குச் செல்லும்போது தாம் எழுதிய பாடல்களில் இறைவன் செய்துள்ள திருத்தங்களைக் கண்டு கச்சியப்பர் மகிழ்வர் என்றும் கர்ண பரம்பரைச் செய்தி உளது. ஆதலால், தமிழ்த் தெய்வத்தின் திருக்கரம்பட்ட இந்நூலுக்கு ஒப்பு உயர்வு உண்டோ? நூலாசிரியர் அவையடக்கச் செய்யுளில் "கதை... யான் தமிழ்ப் பெற்றியிற் செப்புகேன்; என் பயன் எனில் இன் தமிழ்த் தேசிகர் நன்புலத்தவை காட்டு நயப்பரோ" எனக் கூறியது கண்டு உணரற்பாலது. தமிழ் இலக்கிய வரலாற்றில் திரு. கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் "கந்தபுராணத்தை நோக்குமிடத்து அது சிந்தாமணியின் ஆண்மைப் பெருநடையுடன் திகழ்கின்றது...சிந்தாமணியினும் எளிய இயற்றமிழ் மொழிகளால் இயன்றது" என எழுதி உள்ளார். ஐம்பது ஆண்டுகளுக்கு முன் இருந்த **ஒரு வைணவப் புலவர்**—

"இந்நூலின் நடை மற்றைப் பல நூல்களிற்போல இங்கொரு விதம் அங்கொரு விதமாக இடந்தோறும் வேறுபட்டிராமல் எங்கும் ஒரு விதமான தன்மையை உடையது. இதன் நடை யாவரும் எடுத்து ஏத்தும் கம்பராமாயணத்தின் நடைக்குப் பின் வாங்குவதன்று. இந்நூல் போன்ற நடையழகு உடைய பெருங் காப்பியங்கள் மிகச் சிலவேயன்றிப் பலவல்ல. இந்நூலாசிரியர் அகத்தியனார்க்குத் தமிழைச் செவியறிவுறுத்திய செந்தமிழ்ப் பரமாசாரியராகிய அறுமுகக் கடவுளது அநுக்கிரகத்தால் அவதரித்தவராதலாலும், அக்கடவுள் கனவிலே எழுந்தருளிக் காட்சிகொடுத்துக் கட்டளையிட்டுத் தமது அருமைத் திருவாக்கினால் அடியெடுத்துக் கொடுக்க இந்நூல் தொடங்கிப் பாடப்பட்டதனாலும், இதிலுள்ள பிழைகளைக் களைந்து திருத்தப்பாடு இயற்றியவர் அக்கடவுளே ஆதலாலும், இதனை அரங்கேற்றிய இடம் கடவுள் ஆலயமே ஆதலாலும், இந்நூலிற் கூறிய விஷயம்

அக்கடவுளின் திவ்விய சரித்திரமே ஆகலாலும், இந்நூலின் மீதெழுந்த ஆட்சேபத்துக்கு ஏற்ற விடை கூறி வாயடக்கியவர் அக்கடவுளே ஆகலாலும், இந்நூலாசிரியர் பெருமையும் இந்நூலின் பெருமையும் எவரும் எடுத்து உரைத்துப் புகழ்தற்கு அளவுடையன அல்ல" எனக் கூறியுள்ளது கண்டு உணர்ந்து களிக்கற்பாலது.

எமது ஆசிரியர் சிறந்த கலாசாலைத் தமிழ்ப் பண்டிதர் வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார் கம்பராமாயணம் ஒரு மாணிக்கம் (Gem என்றும் கந்தபுராணம் நல்ல வேலைப்பாடுடன் இழைக்கப்பட்ட மாணிக்கம் (a polished gem) என்றும், இலக்கணப் பிரயோகத்துக்குக் கந்தபுராணமே இலக்கியமாகக் காட்டும் தகுதியுள்ளது எனப் பெரியோர் கூறுவரென்றும் அடிக்கடி குறிப்பிடுவார். இதன் உண்மை மீனாட்சி சுந்தரம் பிள்ளை சரித்திரத்தில் டாக்டர் உ. வே. சாமிநாத ஐயரவர்கள் "நீங்கள்" எனப் பிரயோகம் இலக்கியத்திற் காணேனும் என ஒரு புலவர் மயங்கிய போது, பிள்ளையவர்கள் இந்தப் பிரயோகம் "நீங்களிவ் வாறு செய்கை நெறியதன்றென்ன லோடும்" எனக் கந்தபுராணத்தில் உருத்திரர் கேள்விப் படலத்தில் (II--14-10) வருகின்றதே எனக் காட்டினர் என்று தெரிவிப்பதாலும் அறியக் கிடக்கின்றது.

ஆசிரியர் அருமையான உவமைகள் நிரம்ப உபயோகித்துள்ளதும் பிற அணிகள் பல வந்துள்ளதும் 'அணிகள்' என்னுந் தலைப்பிற் சிற்றுரையிற் காணலாம். மேலும் ஒரு பொருளைக் குறிக்கும் பல சொற்களை ஆசிரியர் ஆட்சி செய்வதும் கண்டு களிக்கத் தக்க ஓர் அழகு. உதாரணமாக, தகரேறு படலத்தில் ஆட்டைக் குறிக்க — செச்சை, தகர், மேடம், மறி, ஆடு, அஜம், ஏழகம் எனப் பல சொற்கள் ஆளப்பட்டுள. இது போல்வன பலவுள. அவை விரிவஞ்சி விடுக்கப்பட்டன. மேலும் கம்பராமாயணத்திற் காணப்படும் கவி சாதுர்யங்களையும் இங்குக் காணலாகும். உதாரணமாக, மாயை என்பவளின் நடையின் பேரழகைக் கூற வந்தவர், "மாது நடந்திட ஞாலம் ஆங்கோர் பூவதோ. அது பூவன்றேல் பொன்னடி பொருந்து மோதான்" (II—1-61) எனப் பூ என்னும் சொல்லின் இருபொருள் கொண்ட சிலேடை அழகு (பூ-மலர், பூமி) மிக அருமையாக உள்ளது. இரட்டைப் பொருள் படும்படி சூரனை நோக்கிக் கூறுமிடத்து "அகிலமாள்வாய்" (I—22-55) என்ற இடத்து 'மாள்வாய்' என வருந்தொனியும் கவனிக்கற்பாலது. அகத்தியரைக் கொல்ல நினைந்த வில்வலன் அவரை நோக்கிக் கூறும் "அருந்தவம் புரிந்தேன் இன்று முடிவுற வந்தீர்" (II—26-5) என்ற இடத்து 'என்தவம் முடிந்தது, நீர் முடிவுறப் போகிறீர், நான் முடிவுறப் போகிறேன்' என மூன்று பொருள்கள் ஒருங்கே அமைந்துள்ளது மிகமிக வியக்கத்தக்கதாம்.

தணிந்த ஆற்று நீரோட்டம்போல எளிதான நற்றமிழ் நடையில் இந்நூல் அமைந்துள்ளது என்பதற்குத் தக்க எடுத்துக் காட்டாகப் பின்வரும் பாடல்களைக் கண்டு களிக்கலாம் :—

I – 4 – 107 "போவென்று"
II – 1 – 63 "ஆனனம்"
II – 8 – 11 "அஞ்சினன்"
II – 8 – 98 "உன்போல்" என்பன.

இத்தகைய அரியபெரிய கந்தபுராணத்தின் பெருமையைக் கந்த பிரான் அறிவர்; அவருண்மை அடியார்கள் அறிவார்கள். அத்தகைய அடியார்களுள் சிறந்து நிற்கும் வள்ளல், **ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள்** அவர்களே ஆவர்; அதனாலன்றே இந்நூலை அச்சேற்றித் தமிழ் மக்களிடையே பரப்புதல் வேண்டும் என்னும் அருள் எண்ணம் தம் பெயருக்கு ஏற்ப அவர்களுக்கு உதித்தது. பலகாலம் வருந்திய தேவர்க்கு இறைவர் அருள்புரிய நினைந்தபோது "அவர் (தேவர்கள்) பவம் முடிவதற்கணித்தாக இயக்கமாய் **அருள்நந்தியை** நினைந்தனன் இறையோனே" (I – 5 – 13) என ஆசிரியர் வாக்கில் அமைந்தவாறு, தமிழ்நாட்டின் பவம் முடிவதற்கு அணித்தாகப் **பனசை - அருணந்தியை** இறைவன் நினைத்துப் "பாருளோரர் இன்புற்றினிது மேவிச் சிந்தையில் நினைந்த முற்றிச் சிவகதி அதனிற் சேர இந்நூலை அச்சிடுக" என ஏவினர் என்பதும் வெள்ளிடை மலைபோல் விளங்கும் அன்றே! இப்பேருதவியை உலகுக்குத் தரும் அருணந்தி சுவாமிகளுக்குத் தமிழுலகம் யாது கைம்மாறு செய்யவல்லது? "மாரி மாட்டென்னாற் றுங்கொல்லோ உலகு" எனப் பொய்யில் புலவர் கூறியது போலக் கூறி அமையவேண்டியது தான். **ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களுக்கு** அருந்துணையாய் **ஸ்ரீமத் வித்துவான் மகாலிங்கத் தம்பிரான் சுவாமிகள்** நிற்பது, **முருகவேளுக்கு வீரவாகு தேவர் துணைவராய் அமைந்ததை ஒக்கும்** எனக் கண்டு தமிழுலகம் மகிழ்கின்றது.

என்ன புண்ணியம் செய்தனம்
நாமிவண் எழிற்றமிழ் வையத்தே
முன்னை நாம்புரி நல்வினைப்
பயனிடை முத்தமிழ்க் குழுவிக்கோர்
அன்னை யேயென நின்றிவண்
**அருணந்தி சுவாமிகள்** வெளியேற்றும்
கன்னித் தண்டமிழ் நூல்களைக்
கண்டுநாம் களிப்புறும் அதனாலே.

வேலும் மயிலுந் துணை

சென்னை
292, லிங்க செட்டித்தெரு,
5—10—1952.

தணிகைமணி
**வ. சு. செங்கல்வராய பிள்ளை**

செந்திலாண்டவன் துணை

# உள்ளுறை


| படலம் | | பக்கம் |
|---|---|---|
| 1. பாயிரம் | ... | 1 |
| 2. கடவுள் வாழ்த்து | ... | 2 |
| 3. அவையடக்கம் | ... | 5 |
| 4. ஆற்றுப் படலம் | ... | 7 |
| 5. திருநாட்டுப் படலம் | ... | 12 |
| 6. திருநகரப் படலம் | ... | 18 |
| 7. பாயிரப் படலம் | ... | 32 |
| **1. உற்பத்தி காண்டம்** | ... | **41—198** |
| 1. திருக்கைலாசப் படலம் | ... | 41 |
| 2. பார்ப்பதிப் படலம் | ... | 44 |
| 3. மேருப் படலம் | ... | 48 |
| 4. காம தகனப் படலம் | ... | 56 |
| 5. மோன நீங்கு படலம் | ... | 68 |
| 6. தவங்காண் படலம் | ... | 72 |
| 7. மணம் பேசு படலம் | ... | 76 |
| 8. வரைபுனை படலம் | ... | 78 |
| 9. கணங்கள் செல் படலம் | ... | 82 |
| 10. திருக்கல்யாணப் படலம் | ... | 86 |
| 11. திருவவதாரப் படலம் | ... | 96 |
| 12. துணைவர் வரு படலம் | ... | 110 |
| 13. சரவணப் படலம் | ... | 114 |
| 14. திருவிளையாட்டுப் படலம் | ... | 118 |
| 15. தகரேறு படலம் | ... | 132 |
| 16. அயனைச் சிறைபுரி படலம் | ... | 134 |
| 17. அயனைச் சிறை நீக்கு படலம் | ... | 137 |
| 18. விடைபெறு படலம் | ... | 141 |
| 19. படையெழு படலம் | ... | 146 |
| 20. தாரகன் வதைப் படலம் | ... | 149 |
| 21. தேவகிரிப் படலம் | ... | 171 |
| 22. அசுரேந்திரன் மகேந்திரஞ்செல் படலம் | ... | 174 |
| 23. வழிநடைப் படலம் | ... | 181 |
| 24. குமாரபுரிப் படலம் | ... | 183 |

| | படலம் | பக்கம் |
|---|---|---|
| 25. | சுரம்புகு படலம் | ... 192 |
| 26. | திருச்செந்திப் படலம் | ... 196 |
| | **2. அசுர காண்டம்** | **... 199—414** |
| 1. | மாயைப் படலம் | ... 199 |
| 2. | காசிபன் புலம்புறு படலம் | ... 208 |
| 3. | அசுரர் தோற்று படலம் | ... 214 |
| 4. | காசிபனுபதேசப் படலம் | ... 218 |
| 5. | மார்க்கண்டேயப் படலம் | ... 221 |
| 6. | மாயை யுபதேசப் படலம் | ... 252 |
| 7. | மாயை நீங்கு படலம் | ... 254 |
| 8. | அசுரர் யாகப் படலம் | ... 256 |
| 9. | வரம் பெறு படலம் | ... 269 |
| 10. | சுக்கிரனுபதேசப் படலம் | ... 272 |
| 11. | அண்டகோசப் படலம் | ... 278 |
| 12. | திக்குவிசயப் படலம் | ... 286 |
| 13. | எதிர்கொள் படலம் | ... 301 |
| 14. | உருத்திரர் கேள்விப் படலம் | ... 303 |
| 15. | நகர் செய் படலம் | ... 305 |
| 16. | பட்டாபிடேகப் படலம் | ... 308 |
| 17. | அரசு செய் படலம் | ... 310 |
| 18. | தேவரை யேவல் கொள் படலம் | ... 312 |
| 19. | புதல்வரைப் பெறு படலம் | ... 315 |
| 20. | வில்வலன் வாதாவிப் படலம் | ... 318 |
| 21. | இந்திரன் கரந்துறை படலம் | ... 321 |
| 22. | விந்தகிரிப் படலம் | ... 326 |
| 23. | அகத்தியப் படலம் | ... 329 |
| 24. | கிரவுஞ்சப் படலம் | ... 333 |
| 25. | விந்தம் பிலம் புகு படலம் | ... 334 |
| 26. | வில்வலன் வாதாவி வதைப் படலம் | ... 336 |
| 27. | காவிரி நீங்கு படலம் | ... 339 |
| 28. | திருக்குற்றாலப் படலம் | ... 347 |
| 29. | இந்திரன் அருச்சனைப் படலம் | ... 349 |
| 30. | தேவர் புலம்புறு படலம் | ... 353 |
| 31. | அயிராணி சோகப் படலம் | ... 355 |
| 32. | மகா சாத்தாப் படலம் | ... 358 |
| 33. | இந்திரன் கயிலை செல் படலம் | ... 365 |

| | படலம் | பக்கம் |
|---|---|---|
| 34. | அசமுகிப் படலம் | ... 367 |
| 35. | இந்திராணி மறுதலைப் படலம் | ... 371 |
| 36. | மகாகாளர் வரு படலம் | ... 374 |
| 37. | அசமுகி சோகப் படலம் | ... 377 |
| 38. | இந்திரன் மீட்சிப் படலம் | ... 380 |
| 39. | சூரன் அரசிருக்கைப் படலம் | ... 381 |
| 40. | அசமுகி நகர் காண் படலம் | ... 385 |
| 41. | அசமுகி புலம்புறு படலம் | ... 389 |
| 42. | சூரன் தண்டஞ்செய் படலம் | ... 391 |
| 43. | அமரர் சிறைபுகு படலம் | ... 398 |
| | **3. மகேந்திர காண்டம்** | ... 415 – 542 |
| 1. | வீரவாகு கந்தமாதனஞ்செல் படலம் | ... 415 |
| 2. | கடல் பாய் படலம் | ... 421 |
| 3. | வீரசிங்கன் வதைப் படலம் | ... 423 |
| 4. | இலங்கை வீழ் படலம் | ... 425 |
| 5. | அதிவீரன் வதைப் படலம் | ... 428 |
| 6. | மகேந்திரஞ் செல் படலம் | ... 432 |
| 7. | கயமுகன் வதைப் படலம் | ... 435 |
| 8. | நகர் புகு படலம் | ... 441 |
| 9. | சயந்தன் புலம்புறு படலம் | ... 452 |
| 10. | சயந்தன் கனவு காண் படலம் | ... 460 |
| 11. | வீரவாகு சயந்தனைத் தேற்று படலம் | ... 464 |
| 12. | அவை புகு படலம் | ... 467 |
| 13. | சதமுகன் வதைப் படலம் | ... 484 |
| 14. | காவலாளர் வதைப் படலம் | ... 487 |
| 15. | நகரழி படலம் | ... 490 |
| 16. | சகத்திரவாகுகள் வதைப் படலம் | ... 499 |
| 17. | வச்சிரவாகு வதைப் படலம் | ... 503 |
| 18. | யாளிமுகன் வதைப் படலம் | ... 513 |
| 19. | வீரவாகு மீட்சிப் படலம் | ... 518 |
| 20. | சூரன் நகர் புரி படலம் | ... 521 |
| 21. | சூரன் அமைச்சியற் படலம் | ... 524 |
| | கந்த புராணச் சிற்றாராய்ச்சி | ... 543 |
| | செய்யுள் முதற் குறிப்பகராதி | ... 567 |


*

உ

செந்திலாண்டவன் துணை

திருச்சிற்றம்பலம்

# கந்தபுராணம்



## 1. பாயிரம்

—oo—

### விநாயகர் காப்பு

திகட சக்கரச் செம்முக மைந்துளான்
சகட சக்கரத் தாமரை நாயகன்
அகட சக்கர வின்மணி யாவுறை
விகட சக்கரன் மெய்ப்பதம் போற்றுவாம். 1

உச்சியின் மகுட மின்ன வொளிர்தர நுதலி னோடை
வச்சிர மருப்பி னொற்றை மணிகொள் கிம்புரி வயங்க
மெய்ச்செவிக் கவரி தூங்க வேழமா முகங்கொண் டுற்ற
கச்சியின் விகட சக்ர கணபதிக் கன்பு செய்வாம். 2

### சுப்பிரமணியர் காப்பு

மூவிரு முகங்கள் போற்றி முகம்பொழி கருணை போற்றி
ஏவருந் துதிக்க நின்ற வீராறுதோள் போற்றி காஞ்சி
மாவடி வைகுஞ் செவ்வேள் மலரடி போற்றி யன்னான்
சேவலு மயிலும் போற்றி திருக்கைவேல் போற்றி போற்றி. 3

### நூற் பயன்

இந்திர ராகிப் பார்மே லின்பமுற் றினிது மேவிச்
சிந்தையி னினைந்த முற்றிச் சிவகதி யதனிற் சேர்வர்
அந்தமி லவுணர் தங்க ளடல்கெட முனிந்த செவ்வேற்
கந்தவேள் புராணந் தன்னைக் காதலித் தோது வோரே. 4

### வாழ்த்து

வான்முகில் வழாது பெய்க மலிவளஞ் சுரக்க மன்னன்
கோன்முறை யரசு செய்க குறைவிலா துயிர்கள் வாழ்க
நான்மறை யறங்க ளோங்க நற்றவம் வேள்வி மல்க
மேன்மைகொள் சைவ நீதி விளங்குக வுலக மெல்லாம். 5

ஆகத் திருவிருத்தம்-5



# 2. கடவுள் வாழ்த்து

—

### சிவபெருமான்

இருவந்த தொல்லைப் புவனத்தொடு தேவர் போற்றிப்
பெருவந் தனைசெய் தறிதற்கரும் பெற்றி யெய்தி
அருவந் தனையு முருவத் தனையு மன்றி நின்றான்
ஒருவன் றனது பதந்தன்னை யுளத்துள் வைப்பாம். 1

ஊனாகி யூனு ளுயிராயுயிர் தோறு மாகி
வானாகி யான பொருளாய்மதி யாகி வெய்யோன்
தானாகி யாண்பெண் ணுருவாகிச் சராசரங்கள்
ஆனான் சிவன்மற் றவனீள்கழற் கன்பு செய்வாம். 2

### வேறு

பிறப்பது மிறப்பதும் பெயருஞ் செய்கையும்
மறப்பது நினைப்பதும் வடிவம் யாவையுந்
துறப்பது மின்மையும் பிறவுஞ் சூழ்கலாச்
சிறப்புடை யரனடி சென்னி சேர்த்துவாம். 3

பூமலர் மிசைவரு புனித னாதியோர்
தாமுணர் வரியதோர் தலைமை யெய்தியே
மாமறை முதற்கொரு வடிவ மாகியோன்
காமரு செய்யபூங் கழல்கள் போற்றுவாம். 4

பங்கயன் முகுந்தனும் பரனென் றுன்னியே
தங்களி லிருவருஞ் சமர்செய் துற்றுழி
அங்கவர் வெருவர வங்கி யாயெழு
புங்கவன் மலரடி போற்றி செய்குவாம். 5

காண்பவன் முதலிய திறமுங் காட்டுவான்
மாண்புடை யோனுமாய் வலிகொள் வான்றொடர்
பூண்பதின் றுய்நயம் புணர்க்கும் புங்கவன்
சேண்பொலி திருநடச் செயலை யேத்துவாம். 6

### சிவசத்தி

செறிதரு முயிர்தொறுந் திகழ்ந்து மன்னிய
மறுவறு மரனிட மாயின் மேவியே
அறுவகை நெறிகளும் பிறவு மாக்கிய
இறைவிதன் மலரடி யிறைஞ்சி யேத்துவாம். 7

### விநாயகக்கடவுள்

மண்ணுல கத்தினிற் பிறவி மாசற
எண்ணிய பொருளெலா மெளிதின் முற்றுறக்

கண்ணுத லுடையதோர் களிற்று மாமுகப்
பண்ணவன் மலரடி பணிந்து போற்றுவாம். 8

### வைரவக்கடவுள்

பரமனை மதித்திடாப் பங்க யாசனன்
ஒருதலை கிள்ளியே யொழிந்த வானவர்
குருதியு மகந்தையுங் கொண்டு தண்டமுன்
புரிதரு வடுகனைப் போற்றி செய்குவாம். 9

வெஞ்சினப் பரியழன் மீது போர்த்திடும்
அஞ்சனப் புகையென வால மாமெனச்
செஞ்சுடர்ப் படிவமேற் செறித்த மாமணிக்
கஞ்சுகக் கடவுள்பொற் கழல்க ளேத்துவாம். 10

### வீரபத்திரக்கடவுள்

அடைந்தவி யுண்டிடு மமரர் யாவரும்
முடிந்திட வெருவியே முனிவர் வேதியர்
உடைந்திட மாமக மொடியத் தக்கனைத்
தடிந்திடு சேவகன் சரணம் போற்றுவாம். 11

### சுப்பிரமணியக்கடவுள்

இருப்பரங் குறைத்திடு மெஃக வேலுடைப்
பொருப்பரங் கூணார்வுறப் புதல்வி தன்மிசை
விருப்பரங் காரிடை விளங்கக் காட்டிய
திருப்பரங் குன்றமர் சேயைப் போற்றுவாம். 12

சூரலை வாயிடைத் தொலைத்து மார்புகீண்
டூரலை வாயிடு மெஃக மேந்தியே
வேரலை வாய்தரு வெள்ளி வெற்பெறிஇச்
சீரலை வாய்வரு சேயைப் போற்றுவாம். 13

காவினன் குடியுறு காமர் பொன்னகர்
மேவினன் குடிவர வெளியச் சூர்முதல்
பூவினன் குடிலையம் பொருட்கு மாலுற
ஆவினன் குடிவரு மமலற் போற்றுவாம். 14

நீரகத் தேதனை நினையு மன்பினோர்
பேரகத் தலமரும் பிறவி நீத்திடுந்
தாரகத் துருவமாந் தலைமை யெய்திய
ஏரகத் தறுமுக னடிக ளேத்துவாம். 15

ஒன்றுதொ றுடலை யொருவி யாவிமெய்
துன்றுதொ றுடலைத் தொடங்கி ஐவகை
மன்றுதொ றாடிய வள்ளல் காமுறக்
குன்றுதொ றாடிய குமரற் போற்றுவாம். 16

ஏழுமுதி ரைப்புனத் திறைவி முன்புகன்
றூழுமுதி ரிளங்கலம் பிடைப்ப முன்னவன்
மழுமுதிர் கனிமொழி வருதல் வேண்டிய
பழமுதிர் சோலையம் பகவற் போற்றுவாம். 17

ஈறுசேர் பொழுதினு மிறுதி யின்றியே
மாறிலா திருந்திடும் வளங்கொள் காஞ்சியிற்
கூறுசீர் புனைதரு குமர கோட்டம்வாழ்
ஆறுமா முகப்பிரா னடிகள் போற்றுவாம். 18

### திருநந்திதேவர்

ஐயிரு புராணநூ லாயவற் கோதியுந்
செய்யபன் மறைகளுந் தெரிந்து மாயையான்
மெய்யறு சூள்புகல் வியாத னீட்டிய
கையடு நந்திதன் கழல்கள் போற்றுவாம். 19

### திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள்

பண்டைவல் வினையினாற் பாயுடுத்துழல்
குண்டரை வென்றுமுன் கூடல் வைகியே
வெண்டிரு நீற்றொளி விளங்கச் செய்திடு
தண்டமிழ் விரகன்மெய்த் தாள்கள் போற்றுவாம். 20

### திருநாவுக்கரசுசுவாமிகள்

பொய்யுரை நூல்சில புகலுஞ் சியமண்
கையர்கள் பிணித்துமுன் கடல கத்திடு
வெய்யகற் றோணியாய் மிதப்ப மேற்படு
துய்யசொல் லரசர்தா டொழுது போற்றுவாம். 21

### சுந்தரமூர்த்திசுவாமிகள்

வறந்திடு பொய்கைமுன் னிரம்ப மற்றவன்
உறைந்திடு முதலைவந் துதிப்ப வன்னதால்
இறந்திடு மகன்வளர்ந் தெய்தப் பாடியோன்
றறைந்திடு சுந்தர னடிகள் போற்றுவாம். 22

### மாணிக்கவாசகசுவாமிகள்

கந்தமொ டுயிர்படுங் கணபங் கம்மெனச்
சிந்தைகொள் சாக்கியர் தியங்க மூகராய்
முந்தொரு மூகையை மொழிவித் தெந்தைபால்
வந்திடு மடிகளை வணக்கஞ் செய்குவாம். 23

### திருத்தொண்டர்கள்

அண்டரு நான்முகத் தயனும் யாவருங்
கண்டிட வரியதோர் காட்சிக் கண்ணவாய்
எண்டகு சிவனடி யெய்தி வாழ்திருத்
தொண்டர்தம் பதமலர் தொழுது போற்றுவாம். 24

**சரசுவதி**

தாவறு முலகெலாந் தந்த நான்முகத்
தேவுதன் றுணைவியாய்ச் செறிந்த பல்லுயிர்
நாவுதோ றிருந்திடு நலங்கொள் வாணிதன்
பூவடி முடிமிசைப் புனைந்து போற்றுவாம். 25

ஆகத் திருவிருத்தம் - 30

# 3. அவையடக்கம்

—·oo—

இறைமில றெழுதுமு னிளைய பாலகன்
முறைவரை வேனென முயல்வ தொக்குமால்
அறுமுக முடையவோ ரமலன் மாக்கதை
சிறியதோ ரறிவினேன் செப்ப நின்றதே. 1

**வேறு**

ஆன சொற்றமிழ் வல்ல வறிஞர்முன்
யானு மிக்கதை கூறுதற் கெண்ணுதல்
வான கத்தெழும் வான்கதி ரோன்புடை
மீனி மைப்ப விரும்பிய போலுமால். 2

முன்சொல் கின்ற முனிவட நூறொரீஇத்
தென்சொ லாற்சிறி யேனுரை செய்தலான்
மென்சொ லேனும் வெளிற்றுரை யேனும்வீண்
புன்சொ லேனு மிகழார் புலமையோர். 3

சிந்து மென்பு சிரம்பிறை தாங்கினோன்
மைந்த னாதலின் மற்றவன் றானுமென்
சந்த மில்லுரை யுந்தரிப் பானெனக்
கந்த னுக்குரைத் தேனிக் கதையினை. 4

வெற்றெ னத்தொடுத் தீர்த்து வெளிற்றுரை
முற்று மாக மொழிந்தவென் பாடலிற்
குற்ற நாடினர் கூறுப தொல்லைநூல்
கற்று ணர்ந்த கலைஞரல் லோர்களே. 5

குற்ற மேதெரி வார்குறு மாமுனி
சொற்ற பாவினு மோர்குறை சொல்வரால்
கற்றி லாவென் கவிவழு வாயினும்
முற்று நாடிவல் லோருய்த் துரைக்கவே. 6

**வேறு**

குறைபல மாமதி கொளினு மன்னதால்
உறுபய னோக்கியே யுலகம் போற்றல்போற்

மாண்ப யன்னெனி லின்றமிழ்த் தேசிகர்
நண்பு லத்துவை காட்டு நயப்பினால்[1]. 16

தோற்ற மீறின்றித் தோற்றிய சூர்ப்பகைக்
கேற்ற காதைக் கெவன்பெய ரென்றிடின்
ஆற்று மைம்புலத் தாறுசென் மேலையோர்
போற்று **கந்த புராணம** தென்பதே. 17

பகுதி கொண்டிடு பாக்களி னத்தினுண்
மிகுதி கொண்ட விருத்தத் தொகைகளால்
தொகுதி கொண்டிடு சூர்கிளை மாய்த்தவன்
தகுதி கொண்ட தனிக்கதை சாற்றுகேன். 18

செந்த மிழ்க்கு வரம்பெனச் செப்பிய
முந்து காஞ்சியின் முற்றுணர் மேலவர்
கந்த னொந்தை கதையினை நான்முறை
தந்தி டென்னத் தமிய னியம்புகேன். 19

வெம்பு சூர்முதல் வீட்டிய வேற்படை
நம்பி காதையை நற்றமிழ்ப் பாடலால்
**உம்பர்** போற்ற வுமையுடன் மேவிய
**கம்பர் காஞ்சியிற் கட்டுரைத் தேனியான்.** 20

ஆகத் திருவிருத்தம் - 50.

# 4. ஆற்றுப்படலம்

—oo—

செக்கரஞ் சடைமுடிச் சிவனுக் கன்பராய்த்
தக்கவ ரறிஞர்க டவத்தர் செல்வராய்த்
தொக்கவர் யாரும்வாழ் **தொண்டை நாட்டினின்**
மிக்கதோ ரணியிய லதுவி ளம்புகேன். 1

சுந்தர மாயவன் றுயிலு மாழிபோல்
இந்திர னூர்முகி லியாவு மேகியே
அந்தமில் கடற்புன லருந்தி யார்த்தெழீஇ
வந்தன வுவரியின் வண்ண மென்னவே. 2

பார்த்தென வுலகடும் பரிதி யென்றொடும்
போர்த்தொழில் புரிகெனப் பொங்கு சீற்றத்தால்
வேர்த்தெனப் பனித்துவெள் ளெயிறு விள்ளநக்
கார்த்தென வேதடித் தசனி கான்றவே. 3

**பாடபேதம்—1 நயப்பரோ.**

போகன் மேயின மேற்றிசைப் புணரியுண் டமையா
மேக ராசிகள் குணகடல் மீதுசெல் வனபோல்.. 13

குவட்டு மால்கரிக் குருகுதே ரரிபுலிக் குவையுண்
டுவட்டி யுந்திடு திரைப்புனல் மதூகநல் லுழிஞில்
கவட்டி ஞெமைசாய்த் தாறலை கள்வரூர் கலக்கித்
தெவிட்டி வந்தது பாலையுட் கொண்டிடு செருக்கால். 14

காலை வெம்பகல் கதிரவன் குடதிசைக் கரக்கும்
மாலை யாமம்வை கறையெலாஞ் செந்தழல் வடிவாய்
வேலை யும்பரு கியவெழும் வெம்மைபோய் விளிந்து
பாலை காண்கிலா வாரியின் பெருமையார் பகர்வார். 15

குல்லை மாலதி கொன்றைகா யாமலர்க் குருந்து
முல்லை சாடியே யானிரை முழுவது மலைத்து
மெல்ல மற்றவை நீந்தலுங் கரைக்கண்விட் டுளதால்
தொல்லை மாநதி யான்வழித் தோன்றிய தொடர்பால். 16

சுளையு டைப்பல வாசினி பூகமாந் துடவை
உளைம லர்ச்சினை மருதமோ டொழிந்தன பிறவுங்
களைஞ ருற்றுமாட் டெறிந்தது கண்ணகன் குடிஞை
அளவின் மிக்குறு பாணிபெற் றதற்கவை யரிதோ. 17

இலைவி ரித்துவெண் சோறுகால் கைதையு மெழுதுங்
கலைவி ரித்திடு பெண்ணையுங் களைந்திடுங் கலைபோய்
அலைவி ரித்திடு கடல்புக வொழுகுமா றனந்தன்
தலைவி ரித்துழி யுடனெளித் தன்னதோர் தகைத்தால். 18

கொங்கு லாமலர்க் கொன்றைகூ விளைகுர வுழிஞை
பொங்கு மாசுணந் தாதகி பாடலம் புன்னை
துங்க மார்திருத் தலைமிசைக் கொண்டுறுந் தொடர்பால்
எங்க ணாயகன் றன்னையு மொத்ததவ் விருநீர். 19

கொலைகொள் வேன்மற வீரர்த மிருக்கையிற் குறுகாச்
சிலையும் வாளொடு துண்டமுந் திகிரிவான் படையும்
நிலவு சங்கமுங் கொண்டுசென் றடல்புரி நீரால்
உலக மேழையு முற்பக லயின்றமா லொக்கும். 20

தேன்கு லாவிய மலர்மிசைப் பொலிதரு செயலால்
நான்க வாமுகந் தொறுமறை யிசையொடு நணுகிக்
கான்கு லாவிய கலைமறை மான்றிகழ் கவினால்
வான்கு லாமுல களிப்பவ னிகர்க்குமால் வாரி. 21

மீது போந்திரி சங்கைவிண் ணிடையின்மீ னோடும்
போது லாயுற வீசலாற் சலமிகும் புலனால்
தீதின் மாக்களைச் செறுத்தலா லளித்திடுஞ் செயலாற்
காதி காதல னிகர்க்குமாற் கன்னிமா நீத்தம். 22

கால்கிளர் கின்ற நீத்தங் கவிரிதழ்க் கலசக் கொங்கைச்
சேல்கிளர் கரிய வுண்கட் டிருநுதல் மிழற்றுந் தீஞ்சொல்
மேல்கிளர் பரவை யல்குன் மெல்லிய லுமன்மென் கூந்தல்
மால்கிளர் **கணிகை மாதர் மனமெனப்** போயிற் றுமால், 32

பாம்பனை புகுவ தேபோற் பாய்தரு பரவைத் தெண்ணீர்
தூம்பிடை யணுகு மாற்றாற் சொன்முறை தடைசெய் வோரில்
தூம்புடை பெயரா வண்ணந் தலைத்தலை தள்ளு மள்ளர்
ஏம்பலோ டார்க்கு மோதை யுலகெலா மிறுக்கு மாதோ. 33

பணையொலி யிரலை யோதை பம்பையின் முழக்க மங்கட்
கிணையொலி மள்ள ரார்ப்புக் கேழ்கிளர் துரங்க நன்னீர்
அணையொலி யவற்றை வானத் தார்ப்பொலிக் கவனி தானும்
இணையொலி காட்டிற் றேயென் றெண்ணுவார் விண்ணு ளோரும் 34

இயல்புகுங் களிநல் யானை யினங்கெறிந் தெய்து மாபோல்
கயல்புகுந் துலவுஞ் சின்னீர்த் தடம்புகுங் காமர் காவின்
அயல்புகுங் கோட்ட கத்தி னகம்புகு மார்வத் தோடி
வயல்புகுங் களிப்பு நீங்கா மாக்களின் மயங்கு மாதோ. 35

எங்கணு நிறைந்து வேறோ ரிடம்பிறி தின்மை யாகத்
தங்கமா யீண்டு மள்ளர் தாங்குபல் வியமு மார்ப்பப்
பொங்கிய நகரந் தோறும் புறமெலாம் வளைந்த நீத்தம்
அங்கண்மா ஞாலஞ் சூழு மளக்கரை நிகர்த்த தாமே. 36

மாறடு மள்ள ருய்ப்ப மருதத்தி னிறைந்து விஞ்சி
ஏறிய நார மீட்டு மிருங்கட னோக்கிச் சென்ற
வேறுகொள் புலனை வென்றோர்[1] மேலைநன் னெறியுய்த் தாலுந்
தேறிய வுணர்வி லாதோர் செல்வுழிச் செல்வ ரன்றே. 37

வாளெனச் சிலைய தென்ன வால்வளை யென்னத் தெய்வக்
கோளெனப் பணிக ளென்னக் குலமணி குயிற்றிச் செய்த
மீளிவெஞ் சரங்க ளென்ன வேலென மிடைந்து சுற்று
நாளெனப் பிறழு மீன்க ணடவின நார மெங்கும். 38

மாண்டகு பொய்கை தோறும் வயறொறு மற்று மெல்லாம்
வேண்டிய வளவைத் தன்றி மிகுபுனல் விலக்கு கின்ற
ஆண்டகை மள்ளர் தம்பா லமைந்திடுங் காலை யெஞ்சி
ஈண்டிய வெறுக்கை வீசும் **இடைப்படு வள்ள லொத்தார்.** 39

ஆகத் திருவிருத்தம் - 89.



1 புலனை வெல்லுதல் - மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம் புலன்களின் வழியே மனத்தைச் செலுத்தாமல் அடக்கித் தன் வசப்படுத்தல்.

# 5. திருநாட்டுப்படலம்

-()()-

அவ்வியல் பெற்றிடு மாற்றின் மள்ளர்கள்
மைவரு கடாவுடை மங்கைக தன்னரிமை
பெய்யுளாங் கொள்வழைத் தோன்றிப் பங்கியர்
செவ்விக ளுறுதியே யிளைய பெய்துவார். 1

சேட்டுளந் திகழ்வுறைச் செங்கரெற் றெழுதுங்
கோட்டுடைப் பகட்டினம் விரவிக் கொண்முறை
காட்டினர் நிரைபட வுழுது பகாசினி
பூட்டுறு பொலன்மணி யாரம் போலவே. 2

காற்றினு மனத்தினுங் கடுமை சான்றன
கோற்றொழில் வினைஞர்தங் குறிப்பிற் செல்லுவ
ஏற்றினந் தேறலு மிரிந்த சேவினம்
பாற்றின மருளவின் படர்ந்து பாயுமால். 3

சால்வளை தாவுறும் வயலிற் றங்கிய
வால்வளை யினம்வெரீஇ வயவன் மாட்டெடைச்
சூல்வளை பருவதங் கறிஞர் சூழ்விலைக்
கோல்வளை மகளிர்பாற் கூட்ட மொத்தவே. 4

உலத்தொடு முறழ்புயத் துழவர் பொன்வினை
புலத்தினும் வியத்தகு வயலிற் போக்கிய
வலத்திடைப் பிறழ்மணி வேள்வி யாற்றிடும்
நிலத்திடைப் பிறந்தமின் னிகர்க்கும் நீர்மைய. 5

நாறுசெய் குநர்சிலர் நார நீர்வயல்
ஊறுசெய் குநர்சில ரொத்த பான்மையிற்
சேறுசெய் குநர்சிலர் வித்திச் செல்லுநீர்க்
காறுசெய் குநர்சில ரளப்பின் மள்ளரே. 6

கூச்செனப் பரிமிசைக் குலாய கொய்யுளை
வைச்செனத் தளிர்த்தெழு நாற்றின் மாமுடி
அச்செனப் பதித்தனர் கடைஞ ராவியா
நச்சின மகளிரை நினைந்து நைந்துளார். 7

வாக்குறு தேறலை வள்ள மீமிசைத்
தேக்கினர் குழவர்தந் தெரிவை மாதரார்
நோக்குறு மாடியி னுனித்து நோக்கினர்
மேக்குறு காதலின் மிசைதன் மேயினார். 8

வாடுகின் றார்சிலர் மயங்கி நெஞ்சொடு
மூடுகின் றார்சில ருயிர்க்கின் றார்சிலர்
பாடுகின் றார்சிலர் பணிகின் றார்சிலர்
ஆடுகின் றார்சிலர் நறவ மார்ந்துளார். 9

அந்தரப் புள்ளொடு மளிக டம்மொடும்
வந்தடுத் தவரொடு மயக்கு தேறலை
இந்திரத் தெய்வத மிறைஞ்சி வாமமாந்
தந்திரக் கிளைஞர்போற் றுழு மேயினார். 10

விள்ளூறு நாணினர் விரகத் தீயினர்
உள்ளூறு மயிர்ப்பின ருலையு நெஞ்சினர்
தள்ளூறு தம்முணர் வின்றிச் சாம்பினார்
கள்ளினு முளதுகொல் கருத்த ழிப்பதே. 11

பளிக்கறை யன்னதோர் படுகர்ப் பாங்கினுந்
தளிர்ப்புறு செறுவினுந் தவறுற் றேகுவார்
தெளிப்பவ ரின்மையி னெறியிற் சென்றிலர்
களிப்பவர் தமக்குமோர் கதியுண் டாகுமோ. 12

இன்னன பற்பல வியற்றி யீண்டினர்
உன்னருந் தொல்லையி லுணர்வு வந்துழிக்
கன்னெடுந் திரள்புயக் கணவ ரேவலில்
துன்னின ரவரொடுந் துவன்றிச் சூழ்ந்துளார். 13

மள்ளர்தம் வினைபுரி மழலைத் தீஞ்சொலார்
கள்ளூறு புதுமணங் கமழும் வாலிதழ்
உள்ளூறு நறுவிரை யுயிர்த்து வீசிய
வெள்ளிய குமுதமென் மலரின் மேவுமே. 14

நட்டதோர் குழுவினை நடாத தோர்குழு
ஒட்டலர் போலநின் றுருத்த லுன்னியே
அட்டன ராமென வடாத வான்களை
கட்டனர் வேற்றுமை யுணருங் காட்சியார். 15

ஏயின செயலெலா மியற்றி வேறுவே
றாயிடை வேண்டுவ தமைய வாற்றியே
மாயிரும் புவிமிசை மகவைப் போற்றிடுந்
தாயென வளர்த்தனர் சாலி யீட்டமே. 16

மன்சுடர் கெழுமிய வயிர வான்கணை
மின்சுடர் தூணியின் மேல கீழுறத்
தன்சுடர் பொலிதரச் செறித்த தன்மைபோற்
பொன்சுட ரிளங்கதிர் புறத்துக் கான்றவே. 17

பச்சிளங் காம்புடைப் பணையின் மீமிசை
வச்சிரத் தியற்றுமோ ரிலைகொள் வான்படை
உச்சிமே லுறாநிறீஇ யொருங்கு செய்தெனக்
குச்சுறு சாலிமென் கதிர்கு லாவுமால். 18

சுற்றுறு பஃறலைச் சுடிகை மாசுணம்
பெற்றுறு குழவிகள் பெயர்த லின்றியே
முற்றுறு நிவப்பொடு முறையி னிற்றல்போல்
நெற்றுறு பசுங்கதிர் நிமிர்தல் மிக்கவே. 19

மையுறு கணிகையர் மகிழ்நர் வந்துழிப்
பொய்யுறு மனியெனப் பயனில் புன்கதிர்
கையுறு முவகையாற் பணியுங் கற்பினோர்
மெய்யுறு பரிவென விளைந்து சாய்ந்தவே. 20

மாலுறு பொன்னகர் மருவு மன்னரிற்
பாலுறு தீம்பதம் பலவு மார்த்தியே
மேலுறு சாலியின் விளைவு நோக்கியே
கோலினின் றரிந்தனர் குழாங்கொண் மள்ளரே. 21

அரிந்திடு சுமைகளா லவனிப் பேருடல்
நெரிந்திடச் சேடனு நெளிந்து நீங்கிடத்
தெரிந்திடும் போர்கள்சே ணளவுஞ் சேறலாய்
விரிந்திடு கதிர்சுலா மேரு வாயவே. 22

ஏற்றொடு பகட்டின மிசைத்துப் போருரு
மாற்றினர் வலமுறை திரித்து வாழ்த்தொலி
சாற்றினர் பரனொடு தமது தெய்வதம்
போற்றினர் மீமிசை பொலிகென் றேத்துவார். 23

தொங்கலம் பூமுடித் தொழுவர் போரினை
அங்குறப் படுத்துவை யகற்றி யாக்கிய
பொங்கழிப் பகடிகள் புறத்து வீசியே
எங்கணு நெற்குவை யியற்று வாரரோ. 24

களப்படு கைவலோர் கால்க ளான்முகத்
தளப்புறு நெற்குழா மவற்றுண் மன்னவற்
குளப்படு கடன்முறை யுதவி மள்ளருக்
களித்தனர் வேண்டிய தனைய நாட்டுளோர். 25

சொற்குவை வழிபடப் புகழிற் றோன்றுதம்
மிற்குவை வேண்டுவ தேவி யெஞ்சிய
நெற்குவை குரம்பையி னிரப்பு வித்தனர்
பொற்குவை யரிந்தனர் பொதிவித் தென்னவே. 26

தலத்திடை வேறிடத் தொதுங்குந் தன்னிய
குலத்திடைப் பிறந்தவர் கூட்ட மாமென
நலத்திடை வந்திடு முதிரை நல்வளம்
நிலத்திடை யொருசிறை விளையு நீரவே. 27

பிறப்பதும் வளர்வதும் பின்னர் மூப்புறுந்
திறப்பதும் வைகலு முலகி லேய்ந்தெனச்
சிறப்புட னடுவதும் பருவஞ் செய்வதும்
மறுப்பதுந் தொகுப்பது முலப்பின் றுயவே. 28

முழவொலி விண்ணவர் முதல்வற் காக்குறும்
விழவொலி கிணையொலி விரும்பு மென்சிறார்
மழவொலி கடைசியர் வள்ளைப் பாட்டொலி
உழவொலி யல்கலு முலப்பு றுதவே. 29

காலுற நிமிர்ந்திடு காமர் சோலையும்
நீலமுங் கமலமு நிறைந்த பொய்கையும்
ஆலையங் கழனியும் அநங்கற் காயுத
சாலைக ளிவையெனச் சாற்ற நின்றவே. 30

நெறியிடை யொழுகலா விழுதை நீரரை
மறலிதன் னகரிடை வருத்தல் போலுமால்
குறைபடத் துணித்தவண் குவைசெய் கன்னலை
அறைபடு மாலைக ளிடையிட் டாட்டலே. 31

ஏறுகாட் டியதிற லிளைஞ ரேந்திரங்
கூறுகாட் டியகழை யழுங்கக் கோறலுஞ்
சாறுகாட் டியதரோ யாதுந் தம்மிடை
ஊறுகாட் டினர்க்கலால் உலோப ரீவரோ. 32

மட்டுறு கழையினும் வலிதிற் கொண்டபின்
இட்டகொள் கலங்களி னிருந்த தீம்புனல்
தொட்டிடு கடலெனத் தோன்று மன்னவை
அட்டதோர் புகைமுகி லளாவிற் றெருக்குமே. 33

கூடின தேனிசை யிளமென் கோகிலம்
பாடின மயில்சிறை பறைய டித்தன
வாடின வஞ்சிதந் தலைய சைத்திடா
நாடின பாதவம் புகழ்வ னாரையே. 34

காரொடு நித்திலப் பொதியுங் காட்டியே
பாசடை மாதுளை சினையிற் பைங்குயில்
பேசிட நிற்பன பெறீஇயர் வம்மென
வீசுதல் கருதியே விளித்தல் போன்றவே. 35

சித்திரக் கதலிமா வருக்கைத் தீங்கனி
துய்த்திட வரும்பய னுதவுந் தோற்றத்தால்
உத்தம முதலிய குணத்தி னோங்கிய
முத்திறத் தவர்கொடை மொழிய நின்றவே. 36

வீசுகால் பொரவசை விசும்பிற் றுழைகள்
தேசுலாம் பரிதிமெய் தீண்டுஞ் செய்கைய
காசினி தன்கையாற் கலைவெண் டிங்கள்போல்
மாசுறு வகைதுடைத் திடுதல் மானுமே. 37

வாசநீள் பொதும்பரின் மைந்தர் மாதர்கள்
காசுநூன் மேகலை பரியக் கைவளை
பூசலிட் டலமரப் புணருஞ் செய்கைகண்
டாசைமிக் கழுங்குவ பிரிந்த அன்றிலே. 38

கானுலா நந்தன வனமுங் காரென
வானுலாந் தண்டலை மருங்கும் வைகலும்
வேனிலா னன்னவர் மகளிர் மேயினோர்
ஊனுலாங் குரம்பையு ளுயிருற் றென்னவே. 39

அரும்புறு மகன்றனை யருந்த ஞாழலின்
விரும்புற வோச்சிய விளைமென் றாதினாற்
பரும்பொனிற் றுயிற்றிய பதியிற் றூரிகைத்
தரும்பெலாம் வெள்ளியந் தாக்குந் தாமரையே. 40

உற்றிட லரிதவ னுழவர் நீத்ததோர்
சுற்றிடுந் தாண்பனை யிடற்றுந் தூய்வளை
தெற்றிடும் பூங்கொடி படர்க்குந் தேம்பிணர்
பற்றிடுந் தேம்பழ மிழுக்குந் தேன்களே. 41

காணிமிர் கந்திகள் கான்ற பாளைமேன்
மீனினம் பாய்தலுஞ் சிதறி வீழ்வுறு
வானதோர் மருந்தவைப் படையுந் தன்மைய
வானுறு தாரகை வழுக்கிற் றொக்குமால். 42

மாகுல வல்லியின் மஞ்ஞை யாடல்போல்
கோகில மார்தருக் குழாத்தி னூசன்மேற்
பாகுல வின்சொலார் பரிக்கு மெல்லிடைக்
காகுலம் பிறர்கொள மகிழ்வி னாடுவார். 43

ஊசலூற் றவர்குழைக் குடைந் திடுதலா லூசலை
வீச லொப்பன வாடுதல் கிளிமொழி வெருவிப்
பேச லொப்பன வீழ்ந்திலர் பிழைத்ததீ தென்றே
யேச லொப்பன கோகிலப் பறவைக ளிசைத்தல். 44

கூர்ப்புக் கொண்டகட் கொடிச்சியர் குளிர்புனங் காப்போர்
ஆர்ப்புக் கொண்டுகை விசைத்தெறி மணிக்கல்வாய்த் தணையச்
சார்ப்புக் கொண்டதஞ் சிறகரால் விலக்கியத் தடத்துப்
பார்ப்புக் கொண்டுகொண் டெழுவன தோலடிப் பறவை. 45

வேறு

கடற்பரு கியமுகில் பெய்யுங் காட்சிபோல்
அடற்பெரு மேதிக ளனைத்தும் புக்குராய்த்
தடப்புனல் வறிதெனப் பருகித் தம்மனைக்
குடத்திழி பாலினாற் குறையைத் தீர்க்குமே. 46

பாட்டிய லளிமுரல் பதுமக் கோயிலில்
நாட்டிய நிமலன்மு னந்தி நீரிடை
மாட்டிய பல்பெருஞ் சுடரை மானுமாற்
கோட்டுயர் தடந்தொறுங் குவளை பூத்தவே. 47

கலனிடைத் தருவதுங் கானத் துள்ளதும்
பொலனுடைப் பொருப்பிடைப் பொருளு மல்லது
நலனுடை நாட்டவர் நயத்த லின்றியந்
நிலனிடைப் பொருள்பகர் வழக்க நீத்ததே. 48

யாழ்க்கையர் பொருநருக் கிறைவ ரேழிசை
வாழ்க்கைய ரளவையின் வருத்த பாடலைக்
கேட்குநர் நன்றெனு மருப்புக் கிம்புரிப்
பூட்கைக ளுதவுவார் பொதுவி ரேறுமே. 49

கஞ்சிதேய்ப் புண்டகில் கமழும் பூந்துகில்
வஞ்சிதேய்ப் புண்டன மருங்கு லாரடி
பஞ்சிதேய்ப் புண்டன பணியத் தாக்கலாற்
குஞ்சிதேய்ப் புண்டன குமரர் கூட்டமே. 50

அன்றிலம் பெடைகளை யணுகி யன்னைகேள்
நன்றெனு வினையின்மே னடந்த நாயகர்
இன்றுவந் திடுவரிங் கெம்பொ ருட்டினால்
ஒன்றுநீ யிரங்கலென் றுரைக்கின் றார்சிலர். 51

ஆடியல் கருங்கணுஞ் சிவப்புற் றங்கமும்
வாடுவ தாகியே மதன வேர்வுறக்
கூடிய மகளிருங் குமரர் தங்களை
ஊடிய மகளிரு முலப்பின் றுயினார். 52

அகனமர் கணிகைய ரடிகள் சூடியே
முகனுறு முவகையான் முயங்கி யன்னவர்
நகனுறு குறிகொளீஇ நாளுங் காமநூல்
தகைமைசெய் காளையர் றொகுதி சான்றதே. 53

வாளைக ளிகல்புரி வயலும் வாவியும்
பாளையொ டுற்பலம் பதும நாறுமால்
வேளையர் தடங்கணார் விரைமென் றுளினை
காளையர் குஞ்சியுங் கமழு நாறுமால். 54

சேவக மணைவன கரிகள் சேனைகள்
காவக மணைவன கலைகள் புள்ளினம்
பூவக மணைவன பொறிவண் டாயிடைப்
பாவக மணைவன பாட லாடலே. 55

ஆடக மாமதி லம்பொற் கோபுரம்
நீடிய மண்டப நெறிகொ ளாவணம்
பாடலொ டாடலம் பிறவும் பாலினன்
றுடுள பதிதொறு நண்ணி யோங்குமே. 56

தெண்டிரை யுலகினிற் சீர்பெற் றோங்கிய
மண்டல மெங்கணு மதிக்க நின்றதோர்
தொண்டைநன் னாட்டணி சொல்லி னமினித்
தண்டமிழ் வளநகர்த் தன்மை கூறுவாம். 57

ஆகத் திருவிருத்தம் - 146.

# 6. திருநகரப் படலம்

—○○—

மாவுல கெங்கு மலர்ந்திட மாகத்
தாவறு சீர்புனை தண்டக நாடே
மேவிய கந்தர மாவதின் மேவுந்
தேவினை யொத்துச் சீர்பெறு காஞ்சி. 1

பூக்கம லத்துறை பங்கயன் மாயோன்
பாங்குறை தேவர்பல் லாண்டிடை பாவ
ஓங்கிய புள்ளின மூர்த்தவ னுறைதலால்
ஆங்கவர் மேவு மரும்பத மாமே. 2

இன்னிய தோர்தரு மிந்திரன் முதலா
மன்னிய வானவர் மற்றுளர் யாருந்
துன்னின ராயிடை சூழ்ந்துறை செயலாற்
பொன்னக மென்று புகன்றிட லாமால். 3

கின்னரர் சித்தர் கெழீஇயத முலைத்
தங்கிக ளில்லவர் தம்பதி போலும்
பன்னக வேந்தர் பயாயின ருறலால்
அன்னவர் தம்பதி யாகிய தன்றே. 4

எண்டிசை காவலர் யாவரு மீண்டப்
பண்டவர் பெற்ற பதங்களை மாறும்
மண்டல மார்சுடர் மற்றுறைய வுறலால்
அண்டமு மாகிய தப்பதி யென்பார். 5

இப்படி யாவரு மெய்திய திறனால்
ஒப்பன போல வுரைத்திட யொப்போ
அப்பதி யேயத னுக்கிணை யன்றிச்
செப்பரி தாற்பிற சீர்கெழு காஞ்சி. 6

மறைமுத லோர்தனி மாவி னிழற்கீழ்
உறைதரு காஞ்சி தனக்குல கெல்லாம்
பெறுமய னாதியர் பெற்றிட வன்றுன்
நிறுவிய தொன்னக ரோமிக மாமே. 7

மேயதொல் லூழியில் வேலைக ளேழுந்
தூயது னெல்லை சுலாவுற நிற்றல்
ஆய பரஞ்சுட ராங்குள தாயும்
மாயைகள் சுற்றிய மன்னுயி ரோக்கும். 8

வேறு

பாழி மால்வரை யெறிதிரை வையகம் பலவும்
வாழு மண்டங்கள் சிற்றுரு வமைந்துவந் தென்னச்

சூழு நேமியம் புள்ளின முதலிய சுருங்கும்
ஆழி நீத்தம தொத்தது **மதிற்புறத் தகழி.** 9

மண்ட லப்பொறை யாற்றுவான் பற்பல வகுத்து
மூண்ட காசன மீமிசை யிருந்திடு முதல்வன்
அண்ட கோளகை தாங்கவோர் சுவர்த்தல மதுவும்
பண்டு செய்தென வோங்கிய **நெடுமதிற் பரப்பு.** 10

சென்று மூவெயி லழலெழ நகைத்தவன் செழும்பொற்
குன்று தோளுற வாங்கலு முலகெலாங் குலைந்த
அன்று நான்முக னனைத்தையுந் தாங்குகென் றருள
நின்ற தென்னவும் பாதலம் புகுந்துமேல் நீண்ட. 11

மேக நாட்டிற்கும் விஞ்சையர் நாட்டிற்கும் விண்ணோர்
மாக நாட்டிற்கும் மலைய னாட்டிற்கும் மற்றை
நாக நாட்டிற்கும் பாதல நாட்டிற்கும் நணுகிப்
போக நாட்டிய பொன்மதில் ஆனதப் புரிசை. 12

முதிரை வண்ணமா நவமணிக் குவையும்வான் முளைக்குங்
கதிரி னெல்லெனும் பொருளுட னனைவுங் காட்டிப்
பொதிவ தாகியே முழுவதும் நிரம்புதல் பொருந்தா
நிதிய மேயகூ டொத்தது **நெடியமா மதிலே,** 13

நிறையும் வார்கடல் சுற்றிய நேமியும் நேமிக்
குறையு ளாகிய கணிப்பிலா வண்டமு மொப்ப
சிறையில் வான்கிரி நிலையெனச் செவ்விதிற் கிளர்ந்து
மறுகெ லாந்திகழ் மாளிகைப் பத்திசூழ் **மதிலே.** 14

தடுக்கு மாற்றலர் நால்வகைப் படையொடுஞ் சாய
முடுக்கும் வாள்கொடு விதிர்த்திடு மழுவினுன் முருக்கும்
எடுக்கு மெற்றிடு மெறிந்திடும் விழுங்கிடு மீர்க்கும்
படுக்குங் கன்மழை சொரிந்திடும் விற்படை பயிலும். 15

உருக்குஞ் செம்பினை வங்கத்தை யிழுதொடு மோச்சும்
வெருக்கொ ணேமிக ளெறிந்திடும் வச்சிரம் வீசி
இருக்கும் நின்றிடுங் குப்புறுஞ் செறுநரை யிகலி
நெருக்குந் தாழ்ந்திடும் **உலகளந் தோனென** நிமிரும். 16

பீடு தங்கிய பணைமுர சியம்பிடும் பிடிக்குங்
கோடு மார்த்திடுந் துடிகளு மொலித்திடுங் கொட்புற்
றுடும் மீயுயர் புள்ளையு மெறிந்திடு மரண்மேல்
ஓடும் மீனுமக் கதிரையுந் தடுப்பபோல் உந்தும். 17

சூலம் வீசிடுந் தோமரம் வீசிடுஞ் சுடர்வேல்
ஆலம் வீசிடுஞ் சுடுமணல் வீசிடு மளப்பில்
சாலம் வீசிநின் றீர்த்திடு மகழியிற் றள்ளுஞ்
சீலம் வீசிய பாரிட மாமெனத் திரியும். 18

திகழும் வெங்கன லுமிழ்ந்திடு மொன்னலர் செலுத்தும்
பகழி மாரியை விழுங்கிடும் பறவையிற் படரும்
இகழு நாவையு மனத்தையு மெறிந்திடு மென்றாற்
புகழு மீசவன் றம்மதின் மேலுறும் பொறிகள். 19

பூணி னேர்தரும் பொன்னவாம் புரிசைமேற் புனைந்த
வாணி லாவெனுந் துகிலினை பெயர்வன மலர்மேலோன்
சேணுறை வாயதிருந் கடவுளுங் கோபுர மெங்குங்
காண வேபல வெங்ஙனமாய்த் தோன்றிடுங் கயிலையும். 20

ஈர்ந்த மாமதி சசியென்ப துலகுளோ ரிட்ட
வார்த்தை யல்லது சரதமோ கடிமதின் மருங்கில்
தூர்த்த கேதன மென்மணி மேனியிற் றுடக்கப்
போர்த்த வெண்ணிலாக் கஞ்சுகம் பிறியபோலாம். 21

காட்சி மேயவக் கடிமதிற் கதலிகை காணூஉச்
சூட்சி நாடிய பரிதியுங் கீழுறத் தொடர்ந்தான்
மாட்சி தேய்ந்திலன் வரன்முறை மனப்படு மதியோர்
தாட்சி செய்யினு மனையர்பா லணுகுமோ தவறு. 22

புடைப ரப்பிய புரிசையி னுற்றிசைப் புறத்துங்
குடமி லைப்பெருங் கோபுர முளதழ னிறத்துக்
கடவு ளுச்சியின் வதனமொன் றின்றியே காண்பான்
அடைத லுற்றிடு திசைமுகம் பொருவின அவையே. 23

என்று மாமதிக் கடவுளும் பிறருமீ ரியல்பாங்
குன்ற மேயெனக் கீழ்த்திசை யதனொடுங் குடபாய்
நின்ற கோபுரங் கடக்கலர் வாய்தலி னெறியே
சென்று சென்றுபோ யப்புறத் தேகினர் திரிவார். 24

தீபு ரத்திடை மடுத்தவ னுணையாற் சிறந்த
மாபு ரத்திடை வான்றொடுங் கடிமதில் வரைப்பில்
ஆபு ரத்தவாய்க் கிளர்ந்தவே யமைத்தவன் றன்னைக்
கோபு ரத்திடைக் கொழுந்துபோ யோங்கிய கொடிகள். 25

மாட மாளிகை மண்டபங் கோபுர மறுகிற்
கோடி கோடியின் மேலுமுண் டன்னதார் குணிப்பார்
ஆடு கேதனத் தளவையு மன்னதே அகல்வா
னூடு போகலா தலமரும் பறவைக ளொப்ப. 26

சிகர மால்வரை யன்னமா ளிகைதொறுஞ் சிவணும்
மகர தோரண மாடிகள் பலவுற வயங்கல்
இகலும் வெய்யகோ னிரண்டுமா யொருவடி வெய்தி
அகல்வி சும்பிடைக் கதிர்களின் புறமறைத் தனைய. 27

செம்பொ னிற்புரி நிலையுடைத் திகிரியந் தேர்கள்
அம்ப ரத்திடை வசியுற வீற்றுவீற் றுருகுந்

தம்ப முற்றல மருவன செய்யகோற் றலையிற்
பம்ப ரத்துருத் திரிப்புறக் கறங்கிய படிய. 28

பளிங்கி னூற்செய்த தெற்றியின் றலைமிசைப் பனிதோய்
வளங்கொ ணித்திலஞ் செம்மணி குயிற்றிய வைப்பில்
துளங்க நாற்றிய பொன்மணிப் பாலிகை தொகுவ
குளங்கொ டாமரை மலர்ப்பொருட் டாயின குறிக்கின். 29

ஓவி யத்தியன் மரகதத் தலத்தின தும்பர்த்
தாவி லாடகத் தலமிசை நித்திலத் தலமேற்
கோவை பட்டசெம் மணித்தலம் பொலிதலாற் கொண்மூ
மூவ கைக்கதிர் வியலிடந் தெரிப்பதம் மூதூர். 30

கன்னல் வேளொனும் மைந்தரும் மாதருங் கலந்து
மன்னு நித்தில மாளிகைப் பந்தியின் மாடே
பொன்ன வாஞ்சிறை மணிமயிற் குழாத்தொடும் போகும்
அன்னம் மாமதி முகிலிடை நுழைந்துபோ யனைய. 31

தண்ட மாகியே புவியுறு பணியெலாந் தழுவி
அண்ட மீமிசை யிரவியும் மதியமு மடைதல்
கண்டு மாளிகைச் சூளிகை மருங்குபோய்க் கவர்வான்
கொண்ட சீற்றத்தின் நாவெறிந் தன்னபூங் கொடிகள். 32

தேனை வென்றசொல் லாரொடு மைந்தருந் திளைக்கும்
மீன வாவிபோல் வியன்படி கத்தினால் விளங்குந்
தான மீமிசைத் தயங்கிய முழுமணித் தலந்தான்
வான நின்றிடு தெய்வத மானமே மானும். 33

தேவர் தானவர் முனிவரர் சித்தரோ டியக்கர்
வாவு கின்னர ருவணர்கந் தருவர்மற் றுள்ளோர்
ஏவ ருந்தம தகன்பதி யிகந்தவ ணெய்தா
மேவு கின்றன தனித்தனி யிருக்கைகண் மிகுமால். 34

தூங்கு குண்டிகை யருகுறக் காலெதிர் தூண்டி
ஓங்கு நாசிமேல் விழிமுறை நயனங்க ளூறுத்தி
ஆங்கொ ராசனத் திருந்தர னடியகத் தடக்கிப்
பாங்கர் மாதவம் புரிகுநர் சாலைகள் பலவால். 35

பாடு நான்மறை யந்தணர் வேள்விகள் பயில
மூடு தண்புகை யண்டமுங் கடந்தன முன்னந்
தேடு கின்றதோர் பரஞ்சுடர் மீட்டுமித் திறத்தால்
நீடு கின்றதோ வென்றுநான் முகத்தனும் நினைய. 36

நான்ம றைக்குலத் தந்தணர் நவையறு காட்சி
ஊன்ம றைத்திடு முயிரென வோம்பிய வொழுக்கார்
மேன்மு றைக்கணே ரைம்புலப் படிற்றினை வென்றோர்
வான்ம றைத்திடு மாளிகை வீதியும் மலிந்த. 37

ருடு சித்திரப் பத்தி யமரரும்
நாடி நோக்கி நயந்திடப் பட்டதே. 47

எல்லை தீர்ந்த விரவிக டூண்டிய
சில்லி யாழித் திகிரிகண் மாணுமால்
மல்லன் மாநகர் மைந்தர்க ளூர்தரும்
பல்வ கைச்சுடர்ப் பண்ணுறு தேர்களே. 48

வெள்ளை யாதி வியன்கவி யாவையுந்
தெள்ளி தின்மொழி தென்கலை யேமுதல்
உள்ள பல்கலை யோதுகின் றார்களும்
வள்ளி யோர்களும் மன்றுதொ றீண்டுவார். 49

இகலும் வேழத் தெயிற்றிணை யேய்ந்திடும்
நகிலி னார்க ணறுங்குழன் மேலிடும்
அகிலி னாவியு மாய்மணி மாடமேல்
முகிலும் வேற்றுமை யின்றி முயங்குமே. 50

பண்ணி னோசையும் பானலை வென்றிடுங்
கண்ணி னார்கள் களிநட வோசையுந்
தண்ண ரம்பிய றந்திரி யோசையும்
விண்ணு ளோர்க்கும் விருந்தென லாயவே. 51

அணிகு லாவு மரம்பையர் காளையர்
நணிய தோளை நயப்புற நாகருங்
கணிகை மாதரைக் காமுற மேவலான்
மணிகொள் காஞ்சி மதுர ராயதே. 52

கூற்றிற் செல்லுங் கொலைக்கரித் தானமும்
ஏற்றிற் செல்லு மிடையர்தஞ் சேரியின்
ஊற்றிற் செல்லு மொண்பாலு முடனுரு
ஆற்றிற் செல்லுமவ் வாவணந் தோறுமே. 53

வேறு

பண்ணுளர் நரம்பியல் பாணிக் கேற்றிட
வெண்ணுள கணிகைய ரினத்தொ டாடலுங்
கண்ணுள ராடலுங் காம னாடலும்
விண்ணுள ராடலும் வெறுப்ப மேவுமே. 54

அரிவையர் மைந்தர்க ளணிந்து நீத்ததே
திருமகள் காமுறுஞ் செல்வ மாகுமேற்
கருதரு நான்முகக் கடவுட் காயினும்
பொருவரு நகர்வளம் புகலற் பாலதோ. 55

வேறு

மாறாய்ச் சிறார்க ளெறிந்தாடிய மான்ம தத்தாற்
சேறாய்ப் பொற்சுண்ணத் துலர்வாய்ப்பனி நீர்கள் சிந்த

கயிலையி லரனை யம்மைபூங் காவிற் கண்களை மூடலு முலகிற்,
பயிலுறு கொடிய வினையிரு ளகலும் பான்மையால் வந்துமா நிழற்கீழ்,
இயலொடும் பரமன் பூசனை யியற்றி யிரைத்தெழு கம்பைகண் டஞ்சிச்,
செயன்முறை தழுவக் குழைந்தருள் செய்யச் **சிவபுர மானதச் சீரூர்.** 66

விண்ணுறை மகவான் கரிபுரி தவத்தால் வெற்பதாய்த் தன்னை
முன்றாங்கு, புண்ணிய கோடி யிபகிரி மிசையே பொருவிலா வேதியுத்
தரத்தில், அண்ணலங் கமலத் திசைமுகன் வேள்வி யாற்றலு மவற்
கருள் செய்வான், கண்ணன்வந் திடலால் **விண்டுமா புரமாங் கட்டுரை பெற்
றதக் காஞ்சி.** 67

கார்த்திரு மேனித் தண்டுழாய் மௌலிக் கண்ணனுங் கமலமே
லயனும், ஆர்த்திடுந் தரங்கப் பகீரதி மிலைந்த வவிர்சடை யமலனு
மாகும், மூர்த்திக டந்த முலகமே போல முன்னியப் பதியமர் செய
லாற், **சீர்த்திரி மூர்த்தி வாசமா கியபேர் சிறந்ததக் கச்சிமா நகரம்.** 68

தரணிகண் முழுதும் புரிதரும் விரிஞ்சன் றன்மனம் புனிதமாம்
பொருட்டால், திருமகள் கணவன் கமடமாய்ப் பூசை செய்திடு கச்சபா
லயத்தில், அரனடி பரவி யருச்சனை யியற்றி யங்கணீற் றிருந்திடு
நெறியால், வரமிகு **பிரம புரமென வொருபேர் மன்னிய தன்னதோர் நகரம்.** 69

வீடுறு முத்தி போகமென் றவற்றில் வெஃகிய வெஃகியாங்
கெண்ணுங், கூடுறு தவத்தால் வழிபடு வோர்க்குக் கொடுத்திடுந்
தன்மையாற் **காம, பீடமென் றொருபேர்** பெற்றது மலர்மேற் பிரமனே
முதலினோர் தவத்தை, நாடினர் செயலால் **தபோமய மெனும்பேர் நணியது
கச்சிமா நகரம்.** 70

சகங்களோர் மூன்றி லறம்பெரி துளதித் தரணியித் தரணிமா
நகர்க்குள், மிகுந்தரு மத்தின் பலத்தினைத் தரலால் வியன்சகற் **சாரமென்
றொருபேர்,** புகும்பரி சுடைய தட்டசித் திகளும் பொருவின்மா தவர்க்கரு
டிறத்தாற், பகர்ந்திடுஞ் **சகல சித்தியென் றொருபேர் படைத்தது கச்சியம்
பதியே.** 71

**உ**ன்னருங் கயிலை நாயக னுமையை யொருபக னீலியென் றுரைப்ப,
அன்னவ டனது காளிமங் கழிப்ப வங்கதி லையைவந் தெழலும், முன்
னவ னவளை யிங்ஙக ரிருந்து முறைபுரிந் தருளென விடுப்பக், கன்னி
காத் திடலாற் **கன்னிகாப் பென்னுங் கவின்பெய ருடையது கச்சி.** 72

அரியதோர் கயிலைக் கணங்களி லொருவ ஞனதுண் டீரன்மா
லதிபால், பெருமயல் கொள்ளச் சிவனிவ ளொடுநீ பிறந்திருந் தின்ப
முற் றெம்பால், வருகென நிலமேன் மன்னர்பாற் றோன்றி மற்றவ
ளோடுசேர்ந் தரசு, புரிதரு செயலாற் **காஞ்சிதுண் டீர புரமெனப் புகலநின்
றதுவே.** 73

தன்னையே யருச்சித் திடமலர்க் கேகித் தடந்தனிற் கராவின்
வாய்ப் பட்டுத், தன்னையே நினைந்து தன்னையே யழைத்த தந்தியைக்
காத்தவொண் புயமால், தன்னையே வேண்டித் தழன்மகஞ் செய்யத்

விசயை, இணையில்சீர்க் காளி முதலினோ ரென்று மினிதுகாத் திடுவதந்
நகரம். 82

அறுசம யத்திற் கடந்தசை வத்தின் அன்றிவீ டிலதெனத் தெளிந்து
பிறரறி யாது தொன்மைபோ லிருந்து பிஞ்ஞகன் மீதுகண் மலரால்,
எறிதரு தேரர் அன்பர்தங் கலிங்க மொழிலிகள் நனைத்தலுஞ் சிரத்தை,
முறைபுரி சிலைமேல் மோதினோர் முதலோர் முத்திபெற் றுடையதம்
மூதூர். 83

ஈசன தருளாற் கயிலையை நீங்கி யிமையமா மயிலறம் புரிவான்,
காசியி லிருந்து முடிவுறு தேடிக் கனகமா நீழலிற் பரனைப், பூசனை
புரிந்து கம்பைகண் டஞ்சிப் பூண்முலை வளைக்குறிப் படுத்தி, ஆசிலா
வருள்பெற் றின்றுநோற் றிடலா லனையகாஞ் சிக்குநே ரதுவே.. 84

ஆருயிர் முழுதும் வீடுபெற் றுய்வான் அறம்புரி சாலைய தணித்
தாப், பேரர விறைவன் றவத்தின்மு னிருந்த பிலத்திடைக் கோயில்
கொண் டென்றும், பூரணி நோற்றுவழிபட வனையாள் பூசனை கொண்
டியா வர்க்குங், காரண மான பரசிவ னனந்த கலையொடு நிலையதக்
காஞ்சி. 85

இன்னமு முமையாள் நோற்றிடு மாங்கே யிறப்பினும் பிறப்
பினும் நிலையாய், மன்னியே யுறினு மொருகண மேனும் வைகினும்
மறைகளாந் தனிமா, நன்னிழ லிருந்த பரஞ்சுடர் புரியும் நடந்தரி
சிக்கினு மதனை, உன்னினும் முத்தி வழங்குகாஞ் சியைப்போ லுலகில்வே
றொருநக ருளதோ. 86

கண்ணுதற் பரனுந் தண்டுழாய் மவுலிக் கடவுளுங் கமலமே
லயனும், விண்ணவர்க் கிறையுங் கொற்றமா வினியும் மேலைநாட்
பிறந்ததொன் மனுவுந், தண்ணளி புரிதுண் டீரனும் நள்ளார் சமர்த்
தொழில் கடந்ததண் டகனும், அண்ணலங் கரிகால் வளவனும் பிறரு
மரசுசெய் தளித்ததந் நகரம். 87

வேலைசூ ழுலகி னெங்கணு மிருபால் வீட்டினை வெஃகினோர்க்
குதவும், ஆலய நூற்றெட் டுள்ளமற் றவற்றுள் ஐம்முகப் பரஞ்சுட
ரமரும், கோலமார் நிலய மிருபது மாயோன் கோநக ரெட்டுமாக்
குழுமி, நாலெழு தான முள்ளவந் நகர்போல் நாம்புகழ் நகரமற் றெவனோ.88

கச்சபா லயமே கம்பமே மயானங் கவின்கொள்கா ரோணமா
காளம், பச்சிமா லயநல் லநேகபங் கடம்பை பணாதர மணீச்சரம்
வராகம், மெய்ச்சுர கரமுன் னிராமம்வீ ரட்டம் வேதநா புரமுருத்
திரர்கா, வச்சிர னகரம் பிரமமாற் பேறு மறைமையாஞ் சிவாலய மிரு
பான். 89

கரிகிரி யட்ட புயந்திரு வெஃகாக் கருதுமூ ரகஞ்சகா ளரங்கஞ்,
சுரர்புகழ் நிராகா ரந்நிலாத் திங்கட் டுண்டநற் பாடகமினைய, அரி
திரு முற்ற மெட்டவை யன்றி அறுபதி னுயிர நிலயம் பரசிவன் சத்தி
குமரர்மால் புறத்தோர் பலரும்வீற் றிருப்பதப் பதியே. 90

துஞ்சினர் தம்மை யெழுப்புமாங் கொருகல் தொல்வழக் கறுத்திடு மொருகல், எஞ்சலி னிதியங் கெடுத்துளோர் வினவி லீதெனக் காட்டிடு மொருகல், விஞ்சிய வினைக டீர்த்திடு மொருகல் வேந்தருக் கரசிய லுதவித், தஞ்சம தாக நின்றிடு மொருகல் தக்ககல் லாயிரண் டவையே. 99

அயன்மனைச் சென்றோர் கணவரைப் பிழைத்தோர் அடிகளை யிகழ்ந்துளோர் அணுகில், துயருறு மூகை யாக்குமோர் மன்றஞ் சோரர்முன் சுழலுமோர் மன்றம், வியனிறம் பலவாந் தோன்றுமோர் மன்றம் விஞ்சைகள் வழங்குமோர் மன்றம், மயல்புரி கின்ற பொழுதொடு திசையின் மயக்கறத் தெளிக்குமோர் மன்றம். 100

நாகரூ ருய்க்கும் பிலத்ததோர் மன்றம் நவமணி யுதவுமோர் மன்றம், மாகர்பே ரமிர்த மிருக்குமோர் மன்றம் வடிவினை மறைப்பதோர் மன்றம், மேகமின் றுறுது பொழியுமோர் மன்றம் வியன்பகல் கங்குலாக் கங்குல், ஆகிய பகலா விருப்பதோர் மன்றம் ஐயிரண் டொன்று மன் றவையே. 101

ஈங்கிவை யன்றிச் சிலைகளுந் தருவு மிடங்களுங் கூவலும் நதியும், பாங்குறு குளனுந் தீர்த்தமும் பிலமும் பழனமுஞ் சோலையும் பிறவும், ஆங்கவை யனந்த கோடியுண் டோரொன் றளவில்அற் புதத்தன அவற்றைப், பூங்கம லத்தோன் சுருக்கற விரித்துப் புகலினு முலப்புற வற்றோ. 102

தோட்டலர் வனசத் திசைமுகன் முன்னஞ் சொற்றன னவனடி வணங்கிக், கேட்டருள் சனகன் வியாதனுக் குரைப்பக் கேடில்சீர் வியாதனங் குணர்ந்து, மாட்டுறு சூதன் றனக்கியம் புதலும் மற்றவன் முனிவரர்க் கிசைத்த, பாட்டினில் அடங்காக் காஞ்சியின் பெருமை பகர்ந்திடத் தமியனுக் கௌிதோ. 103

வேறு

சொற்படு மினைய காஞ்சித் தொன்னக ரதற்கு நாப்பண்
கற்புறு மிமைய வல்லி கருணையால் வைகி நோற்கும்
பொற்புறு காமக் கோட்டம் போலவே அதற்கோர் சாரில்
எற்படு குமரகோட்டம் என்றோரா லயமுண் டன்றே. 104

ஆவதோர் குமர கோட்ட மதனிடை யரன்கண் வந்து
தூவுடை யெஃக மொன்றாற் சூர்முத றொலையச் செற்றுத்
தேவர்வெஞ் சிறையை மாற்றிச் சேண்மக பதிக்கு நல்கி
மேவிய குமர மூர்த்தி வியத்தக வுறையும் மாதோ. 105

மேவருங் கூடல் மேலை வெற்பினில் அலைவாய் தன்னில்
ஆவினன் குடியி னல்லே ரகந்தனிற் றணிகை யாதிப்
பூவுல குள்ள வெற்பிற் பொற்புறும் ஏனை வைப்பிற்
கோவில்கொண் டருளி வைகுங் குமரகோட் டத்து மேயோன். 106

வச்சிர மெடுத்த செம்மல் வைகிய துறக்கந் தன்னில்
அச்சுதன் பதத்துக் கப்பா லானதன் பதத்தில் விண்ணோர்

மெச்சுறு கந்த வெற்பில் வீற்றிருந் தருளு மாபோல்
கச்சியிற் குமர கோட்டங் காதலித் தமருங் கந்தன். 107

ஈண்டுள தமணி முற்று மெல்லைதீர் வானோர் வைப்பும்
ஆண்டகை மகவான் சீரு மம்புயன் முதலோர் வாழ்வும்
மாண்டிட லிறந்த தின்றி மன்னிய வீடும் போற்றி
வேண்டினர் வேண்டி யாங்கு வேலவன் புரிந்து மேவும். 108

கொண்டலை யளைக்கு மொச்சிக் குமரகோட் டத்துச் செவ்வேள்
கண்டிகை வடமுந் தூநீர்க் கரகமுங் கரத்தி லேந்திப்
பண்டையி லயனை மாற்றிப் படைத்தருள் வேலை தாங்கி
அண்டர்க ளெவரும் போற்ற வருள்புரிந் தமர்ந்தா னன்றே. 109

ஆயதோர் காஞ்சி மூதூ ரதனிடை யம்பு யத்தின்
மேயவன் றனது புந்தி விமலமாம் பொருட்டான் மேனாள்
மாயவன் கமட மாகி வழிபடு தலத்தின் [1] முக்கண்
நாயகன் றனையர்ச் சித்து நாமக ளுடனுறப் பெற்றான். 110

உற்றிடு கின்ற நாளி லுலகினில் லறத்தை யாற்றி
நற்றவம் பலவும் போற்றி நண்ணிய முனிவ ரெல்லாம்
மற்றவை பேணிக் கந்த மலர்ப்பிணை யிருந்த வையன்
பொற்றிரு வடியைத் தாழ்ந்து போற்றினர் புகல லுற்றார். 111

அத்தகே ளிந்நாள் காறும் அடியமில் லறத்தை யாற்றி[2]
இத்தல நகர மெங்கு மிருந்தன மினிமேல் நாங்கள்
சித்தம தொருங்க நோற்றுச் செய்கட னியற்றி வைக
மெய்த்தவ வனம தொன்றை விளம்பியே விடுத்தி யென்றார். 112

என்றலுந் தருப்பை யொன்றை யேறுமல களித்தோன் வாங்கி
ஒன்றொரு திகிரி யாக்கி யொய்யென வுருட்டிப் பாரில்
இன்றிதன் பின்ன ராகி யெல்லிரு மேகி யீது
நின்றிடும் வனத்தி னூடே நிலைப்பட விருத்தி யென்றான். 113

இருப்பது மத்து வள்ளல் சேவடிக் கமலந் தாழா
விருப்பொடு விடைகொண் டேக விரைவினி லன்னோன் விட்ட
தருப்பையின் நேமி சென்றோர் தனிவனத் திறுத்த லோடும்
இருப்பிட மெமக்கீ தென்று இருந்தன ரிருந்தா ரங்கண். 114

தாமரை யண்ண லுய்த்த தருப்பையின் நேமி தன்னால்
நாமம தொன்று பெற்ற நைமிசா ரணியம் வைகுந்
தூமுனி வரர்க ளெல்லாந் தொல்லறுந் தவத்தை யாற்றி
மாமறை நெறியி னின்று மகமொன்று புரித லுற்றார். 115

1 மாயவன் கமடமாகி வழிபடுதலம்—கச்சபாலயம். 2 இல்லறத்தை ஆற்றல் - தென்புலத்தார் தெய்வம், விருந்து, சுற்றம் முதலியோரை உபசரித்தல்.

அகனமர் புலனோர் நான்கு மான்றமை பொருட்டா லாங்கோர்
மகவினை செய்து முற்றி வாலிதா முணர்ச்சி யெய்தி
இகலறு முளத்த ராகி யிருந்தன ரிதனை நாடிச்
சுகனென வுணர்வு சான்ற சூதமா முனிவன் போந்தான். 116

முழுதுணர் சூதன் றன்னை முனிவரர் கண்டு நேர்போய்த்
தொழுதனர் பெரியோய் எம்பாற் றுன்னலா லின்ன வைகல்
விழுமிது சிறந்த தென்று வியத்தகு முகமன் கூறித்
தழையொடு தருப்பை வேய்ந்த தம்பெருஞ் சாலை யுய்த்தார். 117

இருக்கிளர் பீட மொன்று திகழ்தர நடுவ ணிட்டுச்
சுருக்கமில் கேள்வி சான்ற சூதனை யிருத்தி யாங்கே
அருக்கிய முதல நல்கி யவனரு பாங்க ராகப்
பொருக்கென யாரும் வைகி யிஃதொன்று புகல லுற்றார். 118

முந்தொரு ஞான்று தன்னில் முளரியந் தேவன் சொல்லால்
வந்திவ ணிருந்தே மாக மற்றியாம் புரிந்த நோன்பு
தந்தது நின்னை யற்றாற் றவப்பயன் யாங்கள் பெற்றேஞ்
சிந்தையி னுவகை பூத்தேஞ் சிறந்ததிப் பிறவி யென்றார். 119

அன்னது சூதன் கேளா ஆதியம் பரனை யேத்தி
மன்னிய வேள்வி யாற்றி வாலறி வதனை யெய்தித்
துன்னிய முனிவிர் காணுந் தொல்குழு வடைத லன்றோ
என்னிக ராயி னோருக் கிம்மையிற் பெறும்பே றென்றான். 120

அவ்வழி முனிவர் சொல்வார் அருமறை கண்ட வண்ணல்
செவ்விய மாணாக் கர்க்குட் சிறந்துளோய் திறற்சூ ராவி
வவ்விய நெடுவே லண்ணல் மாண்கதை தேர்வான் பன்னாள்
இவ்வொரு நசைகொண் டுள்ளே மியம்புதி யெமக்க தென்றார். ()

அம்மொழி சூதன் கேளா அழல்படு மெழுகே யென்னக்
கொம்மென வுருக வுள்ளங் குதூகலித் தவச மாகி
மெய்ம்மயிர் பொடிப்பத் தூநீர் விழித்துணை யரும்ப வாசான்
பொய்ம்மையில் பாடிவ முன்னித் தொழுதிவை புகல லுற்றான். 122

மன்னவன் மதலை யாசான் மாமகன் றனது மைந்தன்
பன்னுசொற் கொள்வோன் ஈவோன் வழிபடு பண்பின் மிக்கோன்
என்னுமிங் கிவருக் கீவ தேனைநூல் உங்கள் போலச்
செந்நெறி யொழுகு வார்க்கே செப்புவன் புராணம் முற்றும். 123

தனையிகர் பிறரின் றூய சண்முகற் கன்பு சான்ற
முனிவிர்காள் உரைப்போர் கேட்போர் முத்திசேர் காந்தத் துண்மை
வினவினீ ரதனை யின்னே விளம்புவன் புலன்வே றின்றி
இனிதுகேண் மின்க ளென்று எடுத்திவை இயம்ப லுற்றான். 124

ஆகத் திருவிருத்தம் - 270.

# 7. பாயிரப்படலம்

—oo—

முந்தொரு காலத்தின் மூவுல கந்தன்னில்
வந்திடு முயிர்செய்த வல்வினை யதனுலே
அந்தமின் மறையெல்லா மடிதலை தடுமாறிச்
சிந்திட முனிவோருந் தேவரு மருளுற்ருர். 1

நெற்றியில் விழிகொண்ட நிமலன தருளாலே
அற்றமில் மறையெல்லா மாதியின் வரலாலே
மற்றத னியல்பெல்லாம் மயலற வோராடித்
தெற்றென வெவராலுஞ் செப்புவ தரிதாமால். 2

ஆனதொர் பொழுதின்க ணமரரும் முனிவோரும்
மாநில மிசைவைகும் மாக்களு மிறையுள்ள
ஞானம திலராகி நவின்மறை நெறிமாற்றித்
தீநெறி பலவாற்றிப் பனுவல்கள் சிலசெய்தார். 3

அவனியி லறமெல்லா மருவினை யெனநீக்கிப்
பவநெறி யறமென்றே பற்பல ருஞ்செய்யப்
புவனம துண்டோனும் போதனு மதுகாணுச்
சிவனரு ளாலன்றித் தீர்கில திதுவென்ருர். 4

வேறு

இன்ன பான்மையை யெண்ணி யிருவரும்
பொன்னி னுடு புரந்திடும் மன்னனுந்
துன்னு தேவருஞ் சுற்றினர் வந்திடக்
கன்னி பாகன் கயிலையி லேகினுர். 5

அந்தில் செம்பொ னணிமணிக் கோயிலின்
முந்து கோபுர முற்கடை யிற்புகா
நந்தி தேவரை நண்பொடு கண்டுநீர்
எந்தை யார்க்கெம் வரவிசைப் பீரென்ருர். 6

தேவ தேவன் திருமுன்ன ரேகியே
காவல் நந்திக் கடவுள்பணிந் தெழீஇப்
பூவை வண்ணனும் போதனும் புங்கவர்
ஏவ ருஞ்செறிந் தெய்தின ரீண்டென்ருன். 7

என்ற காலையின் யாரையு மிவ்விடைக்
கொன்றை சூடி கொணர்கெனச் செப்பலும்
நன்ற தேயென நந்தி வணங்கியே
சென்று மான்முதற் றேவரை யெய்தினுன். 8

செம்மை போகிய சிந்தைய ரைக்கெழீஇ
எம்மை யாளுடை யானரு ளெய்தினுன்

உம்மை யங்கு வரநுவன் றனினி
வம்மி னீரென வல்லையிற் கூவினான். 9

விளித்த காலை விரிவுரி போதநீர்
துளிக்க நின்று தொழுது கவலொரீஇக்
களிக்கு நெஞ்சினர் கண்ணுத லெந்தைமுன்
அளித்தி யாலென் றவனுட னேகினார். 10

புடைக டந்திடு பூதர்கள் போற்றுமத்
தடைக டந்து தடுப்பரும் வேனிலான்
படைக டந்தவர் பாற்படு மெண்ணிலாக்
கடைக டந்துபின் அண்ணலைக் கண்டனர். 11

முன்ன ரெய்தித் தொழுது முறைமுறை
சென்னி தாழ விறைஞ்சினர் சேணிடைத்
துன்னு மாதரந் தூண்டவந் தண்மினார்
உன்னு மன்பின் உததியி னாழ்ந்துளார். 12

ஈர்க்கும் பாசத் திருவினை யின்றொடே
தீர்க்கின் றாமவ னென்னுஞ் செருக்கினால்
தூர்க்கின் றார்மலர் சோதிபொற் றாண்மிசை
போர்க்கின் றார்மெய்ப் பொடிப்பெனும் போர்வையே. 13

நேய முந்த நெடும்பகல் நீங்கிய
தாயெ திர்ந்திடு கன்றின் தகைமையாய்த்
தூய வந்தனை யொடு தொழுமவர்
வாயின் வந்தன வந்தன போற்றினார். 14

அண்ண லீசன் வடிவை யகந்தனில்
எண்ணி னெல்லையி லின்பம் பயக்குமால்
கண்ணி னேர்வரு காட்சிய ராயிடின்
ஒண்ணு மோவவர் துஞ்செய லோதவே. 15

மேலை வானவர் வேந்தொடு மெம்பிரான்
சீல மேய திருமுன்பு மேவினார்
மாலு நான்முகத் தண்ணலும் வந்திரு
பாலு மாகிப் பரவின ரென்பவே. 16

வேறு

அம்புயா சனமுடை யண்ண லாழியான்
உம்பரோ டித்திற முற்றுப் போற்றுழிச்
செம்பொனேர் முடிமிசைத் திங்கள் சேர்த்திய
எம்பிரா னருள்புரிந் தினைய கூறுவான். 17

ஒன்றொரு குறைகளு முறாத பான்மையால்
நன்றுநும் மரசியல் நடந்த வோவெனக்
குன்றவில் லுடையவோர் குழகன் செப்பலும்
நின்றமால் தொழுதிவை நெறியிற் கூறுவான். 18

ஆதியி லயன்படைப் பல்ல தென்னருண்
மேதியன் அடுதொழி லேனை விண்ணவர்
ஏதமில் செயன்முறை யாவுங் கண்ணுதல்
நாதநின் னருளினால் நடந்த நன்றரோ. 19

கருமணி மிடறுடைக் கடவு ளின்னுநீ
அருளுவ தொன்றுள ததனைக் கூறுவன்
இருநில மேலவர் யாரும் நின்றனைப்
பரமென வுணர்கிலர் மாயைப் பான்மையால். 20

நின்றன துரிமையை நிகழ்த்தி மேன்மையா
என்றனை யயன்றனை யெண்ணு வார்சிலர்
அன்றியும் நின்னுடன் அநேகர் தம்மையும்
ஒன்றென வேநினைந் துரைக்கின் றார்சிலர். 21

காலமுங் கருமமுங் கடந்த தோர்பொருள்
மூலமுண் டோவென மொழிகின் றார்சிலர்
மேலுமுண் டோசில விளம்ப விஞ்சையின்
பாலுறு முணர்ச்சியே பரமென் பார்சிலர். 22

ஆற்றுறு புனல்படிந் தழுக்கு நீக்கலார்
சேற்றிடை வீழ்ந்தென மறைகள் செப்பிய
நீற்றோடு கண்டிகை நீக்கி வன்மையால்
வீற்றொரு குறிகொடு மேவு வார்சிலர். 23

காமமோ டுவகையுங் களிப்பு நல்கலால்
வாமமே பொருளென மதிக்கின் றார்சிலர்
தோமிலா மூவகைத் தொழிலும் வேள்வியும்
ஏமமார் பொருளென இயம்பு வார்சிலர். 24

உரையிசை யாதியா மொலிகள் யாவையும்
பிரமம தேயெனப் பேசு வார்சிலர்
அரிதுசெய் நோன்பினு லடைந்த சித்திகள்
பொருள்பிறி தில்லெனப் புகல்கின் றார்சிலர். 25

பெருமைகொள் குலந்தொறும் பிறந்து செய்திடும்
விரதமுஞ் சீலமும் வினைகண் மாற்றிட
வருகலும் பிறவுமா யங்கம் விட்டுயிர்
பரவுதல் வீடெனப் பகரு வார்சிலர். 26

அறிந்தறிந் துயிர்தொறு மதுவ தாகியே
பிறந்திறந் துணர்வெலாம் பெற்று நோன்பொடு
துறந்துகொன் றிட்டன துய்த்துக் கந்தமற்
றிறந்திடல் முத்தியா மென்கின் றார்சிலர். 27

நன்னல மாதரை நண்ணு மின்பமே
உன்னரு முத்தியென் றுட்கொள் வார்சிலர்

இன்னன துறைதொறு மெய்தி யாவருந்
துன்னரும் பிறவியுட் டுன்ப நீங்கலார். 28

இறந்தன வரம்புல கெவரும் வேதநூல்
மறந்தனர் பவநெறி மல்கி நாடொறுஞ்
சிறந்தன வவையுயிர் செய்த தொல்வினை
அறிந்தரு ளையநீ யமைத்த வாயினும். 29

அங்கவர் போதமுற் றுசொ ரிஇமனச்
சங்கையு மகன்றுநின் சரண மேயுறப்
புங்கவ சிறிதருள் புரிய வேண்டுமால்
எங்கடம் பொருட்டென இறைவன் கூறுவான். 30

இனிதொரு திறமதற் கிசைத்து மாருயிர்
அனையவும் புரப்பவ னருக லாலவர்
வினையறு நெறிமையால் வேண்டு கிற்றியின்
மனனுறு மெண்ணினை மறுத்தி மாசிலாய். 31

காதலி னருளுமுன் கலையின் பன்மையிற்
கோதறு மோர்கலை கொண்டு நேமிசூழ்
மேதினி யதனிடை வியாதன் என்றிடு
போதக முனியெனப் போந்து வைகுதி. 32

போந்தவ ணிருந்தபின் புகரி லாமறை
ஆய்ந்திடின் வந்திடு மைஙற்றை நால்வகை
வாய்ந்திட நல்கியே மரபி னோர்க்கெலாம்
ஈந்தனை யவரகத் திருளை நீத்தியால். 33

அன்னதோர் மறையினை யறிந்து மையறா
உன்னரிய நிலையினர் உள்ளந் தேறவும்
மன்னவ ரல்லவர் மரபிற் றோரவும்
இன்னமோர் மறையுள திதுவுங் கேண்மதி. 34

ஏற்றமா தாகிய மறைக்கும் யாமுனஞ்
சாற்றிய வாகமந் தனக்கு மாங்கது
வீற்றுற வெருவது மன்று மென்மையால்
ஆற்றவும் நமதிய லறையும் நீரதே. 35

என்பெய ரதற்கெனி னினிது தேர்ந்துளோர்
துன்பம தகற்றிடுந் தொல்பு ராணமாம்
ஒன்பதிற் றிருவகை உண்ட வற்றினை
அன்புடை நந்திமுன் னறியக் கூறினேம். 36

ஆதியில் நந்திபா லளித்த தொன்மைசேர்
காதைகள் யாவையுங் கருணை யாலவன்
கோதற வுணர்சனற் குமாரற் கீந்தனன்
நீதியொ டவனிடை நிலத்திற் கேட்டியால். 37

என்னலும் நன்றென இசைந்து தாழ்ந்தெழீஇ
முன்னவன் விடைகொடு முளரி யான்முதல்
துன்னிய வானவர் தொகையொ டேகியே
தன்னுல கத்தின்மால் சார்தல் மேயினுன். 38

சார்தலு மயன்றனைச் சதம கத்தனை
ஆர்தரு மமரரை யருளி னவ்வவர்
சேர்தரு புரந்தொறுஞ் செல்லற் கேவியே
கார்தரு மெய்யுடைக் கடவுள் வைகினுன். 39

திருவொடு மருவியோன் செறிவுற் றெங்கணும்
பரவுறு மியல்பெறு பகவ னுதலால்
தரணியி லருளினுற் றனது சத்தியில்
ஒருகலை தன்னுட னுதிக்க வுன்னியே. 40

பங்கயத் தயன்வழிப் பராச ரப்பெயர்த்
துங்கநன் முனிபனித் தூவ லெல்லையிற்
கங்கையி லியோசன கந்தி யோடுற
அங்கவர் தம்மிடை அவத ரித்தனன். 41

மற்றவன் வதரிகா வனத்தில் வைகியே
அற்றமில் வாதரா யணன்எ னும்பெயர்
பெற்றன னுகியெம் பிரான்ற னுணையாற்
கற்றிடா துணர்ந்தனன் கரையில் வேதமே. 42

மோனக முற்றிய முனிவர் மேலவன்
தானுணர் மறையெனுந் தரங்க வேலையில்
ஆனதோர் பொருளினை யறிஞர் பெற்றிடத்
தூநெறி கொண்டநாற் றுறைசெய் தானரோ. 43

கரையறு வேதமாங் கடலை நான்கவாய்ப்
பிரிநிலை யாக்கியே நிறுவு பெற்றியாற்
புரைதவிர் முனிவரன் புகழ்வி யாதன் என்
றொருபெயர் பெற்றனன் உலகம் போற்றவே. 44

விரவிய மறைதெரி வியாத னுமவன்
குரவனே யாஞ்சனற் குமாரன் றன்னிடை
இருவகை யொன்பதா மியல்பு ராணமும்
மரபொடு கேட்டவை மனத்துட் கொண்டபின். 45

ஏத்திடு சுருதிக ளிசைக்கு மாண்பொருள்
மாத்திரைப் படாவெறு மாசில் காட்சியர்
பார்த்துணர் பான்மையாற் பலவ கைப்படச்
சூத்திர மானவுஞ் சொற்று வைகினுன். 46

மயலறு பயிலரே வைசம் பாயனர்
சயிமினி சுமந்துவாந் தவத்தர் நால்வர்க்கும்

வியலிருக் காதியாம் வேத நான்கையும்
உயர்வுறு தவத்திஞன் முறையி ஞேதிஞன். 47

தோல்வரு மறைகளின் சூத்தி ரத்தையும்
மேல்வரு சயிமினி முதல மேதையர்
நால்வரு முணரிய நவின்று நல்கிஞன்
ஆல்வரு கடவுளை யனைய தன்மையான். 48

மெய்ம்முனி யனையரை விளித்து நீரினி
இம்மறை யியல்பிஞே ரெவர்க்கு மீமென
அம்முறை நால்வரு மனைய வேதநூல்
செம்மையொ டளித்தனர் சிறந்து ளோர்க்கெலாம். 49

அன்னதோர் முனிவர னதற்குப் பின்னரே
பன்னருந் தொகையிஞற் பதினெண் பான்மையாய்
முன்னுறு புராணநூல் முழுது முற்றிய
இன்னருள் நிலைமையா லெனக்கு நல்கிஞன். 50

வேதம துணர்தரு வியாத மாமுனி
காதல ஞமெனைக் கருணை செய்திவை
ஓதுதி யாவரு முணர வென்றனன்
ஆதலி னுலகினி லவற்றைக் கூறினேன். 51

காமரு துண்டுழாய்க் கண்ண ஞகிய
மாமுனி யருளிஞல் மறைகள் யாவையுந்
தோமறு புராணநூற் ரெகுதி யாவையும்
நேமிகொ ளுலகெலா நிலவி யுற்றவே. 52

நம்பஞர்க் கொருபது நார ணற்குநான்
கம்புயத் தவற்கிரண் டலரி யங்கியாம்
உம்பர்வான் சுடர்களுக் கோரொன் றென்பரால்
இம்பரி லிசைக்கும்அப் புராணத் தெல்லையே. 53

வேறு

எதிரில் சைவமே பவிடியம் மார்க்கண்ட மிலிங்கம்
மதிகொள் காந்தநல் வராகமே வாமனம் மற்சம்
புதிய கூர்மமே பிரமாண்டம் இவைசிவ புராணம்
பதும மேலவன் புராணமாம் பிரமமே பதுமம். 54

கருது காருடம் நாரதம் விண்டுபா கவதம்
அரிக தைப்பெயர் ஆக்கினே யம்மமுற் கதையாம்
இரவி தன்கதை பிரமகை வர்த்தமாம் இவைதாம்
தெரியும் ஒன்பதிற் றிருவகைப் புராணமாந் திறனே. 55

இத்தி றத்தவாம் புராணங்கள் ஒன்பதிற் றிரண்டின்
அத்த னுக்குள புராணமீ ரைந்தினில் அடல்வேற்
கைத்த லத்தவன் காந்தத்துள் அன்னவன் கதையை
மெய்த்தொ கைப்பட வுரைப்பனென் றேமுனி விளம்பும். 56

வேறு

பூமிசை யிருந்த புத்தேள் புரிந்திடு புதல்வர் தம்முள்
ஏமுறு தக்க னீன்ற விருந்தனிக் குமரி யாமா
தீமையை யகற்ற அம்மை சிந்தைசெய் திமைய மன்னன்
மாமக ளாகி நோற்று வைகினள் வைகு நாளில். 57

அவுணர்க ளோடு சூர னவனிமேற் றோன்றி நோற்றுச்
சிவன்வர மளிக்கப் பெற்றுத் தேவர்யா வரையும் வென்று
புவிதனி லுவரி தன்னிற் புங்கவர் புலம்ப வெய்து
தவலரு மகேந்தி ரத்தில் வைகினன் தானை சூழ. 58

அனையதோர் காலை வெள்ளி யடுக்கலிற் சனக னாதி
முனிவரர் தமக்குத் தொல்லை மூவகைப் பதமுங் கூறி
இனியதோர் ஞான போதம் இத்திற மென்று மோனத்
தனிநிலை யதனைக் காட்டித் தற்பர னிருந்தா னன்றே. 59

வீற்றிருந் தருளு மெல்லை வெய்யசூர் முதலா வுள்ளோர்
ஆற்றவுந் தீங்கு செய்தே யமரர்கள் சிலரைப் பற்றிப்
போற்றிடுஞ் சிறையி லுய்ப்பப் புரந்தரன் முதலா வுள்ளோர்
மாற்றருந் துயரின் மூழ்கி மறைந்தன ராகி வைகி. 60

சங்கரன் மோனத் தன்மை சதுர்முகற் குரைப்ப வன்னோன்
வெங்கணை வேளை யுய்ப்ப விழித்தவன் புரமீ ருக்கிப்
பங்கயன் முதலா வுள்ளோர் பலரும்வந் திரங்கிப் போற்ற
அங்குறை மோனம் நீங்கி யவர்க்கருள் செய்தா னையன். 61

ஓரெழு முனிவர் தம்மை யோங்கலுக் கிறைவன் றன்பாற்
பேரருண் முறையாற் றூண்டிப் பெருமணம் பேசுவித்துப்
பாரறு நோன்பின் மிக்க பராபரை யன்பு தேர்ந்து
காரணி கண்டத் தெந்தை கணங்களோ டிமையம் புக்கான். 62

புடையக லிமையந் தன்னிற் புவனங்கள் முழுது மீண்ட
வடபுவி தாழ்ந்து தென்பா லுயர்தலும் மலயந் தன்னிற்
கடமுனி தன்னை யேவிக் கவுரியை மணந்து பின்னர்
அடன்மத வேளை நல்கி அநங்கனே யாகச் செய்தான். 63

மன்புனை கயிலை தன்னில மலைமக ளோடு மீண்டு
முன்பென வமர்ந்து நாதன் முழுதுல குயிர்கட் கெல்லாம்
இன்பமும் புணர்ப்பும் நல்கி யிமையவர் யாரும் வேண்டத்
**தன்பெரு நுதற்கட் டீயாற் சரவண பவனைத் தந்தான்.** 64

அந்தமில் விளையாட் டுள்ள அறுமுகக் கடவு டன்னைத்
தந்திடு மெல்லை யன்னோன் தானையந் தலைவ ராக
முந்திய விறல்சேர் மொய்ம்பன் முதலிய விலக்கத் தொன்பான்
நந்திதன் கணத்தி னோரை நங்கைபா லுதிப்பச் செய்தான். 65

அண்ணலங் குமரப் புத்தேள் அலகிலா வாடல் செய்து
மண்ணுறு கடலும் வெற்பும் வானமுந் திரிபு செய்து

துண்ணெனக் குழவி யேபோற் றோன்றிட வந்தனை நோக்கி
விண்ணவர் யாருஞ் சூழ்ந்து வெஞ்சமர் புரிந்து நின்றார். 66

ஆரமர் செய்து ளாரை யட்டட னுயிரும் நல்கிப்
பேருரு நிலைமை காட்டிப் பெறலருங் காட்சி நல்கி
நாரதன் மகத்திற் றோன்றி நடந்ததோர் செச்சை தன்னை
ஊர்திய தாகக் கொண்டே யூர்ந்தன னொப்பி லாதான். 67

மறைமுதற் குடிலை[1] தன்னின் மாண்பொருள் முறைகட ளாவி
வெறிகமழ் கமலப் புத்தேள் விடைகொடான் மயங்கக் கண்டு
சிறையிடை யவனை வைத்துச் செகமெலா மளித்துத் தாதை
குறையிரந் திடவே விட்டுக் குறுமுனிக் கதனை யீந்தான். 68

ஆவதோர் காலை யீச னறுமுகப் பரனை நோக்கி
ஏவரு முடிக்க வொண்ணா திருந்தசூர் முதலோர் தம்பால்
மேவினை பொருது வென்று விரிஞ்சனே முதலா வுள்ள
தேவர்த மின்னல் நீக்கிச் செல்லுதி குமர வென்றான். 69

விராவிய விலக்கத் தொன்பான் வீரரை வெய்ய பூதர்
இராயிர வெள்ளத் தோரை யிகற்படை மான்றே ரோடு
பராபர னுதவித் தூண்டப் பன்னிரு புயத்த னேகித்
தராதலம் புக்கு வெற்பைத் தாரக னோடு செற்றான். 70

பூவினன் முதலா வுள்ள புங்கவர் வழிபட் டேத்தத்
தேவர்தங் கிரியின் வைகித் தென்றிசை நடந்து தாதை
மேவரு மிடங்கள் போற்றி மேதகு சேய்ஞல்[2] நண்ணி
மூவிரு முகத்தன் முக்கண் முன்னவன் படையைப் பெற்றான். 71

பரனருள் படையைப் பெற்றுப் பராசரன் சிறார்[3]வந் தேத்தத்
திருவருள் புரிந்து சென்று செந்திலின் மேவிச் சூரன்
வரமொடு திருவுஞ் சீரும் வாசவன் குறையும் வானோர்
குரவனை வினவி யன்னோன் கூறவே குமரன் தேர்ந்தான். 72

அறத்தினை யுன்னி யைய னாடல்சேர் மொய்ம்பன்[4] றன்னை
உறத்தகு மரபிற் றூண்டி யொன்னலன் கருத்தை யோர்ந்து
மறத்தொடு கடலுள் வீர மகேந்திரம் அணுகி யேதன்
புறத்துள தானை யோராற் சூர்கிளை பொன்றச் செற்று. 73

சீயமா முகத்த னென்னுஞ் செருவலான் றனையு மட்டு
மாயையுந் திருவுஞ் சீரும் வரங்களும் பிறவு மாற்றி
ஆயிர விருநா லண்டத் தரசனுஞ் சூரன் றன்னை
ஏயெனு மளவில் வேலா லிருதுணி படுத்து நின்றான். 74

---

1 மறைமுதற் குடிலை - வேதத்தின் முதற் பொருளாயுள்ள பிரணவம். 2 சேய்ஞல் - சேய்ஞலூர். 3 பராசரன் சிறார் - தத்தன், அனந்தன், நந்தி, சதுர்முகன், பருதிப்பாணி, தவமாலி என்ற ஆறு புதல்வர்கள். 4 ஆடல் சேர் மொய்ம்பன் - வீரவாகு தேவர். ஆடல் - வீரம்.

துணிபடு சூர னோர்பால் சூட்டுவா ரணமா யோர்பால்
பிணிமுக மாகி நிற்பப் பெருந்தகை அவற்றை யூர்தி
அணிபடு துவச மாக்கி அப்பகல் செந்தில் வந்து
மணிசொரி யருவி தூங்கும் வான்பரங் குன்றஞ் சேர்ந்தான். 75

தெய்வத யானை யென்னுஞ் சீர்கெழு மடந்தை தன்னை
அவ்விடை வதுவை யாற்றி அங்ஙனஞ் சிலநாள் வைகி
மெய்விய னுலகிற் சென்று விண்ணவர்க் கரச னாக்கி
எவ்வமில் மகுடஞ் சூட்டி இந்திரன் றன்னை வைத்தான். 76

சில்பக லங்கண் மேவிச் சேனையோ டணங்குந் தானும்
மல்லலங் கயிலை யேகி மங்கைபங் குடைய வண்ணல்
மெல்லடி வணங்கிக் கந்த வெற்புறை நகரி[1] னேகி
எல்லையி லருளால் வைகித் தணிகையில் எந்தை வந்தான். 77

சாரலி னோங்கு தெய்வத் தணிகைமால் வரையின்மீது
வீரம துடைய வேலோன் வீற்றிருந் திடலு மங்கண்
நாரதன் வந்து தாழ்ந்து நவைதவி ரெயின மாதின்
சீரெழில் நலத்தைக் கூற அவள்வயிற் சிந்தை வைத்தான். 78

வள்ளிமால் வரையிற் போந்து மானி[2]டைப் பிறந்த தெய்வக்
கிள்ளையை யடைந்து போற்றிக் கேடில்பல் லுருவங் காட்டிக்
கள்ளமோ டொழுகிப் பன்னாட் கவர்ந்தனன் கொணர்ந்து பின்னர்த்
தெள்ளுசீர் வேடர் நல்கத் திருமணஞ் செய்து சேர்ந்தான். 79

செருத்தணி வரை[3]யில் வந்து சிலபகல் வள்ளி தன்னோ
டருத்தியின் மேவிப் பின்னர் அவளொடுங் கந்த வெற்பின்
வரைத்தனிக் கோயில் புக்கு வானமின் பிரிவு நீக்கிக்
கருத்துற இருவ ரோடுங் கலந்துவீற் றிருந்தான் கந்தன். 80

என்றிவை யனைத்துஞ் சூதன் இயம்பலும் முனிவர் கேளாத்
துன்றிய மகிழ்வாற் சென்னி துளக்கியிங் கிதனைப் போல
ஒன்றொரு கதையுங் கேளேம் உரைத்தனை சுருக்கி யாங்கள்
நன்றிதன் அகலங் கேட்க நனிபெருங் காதல் கொண்டேம். 81

என்னவே முனிவ ரானோர் யாவரு மெடுத்துக் கூற
மன்னிய வருள்சேர் சூதன் மற்றவ ரார்வம் நோக்கி
அன்னவை சுருக்க மின்றி அறைந்தனன் அவ்வா றோர்ந்து
தொன்னெறி வழாதி யானும் வல்லவா தொகுத்துச் சொல்வேன். 82

ஆகத் திருவிருத்தம்-352.

1 கந்த வெற்புறை நகர் - ... ம் குமார லோகமுமாம்.
2 மான் - சிவமுனிவராகிய மான். ... வரை- திருத்தணிகைமலை.

உ

செந்திலாண்டவன் துணை

திருச்சிற்றம்பலம்

முதலாவது

# 1. உற்பத்தி காண்டம்



## 1. திருக்கைலாசப் படலம்

பாசம் நீக்கித்தன் பாற்படு நல்லருள்
ஈசன் நல்கு மியல்பென வெய்தினோர்
தேசு மாற்றிச் சிறந்ததன் மெய்யொளி
வீசு கின்றது வெள்ளியங் குன்றமே. 1

ஆறு சூடிய வாதியம் பண்ணவன்
ஏறு மூரிவெள் ளேறுமக் கண்ணுதல்
நீறு சேர்தரு கோலமும் நித்தனைத்
தேறும் அன்பர்தஞ் சிந்தையும் போன்றதே. 2

மோன நன்னிலை முற்றிய பெற்றியர்
ஞான மார்பிழம் பன்ன நலத்ததாய்
ஊனு லாய வுயிர்த்தொகை மாசொரீஇத்
தானெ லாஞ்செறிந் தென்னவுஞ் சான்றதே. 3

கான மார்ந்த கடுக்கைநற் கூவிளைத்
தேன வாம்பொழிற் றிண்சிக ரத்திடை
வான யாறு வருதலின் மாசிலா
ஞான நாயகன் போல நணியதே. 4

தண்ண றுந்துள வாற்புனை தார்முடிப்
பண்ண வன்கண் படுத்திடு பாற்கடல்
கண்ணு தற்குமொர் காமரு பீடமாய்
நண்ணு கின்றது போலும் நலத்ததே. 5

பொதியு மின்னமு தோடு பொருந்துவ
கதிரின் மிக்க கறையறு காட்சிய
மதிய மாயிர கோடி மணந்துதாம்
உதய மானது போன்றதவ் வொண்கிரி. 6

நெற்றி மேனியிர் கண்ணும் நிலாவொளிர்
பொற்ற டம்புய நான்கும் பொருந்துறப்

பெற்றெறம் மானரு ளாற்பிரம் பொன்றுகைப்
பற்று நந்தி பரிவொடு காப்பது.

புரந்த ரன்முத லாகிய புங்கவர்
வரம்பின் மாதவர் மாசறு காட்சியர்
நிரந்த பூத கணவர் நிரந்தரம்
பரிந்து போற்றிப் பயில்வுறும் நால்வரை.

மின்ன ரம்பைய ராடலும் விஞ்சையர்
கின்ன ரம்பயில் பாடலுங் கீழ்ந்திசை
மன்ன னுதியர் வாழ்த்துமவ் வானவர்
இன்னி யங்களும் எங்கணு மார்ப்பது. 9

வேறு

கீணி லாவுறு முலகெலாம் நீங்கியே கீழ்போய்ச்
சேணி லாவுறு பதமெலா முருவிமீச் சென்று
மாணி லாவுறும் அண்டத்தின் அடிமுடி மருவுந்
தாணு வாயுல கிறுதியின் நிற்பதச் சயிலம். 10

மாடு சூழ்தரு மேருவே யாதியாம் வரைகள்
பாடு சேரினு முலகெலா மழியினும் பரந்து
கூடு மண்டங்கள் குலையினுங் கொன்றைவே ணியன்போல்
கேடி லாமலே அமர்வது கயிலையங் கிரியே. 11

நலம்வ ருங்கலை மதியமு மிரவியும் நாகர்
குலம்வ ருந்தனுக் குறையலா மற்றைய கோளும்
அலம ருஞ்சுடர் உடுக்களு மமரரும் பிறரும்
வலம்வ ரும்படி யிருப்பது கயிலைமால் வரையே. 12

ஏற்றம் மேருவே யாதியாம் வரைகளேழ் வகையால்
சாற்றும் நேமிகள் ஆழியங் கிரிபெருஞ் சலதி[1]
நாற்றி சைக்கணும் நொச்சிபோற் சூழ்தர நடுவண்
வீற்றி ருப்பது கயிலையா கியதனி வெற்பு. 13

படியெ லாமுண்டும் ஏனமாய்த் தாங்கியும் பண்டோர்
அடியி னுலகப் படுத்தியு மிடந்துமுற் றருளும்
நெடிய மாயனு முலகிறு மெல்லையில் நிமலன்
வடிவ மேயெனக் காணுதற் கரியதவ் வரையே. 14

வேறு

அன்னதோர் கயிலை நாப்பண் அம்பொனின் சுடர்மேல் கொண்ட
நன்னெடுஞ் சிமயத் தோங்கல் நவையொரீஇ நண்ணிற் றென்னக்
கன்னியங் காப்பு மேவிக் கதிர்மணிக் கற்றை சுற்றப்
பொன்னெடுங் கோயி லொன்று பொலிவொடும் பொருந்திற் றன்றே 15

1 ஏழ்வகையால் சாற்றும் நேமிகள்-உவர் நீர்க்கடல் முதலிய ஏழு கடல்கள். ஆழியங்கிரி - சக்கரவாளகிரி. பெருஞ்சலதி - பெரும்புறக்கடல்.

திணிகதிர் ஆரந் தன்னிற் சிறந்தவச் சிரத்திற் செக்கர்
மணிதனில் முழுநீ லத்தின் மற்றைய வெறுக்கை தன்னில்
பணிபட வருளாற் றானே பலித்திடு சிகர மாதி
அணியினுக் கணியாய் மல்கும் ஆலயஞ் சூழ லெங்கும். 16

என்றுமீ றென்ப தின்றி யிருந்திடுங் கயிலை வெற்பிற்
பொன்றிகழ் நகரந் தன்னுட் பொருவிலாக் கோளும் நாளுந்
துன்றிய தன்மைத் தென்னத் தூமணிக் கதிர்கள் சூழ
மன்றமை ருறையு ளொன்று வனப்பொடு வைகிற் றன்றே. 17

வேறு

போதி சேருமத் தூமணி மண்டபத்
தாதி யான அரியணை யும்பரிற்
காத லாகுங் கவுரி[1]யொர் பாங்குற
வேத நாயகன் வீற்றிருந் தானரோ. 18

பீடு கொண்ட பெருந்தவப் பெற்றியோர்
தேடு கின்ற சிறப்புடைத் தாம்புகழ்
நாடு தும்புரு நாரதர் விஞ்சையர்
பாடு கின்றனர் பாணியின் பாற்பட. 19

அதிகன்[2] வேணியி லார்தரு கங்கையை
விதிபு ரந்தரன் விண்டுல கத்துள
நதிக டாழ்ந்தெனை நன்னயத் தேவல்செய்
கதியி னோர்கள் கவரிகள் வீசினார். 20

சீல வட்ட முடிப்பிறை தேடுவான்
ஞால வட்டத் தெழுதரு நாகர்போல்
ஏல வட்ட முகத்தரு கெங்கனும்
ஆல வட்ட மசைத்தனர் அன்பினோர். 21

ஆதி தன்னரு ளெய்தி அவன்றிருப்
பாத தாமரை சூடியப் பண்ணவன்
கோதி லாத திருவுருக் கொண்டுளோர்
பூத ராதியர் போற்றிமுன் நண்டினார். 22

ஆகத் திருவிருத்தம்—374.

1 அருளே சிவசத்தி என்பது தோன்ற, 'காதலாகுங் கவுரி' என்றார்.
2 அதிகன் - தன்னின் உயர்ச்சி இல்லாத் தலைவன்; சிவபெருமான்.

# 2. பார்ப்ப ப்ப லம்

-oo—

அன்னுழி உமையவ ளகத்து ளோர்செயல்
உன்னினள் துணுக்கமுற் றெல்லைதா னொழீஇத்
தன்னிக ரில்லவன் றாளி றைஞ்சியே
முன்னுற நின்றிவை மொழிதல் மேயினள்.

ரிய கடந்த கண்ணுதல்
தற்பர நினையிகழ் தக்கன் தன்னிடைப்
பற்பகல் வளர்ந்தவன் பயந்த மாதெனச்
சொற்படு நாமமுஞ் சுமந்து ளேனியான்.

ஆங்கதோர் பெயரையு மவன்க ணெய்தியே
ஓங்கினான் வளர்ந்தவிவ் வுடலந் தன்னையுந்
தாங்கினன் மேலவை தரித்தற் கஞ்சினேன்
நீங்குவ னவ்வகை பணித்தி நீயென்றாள்.

மன்னுயி ராகிய மரபு முற்றவும்
முன்னுற அருளிய முதல்வி யன்பினால்
இன்னண மியம்பலு மிதனைத் தேர்ந்திடாத்
தன்னிக ரில்லதோர் தலைவன் கூறுவான்.

பத்திமை யெம்வயிற் பழுத்த பண்பினாற்
சத்தியே நின்னிகர் சகத்தி னில்லைநீ
இத்திறம் முயலுத லெல்லை தீர்ந்தநின்
புத்திரர் வீடுறு பொருட்டுப் போலுமால்.

நற்றிற மேயிது நங்கை சிந்தனை
முற்றிய வேண்டுமேல் மொழிதும் மேருவின்
சுற்றம தாகிய இமையத் தொல்வரைக்
கொற்றவன் புரிவனாற் கொடிய மாதவம். 6

ஏதவன் பெறத்தவ மியற்று மென்றியேன்
மாதுனை மகண்மையா மரபிற் போற்றியே
காதலொ டெமக்கருள் கருத்த தாகுமால்
ஆதலிற் குழவியாய் அவன்க ணெய்துநீ.

தளர்ந்துடல் மெலிவுறத் தவஞ்செய் வெற்பினன்
இளஞ்சிறு குழவியா யெய்தி மற்றவன்
உளங்களி கூரவாண் டோரைந் தின்றுணை
வளர்ந்தனை புரிதிமேல் மாசில் மாதவம். 8

அணங்குநீ நோற்றுழி யகிலத் துள்ளதோர்
கணங்களுந் தலைவருங் கணிப்பில் தேவரும்

இணங்கினர் சூழ்தர வெய்தி நின்னையாம்
மணம்புரிந் தேகொடு வருது மீண்டெனா. 9

கடல்விட முண்டிடு கடவு ளித்திறம்
நடைமுறை யருள லும் நன்றெனா மகிழ்ந்
தடியிணை வணங்கிநின் றன்பிற் போற்றியே
விடையது பெற்றனள் விமலை யேகினாள். 10

அல்லலு முவகையு மன்பு மெம்பிரான்
எல்லையி லருளுமா யீண்டி முன்செல
மெல்லியல் உமையவள் வெள்ளி வெற்பொரீஇ
வல்லையின் இமையமால் வரையிற் போயினாள். 11

வள்ளியன் கடகரி வடிவின் வீழ்தரு
துள்ளியம் பனிமழைச் சோனை சூழ்தலால்
எள்ளருந் தன்மைசேர் இமைய மால்வரை
வெள்ளியங் கிரியென விளங்கு கின்றதே. 12

எண்டகு மிமையமு மிமைய மேலுறு
கொண்டலு மொன்றியே குலவு காட்சிய
தெண்டிரை மிசையெழு நஞ்சுந் தீயநஞ்
சுண்ட மணிமிடற் றிறையு மொக்குமால். 13

நீலுறு மழைமுகில் நிலவு மின்னொடு
மேலுற விளங்கிய இமைய வெற்பது
மாலவன் றிருவொடு மருவிக் கண்டுயில்
பாலுறு பன்னகப் பாயல் போன்றதே. 14

கரும்புய லார்த்துறு காட்சித் தாகியே
இரும்பனி யிடையுறு விமையப் பொன்வரை
சுரும்பின மிசையொடு துவன்றிச் சுற்றிட
அரும்பவி ழாதவெண் கமல மன்னதே. 15

நீடிய மண்மகள் நிதியின் குப்பையைப்
பாடுறு தண்ணிலாப் படாம தொன்றினான்
மூடினள் வைத்திடு முறைய தேயெனக்
கோடுயர் பனிகொள்பொற் குன்றம் நின்றதே. 16

பொன்னெடுங் கிரியென வீண்டும் புங்கவர்
துன்னினர் சூழ்வரென் றுன்னித் தொன்மனு
அன்னதை மறைத்தனன் இரதத் தாவியால்
என்னவும் நின்றதால் இமையப் பொன்வரை. 17

குடகடல் குணகடல் கூடு றுவகை
இடையொரு வாலிதாம் ஏன மெய்தியே
தடைபுரி சிறப்பென இமையத் தாழ்வரை
நெடுநில வளவையும் நிமிர்ந்து போயதே. 18

விண்ணவர் ததிக்கடல் கடைந்த வெண்ணெயுள்
அண்ணலம் பாற்கட லமுதம் வைத்தெனக்
கண்ணகன் பெரும்பனி கவைஇய வெற்பின்மேல்
உண்ணிறை புனற்றட மொன்று வைகிற்றே. 19

அன்னதோர் தடத்திடை அசல மன்னவன்
மன்னிய கௌரிதன் மகண்மை யாகவுந்
தன்னிக ரிலாவரன் றனக்கு நல்கவும்
முன்னுற வருந்தவம் முயன்று வைகினான். 20

மெய்த்தவ மியற்றிய வெற்பன் காணிய
அத்தட மலருமோ ரரவிந் தத்தின்மேற்
பைத்ததோர் குழவியின் படிவத் துற்றனள்
எத்திறத் துயிரையு மீன்ற தொன்மையாள். 21

வேறு

ஆங்கவட் கண்டு வெற்பன் அடியனேன் பொருட்டா லம்மை
நீங்கினள் போலும் முக்க ணிருமலன் றன்னை யென்னா
ஏங்கினன் றனது நோன்புக் கிரங்கின னிவைக ளீசன்
ஓங்குபே ரருளே யென்னா வுவகையங் கடலுட் பட்டான். 22

கண்ணுறு போத வாரி கான்றிட வுரோம ராசி
உண்ணிக ழன்பு மிக்குப் புறந்தனி லொழுகிற் றென்ன
வண்ணன்மெய் பொடிப்பத் துள்ளி அடியனே னுய்ந்தே னென்னாத்
துண்ணெனப் பாடி யாடி யமலையைத் தொழுது நின்றான். 23

பங்கயத் தவிசின் வைகும் பராபரை தனைத்த ழீஇச்
செங்கையி னெடுத்து வல்லே சென்னிமேற் றாங்கி யேகித்
துங்கநல் லிமையத் தண்ணல் தொன்முறை யிருக்கை புக்கு
மங்கல மேனை யென்னு மனைவிகைக் கொடுத்தான் மாதோ. 24

கொடுத்தலுந் தொழுது வாங்கிக் கொற்றவ இவணின் பாங்கர்
அடுத்ததங் கெவனோ வென்ன அரசனும் நிகழ்ந்த வெல்லாம்
எடுத்துரை செய்யக் கேளா வீசன தருளோ வென்னா
வடுத்தவிர் கற்பின் மேனை மனமுற மகிழ்ச்சி கொண்டாள். 25

சுரந்தன கொங்கை பாலுந் துண்ணென வொழுகிற் றெங்கும்
பரந்தன பொடிப்பின் போர்வை பரைதன தருளே யுள்ளம்
நிரந்தன கவலை யாவும் நீங்கின பவமுன் னுள்ள
கரந்தன விமையத் தண்ணல் காதலி தனக்கு மாதோ. 26

பரிபுரந் தண்டை யம்பொற் பாடகம் பாத சாலம்
விரவிய தொடியே சங்கு வியன்மணிச் சுட்டி யாரம்
அரிகெழு மதாணி பொற்றோ டங்கதம் பிறவுஞ் சாத்தி
வரையுறழ் தனப்பா லார்த்தி வரம்பெறு காப்பு நேர்ந்தாள். 27

வனைதரு பவளங் காலா வயிரமே மருங்கிற் கோலாப்
புனையிரும் பலகை நீலாப் புரிந்தபொற் றொட்டின் மேலா

அனையவ டன்னை யுய்த்து மங்கையிற் கொண்டுந் தன்கோன்
மனமகிழ் திறனுற் போற்றி மதியென் வளர்க்க லுற்றாள். 28

மன்னுயிர் புவன மேனை மற்றுள பொருளுக் கெல்லாம்
அன்னையா யுதவி நாளு மவற்றினை வளர்த்து நிற்பாள்
தன்னையும் வளர்ப்பா ருண்டோ வளர்ந்தது சமுக்கே யந்தக்
கன்னிதன் னருளின் நீர்மை காட்டினள் போலு மன்றே. 29

இந்தவா றினையர் பாலா யெம்பெரு மாட்டி வைகி
ஐந்தியாண் டகன்ற பின்றை யயன்முதற் றேவர் யார்க்குந்
தந்தையா ரருளை யுன்னித் தவமினிப் புரிவ னென்னாச்
சிந்தியா விமையத் தோங்கற் செம்மலுக் குரைக்க லுற்றாள். 30

நாற்பெருந் தடந்தோ ளண்ணல் நலத்தக வரைந்து கொள்வான்
நோற்பனு வினைய வெற்பி னுவலரு மொருசார் வைப்பின்
ஏற்பதோர் கன்னி மாரோ டெனைவிடுத் தருண்மோ வென்னாப்
பார்ப்பதி இயம்ப லோடும் பனிவரை யரசன் சொல்வான். 31

அன்னைகே ளெம்மின் நீங்கி யருந்தவ மாற்றற் கொத்த
தின்னதோர் பருவ மன்று வியாண்டுமோ ரைந்தே சென்ற
நின்னுடல் பொறுதா லீண்டிந் நிலைமையைத் தவிர்தி யென்னக்
கன்னிகை நகைத்துக் கேண்மோ இஃதெனக் கழற லுற்றாள். 32

ஈசனே காப்ப னல்லால் யாரையும் பிறராற் றம்மால்
ஆசறப் போற்ற லாகா ததுதுணி வாகு மீண்டுப்
பேசிய திறனு மன்னோன் பேரருள் மறுதி யென்ன
நேசமோ டியைந்திட் டன்னை நினைந்தனோன் பியற்று கென்றான். 33

மன்னனு மியைந்து பின்னர் மால்வரை யொருசார் தன்னில்
அன்னமென் னடையி னுளுக் கருந்தவச் சாலை யாற்றித்
தன்னுறு கிளைஞர் தம்பாற் றவத்தினால் வந்த பான்மைக்
கன்னியர் பலரைக் கூவிக் கௌரிபா லாகச் செய்தான். 34

நீலுறு மணிதோய் மேனி நிமலையங் கிமையத் துச்சி
மேலுறு மரசன் றேவி விடையினால் மடவார் பல்லோர்
பாலுறு பணியிற் சூழப் பரமனை யுன்னி யந்தச்
சாலையை யடைந்து மிக்க தவத்தினை யிழைக்க லுற்றாள். 35

தங்கிய வைக றோறுந் தாதையுந் தாவில் கற்பின்
மங்கையும் போற்றி யேக மாதுநோற் றிருந்தா ளிப்பால்
அங்கவட் பிரிந்த பின்றை அரும்பெருங் கயிலை மேய
வெங்கடம் பெருமான் செய்த பரிசினை இயம்ப லுற்றேன். 36

ஆகத் திருவிருத்தம்-410.

—※—

# 3. மேருப்படலம்

—oo—

பன்னருஞ் சிறப்பின் மிக்க பனிவரை யரசன் றன்பாற்
கன்னியம் புதல்வி யாகிக் கௌரிநோற் றிருந்த காலைத்
துன்னிய வவுணர் சூழச் சூரபன் மாவாம் வெய்யோன்
இந்நில வரைப்பின் அண்டத் திறைவனே யாகி யுற்றான். 1

மற்றது போழ்திற் றொல்லை மறைப்பொருள் வடத்தின் பாங்கர்ப்
பெற்றிடு சனக னாதி முனிவரர் பின்னும் பன்னாள்
அற்றமில் தவஞ்செய் தெந்தை யருளினாற் கயிலை நண்ணி
முற்றுணர் நந்தி போற்று முதனிலை வாயில் புக்கார். 2

நோன்மையின் முனிவ ரானோர் நுவலருங் காட்சி நந்தி
கான்முறை வணங்கி நிற்ப அனையவன் கருணை தன்னால்
வான்மலி கடவுட் கோயின் மந்திரங் கொண்டு செல்ல
நான்முகன் முதலோர்க் கெய்தா ஞானநா யகனைக் கண்டார். 3

மொழியது தவறல் செல்ல முற்றுடல் பொடிப்புக் கொள்ள
விழிபுனல் பெருகத் தீசேர் மெழுகென வுள்ளம் விள்ள
அழகிய மறைக்கு மெட்டா ஆதிநா யகனை நோக்கித்
தொழுதன ருவகை பூத்துத் துள்ளினர் துளக்க முற்றார். 4

மண்ணவ ரமரர் யாரை வணங்கினு மவைக ளெல்லாம்
நண்ணிய பரமன் றாளி னாற்பெருந் தவத்தி னோருந்
தண்ணளி நெறியிற் பல்காற் றாழ்ந்தன ரெழுந்து நின்று
பண்ணிசை மறைக டம்மால் துதித்திவை பகர்த லுற்றார். 5

இருட்பெருங் கடலுள் யாமத் தெறிமருத் திடைப்பட் டாங்குப்
பொருட்பெருங் கடலாம் வேதம் புடைதொறு மலைப்ப விந்நாள்
அருட்பெருங் கடலே எய்த்தே மமைந்தில துணர்வி யாங்கண்
மருட்பெருங் கடலின் நீங்கும் வண்ணமொன் றருடி யென்றார். 6

நவையறு தவங்க ளாற்றி நல்லருள் படைத்த தொல்லோர்
இவைபுகன் றிடலு மன்பர்க் கெளிவருங் கருணை வள்ளல்
அவர்முகந் தெரிந்து நுங்கள் அறிவமைந் தடங்கு மாறு
தவலருஞ் சிறப்பின் நன்னூல் சாற்றுது மிருத்தி ரென்றான். 7

என்றிவை யருள எந்தை யிணையடி தனாது முன்னர்
**நன்றுணர் காட்சி கொள்ளும் நால்வரு மிருந்தார்** அங்கட்
சென்றிடு நந்திப் புத்தேள் சிறப்புடை வதன நோக்கிக்
கொன்றையந் தொடையல் வேய்ந்த குழகனென் றியம்பு கின்றான். 8

பூங்கணைக் கிழவ னன்றிப் புங்கவர் யார்போந் தாலும்
ஈங்குறத் தருதி யல்லை யீதுனக் கடைத்த தென்ன
ஆங்கது புரிவ னென்னா வமலனை யிறைஞ்சி யங்கண்
நீங்கியக் கணத்தின் நந்தி நெறிமுதல் போற்றல் செய்தான். 9

நந்திமுற் கடையைப் போற்ற ஞானநா யகனு மண்ணல்
முந்துறை சனக னாதி முனிவரர் தொழுது கேட்ப
அந்தமில் ஆக மத்தின் அரும்பதம் மூன்றுங் கூறப்
புந்திய தொடுங்கும் ஞான போதகம் போதி யென்றார். 10

என்னலும் நகைத்தி யாது மெதிர்மொழி புரிந்தா னல்லன்
பன்னுவ தன்றால் மற்றிப் பரிசினு லிருத்தல் கண்டீர்
அந்நெறி யாரு மென்றே அனையவர்க் குணர்த்து மாற்றால்
உன்னரும் பரத்தின் மேலோ னொருசெயல் புரித லுற்றான். 11

இருவரு முணரா அண்ணல் ஏனவெள் ளெயிறி யாமை
சிரநிரை யநந்த கோடி திளைத்திடும் உரத்திற் சீர்கொள்
கரதல மொன்று சேர்த்தி மோனமுத் திரையைக் காட்டி
ஒருகணஞ் செயலொன் றின்றி யோகுசெய் வாரி னுற்றான். 12

இனையதோர் தன்மை காட்டி யெம்பிரா னுணர்த்தக் கண்டு
சனகனே முதலா வுள்ளோர் தவலரும் ஞான போதம்
பனுவலின் அளவன் றென்னும் பான்மையைத் தெரிந்து முக்கட்
புனிதன தருளாற் றத்தம் புந்தியி னொடுக்கம் பெற்றார். 13

தத்தமுள் ளொடுங்கல் பெற்ற தாபத கணத்தர் யாரும்
முத்தொழில் புரியும் மூவா முதல்வனும் முக்கண் மூர்த்தி
மெய்த்தவ வடிவ முன்னி மேவினர் சூழ்ச்சி மேலோன்
ரம் புணர்த்த பாவை செயலற இருக்கு மாபோல். 14

தற்பரன் இனைய வாற்றாற் றுபதா ருணருந் தன்மை
அற்புத ஞான போத மளித்திடுங் கணமே தொன்றின்
முற்படு கமலப் புத்தேள் முதலிய அமரர்க் கெல்லாம்
பற்பல யுகங்கள் சென்ற பிறர்க்கினிப் பகர்வ தென்னே. 15

இத்திற ஞானபோத மென்றுநான் முனிவர்க் கெந்தை
கைத்தலங் கொண்டு காட்டுங் கணத்தினில் அமரர்க் கெல்லாம்
மெத்துபல் லுகங்கள் சென்ற விழுமிய காஞ்சி தன்னில்
அத்தன்மெய் குழைந்த நங்கை அவன்விழி புதைத்த நாட்போல். 16

காரண முதல்வன் மோனக் காட்சியால் அமர ரெல்லாஞ்
சூரர மகளிர் தங்க டுணைமுலைப் போக மின்றி
ஆரிடர் நிலைமை தன்னை யடைந்தனர் அளக்கர் சூழ்ந்த
பாரிடை உயிருங் காமப் பற்றுவிட் டிருந்த வன்றே. 17

ஆரணன் றனது மைந்தர்க் கரும்பெறல் ஞான போதம்
ஓரிறை காட்டு முன்னர் உலகெலா மொருப்பா டொன்றி
ஈருடன் முயங்கு மார்வ மின்றியே யிருந்த யார்க்குங்
காரணன் சிவனே யென்கை கழறவும் வேண்டற் பாற்றே. 18

பிணைவிழைச் சூழ்தந் துய்ப்பப் பெருமறை விதிவ ழாமல்
அணைவிழச் சடங்கிற் கொண்ட அரிவைய ரோடு தேவர்

ஏற்றமிகு கோளுடு விரிந்தபுவி முற்றும்
ஆற்றிய பணிக்கிறையும் அஞ்சிய தலைந்தே. 42

பாங்கருறு தானவர்கள் பாசறையின் மூழ்கி
ஏங்கினர் விழுந்தனர் இரங்கினர் தளர்ந்தார்
ஆங்கனைய போழ்துதனில் அந்நகர மெல்லாம்
ஓங்குதுயர் கொண்டுகலுழ் ஓசைமலிந் தன்றே. 43

ஆனபொழு தத்தினில் அழுங்கலுறு சூரன்
போனதொரு சீற்றவழல் புந்தியிடை மூள
மானமொடு நாணமட வல்லையில் எழுந்தே
தானுடைய ஏவலர் தமக்கிவை உரைப்பான். 44

மன்னிளவல் ஆருயிரை மாற்றிவரு கந்தன்
தன்னிகல் கடந்துசய மெய்திவரல் வேண்டும்
என்னிரதம் வெம்படை இடுங்கவசம் யாவும்
உன்னுகணம் ஒன்றின்முனம் உய்த்திடுதி ரென்றான். 45

இறையிவை புகன்றிடலும் ஏவலர்கள் யாரும்
முறையிலவை உய்த்திடுதல் முன்னினர்கள் போனார்
அறைகழ லுடைத்தகுவர் அன்னசெயல் நாடிக்
குறைவில்அனி கங்களொடு கொம்மென அணைந்தார். 46

ஆயசெயல் காண்டலும் அமைச்சரில் அமோகன்
மாயைதரு சூரனடி வந்தனை புரிந்தே
ஏயதொரு மாற்றம திசைப்பல்அது கேண்மோ
தீயசின மெய்திட லெனாஇனைய செப்பும். 47

வேறு

நஞ்சுறை படைகள் கற்று நவையுறு தொன்ன லாரை
வஞ்சினத் தெறியும் வீரர் வளநகர் அதனை மாற்றோர்
இஞ்சியைச் சூழ்ந்து போருக் கெய்தினும் எண்ணி யன்றி
வெஞ்சினத் தினைமேல் கொண்டு விரைந்தமர் இயற்றச் செல்லார். 48

குலத்தினை வினவி உள்ளக் கோளினை வினவி வந்த
நிலத்தினை வினவித் தொல்லோர் நெறியினை வினவிக் கொண்ட
சலத்தினை வினவிப் போர்செய் தானையை வினவி அன்னோர்
வலத்தினை வினவி யல்லால் மற்றொன்று மனங்கொள் வாரோ. 49

வா[illegible]ல் வலியி னாரோ மாயையில் வலியி னாரோ
க[illegible] படைக்க லத்தின் கல்வியில் வலியி னாரோ
[illegible]ல் வலியி னாரோ உணர்ச்சிசேர் ஊக்க மான
சிரத்தினில் வலியி னாரோ என்றிவை தேர்வ ரன்றே. 50

ஒற்றரைத் தூண்டி அன்னோர் உறுவலி உணர்வ ரேனும்
மற்றுமோ ராற்றின் அல்லால் அன்னது மனத்துட் கொள்ளார்
சுற்றுறும் அனிக மன்றி யொருபுடை துவன்றிச் சூழும்
பெற்றியும் உளதோ என்னா வேயொரீஇத் தேர்வர் பின்னும். 51

வினையது விளைவை யென்றும் மெல்லிய மன்கை வெஃகார்
அனிகமும் அனையர் தன்மை அதனையுஞ் சிறுமைத் தாக
நினைகிலர் தமக்கு மாற்றார் நேர்ந்தவ ராயின் மேலோர்
முனையுறு புலத்தி லாற்றும் மும்மையும் முன்னிச் செய்வார். 52

மூவியல் மரபி னாலும் முற்றுறு தொழிந்த காலைக்
கோவியல் மரபுக் கேற்பக் கொடுஞ்சினந் திருகிக் கொட்புற்
றேவியல் படைஞ ரோடும் படையொடும் மதிர்ந்து சுற்றி
மேவலர் பான்மை யுன்னி வெற்றிகொண் டணைவர் அன்றே. 53

நேர்ந்திட வலியி லோரும் நாட்டிடை நேர்தி யென்னச்
சேர்ந்திடும் போழ்தும் வேந்தர் செருவினைக் குறித்துச் சென்று
சார்ந்திடல் பழிய தன்றே வெல்லினுந் தானை தூண்டிப்
பேர்ந்திடச் செய்வர் அஃதே பெறலரும் புகழ தன்றே. 54

ஈதரோ உலகி னுள்ள இறைவர்தம் இயற்கை யாகும்
ஆதலால் நின்னைப் பாரில் அறிவிலா அகில மாள்வாய்
ஏதமொன் றடையாய் வானோர் யாரையும் ஏவல் கொண்டாய்
போதனும் நெடுமா லோனும் வைகலும் புகழ வுற்றாய். 55

இன்னதோர் மிடல்பெற் றுள்ள இறைவநீ அளிய னாகும்
பொன்னக ரவன்சொற் கேட்டுப் பூதரே படையா ஈசன்
நென்னலின் உதவும் பிள்ளை நேர்ந்திடின் அவனை வெல்ல
உன்னினை போதி யென்னின் உனக்கது வசைய தன்றே. 56

மாற்றலர் வன்மை யோராய் மற்றவர் படைஞர் தங்கள்
ஆற்றலை யுணராய் நின்றன் அரும்பெருந் தலைமை யுன்னாய்
போற்றிடும் அமைச்ச ரோடும் புரிவன சூழாய் வாளா
சீற்றமங் கதுமேல் கொண்டு செல்லலுந் திறலின் பாற்றே. 57

வீரமும் வலியும் மிக்கோ ராயினும் விதிவந் தெய்தில்
பாரிடை வலியி லோரும் படுத்திடப் படுவர் நின்போல்
பேருடல் அழியா ஆற்றல் பெருமையால் இருவா யெய்துந்
தாரகன் மழலை தேருச் சிறுவனுந் தடியப் பட்டான். 58

கலகல மிழற்றுந் தண்டைக் கழலடிச் சிறுவன் கைம்மாத்
தலையுடை இளவல் தன்னைத் தடிந்ததற் புதத்த தன்றால்
வலியரும் ஒருகா லத்தில் வன்மையை இழப்பர் ஆற்ற
மெலியரும் ஒருகா லத்தில் வீரராய்த் திகழ்வர் அன்றே. 59

யாருநே ரன்றி வைகும் இறைவநீ சிறுவன் றன்மேற்
போரினை முன்னி யேகல் புகழ்மைய தன்றால் அன்னோன்
சீரொடு மதுகை யாவுந் தேர்ந்துபின் னவனில் தீர்ந்த
வீரரைப் படையொ டேவி வெற்றிகொண் டமர்தி யென்றான். 60

அறிதரும் அமைச்சர் தம்முள் அமோகன்இத் தன்மை தேற்ற
உறுதியீ தென்று சூரன் உள்ளூறு சினத்தை நீத்து

விறல்கெழும் அரிமான் ஏற்று விழுத்தகு தவிசின் ஏறிச்
செறிதரும் உழைஞர் தம்முட் சிலவரை நோக்கிச் சொல்வான். 61

பகனொடு மயூரன் சேனன் பரிதியம் புள்ளின் பேரோன்
சுகனிவர் முதலா வுள்ள தூதரைத் தருதி ரென்னப்
புகழ்புனை சூர பன்மன் பொன்னடி இறைஞ்சி யேத்தித்
தருவர்கள் தலைவர் மற்றச் சாரணர் தம்மை உய்த்தார். 62

சாரணர் இனையர் போந்து தாள்முறை பணிந்து நிற்பச்
சூரனங் கவரை நோக்கித் துண்ணென நீவி ரேகிப்
பாரிடை வந்த கந்தன் பான்மையும் படைவெம் பூதர்
சேருறு தொகையும் யாவுந் தேர்ந்திவண் வருதி ரென்றான். 63

ஒற்றுவர் உணர்ந்தந் நீர்மை உச்சிமேல் கொண்டு தங்கோன்
பொற்றடங் கழல்கள் தாழ்ந்து புடவியை நோக்கிச் சென்றார்
மற்றவர் போய பின்னர் மாறிலாச் சூர பன்மன்
வெற்றிகொள் அவுணர் போற்ற வீற்றிருந் தரசு செய்தான். 64

ஏதமில் சூர பன்மன் இளவல்தன் முடிவு நேடி
மாதுயர் கொண்டு தேறி வைகிய தன்மை சொற்றாம்
ஆதியங் கடவுள் மைந்தன் அமரர்தங் கிரியை நீங்கிப்
பூதல மீது வந்த நெறியினைப் புகல லுற்றாம். 65

ஆகத் திருவிருத்தம்—1,628.



# 23. வழிநடைப்படலம்

—oo—

குருமணி மகுடம் ஆறுங் குழைகளுந் திருவில் வீசத்
திருமணி வரையின் மேவுந் திருக்கைவேற் பெருமா னுக்குக்
கருமணி யாழிப் புத்தேள் கையுறை யாக ஆங்கோர்
பருமணி நீட்டிற் றென்னப் பானுவந் துதயஞ் செய்தான்.

வேறு

மங்குல் வானமேல் வெய்யவன் கதிரென வழங்குஞ்
செங்கை கூப்பியே தொழுதிடு வானெனச் செல்ல
அங்கவ் வேலையில் அறுமுகன் கடவுள்வெற் பகன்று
பொங்கு தானையும் அமரருஞ் சூழ்தரப் போந்தான்.

தன்னை நீக்கியே சூழ்வுறுந் தவமுடைப் பிருங்கி
உன்னி நாடிய மறைகளின் முடிவினை யுணரா
என்னை யாளுடை யானிடஞ் சேர்வன்என் றிமையக்
கன்னி பூசனை செய்ததே தாரமுன் கண்டான்.

பைய ராவின்மேற் கண்டுயில் பண்ணவன் றனக்குந்
தையல் பாதிய னேபரம் பொருளெனுந் தன்மை

மையல் மானுடர் உணர்ந்திட மறைமுனி யெடுத்த
கைய தேயுரைத் திட்டதோர் காசியைக் கண்டான். 4

பருப்ப தப்பெயர்ச் சிலாதனற் பாலகன் பரமன்
இருப்ப வோர்வரை யாவனென் றருந்தவம் இயற்றிப்
பொருப்ப தாகியே ஈசனை முடியின்மேற் புனைந்த
திருப்ப ருப்பதத் தற்புதம் யாவையுந் தெரிந்தான். 5

அண்டம் மன்னுயிர் ஈன்றவ ளுடன்முனி வாகித்
தொண்ட கங்கெழு சுவாமிதன் மால்வரை துறந்து
மண்டு பாதலத் தேகியே யோர்குகை வழியே
பண்டு தான்வரு வேங்கட கிரியையும் பார்த்தான். 6

சிலந்தி மாசுணம் மும்மதக் கரிசிவ கோசன்
மலைந்தி டுஞ்சிலை வேட்டுவன் கீரனே மடவார்
பலந்த ரும்வழி பாட்டினல் பாட்டினற் பரனைக்
கலந்து முத்திசேர் தென்பெருங் கயிலையுங் கண்டான். 7

கொடிய வெஞ்சினக் காளியிக் குவலய முழுதும்
முடிவு செய்வன்என் றெழுந்தநாள் முளரியான் முதலோர்
அடைய அஞ்சலும் அவள்செருக் கழிவுற வழியாக்
கடவுள் ஆடலால் வென்றதோர் வடவனங் கண்டான். 8

அம்பு ராசிகொள் பிரளயத் தினும்அழி வின்றி
உம்பர் மாலயற் குறையுளாய்க் கயிலைபோ லொன்றாய்
எம்பி ரான்தனி மாவிழல் தன்னில்வீற் றிருக்குங்
கம்பை சூழ்தரு காஞ்சியந் திருநகர் கண்டான். 9

ஏல வார்குழல் உமையவள் பூசைகொண் டிருந்த
மூல கார ணாகிய முதல்வன்ஆ லயமும்
மாலும் வேதனும் அமரரும் வழிபடு மற்றை
ஆல யங்களாய் உள்ளவுங் கண்டனன் ஐயன். 10

வேறு

என்னிகர் எவரு மில்லென் றிருவரும் இகலும் எல்லை
அன்னவர் நடுவு தோன்றி அடிமுடி தெரியா தாகி
உன்னினர் தங்கட் கெல்லாம் ஒல்லையின் முத்தி நல்கித்
தன்னிகர் இன்றி நின்ற தழற்பெருஞ் சயிலங் கண்டான். 11

மண்ணுல கிறைவன் செய்யும் மணந்தனை விலக்கி எண்டோள்
அண்ணலோர் விருத்தன் போல்வந் தாவண வோலை காட்டித்
துண்ணென வழக்கில் வென்று சுந்தரன் றனையாட் கொள்ளும்
பெண்ணையம் புனல்சூழ் வெண்ணெய்ப் பெரும்பதி தனையும் கண்டான்.

தாசினல் அம்மை வீரத் தொடையின்மேற் கிடத்தித் துஞ்சும்
மாசிலா வுயிர்கட் கெல்லாம் அஞ்செழுத் தியல்பு கூறி
ஈசனே தனது கோலம் ஈந்திடு மியல்பால் அந்தக்
காசியின் விழுமி தான முதுகுன்ற வரையுங் கண்டான். 13

விரிகனல் வேள்வி தன்னில் வியன்றலை அரிந்து வீட்டிப்
பொருவரு தவத்தை யாற்றும் பதஞ்சலி புலிக்கால் அண்ணல்
இருவரும் உணர்வாற் காண எல்லையில் அருளா லீசன்
திருநட வியற்கை காட்டுந் தில்லைமூ தூரைக் கண்டான். 14

தண்டளிர்ச் சோலைத் தில்லைத் தபனிய மன்றி லென்றுந்
தொண்டையங் கனிவாய் மாது தொழச்சுராட் புருடன் உள்ளத்
தண்டரு மதிக்க லாற்று அற்புதத் தனிக்கூத் தாடல்
கண்டனன் கசிவால் உள்ளங் களிப்புற வணங்கிப் போனான். 15

குடமுனி கரத்தில் ஏந்துங் குண்டிகை இருந்து நீங்கிப்
படிதனில் வேறு வேறாய்ப் பற்பல நாமந் தாங்கிக்
கடல்கிளர்ந் தென்னச் செல்லுங் காவிரி யென்னு மாற்றின்
வடகரை மண்ணி யின்பால் வந்தனன் கருணை வள்ளல். 16

ஆகத் திருவிருத்தம் - 1,644.

# 24. குமாரபுரிப் படலம்

—oo—

அளவில் பூதவெம் படையொடு மண்ணியா றதன்கட்
குளகன் வந்துழி எழுந்திடு பூழிவான் குறுகி
ஒளிரும் வெய்யவன் கதிர்தனை மறைத்தலா லோடி
வளைநெ டுங்கடல் மூழ்குவான் புக்கென மறைந்தான்.

மறைந்த காலையில் தோன்றின மாலையும் நிசியுங்
குறைந்த திங்கள்வந் துதித்தது தாரகை குறுகி
நிறைந்தெ ழுந்தவோர் மன்னவன் இறந்துழி நீங்கா
துறைந்த ஒன்னலர் யாவருங் கிளர்ந்தவா றொப்ப.

மிக்க தாருக வனத்தினை யொத்தது விசும்பில்
தொக்க பேரிருள் மாதரொத் தனஉடுத் தோற்றஞ்
செக்கர் ஈசனை யொத்ததொண் போனகஞ் செறிந்த
கைக்க பாலம தொத்தது கதிரிளம் பிறையே.

நிலவு லாவிய ககனமா நீடுபாற் கடலில்
குலவு கின்றதோர் பொருளெலாங் கொண்டுகொண் டேகி
உலகில் நல்குவான் முயலெனும் ஒருமகன் உய்ப்பச்
செலவு கொண்டதோர் தோணிபோன் றதுசிறு திங்கள்.

ஆன காலையில் அறுமுகப் புங்கவன் அமல
மேனி சேரொளி நிலவொடு கங்குலை வீட்டிப்
பானு மேவரு மெல்லெனச் செய்தலிற் பரமாம்
வான நாயகன் கயிலைபோன் றிருந்ததவ் வையம்.

### வேறு

வீசு பேரொளி விமற்குகன் இவ்வா
றுசின் மண்ணியின் அகன்கரை நண்ண
ஈச னும்அவனை எய்துபு வேறாக்
கேச வன்முதல்வர் இன்ன கிளப்பார். 6

ஆண்ட இந்நதி யகன்கரை எல்லாம்
மாண்ட வாலுகம் மலிந்தினி தாகும்
நீண்ட சோலைகள் நிரந்தன தோன்றி
ஈண்டி ஈண்டையின் இறுத்துள அன்றே. 7

பிறைபு னைந்திடு பெருந்தகை தானம்
இறுதி யில்லன இருந்தன வற்றுள்
நறிய தாகுமிந் நதிக்கரை தன்னில்
இறைவ இவ்விடை இருந்தருள் என்றார். 8

வனையும் மேனிஅயன் மால்முதல் வானோர்
இனைய செப்புத லும் யாரினும் மேலோன்
வினைய மெத்தவுள விச்சுவ கன்மப்
புனைவ னுக்கிது புகன்றிடு கின்றான். 9

மெய்வி தித்தொழிலில் வேதன் நிகர்க்குங்
கைவ லோய்ஒரு கணம்படு முன்னர்
இவ்வி டத்தினில் எமக்கொரு மூதூர்
செவ்வி திற்புனைவு செய்குதி யென்றான். 10

என்ன லோடும்அவ் விடந்தனில் எங்கோன்
துன்னு தொல்படை சுராதிப ரோடு
மன்ன அங்கணொரு மாநகர் நெஞ்சத்
துன்னி நல்கலும் உவந்தனர் யாரும். 11

அப்பு ரத்தையறி வன்கடி தாற்றி
முப்பு ரத்தையடு முன்னவன் நல்கும்
மெய்ப்பு ரத்தவனை நோக்குபு மேலோய்
இப்பு ரத்திடை எழுந்தரு ளென்றான். 12

என்ற லோடும்இர தத்தின் இழிந்தே
துன்றும் வானவர் சுராதிப ரானோர்
சென்ற பூதர்கள் செறிந்துடன் ஏக
மன்றல் மாநகரில் வள்ளல் புகுந்தான். 13

செல்லு மாமுகில் செறிந்திடு காப்பின்
மல்லல் மாநகர் வளந்தனை நோக்கி
எல்லை யில்அறிவன் யாமுறை தற்கு
நல்ல மாநகரி தென்று நவின்றான். 14

வீர வேளிது விளம்புத லோடும்
ஆரும் வானவர்கள் அம்மொழி கேளா

ஏரெ லாமுடைய இந்நகர் சேய்ஞ
லூர தென்றுபெயர் ஓதினர் அன்றே. 15

ஆய காலையனி கப்படை சூழ
ஏய பின்னிளைஞர் இந்திரன் வேதா
மாயன் ஏனையர் வழுத்திட ஆண்டைக்
கோயில் செல்லுபு **குமாரன்** இருந்தான். 16

**வேறு**

பன்னிரு புயத்தொகை படைத்தகும ரேசன்
தன்னருள் அடைந்துவிதி தன்னைமுத லானோர்
அன்னவன் விடுத்திட வகன்றுபுடை யேகித்
தொன்னிலை இருக்கைகள் தொறுந்தொறும் அடைந்தார். 17

தானைகள் தமக்குரிய சாரதர் இலக்கர்
ஏனையர் வழுத்த எமை யாளுடைய வள்ளல்
கோனகர் இருக்கவிடை கொண்டுசெல் குழாத்துள்
வானவர் தமக்கிறை செயற்கையை வகுப்பாம். 18

**வேறு**

தாங்கரும் பெருந்திறல் தார காசுரன்
பாங்கமர் குன்றொடும் பட்ட பான்மையால்
ஆங்கனம் புரந்தரன் அவலம் யாவதும்
நீங்கினன் உவகையால் நிறைந்த நெஞ்சினான். 19

விருந்தியல் அமிர்தினை விழும மில்வழி
அருந்தின னாமென ஆகந் தண்ணெனப்
புரந்தரன் இருந்துழிப் புக்குத் தாழ்ந்ததால்
வரந்திகழ் **சீரபுர வனத்தில் தெய்வதம்.** 20

முகில்பொதி விண்ணகம் முதல்வன் பூண்களும்
நகில்பொதி சாந்துடை நங்கை பூண்களுந்
துகில்பொதி கிழியொடு தொல்லை வைத்தவை
அகில்பொதி காட்டகத் தடிகள் உய்த்ததே. 21

முந்துற உய்த்தபின் முதல்வ கேட்டிநீ
பைந்தொடி அணங்கொடு பரமன் **காழியில்**
வந்தனை நோற்றநாள் வைத்த பூணிது
தந்தனன் கொள்கெனச் சாற்றி நின்றதே. 22

நிற்புறு கின்றுழி நேமி அண்ணற்கு
முற்படு கின்றவன் முளரிப் பண்ணவன்
கிற்புறு செய்யபூண் கிழியை நோக்கினான்
கற்புடை யாள்விடுந் தூதின் காட்சிபோல். 23

எரிமணி அணிகலன் இட்ட பூந்துகில்
விரிதரு பொதியினை விரலின் நீக்கினான்

திருமகள் அமர்தரு தெய்வத் தாமரை
வரியளி சூழ்வுற மலர்ந்த தென்னவே. 24

துண்ணெனக் கிரியதன் தொடர்பு நீக்கலும்
ஒண்ணுதற் றுணைவிபூண் உம்பர் தோன்றலுங்
கண்ணுறக் கண்டனன் கருதி னானரோ
எண்ணுதற் கரியதோர் இன்பந் துய்த்துளான். 25

பூட்கையின் முலையுடைப் பொன்னங் கொம்பின்மேல்
வேட்கைய தாயினன் மிகவும் பற்பகல்
வாட்கையின் றிருந்தது மனத்தின் முன்னினான்
காட்கொளுங் காமநோய்க் கவலை எய்தினான். 26

நெய்ம்மலி தழலென நீடிக் காமநோய்
இம்மென மிசைக்கொள இரங்கி ஏங்கினான்
விம்மினன் வெதும்பினன் வெய்து யிர்த்தனன்
மைம்மலி சிந்தையன் மருட்கை எய்தினான். 27

பசையற வுலர்வுறு பராரைப் பிண்டியின்
தசைமலி முழுதுடல் தளர்ந்து வாடினான்
இசைவரு கைவலோன் எழுது பாவைபோல்
அசைவிலன் இருந்தனன் அணங்குற் றென்னவே. 28

முருந்துறழ் எயிற்றினாள் முலைத்த டங்களில்
பொருந்துற மூழ்கியே புணர்ந்து வைகலும்
இருந்திடு கின்றவன் இடர்ப்பட் டின்னணம்
பிரிந்திடின் வருந்துதல் பேசல் வேண்டுமோ. 29

மெய்ந்நனி அலசுற விரக மீக்கொள
இன்னணஞ் சசிபொருட் டினையும் நீர்மையோன்
பொன்னணி தன்னையும் புணர்தல் வேட்டலன்
தன்னுழை யவர்தமை நோக்கிச் சாற்றுவான். 30

இக்கிழி யொன்றினை ஏந்தி முந்துபோற்
சிக்குற வீக்கியே சேமித் தீங்கள்பால்
வைக்குதிர் என்றலும் வணங்கி நன்றெனா
அக்கணம் அனையவர் அதனை யாற்றினார். 31

அன்னதோர் அளவையில் அடவித் தேவினைக்
கொன்னுனை வச்சிரக் குரிசில் நோக்குறா
நின்னுழை அளித்திட நீசெல் கென்றலும்
மன்னவ நன்றென வணங்கிப் போயதே. 32

போந்திடு காலையிற் பூலோம சைப்பெயர்
ஏந்திழை காமநோய் எரியின் துப்பினாற்
காந்திய வுளத்தினன் கனலும் யாக்கையன்
ஓய்ந்தனன் தட்பமேல் உளம்வைத் தேகினான். 33

ஒளியிழை உழத்தியர் ஒளிமென் கூந்தலின்
அளியினம் நறவுதுய்த் தலரிற் கண்படு
நளியிருந் தண்டலை ஞாங்கர் பொங்கிய
புளினமொன் றதன்மிசை புக்கு வைகினன்.

தீந்தழல் வெங்கதிர் திளைத்த வாறென
நீந்தருங் கங்குலின் நிலவுத் தீப்படப்
பூந்துணர் பரவிய புளினம் பொன்னகர்
வேந்தனுக் காற்றவும் வெம்மை செய்ததே. 35

சூற்புயல் மாறிய சுரத்தில் தொக்குறு
மாற்பரல் வரைபுரை மணலின் திட்டையின்
பாற்படு கின்றனன் பனிம திக்கதிர்
மேற்பட அசைந்தனன் வினையம் வேறிலான். 36

திங்களும் வெங்கனல் சிதறிக் காய்ந்திடத்
துங்கவேள் படையுடன் பிறவுஞ் சூழ்ந்திட
மங்கிய உணர்ச்சியன் மயலின் வன்மையான்
புங்கவர் மன்னவன் புலம்பல் எய்தினன். 37

மட்டமர் புரிகுழல் மடந்தை என்னுடல்
இட்டுயிர் வவ்வினள் இருந்த யாக்கையுஞ்
சுட்டிடு கிற்றியால் தூய திங்கள்நீ
பட்டவர் தம்மையும் படுப்ப ரோவென்பான். 38

எஞ்சலில் அமுதினை யார்க்கும் நல்குநீ
நஞ்சினை யுகுத்திநண் ணலரில் தப்பியே
உஞ்சனன் இவனுயிர் ஒழிப்பன் யானென
வஞ்சினம் பிடித்தியோ மதிய மேயென்பான். 39

நிற்றலும் வருதிநீ நீ(
உற்றிடல் அன்றியே ஒறுத்தி லாய்மதீ
அற்றமின் றுன்னிவந் தடுதி யாரிடைக்
கற்றனை இத்திறங் கள்வ நீயென்பான். 40

பெண்ணிய லாரிடைப் பிறங்கு காமமும்
உண்ணிகழ் விரகமும் உனக்கும் உண்டதை
எண்ணலை யழல்சொரிந் தென்னைக் காய்தியால்
தண்ணளி மதிக்கிது தகுவ தோவென்பான். 41

அரியநற் றவம்பல ஆற்றி இன்றுகா
றுரியதோர் என்பல தூணில் யாக்கையேன்
பரிவுறச் சுடுவதிற் பயனென் பாரிலிவ்
வொருவனை விடுகென உரைத்து வேண்டுவான். 42

அண்டமேல் நின்றனை அவனி வானகம்
எண்டிசை எங்கணும் எளிது காண்டியால்

ஒண்டொடி யொருத்திஎன் னுயிர்கொண் டேற்றனள்
கண்டதுண் டோமதிக் கடவுள் நீயென்பான். 43

யான்முதல் தோன்றினன் எனது பின்னவன்
கான்முளை யாகிய காம நீபல
பான்மையின் எனையடல் புரிய தேயலால்
மேன்மைய தாகுமோ விளம்பு வாயென்பான். 44

பரேருள உனதுமெய் படுத்த கண்ணுதல்
ஒருரேலென உதவிய விமலன் ஈண்டுளன்
ஒரேகணம் ஒடுங்குமுன் உயிரும் வாங்குமால்
பொரேலினி மதனநீ போகு போகென்பான். 45

வானுழை திரிதரு மதியம் போக்கிய
தீநுழை புண்ணில்வேல் செறித்த தென்னவேள்
கோனுழை கின்றன அதனில் கூடலி
ஈநுழை கின்றன போலும் என்கின்றான். 46

வன்றிறல் கொலைஞர்கள் மானில் கூவிமான்
ஒன்றறக் கவர்தல்போல் உயிரென் காலினை
இன்றது போலவந் துள்ளுக் கீர்த்ததால்
தென்றலுக் கியான்செய்த தீதுண் டோவென்பான். 47

வாகுலப் பரியதோர் மாதர் மாலெனும்
ஆகுலப் புணரியுள் அழுந்தி னேனையும்
வீகுலத் தொகையினுள் விட்டி ரைத்திடுங்
கோகிலப் பறவையுங் கொல்லு மோவென்பான். 48

நம்முரு வாயினன் நாகர் கோனெனுந்
தம்மன முன்னியே தளர்வு நீக்கில
கொம்மென அரற்றியுங் கூவ லின்றியும்
எம்முயிர் கொள்வன இருபுளா மென்பான். 49

தண்டுதல் இனறியே தானு நானுமாய்ப்
பண்டொரு வனிதை[1]யைப் பரிவிற் கூடினோம்
அண்டரும் அறிகுவர் அற்றை நாட்சினம்
உண்டுகொல் கதிரினம் உதிக்கி லானென்பான். 50

கோழிலை மடற்பனைக் குடம்பை சேர்தரு
மாழையம் பசலைவாய் மகன்றி லென்பவை
காழக வரிசிலைக் காமன் கோடுபோல்
ஊழியும் வீழ்ந்திடா தொலிக்கு மோவென்பான். 51

துன்னல ராகிய தொகையி னோர்தமைத்
தன்னிடை வைத்தெனைத் தளர்வு கண்டதால்
அன்னதும் அன்றியின் றுவி கொள்ளவும்
உன்னிய தோகடல் உறங்க லாதென்பான். 52

1 பண்டொருவனிதை - பெண் வடிவங்கொண்ட அருணன்.

இவ்வகை யாமினி யெல்லை முற்றவும்
வெவ்வழல் சுற்றிடும் விரக நோய்தெற
உய்வகை யொன்றிலன் உயங்கல் அல்லது
செய்வது பிறிதிலன் தெருளில் சிந்தையான். 53

வேறு

ஆக்கம் இத்திறம் அடைவுழிப் பத்துநா றடுத்த
நோக்க முற்றவன் மசிபொருட் டுற்றநோய் அதனை
நீக்கு கின்றனன் யானெனு நினைந்துளான் என்ன
மாக்கள் பூண்டதேர் வெய்யவன் குணதிசை வந்தான். 54

வெம்பு தொல்லிருள் அவுணர்தங் குழுவினை வீட்டி
உம்பர் மேற்செலும் மதியெனும் மடங்கலை உருத்துப்
பைம்பொன் வெஞ்சுடர்க் கரங்களால் அதன்வலி படுக்குஞ்
சிம்பு ளாமெனத் தோன்றினன் செங்கதிர்க் கடவுள். 55

தொடர்ந்த ஞாயிறு விடுத்திடுங் கதிர்களாந் தூசி
படர்ந்த காலையில் நிலவெனும் அனிகமுன் பட்ட
அடைந்த மீனெனுந் துணைவரும் பொன்றினர் அமர்செய்
துடைந்த மன்னரில் போயினன் உடுபதிக் கடவுள். 56

விரிந்த பல்கதிர் அணிகத்தை வெய்யவன் விடுப்பத்
துரந்த சோமனை அவன்புறங் காட்டினன் தொலைந்து
கரந்து போதலும் பின்னுறச் சென்றில களத்தில்
இரிந்து ளோரையுந் தொடர்வரோ சூரர்தம் இனத்தோர். 57

திங்கள் தன்குறை உணர்த்தவாய் திறந்தெனச் செய்ய
பங்க யங்கள்போ தவிழ்ந்தன குமுதங்கள் பலவுந்
தங்கள் நாயகன் உடைந்தது நோக்கியே தபனற்
கங்கை கூப்பிய திறனென ஒடுங்கிய அன்றே. 58

வனமெ ழுந்தன வனசமு மெழுந்தன வரியின்
இனமெ ழுந்தன மாக்களும் எழுந்தன எழில்சேர்
அனமெ ழுந்தன புள்ளெலாம் எழுந்தன அவற்றின்
மனமெ ழுந்தன எழுந்தன மக்களின் தொகையே. 59

ஞாயி றுற்றவவ் வளவையின் நனந்தலை உலகில்
ஏயெ னச்செறி இருளெலாம் மறைந்திருந் தென்னச்
சேய ரிக்கணி தந்திடு தெளிவில்கா மத்து
மாயி ருட்டொகை யொடுங்கிய திந்திரன் மனத்துள். 60

கையி கந்துபோய்த் தன்னுயிர் அலைத்தகா மத்தீப்
பைய விந்திடு பாந்தள்போல் தணிதலும் பதைப்புற்
றெய்யெ னக்கடி தெழுந்தனன் நகைத்துவெள் குற்றுன்
ஐய கோவிது வருவதே எனக்கென அறைந்தான். 61

தீமை யுள்ளன யாவையுந் தந்திடுஞ் சிறப்புந்
தோமில் செல்வமுங் கெடுக்கும்நல் லுணர்வினைத் தொலைக்கும்

**ஏம நன்னெறி தடுத்திருள் உய்த்திடும் இதனால்**
**காம மன்றியே ஒருபகை உண்டுகொல் கருதில்.** 62

*என்ப துன்னியே இந்திரன் ஆண்டையைப் பிரிந்து*
*தன்பு றந்தனிற் கடவுளர் குழுவெலாஞ் சார*
*அன்பொ டேபடர்ந் தறுமுகன் அடிகளை அடைந்து*
*முன்பு தாழ்ந்தனன் உரோமமுஞ் செங்கையும் முகிழ்ப்ப.* 63

*தொழுத கையினன் கோட்டிய மெய்யினன் துகிலத்*
*தெழுது பாவையில் ஆன்றமை புலத்தினன் இறைஞ்சிப்*
*புழுதி தோய்தரும் உறுப்பினன் சுருதியின் பொருண்மை*
*முழுதும் ஊறிய துதியின னாகிமுன் நின்றான்.* 64

*காரிய வன்றனைச் செய்யவன் கருணைசெய் தருளி*
*வருதி யென்றுகூய் மறைகளும் வரம்புகாண் கில்லா*
*அரன தாள்களை அருச்சனை புரிதுநாம் அதனுக்*
*குரிய வாயபல் கரணமுந் தருதியென் றுரைத்தான்.* 65

*உரைத்த வெல்லையில் தொழுதுபோய் உழையரில் பலரைக்*
*கரைத்து வீற்றுவீற் றேவியே கடிமலர்க் கண்ணி*
*திரைத்து இற்படா நறும்புனல் அவிபுகை தீபம்*
*விரைத்த கந்தங்க ளேனவுந் தந்தனன் விரைவில்.* 66

*அவ்வக் காலையில் ஆறுமா முகனுடை யடிகள்*
*தெய்வக் கம்மியற் கொண்டொரு சினகரம் இயற்றிச்*
*சைவத் தந்திர விதியுளி நாடியே தாதை*
*எவ்வெக் காலமும் நிலையதோர் உருவுசெய் திட்டான்.* 67

*தேவு சால்மணிப் பீடத்தில் ஈசனைச் சேர்த்தி*
*ஆவின் ஓரைந்தும் அமுதமும் வரிசையால் ஆட்டித்*
*தாவி லாததோர் வாலிதாம் அணித்துகில் சாத்திப்*
*பூவின் மாலிகை செய்யசாந் தத்தொடும் புனைந்தான்.* 68

*மருந்தி னாற்றவுஞ் சுவையன வாலுவ நூல்போய்த்*
*திருந்தி னார்களும் வியப்பன திறம்பல வாகிப்*
*பொருந்து கின்றன நிரல்அமை கருணையம் புழுக்கல்*
*சொரிந்து பொற்கலத் தருத்தினன் மந்திரத் தொடர்பால்.* 69

*கந்தம் வெள்ளிலை பூகநற் காயிவை கலந்து*
*தந்து பின்முறை அருத்தினன் புகைசுடர் தலையா*
*வந்த பான்மைக ளியாவையும் வரிசையா லுதவி*
*முந்து கைதொழூஉப் போற்றினன் மும்முறை வணங்கி.* 70

**வேறு**

*இருவரும் உணர்கிலா திருந்த தாள்களைச்*
*சரவண மிசைவரு தனயன் பூசனை*
*புரிதலும் உமையொரு புடையிற் சேர்தர*
*அருள்விடை மீமிசை அண்ணல் தோன்றினான்.* 71

கார்த்திகை காதலன் கறைமி டற்றுடை
மூர்த்திமேல் லருள்செய முன்னி வந்தது
பார்த்தனன் எழுந்தனன் பணிந்து சென்னிமேற்
சேர்த்திய கரத்தொடு சென்று போற்றினான். 72

செயிர்ப்பறு நந்திதன் திறத்தில் வீரரும்
வியர்ப்பினில் வந்தெழு வீர ருங்குழீஇக்
கயற்புரை கண்ணுமை கணவற் காணுறீஇ
மயிர்ப்புறம் பொடிப்புற வணங்கி ஏத்தினார். 73

முண்டகன் முதல்வரும் முரண்கொள் பூதருங்
கண்டனர் அனையது கரங்கள் கூப்பியே
மண்டலின் மும்முறை வணங்கி வானகம்
எண்டிசை செவிடுற ஏத்தல் மேயினார். 74

வேறு

ஆயது காலை தன்னில் அருவுரு வாகும் அண்ணல்
சேயினை நோக்கி உன்றன் வழிபடற் குவகை செய்தேம்
நீயிது கோடி யென்னா நிரந்தபல் புவன முற்றும்
ஏயென முடிவு செய்யும் படைக்கலத் திறையை ஈந்தான். 75

மற்றிது நம்பால் தோன்றும் வான்படை மாயன் வேதாப்
பெற்றுள தன்றி யார்இப் பெரும்படை பரிக்கும் நீரார்
முற்றுயிர் உண்ணும் வெஞ்சூர் முரட்படை தொலைப்பான் ஈது
பற்றுதி மைந்த என்னாப் பராபரன் அருளிப் போனான். 76

கருணைசெய் பரமன் பேணிற் கரந்தனன் போன காலை
அருள்பெறு நெடுவேல் அண்ணல் அன்னவற் போற்றிப் பின்னை
விரவிய இலக்கத் தொன்பான் வீரரும் அயனும் ஏனைச்
சுரர்களும் வழுத்திச் செல்லத் தூயதன் தேரிற் புக்கான். 77

சில்லியந் தேர்மேற் செவ்வேள் சேர்தலும் உலவை வேந்தன்
வல்லைதன் தமர்க ளோடும் வாம்பரி கடாவி உய்ப்ப
எல்லையிற் பரிதி தோன்ற எழுதரும் உயிர்க ளேபோல்
ஒல்லென எழுந்த தம்மா உருகெழு பூத வெள்ளம். 78

சாரத நீத்த மெல்லாந் தரையின்நின் றெழுந்து சூழ்ந்து
போரணி யணிந்து போந்த புடைதனில் இலக்கத் தொன்பான்
வீரருஞ் சுரர்கள் யாரும் மேவினர் வந்தார் வான்றோய்
தேர்மிசை அவர்க்கு நாப்பட் சென்றனன் குமரச் செம்மல். 79

மண்ணியங் கரையிற் றென்பால் வகுத்தசேய் ஞலூர் நீங்கி
எண்ணிய வுதவும் பொன்னி திடை மருதி னோடு
தண்ணியல் மஞ்ஞை யாடுந் தண்டுறை பரிய லூருங்
கண்ணுதல் இறைவன் தானம் ஏனவுங் கண்டு போனான். 80

எழில்வளஞ் சுரக்குந் தொல்லை இலஞ்சியங் கானம் நோக்கி
மழுவிடை இறைவன் பொற்றாள் வணங்கியே மலர்மென் பாவை

முழுதுள திருவும் ஒன்றும் முடிவிலாங் கலமும் எய்த
விழுமிதின் நோற்றுப் பெற்ற வியன்திரு வாரூர் கண்டான். 81

ஆகத் திருவிருத்தம் - 1,725.

## 25. சுரம்புகு படலம்

—00—

பற்றிடங் கொண்ட பத்தேள் புரந்தரற் கருள்செய் திட்ட
நற்றலந் தன்னைச் சேர்ந்த நகருளா ளனையுங் காணூஉக்
கொற்றவெங் கதிர்வேல் அண்ணல் கொல்லுலை அழலிற் செக்கர்
பற்றிய இரும்பு போலும் பாலையங் கானத் துற்றான். 1

வேறு

ஏழு நேமியும் பெரும்புறக் கடலுமெண் டிசையுஞ்
சூழ அன்னதால் அறிவின்றித் தொன்மைபோ லாகி
ஆழி யுள்ளுறும் வடவையின் அவற்றினைப் பருகி
ஊழி தன்னினும் இருப்பதவ் வுயர்பெரும் பாலை. 2

அண்டர் நாயகன் உலகடும் மகந்தனக் காகும்
பண்ட மேசெறி பல்வளம் ஆருயிர் பசுக்கள்
மண்டு நேமிநெய் இலங்கல மாயுற மலர்தீக்
குண்ட மாயது கள்ளிசூழ் கொடியவெம் பாலை. 3

வண்ண ஒண்சுதை மெய்யுடை வரநதி கேள்வன்
நண்ணு தொல்லுல காகியே நரலையுற் றொன்னார்த்
தண்ணி லாவெழு நாத்தலை இரண்டுடைத் தழலின்
பண்ண வற்குல காயது முதுபெரும் பாலை. 4

உடைய தொல்குலக் கேண்மையால் அவ்வனத் துறையுங்
கொடிய வன்னிபாற் சென்றதோ வெப்பமேல் கொண்டு
நடுந டுங்கிவெம் புகையுமிழ்ந் தரற்றினா வுலர்ந்து
கடல்ப டிந்துநீர் பருகுமால் வடவையங் கனலே. 5

கற்றை யங்கதிர்ப் பரிதியும் மதியுமக் கானஞ்
சுற்றி யேகுவ தல்லது மிசைபுகார் சுரரும்
மற்று ளார்களும் அனையரே எழிலியும் மருத்தும்
எற்றை வைகலும் அதன்புடை போகவும் இரையா. 6

சேனம் வெம்பணி ஒண்புறு விரலைமான் செந்நாய்
ஆனை யாதிகள் அவ்வனத் திருக்கவும் ஆவி
போன தில்லையால் அங்கியிற் றோங்கிய பொருள்கள்
மேனி கன்றுவ தன்றியே விளியுமோ அதனால்.

எண்ணி னுஞ்சுடும் பாலையங் கானிடை எழுந்த
கண்ண கன்புகை அழல்படு கின்றகாட் சியவே
விண்ணின் நீலமுஞ் செக்கரும் அவற்றினால் வெடித்த
புண்ணும் மொக்குளுங் கதிர்களும் உடுக்களும் போலாம். 8

வேக வெய்யவன் புடையுறு தவ்வன மிசையே
போக வோரிறை எழுந்தழல் சுட்டது போலும்
ஏகு தேரொரு காலிலா திழந்ததால் இருகால்
பாகி ழந்தனன் அவன்கதிர் அங்கிபட் டனவே. 9

தங்கள் தொல்பவம் அகன்றிலா விண்ணவர் தம்மைத்
துங்க முத்தியின் பொருட்டினால் அடைபவர் தொகைபோல்
அங்கம் நொந்துதம் போலவே வெப்பமுற் றயருங்
கங்கம் நாடியே நீழலுக் கடைவன கலைகள். 10

கோல வெங்கதிர் மதியிவர் வைகலுங் கொடிய
பாலை வெஞ்சுரத் தாரழல் வெம்மைபட் டனரோ
காலை தன்னினும் மாலையம் பொழுதினுங் கங்குல்
வேலை தன்னிலும் பிறவினும் வேலைநீர் படிவார். 11

தொடரும் வானவர் யாவரும் ஐயைதாள் தொழுவார்
கொடிய பாலைமுன் னுணர்கிலா தணுகினர் கொல்லோ
அடிசி வந்தகம் வெம்பியே அமுதமுண் டதற்காப்
படியின் மேலென்றுஞ் செல்கிலர் விண்மிசைப் படர்வார். 12

ஒள்ளி தாகிய தலைமையிற் பிறந்துளோர் உலகம்
எள்ளும் நல்குர வெய்தலால் இழிந்தவர் கண்ணுங்
கொள்ளு மாறொரு பயன்குறித் தேகல் போற்கொடிய
கள்ளி தன்புடை நீழலுக் கொதுங்குவ கரிகள். 13

இரவி கம்மியன் சுட்டுறு கோல்கதிர் எரிதீ
மருவு செந்தரை பொறிமணி கொள்கலம் வறுங்கான்
கரிக ளேகரி காற்குழல் துதிக்கைநீர் கானல்
புரித ரும்பணி வெந்திடும் பணிக்குலம் போலும். 14

ஆன்ற வான்புவி நதிப்புனல் பாதலம் அதன்கண்
தோன்று நீத்தநீர் யாவையும் ஒருங்குறத் துற்றுச்
சான்ற பாலையஞ் செந்தழல் அப்புனல் தன்னைக்
கான்ற வாறெனக் கிளர்வன அங்கிலக் கானல். 15

விஞ்சு கானல்வெண் டேரினை யாறென விரும்பி
நெஞ்சில் உன்னியே இரலைமான் மடப்பிடி நெடுந்தாட்
குஞ்ச ரந்திரிந் துலைவன கொடியவெம் பணிகால்
நஞ்சு தன்னையும் அருந்துவ ஞமலிநீர் நசையால். 16

செய்ய மண்மகள் உலப்புறு உந்தியந் தீயாய்
வெய்ய வன்செலற் கரியவப் பாலையே வுதலான்

மொயயில் வெம்பணி புகையழல் உமிழ்வன முரணும்
மையு றுங்கொடு நஞ்சொடு கான்றசெம் மணிகள். 17

முளையின் அஞ்சொரி முத்தமும் முந்துசெம் பரலும்
அளவில் பாந்தளின் மணிகளும் ஈண்டியே அமர்தல்
விளிவில் அவ்வனத் தீச்சுடத் தனதுமெய் வெடித்தே
உளையும் மண்மகள் மொக்குளுற் றிடுதிறன் ஒக்கும். 18

கள்ளி பட்டன பாலையுந் தீந்தன கரிந்து
முள்ளி பட்டன எரிந்தன குராமரம் முளிந்து
கொள்ளி பட்டன காரகில் அன்னதாற் கொடுந்தீப்
புள்ளி பட்டது போன்றது பாலையம் புவியே. 19

இன்ன தாகிய பாலையஞ் சுரத்திடை இறைவன்
தன்ன தாகிய தானைக ளொடுந்தலைப் படலும்
மின்னு மாமுகில் பொழிந்தபின் தண்ணளி மிக்கு
மன்னு கின்றபூங் குறிஞ்சிபோ லாயதவ் வனமே. 20

ஆற்ற ருந்திறல் அங்கிதன் அரசியல் முறையை
மாற்றி எம்பிரான் வருணற்கு வழங்கின னென்ன
ஏற்ற மாகிய வெம்மைபோய் நீங்கியே எவரும்
போற்று நீரொடு தண்ணளி பெற்றதப் புவியே. 21

காதல் நீங்கலா தலமரும் ஆருயிர்க் கரணம்
ஆதி ஈசன தருளினால் அவனதா கியபோல்
ஏது நீரிலா தழல்படு வெய்யகான் இளையோன்
போத லாற்குளிர் கொண்டது நறுமலர்ப் பொழிலாய். 22

புறநெ றிக்கணே வீழ்ந்துளோர் சிவனருள் புகுங்கால்
அறிவும் ஆற்றலுங் குறிகளும் வேறுபட் டனபோல்
வறிய செந்தழல் வெவ்வனம் வேலவன் வரலால்
நறிய தண்மலர்ச் சோலையாய் உவகைநல் கியதே. 23

வேறு

நீரறு முரம்பின் றன்மை நீங்குமச் சுரத்தின் தன்பால்
ஈரறு புயத்தன் செல்ல எழில்கெழு பரங்குன் றத்தில்
பாரறு தவம்பூண் டுள்ள பராசரன் சிறார்க ளாய
ஓரறு வகைமை யோரும் ஓதியால் அதனைக் கண்டார். 24

தத்தனே அனந்தன் நந்தி சதுர்முகன் பரிதிப் பாணி
மெய்த்தவ மாலி என்ன மேவுறு விருவர் தாமும்
அத்தன தருளை முன்னி அடுக்கலின் இருக்கை நீங்கி
உத்தர நடவை யெய்தி ஒய்யெனப் படர்த லுற்றார். 25

ஆர்வல ராகும் மைந்தர் அறுவரும் அளகை நேடிப்
பார்வல்வந் தணையு மாபோல் பாலையென் றுரைக்கு மெல்லை
நேர்வரு கின்ற காலை நெடும்படை நீத்தஞ் சூழச்
சூர்வினை முடிப்பான் செல்லுந் தோன்றல்வந் தணிய னானான். 26

அணிமையிற் சேயோன் நண்ண ஆறுமா முகமும் பன்னீர்
இணைதவிர் புயமுங் கையும் ஏந்தெழிற் படையின் சீரும்
மணியணி மார்புஞ் செங்கேழ் வான்றுகின் மருங்கும் பாதத்
துணையுமத் துணையிற் கண்டு தொழுதுகண் களிப்புக் கொண்டார். 27

மூவிரு திறத்தி னோரும் முற்றொருங் குணர்ந்த வள்ளல்
பூவடி வணங்கித் தேனீப் புதுநறா அருந்தி யார்த்து
மேவருந் தன்மைத் தென்ன வியப்பொடு வழுத்தி நின்று
தேவர்கள் தேவ எம்பால் திருவருள் செய்தி யென்றார். 28

என்றிவை இருமூ வோரும் இசைத்துழி உயிர்கட் கெல்லாம்
ஒன்றிய உயிரு மாகி உணர்வுமாய் இருந்த மூர்த்தி
தன்றிரு மலர்த்தாள் முன்னந் தலையளி யோடு தாழ்ந்து
நின்றுகை தொழுதிட் டன்னோர் நிலைமையை மகவான் கூறும். 29

மறுவறு பராச ரன்றன் மதலைக ளாகு மின்னோர்
அறுவருஞ் சிறாரே யாகி ஆடுறு செவ்வி தன்னில்
நிறைதரு சரவ ணத்து நெடுந்தடம் புனலிற் பாய்ந்து
முறைமுறை புக்கு மூழ்கி முகேரென அலைக்க லுற்றார். 30

உலைத்தலை உணர்ச்சி கொள்ள உள்ளுயிர் திரியுமாபோல்
நிலைத்தலை யின்றி யார்க்கும் நீந்தல்செய் குண்டு நீத்தம்
அலைத்தலை யடையும் எல்லை ஆயிடை வதிந்த மீன்கள்
தலைத்தலை யிரிய இன்னோர் தன்மையங் கதனைக் கண்டார். 31

அங்கது தெரிந்து நின்றோர் ஆண்டுறு மீன்கள் பற்றித்
துங்கம துடைய கோட்டின் சூழலுய்த் துலவு மெல்லைச்
செங்கதி ருச்சி வேலைச் செய்கடன் நிரப்ப உன்னிப்
பங்கமில் நோன்மை பூண்ட பராசரன் அங்கண் வந்தான். 32

வள்ளுறை கொண்ட தெய்வ வான்சர வணத்து வந்தோன்
பிள்ளைக ளாகும் இன்னோர் பிடித்தடுஞ் செழிலை நோக்கித்
தள்ளருஞ் சினமேல் கொண்டு தனயர்காள் நீவிர் ஈண்டே
துள்ளுறு மீன மாகிச் சுலவுதி ரென்று சொற்றான். 33

அவ்வுரை இறுக்கு முன்னர் அறுவரும் மேனாள் ஆற்றும்
வெவ்வினை யூழின் பாலால் மீனுரு வாகி அஞ்சி
எவ்வமி தகலு கின்ற தெப்பகல் உரைத்தி யென்னச்
செவ்விதின் உணர்ந்து மேலைத் திருமுனி புகலல் உற்றான். 34

இத்தடந் தன்னில் மேனாள் இராறுதோ ளுடைய அண்ணல்
அத்தன தருளால் வைக அணையனை யெடுக்கும் அம்மை
மெய்த்தனம் உகுக்குந் தீம்பால் வெள்ளமாம் அதனை நீவிர்
துய்த்திடும் எல்லை தன்னில் தொல்லுரு வாதி ரென்றான். 35

என்றிவை முனிவன் கூறி இரும்பகற் கடனை யாற்றிச்
சென்றனன் அதற்பின் மீனின் திருவுரு அமைந்த இன்னோர்

அன்றுதொட் டளப்பில் காலம் அலமரும் உணர்ச்சி யெய்தி
மன்றலஞ் சரவ ணத்து மாண்பெருந் தடாகத் துற்றார். 36

ஐயநீ யனைய பொய்கை அமர்தலும் அவ்வை கண்டாங்
கொய்யென எடுப்பக் கொங்கை உகளின் றிழிந்த தீம்பால்
துய்யதோர் நீத்த மாகித் துறுமலும் அதனைத் துய்த்து
மையல்நீங் குற்றுத் தொல்லை வாலிய வடிவம் பெற்றார். 37

தொல்லுரு வடைந்த இன்னோர் தூமதி வேணி யண்ணல்
நல்லருள் அதனால் வந்து நவையகல் பராங்குன் றத்தின்
எல்லையில் விரதம் பூண்டாங் கிருந்தனர் மங்கை ஈண்டுச்
செல்லுவ துணர்ந்து போந்தார் மன்றனன் தேவர் செம்மல். 38

தம்மக வுரைக்குங் கூற்றந் தாதையர் வினவு மாபோல்
அம்மக பதிசொற் கேளா அருள்செய்து பரம ரன்றன்
செம்மல்கள் தம்மை நோக்கிச் செயிருறு குணத்து நீவிர்
எம்மொடு செல்வீ ரென்றான் யாவையும் உணர்ந்த பெம்மான். 39

பராசுரன் மைந்த ரன்ன பான்மையை வினவிச் செவ்வேற்
கராசுரண் அடைந்தேம் என்று கட்டுரைத் திறைஞ்சிச் செல்லச்
சராசரம் யாவுந் தந்த சண்முகன் தழல்கட் கெல்லாம்
இராசர்தந் தன்மை செய்யும் இருஞ்சுரங் கடந்து போனான். 40

ஆகத் திருவிருத்தம் - 1,765.

# 6. திருச்செந்திப் படலம்

சுரமது கடந்து நீங்கிச் சோதிவே லுடைய வள்ளல்
விரிபுனல் படலத் தண்ணல் மேவுசெங் குன்றூர் நோக்கிப்
பருமணி வயிர முத்தம் பலவளம் பிறவும் ஆழித்
திரையெறி யலைவா யாகுஞ் செந்திமா நகரம் புக்கான். 1

அறுமுகன் அங்க ணேகி அகிலகம் மியனை நோக்கி
இறையிலோர் சினக ரத்தை இயற்றுதி ஈண்டை யென்னத்
திறனுணர் புனைவர் செம்மல் சிந்தையின் நாடித் தேவர்
உறைதிரு நகரம் வெஃக ஒருதிருக் கோயில் செய்தான். 2

பொன்னுறும் இரதம் நீங்கிப் புறனெலாந் தானை நண்ண
அந்நகர் அதனு ளேகி அரும்பெருந் துணைவர் பூதர்
மன்னவர் அயன்மா லாதி வானவர் யாரும் போற்ற
மின்னுபொற் பீடத் தையன் வீற்றிருந் தருளி னானே. 3

வேறு

பானிமிர் மென்குரற் பாற்படு நல்யாழ்
கானமி சைத்தனர் கந்தரு வத்தோர்
ஆனபல் சட்டுவம் அங்கைதொ றேந்தி
வானமிர் தைச்செவி வாக்குறு மாபோல். 4

சுருதியெ லாமுணர் தூயவன் வானோர்
புரவலன் மாமுனி புங்கவர் யாரும்
மருமலர் மாரி வழுத்தினர் வீசி
இருபுடை தன்னினும் எய்தினர் ஈண்டி. 5

வாலிய தூயொளி வானதி யாவும்
பாலகன் மெய்யணி பார்த்தனர் ஆடி
ஏலுறு பாங்கரின் ஈண்டிய வாபோல்
காலினர் சாமரை கைக்கொ டசைத்தார். 6

ஒண்ணிழல் மாமதி யோரிரு வடிவாய்
அண்ணல் முகத்தெதிழி லார்ந்திட நண்ணி
விண்ணிடை நின்றென வெங்கனல் வருணன்
தண்ணிழல் வெண்குடை தாங்கினர் நின்றார். 7

கட்டழல் கான்றிடு காமரு நாகம்
எட்டும லாதன யாவையும் ஈண்டி
உட்டெளி வாற்பணி உற்றென ஆல
வட்டம சைத்தனர் வானவர் பல்லோர். 8

வானுயர் தோள்விறல் வாகெனும் அண்ணல்
தானுடை வாள்கொடு சார்ந்தயல் நிற்ப
ஏனைய தம்பியர் எண்மர் இலக்கர்
ஆனவர் போற்றி அகன்கடை நின்றார். 9

வேறு

பொருந்தி இன்னவர் புறத்துற அங்கண்
இருந்த ஞானமுதல் எல்லையில் காலம்
வருந்து கின்றமக வான்முகம் நோக்கித்
தெரிந்தி டாதவரின் இன்னன செப்பும். 10

துறந்து நீதியமர் சூர்முத லானோர்
பிறந்த வாறுமவர் பேணிய நோன்பும்
இறந்த செய்யவரம் எய்திய வாறுஞ்
சிறந்து பின்னரசு செய்திடு மாறும். 11

மற்ற வெய்யவர்தம் மாயமும் முற்கொள்
வெற்றி யும்வலியும் மேன்மையும் நும்பால்
இற்றை நாள்வரை இயற்றிய துன்பும்
முற்று மொன்றற மொழிந்திடு கென்றான். 12

நோக்கு மாரன் இவை கூறி இசைந்தே
மீக்கொள் பொன்னுலக வேந்தயல் நின்ற
வாக்கின் வல்லகுர வன்றனை அன்பால்
நோக்கி நீயிவை நுவன்றருள் கென்றான். 13

வச்சி ரங்கொள்கரன் மற்றது செப்ப
அச்செ னக்குர வன் அன்னை திசைந்தே
செச்சை மொய்ம்புடைய சேயிரு பொற்றாள்
உச்சி கொண்டுதொழு தின்ன துரைப்பான். 14

அறிதி எப்பொருளும் ஆவிக டோறுஞ்
செறிதி எங்கள்துயர் சிந்துதல் முன்னிக்
குறிய சேயுருவு கொண்டனை யார்க்கும்
இறைவ நின்செயலை யாருணர் கிற்பார். 15

எல்லை யில்புவனம் யாவையும் யாண்டும்
ஒல்லு மூவரும் உயிர்த்தொகை யாவுந்
தொல்லை மேனிகொடு தோன்றினை யால்நீ
வல்ல மாயவியல் மற்றெவர் தேர்வார். 16

வெய்யர் தன்மையை வினவிய தன்மை
ஐய அன்னதை யறிந்திட அன்றோ
கைய ரேந்துயர் களைந்துள மீதில்
செய்ய இன்புதவு சீரரு ளாமல். 17

ஆகையால் அவுணர் தன்மைக ளெல்லாம்
போகு மெல்லைபுகல் கின்றனன் மன்னு
வாகை சேர்குமர வள்ளலை நோக்கி
ஓகை யோடரசன் ஓதிடு கின்றான். 18

ஆகத் திருவிருத்தம் - 1,783.



**உற்பத்தி காண்டம் முற்றுப்பெற்றது**

கச்சியப்பசிவாசாரியர் திருவடி வாழ்க



உ
செந்திலாண்டவன் துணை
திருச்சிற்றம்பலம்

இரண்டாவது

# அசுர காண்டம்



## 1. மாயைப்படலம்

—oo—

ஊரி லான்குணங் குறியிலான் செயலிலான் உரைக்கும்
பேரி லான்ஒரு முன்னிலான் பின்னிலான் பிறிதோர்
சாரி லான்வரல் போக்கிலான் மேலிலான் தனக்கு
நேரி லான்உயிர்க் கடவுளாய் என்னுளே நின்றான். 1

வீறு **காசிபன்** சிறார்களாய் மேவிய அறுபான்
ஆறு கோடிய தாகிய **அவுணருக் கரசன்**
மாறில் **மங்கல கேசியாம்** அரக்கியை மணந்து
பேற தாகவே **சுரசையென்** றொருமகட் பெற்றான். 2

தூய அம்மகள் வளர்ந்தபின் **புகர்**எனுந் தொல்லோன்
தீய மாயையின் கல்விகள் யாவையுந் தெருட்டி
ஆய விஞ்சையின் வல்லபம் நோக்கியே அவட்கு
**மாயை** என்றுபேர் கூறினன் மனத்திவை மதிப்பான். 3

இன்ன லெய்திய அவுணர்கள் சிறுமையும் இமையோர்
மன்ன ரொதியர் பெருமையும் வானநாட் டுறைவோர்
நன்ன லந்தொலைந் தசுரரால் மெலிந்திட நந்தி
சொன்ன வாய்மையுங் கருதினன் புகரெனுந் தூயோன். 4

கருதி இன்னண மேல்வருந் தன்மையுங் கண்டு
குருதி தோயும்வேல் அவுணர்கோன் பயந்தகோற் றொடியை
வருதி என்றுகூய் வரம்பறு பேரருள் வழங்கி
ஒருதி றந்தனைக் கேளெனத் தேசிகன் உரைப்பான். 5

வனச மங்கைதன் கணவனால் வாசவன் தன்னால்
முனிவர் தேவரால் அளப்பிலா அவுணர்கள் முடிந்தார்
அனையர் மேன்மையை யாவரும் உணர்குவர் அதனால்
உனது தந்தையும் வலியிழந் தேயொடுங் குற்றான். 6

மின்பொ ருட்டினால் கேதகை மலர்ந்திடும் விளங்கும்
என்பொ ருட்டினால் மாமழை சொரிந்திடும் ஈட்டும்

பொன்பொ ருட்டினால் யாவருமுண் டாமதுபோல
உன்பொ ருட்டினால் அவுணர்க்கு மேன்மைய துளதாம். 7

வார மாமலர் மடந்தையும் வந்தடி வணங்கப்
பேரொ ளுதவோர் பேரழ குருக்கொடு பெயர்ந்து
காசி பன்றனை அடைந்துநின் வல்லபங் காட்டி
ஆசை பூட்டியே அவனொடும் புணருதி அல்லில். 8

அல்லி டைப்புணர்ந் தசுரர்கள் தம்மையுண் டாக்கி
மெல்ல அங்கவர் தங்கட்கு நாமமும் விளம்பி
எல்லை யில்வளம் பெற்றிட அவுணருக் கியலுந்
தொல்லை வேள்வியும் விரதமும் உணர்த்துதி தோகாய். 9

இன்ன தன்மைகள் முடிந்தபின் நின்பிறர் யாவரும்
நன்ன லந்தனை அடையவும் நண்ணல ரெல்லாம்
பன்ன ரும்பழி மூழ்கவும் அருந்தவம் பயில
அன்னை மீளுதி என்றனன் புகரெனும் ஆசான். 10

சூரவன் வாய்மையை வினவியே கோதில்சீர் அவுணர்
மரபு மேம்படு தன்மையான் மற்றிவை யெல்லாம்
அருளு கின்றனை ஆதலால் இப்பணி யடியேன்
புரிகு வேனென அவனடி வணங்கியே போனாள். 11

மயிலை அன்னவள் அவுணர்தம் மன்னற்கும் இனைய
செயலை யோதியே அவன்விடை யுங்கொடு சென்று
கயிலை என்னநீ ருடியே காசிபன் இருந்து
பயிலும் நோன்புடை எல்லையை நாடியே பார்த்தாள். 12

திருவும் மாரவேள் இரதியுந் திலோத்தமை யென்ன
மருவு தையலும் மோகினி யென்பதோர் மாதும்
ஒருத னித்திரு வடிவுகொண் டாலென உலகில்
பொருவில் மாயவள் பேரழ குருக்கொடு போனாள். 13

மண்ணுற் றோர்களும் மாதிரத் தோர்களும் மதிதோய்
விண்ணுற் றோர்களும் அன்னவள் எழில்நலம் விரைவில்
கண்ணுற் றோர்கிலர் அணுகினர் காமவேள் கணையின்
புண்ணுற் றோர்விளக் கழலுறு பறவையிற் புலர்ந்தார். 14

மதியும் ஞாயிறுஞ் சூழ்தரு மேருவின் வடபால்
விதிம கன்தவம் புரிதரும் வியனிலை மருங்கின்
அதிர்சி லம்பொடு மேகலை புலம்புற அணையாள்
திதிகொல் என்றெலாத் தேவரும் ஐயுறச் சென்றாள். 15

சென்ற மாயைஅக் காசிபன் இருக்கையில் திருவாழ்
மன்றல் வாவியுந் தடங்களுஞ் சோலையும் மணிசெய்
குன்று மாமலர்ப் பள்ளியும் மண்டபக் குழாமுந்
தன்றன் ஆணையால் துண்ணெனச் சூழ்தரச் சமைத்தாள். 16

இனைத்தெ லாமவண் வருதலும் எந்தைதன் னடியை
மனத்தி னிற்கொடு பொறியினை உரத்தினால் வாட்டித்
தனித்து நோற்றிடுங் காசிபன் புகுந்தஅத் தகைமை
அனைத்தும் நோக்கியீ தென்கொலென் றதிசய மடைந்தான். 17

முற்று மாங்கவை ஆசையின் நெடிதுபன் முறையால்
உற்று நாடியே மாயைதன் செயலென உணரான்
இற்றெ லாமிவண் இயற்றினர் யாரென எண்ணிச்
சுற்று நோக்கினன் யாரையுங் காண்கிலன் தூயோன். 18

வேறு

மெய்த்தவ வுணர்ச்சியை விடுத்து மேலையோன்
அத்தன தருளினால் அணங்கு மாயையால்
வைத்தன கண்ணுறூ மனங்கொள் காதலாற்
சித்திர மெனவெரீஇ யினைய செப்புவான். 19

வானநா டிழிந்ததோ மகத்தின் வேந்துறை
தானநா டிழிந்ததோ தனதன் ஆதியோர்
ஏனைநா டிழிந்ததோ இதுவன் றேல்இவை
ஆனவா றுணர்கிலேன் அழுங்கு சிந்தையேன். 20

ஆரணன் செய்கையோ அகில முண்டுமிழ்
நாரணன் செய்கையோ அவர்க்கு நாடொணாப்
பூரணன் செய்கையோ பிறர்பு ரிந்ததோ
காரணந் தேர்கிலேன் கவலும் நெஞ்சினேன். 21

புன்னெறிக் கானிடைப் புகுந்த இத்திரு
நன்னெறிக் கேதுவோ நலந்த விர்ந்திடுந்
துன்னெறிக் கேதுவோ தொல்லை ஞாலமேல்
எந்நெறிக் கேதுவென் றிதுவுந் தேர்கிலேன். 22

என்றிவை சொற்றிவண் யாவ தாயினும்
நன்றதன் இயற்கையும் நமக்கு முன்னரே
ஒன்றறத் தெரிவுறும் உணர்ச்சி இங்ஙனஞ்
சென்றது பழுதெனச் சிந்தித் தானரோ. 23

தெற்றெனத் தன்மனந் தேற்றித் தொன்மைபோல்
நற்றவம் இயற்றுவான் நணுகும் வேலையில்
மற்றது தெரிந்திடு மாயை தூமணிப்
பொற்றையில் தமியளாய்ப் பொலிந்து தோன்றினாள். 24

தோன்றினள் நிற்றலுந் தொல்லை நான்முகற்
கான்றதொர் காதலன் அவளை நோக்கினான்
வான்றிகழ் கற்பக வல்லி செய்தவத்
தீன்றதொர் கொடி-இவண் எய்திற் றேயென்றான். 25

நாற்றலை யான்மகன் நம்முன் இக்கொடி
தோற்றிய தற்புதச் சூழ்ச்சிக் கேதுவென்

ருற்றுறு தவத்திறன் அகற்றி யாயிடை
வீற்றிருந் திடுவது விடுத்துப் போயினான். 26

கண்ணகல் வரைமிசைக் கடிது போயுறீஇ
அண்ணிய ளாதலும் அரிவை யாய்உறப்
பெண்ணுரு வேகொல்இப் பெற்றித் தாலென
எண்ணினன் மையலுக் கெல்லை காண்கிலான். 27

புண்டரி கத்திகொல் பொன்னம் பாவைகொல்
அண்டர்தம் அணங்குகொல் என்னின் அன்னரைக்
கண்டறி வேன்எனைக் காதல் பூட்டிய
ஒண்டொடி இனையள்என் றுணர்கி லேனரோ. 28

சேயிருங் கமலமேற் செம்மல் செய்கையால்
ஆயவள் என்னில்இவ் வுறுகு பெற்றிடாள்
ஏயது தேறினன் எல்லை இல்லதோர்
மாயையே பெண்ணென வந்த வாறென்பான். 29

புகன்றிவை பற்பல பொருவில் நான்முகன்
மகன்றனா தருந்தவ வலியும் போதமும்
அகன்றனன் புணர்ச்சிவேட் டழுங்கி நைவதோர்
மகன்றிலின் பரிசென வருத்த மெய்தினான். 30

உண்ணிகழ் ஊன்பொருட் டுயிர்கொல் வேட்டுவர்
கண்ணியுட் பட்டதோர் கலையின் மாழ்குவான்
பெண்ணுரு வாயவிப் பேதைக் கென்கொலோ
எண்ணமென் றிடருறுந் திரங்கி ஏங்கினான். 31

அதுபொழு தவுணரை அளிக்க வந்திடுந்
திதிமிகர் மடமகள் சிறந்த கண்களால்
பொதுவியல் நோக்கொடு புணர்ச்சி நோக்கினைக்
கதுமெனக் காட்டினள் முனிவன் காணுற. 32

கண்டனன் முனிவரன் கலங்கி னன்பொதுக்
கொண்டதோர் நோக்கியல் குறித்துக் கூடுதல்
எண்டரு நோக்கினால் இவளை யெய்துமா
றுண்டென நினைந்தனன் உவப்பின் உம்பரான். 33

பெருந்துயர் உதவுவெம் பிணியுந் தீர்ப்பதோர்
மருந்துமற் றாதலும் மையல் மேதகும்
அருந்தவ முனிவரன் அணைய மாதுதன்
திருந்திய நோக்கியல் தெளிந்து செப்புவான். 34

கற்பனை முதலிய கடந்த கண்ணுதற்
சிற்பரன் யாவையுஞ் சிதைய ஈறுசெய்
அற்புத மும்மவன் அருளும் போன்றதால்
பொற்புறு கின்றஇப் பூவை நாட்டமே. 35

மாயையுங் கொலையுமே மருவி வைகலும்
ஆயதோர் உலகினை அளிக்கும் நீர்மையாற்
பாயிருந் திரைக்கடல் நடுவட் பள்ளிகொள்
தூயனை நிகர்த்ததித் தோகை நோக்கமே. 36

இயலிருள் மேனியால் இடியின் ஆர்ப்பினால்
வியனுயிர் முழுவதும் வெருவச் செய்துடன்
பயனுறு தீம்புனல் பரிவின் ஈதரு
புயலையும் நிகர்த்தன பூவை பார்வையே. 37

என்பன பலபல எண்ணி அன்னவள்
தன்படி வத்துருத் தகைமை காணுறீஇ
அன்பினில் வியந்துநின் றழுங்கு நெஞ்சொடு
நன்பெரு நயப்பினால் நவிறல் மேயினான். 38

வேறு

வானுறு புயலின் தோற்றம் வரம்பில்சீர்க் கங்குல் வண்ணம்
ஏனைய கருமை யெல்லாம் இலக்கணத் தொருங்கே ஈண்டி
மீனுறழ் தடங்க ணாள்பால் மேவிய என்ப தல்லால்
நானமார் கூந்தற் கம்மா நாம்புகல் உவமை யாதோ. 39

கோட்டுடைக் குழவித் திங்கள் குனிசிலை இரண்டு மானின்
சூட்டுடை நுதற்கொவ் வாது தொலைந்துபோய்த் தொல்லை வான
நாட்டிடைக் கரந்துந் தோன்ற நணுகியுந் திரியு மென்னின்
மீட்டிதற் குரைக்க லாகும் உவமைகள் வேறு முண்டோ. 40

அருவத்தில் திகழுங் காமன் ஆடலஞ் சிலையும் நெற்றி
உருவத்துக் குடைந்து வான்புக் கொதுங்கிய மகவான் வில்லும்
மருவத்தந் துரைத்தும் என்னின் மற்றவை யிரண்டும் மாதின்
புருவத்தைப் போலா தம்மின் மீமிசைப் பொருந்து மன்றே. 41

வண்ணமா வடுக்கோல் நீலம் வாளயில் கயல்சேல் என்றே
எண்ணின அவற்றி லொன்றும் யாவது மியல்புற் றன்றாற்
கண்ணிணைக் கிணையே தென்னிற் காமர்பாற் கடலுள் எங்கோன்
உண்ணிய எழுநஞ் சென்னில் ஒருசிறி தொப்ப தம்மா. 42

எள்ளென் றும் ஓத்தி யென்றும் ஏர்கொள்சம் பகப்போ தென்றுந்
தள்ளருங் குமிழ தென்றுஞ் சாற்றினர் அவைகள் நாடில்
தெள்ளிது மன்று வேறு செப்பவோர் பொருளு மில்லை
உள்ளதொன் றுரைக்க வேண்டுந் துண்டத்துக் குவமை தேரின். 43

கெண்டையந் தடங்கட் பாவை கேழ்கிளர் இதழ்க்கொப் புன்னில்
தொண்டையங் கனியுண் டென்று சொல்வனேல் அதுவுந் துப்பால்
உண்டிடும் விருப்பி னோருக் குலப்புறு அமிர்தம் நல்கிக்
கொண்டிருந் திடினே ஒப்பாம் இல்லையேற் கூடா தன்றே. 44

முகையுறு தளவும் புள்ளின் முருந்தமுங் குருந்து முத்தும்
அகையுறு முடுவுஞ் சாற்றின் அணியெயி றதற்கொவ் வாவால்

நகையது தெரிந்தோர் வெண்கை நன்னலம் புரியும் நீரால்
நிகர்பிறி தில்லை திங்கள் நிலாவெனில் ஆகு மன்றே. 45

மயிரெறி கருவி வள்ளை தோரண மணிப்பொன் னூசல்
பெயர்வன நிகர்க்கு மென்று பேசுதல் பேதை நீர்த்தாந்
செயிரறு வுலோக மாக்குந் திறமுகக் கொல்லன் செய்த
உயிரெறி கருவி போலும் ஒண்குழைக் காது மாதோ. 46

கொங்குறு கூந்த லாள்தன் கோலவாள் முகத்துக் கொட்பாம்
திங்களென் றுரைக்கில் தேயும் வளர்வுறுஞ் சிறப்ப தன்றால்
பங்கய மெனினும் உண்டோர் பழுதுமற் றதற்கும் மன்னில்
அங்கதற் கதுவே யல்லால் அறையலாம் படிமற் றுண்டோ. 47

ஏரந்தெறு விழியி னாள்தன் களத்தினைத் தெரிலெய் சங்கங்
கரந்தன கமுகும் அற்றே அன்னது கண்டு நேரா
வரந்தரு புலவர் சொற்றார் **மற்றவர் அதற்கோ நாளும்**
**இரந்திடு தொழில ராகி இழுக்கமுற் றார்கள் அன்றே.** 48

மாயவன் அசுரஞ் சேர்த்தி வரன்முறை இசைத்த பச்சை
வேயெனும் அதுவும் யான்செய் மெய்த்தவம் அனைய நீராள்
தூயபொற் றோள்கண் டஞ்சித் தோற்றதால் என்னில் அன்னான்
சேயவன் வணக்கா தேந்துஞ் சிலைகொலோ நிகர்ப்ப தம்மா. 49

பூந்தள வனைய மூரற் பொற்கொடி கரத்துக் கொவ்வா
காந்தளும் நறிய செய்ய கமலமா மலரும் என்னில்
மாந்தளிர் பொருவ துண்டோ வள்ளுகிர் கிள்ளை நாசி
ஏய்ந்தள வற்றுக் காமர் இலைச்சினை யாய தன்றே. 50

பொருப்பென எழுந்து வல்லின் பொற்பெனத் திரண்டு தென்னந்
தருப்பயில் இளநீ ரென்னத் தண்மெனு அமுதுட் கொண்டு
மருப்பெனக் கூர்த்து மாரன் மகுடத்தில் வனப்பு மெய்தி
இருப்பதோர் பொருளுண் டாமேல் இணைமுலைக் குவமை யாமே. 51

அந்திரு வன்னாள் மேனி அமைத்துவெம் முலைக்கண் செய்வான்
சுந்தர வள்ளம் நீலுண் டுகிலிகை விதிகொள் போழ்திற்
சிந்திய துள்ளி யொன்றின் ஒழுக்கங்கொல் சிறப்பின் மிக்க
உந்தியின் மீது போய உரோமத்தின் ஒழுக்க மன்றே. 52

மாசடை யாத நீல மணியுறழ் வண்ண மாலோன்
காசடை அகலந் தாங்குங் கனங்குழைத் திருவும் போற்றுந்
தேசுடை மாதி னுந்திச் சிரினுக் கனையன் றுஞ்சும்
பாசடை நேர்வ தாமோ பகரினும் பழிய தன்றே. 53

கண்டுழி மாயும் அன்றே மின்னெனில் ககன மாகக்
கொண்டிடின் உருவின் றாகுங் கொடியெனில் துடிய தென்னில்
திண்டிறல் நாக மென்னில் சிறிதன் றணங்கின் நாப்பண்
உண்டிலை யென்று மாறும் உண்மைக்கோ ருவமை யுண்டோ. 54

மயலுடைப் பணியும் ஆல வட்டமும் வனப்புச் செய்த
வியலுடைத் தேரும் அச்சுற் றிரங்கியே உயிர்க்கு மென்றாற்
கயலுடைக் கண்ணாள் அல்குற் கொப்பவோ காமர் வீடவ்
வியலுறுப் பென்பர் யாரும் மேலது காண்டும் அன்றே. 55

கோழிலை அரம்பை யீனுங் குருமணித் தண்டை வேழத்
தாழிருந் தடக்கை தன்னை நிகரெனில் தகுவ அன்றால்
மாழையுண் கருங்கண் மாதின் மகரிகை வயங்கு பொற்பூண்
சூழுறு கவானே போலும் அவையெனிற் சொல்ல லாமோ. 56

அலவனும் ஞெண்டை அன்னாள் அணிகெழு முழந்தாட் கொப்பாப்
புலவர்கள் புகலா நின்ற வழக்கலாற் பொருந்திற் றன்றால்
திலகநன் மணியே போல்வாள் தெய்வத வடிவுக் கிந்த
உலகினுள் இழிந்த தொன்மை உரைக்கினஃ துவமை யாமோ.57

தமனியத் தியன்ற பொற்பில் தாவிலா ஆவந் தானுஞ்
சிமையநேர் கொங்கை மாதின் திகழ்கணைக் காலுந் தூக்கிற்
சமமிது பொருளி தென்றே தமியனேன் றுணிந்து சிந்தை
அமைவுற அறிதல் தேற்றேன் ஐயமுற் றிடுவன் யானே. 58

அரும்புறு காலைக் கொங்கைக் கழிவுற்று முகமொவ் வாது
சுரும்புற மலர்ந்த பின்னுந் தொலைந்துகை யினுக்குந் தோற்றுத்
திரும்பவும் அடிக்கும் அஞ்சிச் சிதைந்தது கமல மென்றால்
பெரும்பயம் உற்று நோற்றும் பிழைத்தது போலு மன்றே. 59

மேக்குயர் கூனல் ஆமை விரைசெறி குவளைத் தோடு
தாக்குறு பந்து பிண்டித் தண்டளிர் சார்பு கூறில்
தூக்குறு துலையின் தட்டுத் தொகுத்தொரு வடிவில் வேதா
ஆக்குறின் மாதின் தாளுக் கதுநிக ராகும் போலும். 60

ஆவியின் நொய்ய பஞ்சும் அனிச்சமா மலரும் அன்னத்
தூவியு மிதிக்கிற் சேர்ந்து துளங்குறும் அடிகள் என்றால்
நாவியங் குழலின் மாது நடந்திட ஞாலம் ஆங்கோர்
பூவதோ அதுபூ அன்றேல் பொன்னடி பொருந்து மோதான். 61

கயலுறழ் கருங்கட் செவ்வாய்க் காரிகை தனது சாயல்
மயிலெனக் கூறின் அல்லால் மற்றதற் குவமை யில்லை
இயலுறு வடிவிற் கொப்ப தேதுள திவளே போலச்
செயலுறுத் தெழுதிற் றுண்டேல் சித்திரம் அஃதே போலும்.62

ஆனனம் நான்கு செய்தாட் காயிர மடங்கோர் கொண்ட
மானினி தன்னை வேதா வகுத்திலன் கொல்லோ அன்னான்
தானமைத் துளனே என்னில் தலைபல தாங்கி இந்தத்
தூநிலா நகையி னாளைத் தொடர்ந்துபின் திரிவன் அன்றே. 63

மையறு புவியில் வந்த மாதிவள் அடியி லுள்ள
துய்யதோர் குறிகள் வானில் தொல்பெருந் திருவில் வைகுஞ்

செய்யவன் றனது தேவி சிரத்தினும் இல்லை யென்றால்
மெய்யுறு குறிகளெல்லாம் இணைத்தென விளம்பற் பாற்றே. 64

வேறு

என்று முன்னிஅவ் வேந்திழை தன்முனஞ்
சென்று காமர் திருவினுஞ் சீரியோய்
நன்று நன்றுநின் நல்வர வேயெனா
நின்று பின்னும் நெறிப்பட ஓதுவான். 65

யாது நின்குலம் யாதுநின் வாழ்பதி
யாது நின்பெயர் யாருனைத் தந்தவர்
ஓது வாயென் றுரைத்தனன் உள்ளுறு
காத லான்மிகு காசிபன் என்பவே. 66

வனிதை கூறுவள் மாதவ நீயிது
வினவி நிற்றல் விழுமிதன் றென்னிடைத்
தனிய னாகியுஞ் சார்ந்தனை நோற்பவர்க்
கினிய வேகொல் இணையதோர் நீர்மையே. 67

ஏதில் நோன்பை இகந்துணர் வில்லதோர்
பேதை மாந்தரில் பேசியெற் சார்வது
நீதி யேயன்று நின்கடன் ஆற்றிடப்
போதி யென்ன முனிவன் புகலுவான். 68

மங்கை கேட்டி வரம்பறு பற்பகல்
அங்கம் வெம்ப அகமெலி வுற்றிடச்
சங்கை யின்றித் தவம்பல செய்திடல்
இங்கு வேண்டிய தெய்துதற் கேயன்றே. 69

பொன்னை வேண்டிக்கொ லோபொன்னின் மாநகர்
தன்னை வேண்டிக்கொ லோசசி யாம்பெயர்
மின்னை வேண்டியே அல்லது வேறுமற்
றென்னை வேண்டிஅவ் விந்திரன் நோற்றதே. 70

ஐதின் மேனி அலசுற யான்தவஞ்
செய்த திங்குனைச் சேருதற் கித்திறம்
நொய்தின் மேவினை நோற்றதற் குப்பயன்
எய்தி யுற்ற தினித்தவம் வேண்டுமோ. 71

பேரும் ஊரும் பிறவும் வினவினேற்
கோர வொன்றும் உரைத்திலை ஆயினுஞ்
சேர வேபின் தெளிகுவன் காமநோய்
ஈரு கின்ற திரங்குதி நீயென்றான். 72

மாயை கேட்டு வறிது நகையளாய்
நீயிவ் வாறு நெடுந்தவஞ் செய்ததும்
ஆயில் என்பொருட் டோஅஃ தன்றரோ
தூயை வஞ்சஞ் சொலன்முறை யோவென்றாள். 73

மற்றிவ் வண்ண மயில்புரை சாயலாள்
சொற்ற காலை யனையவள் சூழ்ச்சியை
முற்று மோர்ந்து முதிர்கலை யாவையுங்
கற்று ணர்ந்திடு காசிபன் கூறுவான். 74

பொய்ம்மை யாதும் புகல்கிலன் நான்முகன்
செம்மல் யான்அது தேருதி போலுமால்
இம்மை யேபர மீந்திடு வோய்இவண்
மெய்ம்மை யேயுரைத் தேன்உள வேட்கையால். 75

பன்னெ டுந்தவம் பற்பகல் ஆற்றியான்
முன்னி நின்றது முத்திபெற் றுய்ந்திட
அன்ன தேயெற் கருள்செய வந்தனை
உன்னை மேவலன் றேஉயர் முத்தியே. 76

ஈத லான்மற் றெனக்கொரு பேறிலை
ஆத லாலுனை யேயடைந் தேனெனக்
காதன் மாதும்அக் காசிபற் கண்ணுறீஇ
ஓத லாம்பரி சொன்றை யுணர்த்துவாள். 77

வேறு

மங்கலம் இயைந்திடு வடாதுபுல முள்ளேன்
செங்கனக மேருவரை சேர்ந்ததொரு தென்பால்
கங்கைநதி யின்கரை கலந்திட நினைந்தேன்
அங்கணுறு கின்றதொ ரரும்பயன் விழைந்தே. 78

வல்லையவண் ஏகுறுவன் மாதவ வலத்தோய்
நில்லிவண் எனப்புகர நீனிறம தாகுஞ்
செல்லுறமு மேனிதரு செம்மல்அருள் மைந்தன்
ஒல்லையிது கேண்மெனஉரைக்கலுறு கின்றான். 79

கங்கைநதி யாதிய கவின்கொள்நதி யேழும்
அங்கணுல கந்தனில் அரன்பதிகள் யாவும்
மங்குல்தவழ் மேனியவன் வாழ்பதியு மற்றும்
இங்குற வழைப்பனொ ரிமைப்பொழுது தன்னில். 80

பொன்னுலகும் விஞ்சையர்கள் போதுலகும் ஏனோர்
மன்னுலகும் மாதிரவர் வாழுலகும் அங்கண்
துன்னியதொர் தேவரொடு சூழ்திருவி னோடும்
இன்னபொழு தேவிரைவின் ஈண்டுதர வல்லேன். 81

மூவகைய தேவரையும் முச்சகம துள்ளோர்
யாவரையு நீதெரிய எண்ணுகினும் இங்ஙன்
மேவரவி யற்றிடுவன் வெஃகல்புரி வாயேல்
காவலுறு பேரமிர்த முங்கடிதின் ஈவேன். 82

எப்பொருளை வேண்டினும் இமைப்பிலுன வாக
அப்பொருளி யாவையும் அளிப்பன்அஃ தல்லால்

மெய்ப்புதல்வர் வெஃகினும் விதிப்பன்அவர் தம்மை
ஒப்பிலை இவர்க்கெனவும் உம்பரிடை உய்ப்பேன். 83

அந்தமிகு மேனகை அரம்பைமுத லானோர்
வந்துனடி யேவல்செய வல்லைபுரி கிற்பேன்
சிந்தைநனி மால்கொடு தியங்குமென தாவி
உய்ந்திட நினைந்தருடி ஒல்லைதனில் என்றான். 84

வேறு

முனியிது புகறலோடு முற்றிழை முறுவல் எய்தித்
தனியினள் என்று கொல்லோ சாற்றினை இனைய நீர்மை
இனியது தவிர்தி மேலோர்க் கியையுமோ யானும் முன்னம்
நினைவுழிச் செல்வல் நோற்று நீயிவண் இருத்தி என்றே. 85

கங்கையின் திசையை முன்னிக் கடிதுவட் செல்வாள் என்ன
அங்கவள் போத லோடும் அருந்தவன் தொடர்ந்து செல்ல
மங்கையும் அருவ மெய்தி மாயையிற் கரந்து நிற்ப
எங்கணும் நோக்கிக் காணான் இடருழந் திரங்கி நைவான். 86

ஆகத் திருவிருத்தம் - 86.

## 2. காசிபன் புலம்புறு படலம்

—oo—

தேனீர் மையெனப் புகல்வாள் சிறிதுந்
தானீ ரமிலாள் தனிமா யவளே
மானீர் உமதாம் வயின்உற் றனளோ
ஏனீர் மொழியா திரிகின் றதுவே. 1

சிலைவா ணுதலாள் திறன்மா யையெனும்
வலைவீ சியெனு ருயிர்வவ் வினளால்
கலையீர் இவண்நீர் அதுகண் டிலிரோ
நிலையீர் வெருளா நெடிதோ டுதிரால். 2

கடிதேர் களிறே கழிகா தலையாய்ப்
பிடிதேர் பரிசாற் பெயர்வாய் தமியேன்
நொடிதே தளரா நெறிநே டினையக்
கொடியாள் தனையுங் கொணராய் கொணராய். 3

அருளால் உனையே அளியென் றனரால்
பெரியார் அவர்சொற் பிழையா குவதோ
தரியா அரியே தமியேன் உயிரைத்
தெரிவான் நினைவோ திரிகின் றனையே. 4

மேவிப் பிரிவாள் விழிபோல் அடுவாய்
ஆவிக் குறவோ அலைமன் மதனப்
பாவிக் கும்இனிப் படையாய் வருவாய்
வாவிக் குவளாய் எனைவாட் டுதியோ. 5

செந்தா மரைமேல் திருவாம் எனவே
வந்தாள் தணியா மயல்செய் தகல்வாள்
அந்தோ வினவா அவளைக் கொணர்வான்
சந்தா கிலையென் சந்தே உரையாய். 6

பொன்னிற் பொலிவுற் றிடுபூங் கமலந்
தன்னில் துணையோ டுதழீ இத் தணவா
அன்னப் பெடைகாள் அறனோ புகலீர்
என்னைத் தனிவைத் தவளே கியதே. 7

தணியா வகைமால் தமியேற் கருளித்
துணியா அகல்வாள் படர்தொல் நெறியைக்
குணியா வுரைசெய் குதியென் றிடினுங்
கணியாய் இதுவோ கணிதன் இயல்பே. 8

படைவேள் கணையே பரிதிக் குறவே
மடவார் முகமே மதியின் பகையே
விடமே புரையும் விழிமெல் லியல்நின்
னிடமே வருவாள் ஒளியா திசையாய். 9

நின்றீர் மிகவுந் நெடியீர் பெரியீர்
இன்றீ ரமிலா தெனைநீங் கினள்முன்
சென்றீ ரவள்போஞ் செயல்கா ணுதிர்செய்
குன்றீர் மொழியீர் குறைசெய் துளனோ. 10

மயிலே ரியலாள் ஒருமா யவளே
இயலே தறியேன் இவண்நின் றனளோ
பயிலே சிலநீ பகர்வாய் அதனால்
குயிலே எனதா ருயிர்கொள் ளுதியோ. 11

நின்பால் வரவே நினைவாய் மொழிவாள்
என்பால் இலையிவ் வழியே கினளால்
மென்பா லெனமே வியமா ருதமே
தென்பால் வருவாய் செயல்கூ றுதிநீ. 12

ஆரத் தடமே அருள்நீ ரினைஉள்
ளீரத் தினையென் றெவரும் புகல்வார்
சாரிற் சுடுவாய் தளரேல் எனவே
சோர்வுற் றிடுமென் துயர்தீர்க் கிலையே. 13

களிசேர் மயிலே கவிரா கியவாய்க்
கிளியே குயிலே கிளைதான் அலவோ

தளரா வகைநீர் தகவே மொழியா
அளியேன் உயிருக் கரணா குதிரால். 14

அறவே துயர்செய் தனுகா திகலித்
துறவே துணிவாள் தொடர்புந் தொடர்போ
உறவே யினிநீர் உவள்போம் நெறியைப்
புறவே தமியேன் பெறவே புகல்வீர். 15

எனவே பலவும் இயல்சேர் முனிவன்
மனமால் கொடுசொற் றிடமற் றதனை
வினவா மகிழா வியன்மெய் மறையா
அனமே யனையாள் அவணுற் றிடலும். 16

வேறு

நோற்குறு முனிவன் தன்பால் நொய்தென மாயை யெய்தித்
தீர்க்கலா மையல் பூட்டிச் செய்தவம் அழித்தாள் அந்தோ
பார்க்கிலன் இதனை யென்னாப் பரிவுசெய் தகன்றான் போலக்
கார்க்கடல் வரைப்பின் ஏகிக் கதிரவன் கரந்தான் அன்றே. 17

தந்தைகா சிபன்என் றோதுந் தவமுனி யவன்பாற் சார
வந்துளாள் யாயே அன்றோ மற்றிவர் தலைப்பெய் தின்ற
முந்துறு புணர்ச்சி காண்டல் முறைகொலோ புதல்வற் கென்னாச்
சிந்தைசெய் தகன்றான் போன்று தினகரக் கடவுள் சென்றான். 18

அந்தமில் நிருதர் என்னும் அளவைதீர் பாலுட் கங்குல்
வந்திடு மின்னே யென்னா வல்லையின் மதித்து வானத்
திந்திரன் ஆணை போற்றும் இலங்கெழில் நேமிப் புத்தேள்
சிந்துவிற் கரத்தல் போன்று செங்கதிர்ச் செல்வன் போனான். 19

வேலையின் இரவி செல்ல விண்ணவர் யாருங் கொண்ட
வாலிய திருவுஞ் சீரும் வன்மையும் அகல மாயை
பாலுறும் அவுணர் தானைப் பல்குழுப் பரவிற் றென்ன
மாலையும் இருளின் சூழ்வும் வல்லைவந் திறுத்த வன்றே. 20

மாகமேல் நிமிர்ந்த செக்கர் மாலையம் பொழுது நல்கூர்ந்
தீகென இரக்கும் நீரார்க் கிம்மியின் துணைய தேனும்
ஓகையால் வழங்கா நீதி ஒன்னலான் ஒருவன் செல்வம்
போகுமா றென்ன வாளா பொள்ளெனப் போயிற் றுமால். 21

இரும்பிறை உருவின் எஃகார் கூர்ங்குயத் தினுமீர்க் கல்லா
வரம்பறும் இருளின் கற்றை கணங்களும் மருளு நீபாற்
பரம்பிய தியாண்டு மாகிப் பாரெனப் பட்ட மாது
கரும்படாம் ஒன்று மேற்கோள் காட்சியைப் போன்ற தன்றே. 22

வண்டுழாய் மோலி மைந்தன் மாலிருட் கங்குல் வேழத்
தெண்டரு வதனம் பட்ட இரும்புகர்ப் புள்ளி யென்ன
அண்டர்தங் கருக்கள் சிந்தும் அணிமல ரென்ன வான்றோய்
கொண்டலிற் படுமுத் தென்னத் தாரகை குலவிற் றன்றே. 23

துண்ணென உலக முற்றுஞ் சூழ்ந்தபே ரிருளா நஞ்சைத்
தெண்ணில வாகி யுள்ள செங்கையால் வாரி நுங்கி
விண்ணவர் புகழ நீல வியன்நிறந் தன்பாற் காட்டுங்
கண்ணுதல் போன்று முந்நீர்த் தோன்றினன் கதிர்வெண் டிங்கள். 24

அழுந்துறு பாலின் வேலை அமரர்கள் கடைந்த காலைச்
செழுந்துளி மணிக ளோடுந் தெறித்தென உடுக்கள் தோன்றக்
கழுந்துறும் அவுணர் என்னுங் காரிருள் தொலைய அங்கண்
எழுந்ததோ ரமுதம் போன்றும் இலங்கினன் இந்து வென்பான். 25

இரவெனும் வல்லோன் ஞால மென்பதோர் உலையில் வேலைக்
கரியுறு வடவைத் தீயில் களங்கொடு வெண்பொன் சேர்த்தி
விரைவொடு செம்மை செய்து மீட்டுமோர் மருந்தால் தொல்லை
உருவுசெய் தென்னச் செங்கேழ் ஒளிமதி வெளிய ஞான். 26

அண்டருங் ககன மென்னும் அகலிருந் தடத்திற் பூத்த
விண்டதோர் குவளை ஆம்பல் போலுமால் மீன்கள் வெள்ளைப்
புண்டரீ கத்தைப் போலும் புதுமதி அதன்கட் டேஞர்
வண்டினம் ஒப்ப தன்றே மாசுதோய் களங்க மாதோ. 27

அலைதரு நேமி என்னும் ஆன்றதோர் தடத்தின் பாலாம்
நிலவெனும் வலையை யோச்சி நிழல்மதிப் பரதன் ஈர்த்துப்
பலநிறங் கொண்ட மீன்கள் பன்முறை கவர்ந்து வான்மேற்
புலருற விரித்த தேபோற் பொலிந்தன உடுவின் பொம்மல். 28

கழிதரும் உவரி நீத்தங் கையகப் படுத்து மாந்தி
எழிலிகள் வான மீப்போய் இருநிலத் துதவல் காணூஉப்
பழிதவிர் மதியப் புத்தேள் பாற்கடல் பருகி யாண்டும்
பொழிதரும் அமிர்தம் என்னப் புதுநிலாப் பூத்த தன்றே. 29

மலர்ந்திடுங் கடவுட் டிங்கள் வாணிலாக் கற்றை எங்குங்
கலந்தன உலகில் யாருங் களித்தனர் குமுத மாதி
அலர்ந்தன தளிர்த்த சோலை அம்புயப் போது செவ்வி
புலர்ந்தன ஒடுங்கு கின்ற புகைந்தன பிரிந்தோர் புந்தி. 30

அல்லவை புரியா ரேனும் அறிவினிற் பெரியா ரேனும்
எல்லவர் தமக்கு நண்பாய் இனியவே புரிதற் பாற்றோ
பல்லுயிர்த் தொகைக்கும் இன்பம் பயந்திடு மதிகண் டன்றோ
புல்லிய கமல மெல்லாம் பொலிவழிந் திட்ட வன்றே. 31

திங்களின் மலர்ந்த செவ்வித் தேன்முரல் குமுதம் எங்கோன்
பங்கமுற் றோர்கண் மேவான் பதுமமேன் ஒடுங்கிற் றென்னுத்
தங்களில் உரைத்தல் போலாஞ் சசிக்கது உண்மை எம்பால்
இங்கிலை யென்ப போன்ற இசையளி பொதிந்த கஞ்சம். 32

கங்குல்வந் திறுத்த காலைக் கடிமனைக் கதவம் பூட்டிச்
செங்கண்மால் தன்னைப் புல்லித் திருமகள்

கொங்கவிழ் கின்ற செங்கேழ்க் கோகன தங்கள் எல்லாம்
பொங்கிசை மணிவண் டோடும் பொதிந்தன பொய்கை யெங்கும். 33

வேறு

ஆனதோர் காலையில் அமரர் தம்மையுந்
தானவர் தம்மையுந் தந்த காசிபன்
வானகம் எழுதரும் மதியின் தெண்ணிலா
மேனிய தடைதலும் வெதும்பி னனரோ. 34

குலைந்தனன் தன்னுளங் குறைந்த வன்மையன்
அலந்தனன் உயிர்த்தனன் அறிவு சோர்ந்தனன்
புலர்ந்தனன் ஒடுங்கினன் புலம்பி அங்கண்வான்
நிலந்தனில் எழுதரு நிலவை நோக்கினன். 35

காலையில் எழுந்தசெங் கதிரின் நாயகன்
மாலையம் பொழுதினில் மறைந்து கீழ்த்திசை
வேலையில் விரைவுடன் மீண்டும் வந்துளான்
போலும்அத் தோவிது புதுமையோ வென்பான். 36

ஞாயிறும் அன்றெனில் நடுவ னாகியே
பாயிரும் புணரியுட் பயின்று தோன்றலால்
ஏயென உலகட எண்ணி யாண்டுறுந்
தீயெனுங் கடவுளோ திங்கள் அன்றென்பான். 37

இந்துவென் றுலகெலாம் இசைப்ப நின்றதோர்
செந்தழற் கடவுள் இத் திசையிற் செல்வுழி
வந்ததோர் சோதிகொல் வானம் மங்கலும்
அந்தியுஞ் செக்கரென் றடைந்தவா றென்பான். 38

காண்டகு மதியெனக் கழறுஞ் செந்தழல்
மூண்டிடு புகைகொலோ முன்னம் வானமும்
ஈண்டுறு தரணியுந் திசையும் எங்குமாய்
நீண்டதோர் இருளென நிமிர்ந்தவா றென்பான். 39

தெண்டிரைப் பிறந்திடுந் திங்கட் செந்தழல்
கொண்டது வாலிதாங் கோலங் காரிடைக்
கண்டனன் இத்திறங் கரையில் ஆவிகள்
உண்டதிற் பெற்றதிவ் வுருவமே யென்பான். 40

ஊனமில் செக்கராய் உதித்துப் பின்னரே
வானிற னாகிய மதியத் தீத்தரத்
தானிறை புலிங்கமே அலது தாரகை
மீனெனப் படுவது வேறுண் டோவென்பான். 41

மால்கடல் அதனிடை வந்த பான்மையால்
ஆலமி தாகுமால் அமரர்க் கன்றெழு
நீலமெய் யுருவினை நீத்துத் திங்களின்
கோலமொ டின்றிவட் குறுகிற் றேவென்பான். 42

இங்கிவை யாவுமன் றேர்கொள் வேலையில்
வெங்கனல் முழுவதும் விடமும் ஆர்ந்தெழீஇ
மங்குலிற் சிதறிட வானிற் புக்கனன்
திங்களே யாமிது திண்ணம்என் கின்றான். 43

இனையன மருட்கையால் இசைத்த காசிப
முனிவரன் என்பவன் முன்னை மாயையை
நினைபவ னாகியே நெடிது காதலால்
அனையவள் தனைவிளித் தரற்றல் மேயினான். 44

வேறு

கொங்குண் கோதைத் தாழ்குழல் நல்லீர் கொடியேன்முன்
எங்கு மெங்குங் காணுறு கின்றீர் எழின்மின்னின்
பொங்குஞ் சோதி போலெதிர் புல்லும் படிநில்லீர்
மங்கும் போதோ சேருதிர் நெஞ்சம் வலியீரே. 45

முன்னஞ் செய்தீர் காதலை நோன்மை முதலோடும்
பின்னஞ் செய்தீர் மாரனை ஏவிப் பிழைசெய்தீர்
சின்னஞ் செய்தீர் நல்லுணர் வெல்லாஞ் சிறியேனுக்
கின்னஞ் செய்யும் பெற்றியும் உண்டேல் இசையீரே. 46

வாகாய் நின்ற குன்றமும் யாவும் வருவித்தீர்
ஏகா நின்றீர் இவ்விடை தன்னில் ஏனைநீங்கிப்
போகா நின்றீர் வல்லையின் மீண்டும் புவியெங்கும்
ஆகா நின்றீர் நுஞ்செயல் யாரே அறிகிற்பார். 47

பற்றே நும்பால் ஆயினன் முன்னம் பயில்செய்கை
அற்றேன் வேளால் ஆற்றவும் நொந்தேன் அஃதாயும்
உற்றேன் அல்லேன் உம்மொடும் இன்னும் உழல்கின்றேன்
பெற்றேன் வாளா மாய்ந்தனன் என்னும் பிழையொன்றே. 48

நேயங் கொண்டீ ராமென வந்தீர் நெறிநில்லா
மாயங் கொண்டீர் வன்றிறல் கொண்டீர் மயல்செய்யுங்
காயங் கொண்டீர் ஆருயிர் நிற்கக் கருதீரேல்
ஆயங் கொண்டீர் கூற்றொடு போலுந் தனிவந்தீர். 49

வேண்டேன் வேறோர் மாதரை நும்பால் வியன்மோகம்
பூண்டேன் உம்மை மாயவ ரென்னும் பொருள்கண்டேன்
ஈண்டே சென்றீர் போல்கர வுற்றீர் எய்திரேல்
மாண்டேன் இன்னே ஆருயிர் நிற்பான் வருவீரே. 50

ஒன்றே யாகும் மாயம தால்நீ ருலகெல்லாம்
வென்றே செல்வீர் என்னுயிர் கொள்வான் விழைவீரேல்
நன்றே நன்றே நல்குவன் யானே நணிநண்பால்
சென்றே யோர்கால் மாமயல் தீரச் சேர்வீரே. 51

என்னு வென்னு இத்தகை பன்னி இடராழித்
துன்னு மாழ்கிச் சோர்தரும் எல்லைத் துகடீரும்

மின்னு கின்ற மாயவள் அன்னான் விழிகாணா
முன்னாய் நின்றாள் மவ்வினை கட்டு முதலானாள். 52

ஆகத் திருவிருத்தம் - 138.

# 3. அசுரர் தோற்று படலம்

-oo—

கந்தார் மொய்ம்பிற் காசிபன் என்போன் கழுதுங்கண்
வந்தாள் செய்கை காணுதலோடு மகிழ்வெய்தி
அந்தா உய்ந்தேன் யானென மின்கண் டயர்கின்ற
கொந்தார் கண்டல் போல்நகை யோடுங் குலவுற்றான். 1

ஆடா நின்றான் குப்புற லுற்றான் அவள்தன்மேல்
பாடா நின்றான் யாக்கைபொடிப்பிற் படர்போர்வை
மூடா நின்றான் அன்னதொர் மாயை முன்சென்றான்
வீடா நின்ற தன்னுயிர் காக்கும் விதிகொண்டான். 2

வேறு

என்னேசெய வேண்டிற்றவை எல்லாமினை வாலே
முன்னேபுரி கிற்பேன் இவண் முனிகின்றதை ஒருவி
நன்னேயமொ டெனையாளுதி நனிவல்லையில் என்னாப்
பொன்னேர்அடி மிசைதாழ்தலும் அவள்இன்னது புகல்வாள். 3

வெருவுற்றிடல் இவணின்றனன் வியன்மெய்யினுக் கியையுந்
திருமிக்குறு தகவாகிய திறன்மேனியும் மேற்கொள்
உருவொப்பதொர் வடிவும்முடன் உடனெய்திடு வாயேல்
மருவுற்றிடு கின்றேனென மயில்சொற்றனள் அன்றே. 4

ஏமுற்றிடு முனிவர்க்கிறை இதுகேட்டலும் முன்னங்
காமக்கடல் படிகின்றவன் களிசேர்தரும் உவகை
நாமக்கட லிடைஆழ்ந்தனன் நன்றால்இஃ தென்றான்
**சேமத்திரு நிதிபெற்றிடும் இரவோன்எனத் திகழ்வான்.** 5

அற்றேமொழி தருதன்மையில் ஆர்வத்தொடு தமியேன்
குற்றேவல்செய் கிற்பேன்இளங் கொடியோரிடை யென்னாச்
சொற்றேதவ முயல்வன்மையில் துகளேர்தரும் அனிலப்
பொற்றேரவற் கிலதென்பதொர் புத்தேள்உருக் கொண்டான். 6

அன்றாயதொ ருருவெய்திய அறிவன்றனை வியவா
நன்றாலுன தியல்பாமென நகையாக்கரம் பற்றாக்
குன்றாகிய முலையாள்அவற் கொடுபோந்தனள் அங்கட்
பொன்றாழ்கிரி யெனவோங்குமொர் பொலன்மண்டபம் புகுந்தான். 7

வேறு

கற்பனை இன்றியே கடிதின் முன்னுறும்
அற்புத மண்டபத் தாணை யால்வரும்
பொற்புறு சேக்கையிற் பொருந்தி னாரரோ
ஏற்படு கங்குலின் முதலி யாமத்தில். 8

சூருறு வெம்பசி தொலைப்ப வைகலும்
ஆரனுர் எய்தினேன் அரிதின் வந்திடு
பேரமு துண்குறு பெற்றி போலவக்
காரிகை தனைமுனி கடிதிற் புல்லினான். 9

புல்லலும் எதிர்தழீஇப் புகரில் காசிபன்
தொல்லையில் உணர்வொடு தொலைவில் செய்தவம்
வல்லையில் வாங்குறு மரபில் அன்னவன்
மெல்லிதழ் அமிர்தினை மிசைதல் மேயினாள். 10

பின்னுற மாயவள் பெரிதுங் காமுறும்
அன்னவன் புணர்தர அறிவ தொன்மையுந்
தொன்னெறி அளித்தெனத் தொண்டைச் சேயிதழ்
முன்னுறும் அமிர்தினை முனிக்கு நல்கினாள். 11

உட்டெளி வின்றியே யுலப்பின் றோடிய
மட்டறு காமமாம் வாரி யுற்றுளான்
அட்டொளிர் பொன்னனாள் அல்கு லாஞ்சுழிப்
பட்டனன் இன்பமாம் பரவை நண்ணுவான். 12

தோமறு முனிவரன் சுரதத் தாற்றினாற்
காமரு மதனநூல் கருத்திற் சிந்தியாத்
தேமொழி மயிலொடு செறிந்து போகமார்
பூமியி னோரெனப் புணர்தல் மேயினான். 13

செம்மயி லன்னஇத் தெரிவை தன்னிடை
எம்மையும் இல்லதோர் இன்பம் இங்ஙனம்
மெய்ம்மையின் நல்கிய விதியி னார்க்கியான்
அம்மசெய் கின்றதோர் அளவுண் டோவென்றான். 14

ஆறறி முனிவரன் அநங்க நூன்முறை
வீறொடு புணர்தலும் வெய்ய மாயவள்
கீறினள் நகத்தினாற் கீண்ட பால்தொறும்
ஊறிய காமநீர் ஒழுகிற் றென்பவே. 15

உணர்வுடை முனிவரன் உயர்ந்த விஞ்சையர்
மணமுறை இதுவென மாயை தன்னொடு
புணர்தொழில் புரிந்தனன் போக முற்றினான்
துணையறும் இன்பெனுங் கடலில் தோய்ந்துளான். 16

வேறு

அந்த வேலையில் முருந்துறும் அம்புயத் தவனும்
இந்தி ராதியர் யாவரும் முனிவரர் எவரும்
தந்தம் உள்ளமேல் நடுக்குற மாயவள் தன்பால்
வந்து தோன்றினன் சூரபன் மாவெனும் வலியோன். 17

துயக்கம் இல்லதோர் சூரன்வந் திடுதலும் தொல்லை
முயக்க வேலையில் இருவர்பால் முறைமுறை இழிந்த
வியர்ப்பில் வந்தனர் முப்பதி னாயிர வெள்ளம்
வயக்க டுந்திறல் தானவர் யாரினும் வலியோர். 18

அன்னர் தம்மையும் முதலவன் தன்னையும் அங்கண்
நின்மி னீரென நிறுவியே ஆயிடை நீங்கி
மின்னு நூலணி முனியொடு மாயவள் வேறோர்
பொன்னின் மாமணி மண்டபம் அதனிடைப் புகுந்தாள். 19

மானை நேர்பவள் ஆயிடைத் தொல்லுரு மாற்றி
மேனை சூரரிப் பிணவுருக் கொள்ளலும் விரைவில்
தானு மோர்திறல் மடங்கலே றெனச் சமைந்தான்
மோன மாய்முனம் அருந்தவம் இயற்றிய முதல்வன். 20

மங்கை யோடவன் மடங்கலாய் மகிழ்வுடன் புணரக்
கங்குல் வாயிரண் டாகிய யாமமேற் கடிதே
அங்கை ஓரிரண் டாயிரம் ஆயிர முகமாய்ச்
சிங்க மாமுகன் தோன்றினன் திடுக்கிடத் திசைகள். 21

இத்தி றத்திவர் இருவரும் புணர்வுழி யாக்கை
மெத்தி வீழ்தரும் வியர்ப்பினில் விறல்அரி முகராய்ப்
பத்து நால்வகை ஆயிர வெள்ளமாம் படைஞர்
கொத்தி னோடுவந் துதித்தனர் கூற்றுயிர் குடிப்பார். 22

மற்றும் அத்தொகை யோரையும் மாமகன் றனையும்
நிற்றிர் ஈண்டென மாயவள் வீற்றொரு நிலயந்
தெற்றெ னப்புகுந் தோர்பிடி உருக்கொடு சேரக்
கொற்ற மால்களிற் றுருவினை முனிவனுங் கொண்டான். 23

பேரு மும்மத மால்களிற் றுருக்கொடு பிடிமேல்
சேரு கின்றுழி மூன்றெனச் செல்லும்யா மத்தில்
ஈரி ரண்டுவாள் எயிற்றுடன் யானைமா முகத்துத்
தார காசுரன் தோன்றினன் அவுணர்கள் தழைப்ப. 24

ஏலும் அங்கவர் மெய்ப்படு வியர்ப்பினும் இபத்தின்
கோல மானவர் தோன்றினர் அவர்குழுக் குணிக்கின்
நாலு பத்தின்மேல் ஆயிர வெள்ளமா நவின்றார்
மூல நாடியே இப்பரி சுணர்த்திய முனிவர். 25

ஆண்டு தாரகன் தன்னையும் அவுணர்கள் தமையும்
ஈண்டு நிற்றிரென் றோர்மணி மண்டபத் திறுத்து

மாண்ட யாழிமேல் தகர்ப்பிணை உருக்கொள மாயை
பூண்ட அன்பினன் செச்சையின் உருக்கொடு புணர்ந்தான். 26

புணர்ந்த காலையில் அசமுகி தோன்றினள் புவியோர்க்
கணங்கு செய்தகர் முகவராய் அங்கவர் வியர்ப்பில்
கணங்கொள் முப்பதி னயிர வெள்ளமாங் கணிதத்
திணங்கு தானவர் உதித்தனர் இமையவர் கலங்க. 27

மீள மற்றவர் தம்மையும் நிறுவிவே றுள்ள
சூளி கைப்பெரு மண்டபந் தொறுந்தொறும் ஏகி
யாளி வல்லியம் புரவிமான் ஓரிஎண் கேனங்
கூளி ஆதியாம் விலங்கின துருவெலாங் கொண்டார். 28

இறுதி யில்லதோர் விலங்கின துருவுகொண் டிரவின்
புறமதாகிய புலரிசேர் வைகறைப் பொழுதின்
முறையின் மாயையும் முனிவனும் ஆகியே முயங்கி
அறுப தாயிர வெள்ளமாம் அவுணரை அளித்தார். 29

மிகுதி கொண்டிடும் இரண்டுநூ றுயிர வெள்ளந்
தகுவர் தம்மையுஞ் சூரனே முதலினோர் தமையும்
புகலும் ஓரிராப் பொழுதினில் அளித்ததற் புதமோ
அகில மும்வல மாயவட் கிச்செயல் அரிதோ. 30

ஆங்க வெல்லையின் அண்டமா யிரத்தெட்டின் உள்ளுந்
தீங்கு கொண்டிடுங் குறிகளுள் எனவெலாஞ் செறிந்து
நீங்க வின்றியே நிகழ்வன நீர்மைகண் டெவரும்
ஏங்கு கின்றனர் விளைவதென் னேவென இரங்கி. 31

அல்லெ னும்பொழு திறத்தலும் மாயவ ளரிவைத்
தொல்லை நல்லுருக் கோடலும் முனியும்அத் துணையே
வல்லை தன்னுரு முன்னையிற் கொண்டனன் மற்றவ்
வெல்லை தன்னிடை உதயவாய் அணுகினன் இரவி. 32

நிட்டைக் கேற்றிடு முனிவனை மாயவள் நிசியில்
விட்டுப் போந்திலள் அற்புதம் என்விளைந் ததுவோ
கிட்டிக் காண்பன்என் றுதயமாங் கிரிப்புறத் தணுகி
எட்டிப் பார்த்தனன் என்னவே உதித்தனன் இரவி. 33

வேறு

எல்லைவந் திடுதலும் ஈன்ற மாயவள்
செல்லுறும் அப்புவி செறிந்து சேணினுஞ்
சொல்லிய திசையினுந் துவன்றி யார்த்திடும்
ஒல்லெனுஞ் சனத்தினை உவந்து நோக்கினள். 34

விண்டுறு தானவர் வெள்ளம் யாவையுங்
கண்டனன் எந்தைதன் கருமம் இச்செயல்
கொண்டிலம் மாயையிற் கூடிற் றீதென
அண்டரும் அற்புதம் அடைகுற் றுன்முனி. 35

பற்பகல் அருந்தவம் பயின்ற தூயனும்
பொற்புறு மாயையும் புதல்வர் தங்தொகை
அற்புத மோடுகண் டன்பின் நீரராய்
நிற்புழித் தெரிந்தனன் நேரில் சூரனே. 36

இருமுது குரவரும் ஈண்டுற் றுபவர்
திருவடி வணங்கியாஞ் செய்தி றத்தினை
மரபொடு வினவுதும் வம்மின் நீரெனா
அரிமுகன் தாரகன் அறியக் கூறினான். 37

அறைகழல் இளையவர் அதனைத் தேர்வுறீஇ
உறுதியீ தாமெனா வுரைத்துப் பின்வரத்
துறுமல்கொண் டிருந்ததுன் தொல்பதாதியை
நிறுவினான் அவ்விடை நின்று நீங்கினான். 38

ஆகத் திருவிருத்தம் - 176.

# 4. காசிபனுபதேசப் படலம்

—oo—

நீங்கிய சூர்முதல் நெறியின் ஏகியே
யாங்கவர் அடிதொழு தருள்செய் மேலையீர்
யாங்கள்செய் கின்றதென் இசைமின் நீரென
ஓங்கிய காசிபன் உரைத்தல் மேயினான். 1

உறுதிய தொன்றினை உணர்த்து கின்றனன்
அறைகழல் மைந்தர்காள் அரிய மாதவ
நெறிதனில் மூவிரும் நிற்றிர் அன்னதன்
முறைதனை வாய்மையான் மொழிவன் கேண்மினோ. 2

சான்றவர் ஆய்ந்திடத் தக்க வாம்பொருள்
மூன்றுள மறையெலாம் மொழிய நின்றன
ஆன்றதோர் தொல்பதி ஆருயிர்த்தொகை
வான்றிகழ் தளையென வகுப்பர் அன்னவே. 3

அளித்திடல் காத்திடல் அடுதல் மெய்யுணர்
ஒளித்திடல் பேரருள் உதவ லேயெனக்
கிளத்திடு செயல்புரி கின்ற நீலமார்
களத்தினன் பதியது கழறும் வேதமே. 4

பற்றிகல் இல்லதோர் பரமன் நீர்மையை
இற்றென உரைப்பரி தெவர்க்கும் என்பரால்
சொற்றிடும் வேதமுந் துணிகி லாஅவன்
பெற்றியை இனைத்தெனப் பேச வல்லமோ. 5

மூவகை யெனுந்தளை மூழ்கி யுற்றிடும்
ஆவிகள் உலப்பில அநாதி யுள்ளன
தீவினை நல்வினைத் திறத்தின் வன்மையால்
ஓவற முறைமுறை உதித்து மாயுமே. 6

பாரிடை உதித்திடும் பாரைச் சூழ்தரு
நீரிடை யுதித்திடும் நெருப்பில் வாயுவில்
சீருடை விசும்பிடைச் சேரும் அன்னவைக்
கோரிடை நிலையென உரைக்கற் பாலதோ. 7

மக்களாம் விலங்குமாம் மாசில் வானிடைப்
புக்குலாம் பறவையாம் புல்லு மாம்அதில்
மிக்கதா வரமுமாம் விலங்கல் தானுமாந்
திக்கெலாம் இறைபுரி தேவும் யாவுமாம். 8

பிறந்திடு முன்செலும் பிறந்த பின்னர்மெய்
துறந்திடுஞ் சிலபகல் இருந்து துஞ்சுமால்
சிறந்திடு காளையில் தேயும் மூப்பினில்
இறந்திடும் அதன்பரி சியம்ப லாகுமோ. 9

சுற்றுறு கதிரெழு துகளி னும்பல
பெற்றுள என்பதும் பேதை நீரதால்
கொற்றம துடையதோர் கூற்றங் கைக்கொள
இற்றவும் பிறந்தவும் எண்ணற் பாலவோ. 10

கலைபடும் உணர்ச்சியுங் கற்பும் வீரமும்
மலைபடு வெறுக்கையும் வலியும் மற்றது
மலைபடு புற்புத மாகும் அன்னவை
நிலைபடு பொருளென நினைக்க லாகுமோ. 11

தருமமென் றொருபொருள் உளது தாவிலா
இருமையின் இன்பமும் எளிதின் ஆக்குமால்
அருமையில் வரும்பொரு ளாகும் அன்னதும்
ஒருமையி னோர்க்கலால் உணர்தற் கொண்ணுமோ. 12

தருமமே போற்றிடின் அன்பு சார்ந்திடும்
அருளெனுங் குழவியும் அணையும் ஆங்கவை
வருவழித் தவமெனும் மாட்சி எய்துமேல்
தெருளுறும் அவ்வுயிர் சிவனைச் சேருமால். 13

சேர்ந்துழிப் பிறவியுந் தீருந் தொன்மையாய்ச்
சார்ந்திடு மூவகைத் தளையும் நீங்கிடும்
பேர்ந்திடல் அரியதோர் பேரின் பந்தனை
ஆர்ந்திடும் அதன்பரி சறைதற் கேயுமோ. 14

ஆற்றலை யுளதுமோ தவம தன்றியே
வீற்றுமொன் றுளதென விளம்ப லாகுமோ

பாற்றருஞ் சிவகதி தனையும் நல்குமால்
போற்றிடின் அனையதே போற்றல் வேண்டுமால். 15

அத்தவம் பிறவியை அகற்றி மேதகு
முத்தியை நல்கியே முதன்மை யாக்குறும்
இத்துணை யன்றியே யிம்மை இன்பமும்
உய்த்திடும் உளந்தனில் உன்னுந் தன்மையே. 16

ஆதலிற் பற்பகல் அருமை யால்புரி
மாதவம் இம்மையும் மறுமை யுந்தரும்
ஏதுவ தாகுமால் இருமை யும்பெறல்
ஆதியம் பகவன தருளின் வண்ணமே. 17

ஒருமைகொள் மாதவம் உழந்து பின்முறை
அருமைகொள் வீடுபே றடைந்து ளோர்சிலர்
திருமைகொள் இன்பினிற் சேர்கின் றோர்சிலர்
இருமையும் ஒருவரே எய்தி னோர்சிலர். 18

ஆற்றலில் தம்முடல் அலசப் பற்பகல்
நோற்றவர் அல்லரோ நுவலல் வேண்டுமோ
தேற்றுகி லீர்கொலோ தேவ ராகியே
மேற்றிகழ் பதந்தொறும் மேவுற் றோரெலாம். 19

பத்திமை நெறியொடு பயிற்றி மாதவ
முத்திபெற் றரனடி முன்னுற் றோர்தமை
இத்துணை யெனல்அரி திருமை யும்பெறு
மெய்த்தவர் மாலொடு விரிஞ்ச னாதியோர். 20

பல்லுயிர் தன்னையும் மாய்த்துப் பாரினுக்
கல்லல்செய் தருந்தவம் ஆற்றி டாதவர்க்
கில்லையே இருமையும் இன்பம் ஆங்கவர்
சொல்லரும் பிறவியுள் துன்பத் தாழுவார். 21

அறிந்திவை உரைப்பினும் அவனி மாக்கள்தாம்
மறங்கொலை களவொடு மயக்கம் நீங்கலர்
துறந்திடு கின்றிலர் துன்பம் அற்றிலர்
பிறந்தனர் இறந்தனர் முத்தி பெற்றிலார். 22

**தவந்தனின் மிக்கதொன் றில்லை தாவில்சீர்த்**
**தவந்தனை நேர்வது தானும் இல்லையால்**
**தவந்தனின் அரியதொன் றில்லை சாற்றிடில்**
**தவந்தனக் கொப்பது தவம தாகுமே.** 23

ஆதலின் மைந்தர்காள் அறத்தை ஆற்றுதிர்
தீதினை விலக்குதிர் சிவனை உன்னியே
மாதவம் புரிகுதிர் மற்ற தன்றியே
ஏதுள தொருசெயல் இயற்றத் தக்கதே. 24

வேறு

**உடம்பினை ஒறுத்து நோற்பார் உலகெலாம் வியப்ப வாழ்வர்**
அடைந்தவர்க் காப்பர் ஒல்லார்க் கழிவுசெய் திடுவர் வெஃகும்
நெடும்பொருள் பலவுங் கொள்வர் நித்தராய் உறைவர் ஈது
திடம்பட உமக்கோர் **காதை செப்புவன்** என்று சொல்வான். 25

ம் - 201.

# 5. மார்க்கண்டேயப் படலம்

-oo—

நச்சகம் அமிர்தம் அன்ன நங்கையர் நாட்ட வைவேல்
தைச்சக மயக்கல் செய்யாத் தடுப்பருந் தவத்தின் மிக்கான்
இச்சகம் புகழு கின்ற இருபிறப் பாளர் கோமான்
**குச்சகன் என்னும் பேரோன்** கொடிமதிற் **கடகம்** வாழ்வோன். 1

அவற்கொரு புதல்வன் உண்டால் அருமறை பயின்ற நாவான்
**கவுச்சிகன் என்னும் பேரோன்** கரையொரு சிறிதுங் காணாப்
பவக்கடல் கடக்கும் ஆற்றாற் பராபர முதல்வற் போற்றித்
தவத்தினை இழைப்ப ஆங்கோர் தண்புனல் தடாகஞ் **சார்ந்தான்**. 2

அத்தலை ஒருசார் எய்தி ஆனினந் தீண்டு குற்றி
ஒத்தென அசைத லின்றி உயிர்ப்பொரீஇ உலக மெல்லாம்
பித்தென உன்னி மாயாப் பேரின்ப அளக்கர் மூழ்கி
நித்தன்ஐ யெழுத்தும் அன்னான் நிலைமையும் நினைந்து நோற்றான் 3

ஓவிய மவுன முற்றாங் குணவொடும் உறக்கம் நீங்கித்
தாவற நோற்கும் வேலைத் தடமரை கடமை யாதி
மேவிய விலங்கு தத்தம் மெய்யகண் டூயம் யாவும்
போவது கருதி அன்னான் புரத்திடை உரைத்துப் போமோல். 4

இப்பரி சியன்ற போழ்தும் யாவதும் உணரா னாகி
ஒப்பற நோற்கும் வேலை ஒல்லையில் அதனை நாடி
முப்புரஞ் சிதைய மேனாள் முனிந்தவன் அருளி தென்னாத்
செப்பினன் இமையோர் சூழச் சேணிடைத் திருமால் **சேர்ந்தான்**. 5

அற்புதம் எய்தி மைந்தன் அருந்தவம் புகழ்ந்து முன்போய்
எற்படும் அவன்றன் மேனி எழின்மலர்க் கரத்தால் நீவி
வெற்பன முனிவ நின்பேர் **மிருககண் டூயன்** என்னாச்
சொற்பயில் நாமஞ் சாத்த எழுந்துகை தொழுது நின்றான். 6

தொழுதெழு முனியை நோக்கித் தூமதிச் சென்னி யோன்றன்
முழுதுறு கருணை நின்பால் முற்றுக முன்னஞ் செய்த
பழுதவை நீங்க வென்னாப் பரிவுசெய் தருளி வானோர்
குழுவுடன் **உவண ஊர்தி** கொம்மென மறைந்து போனான். 7

போனபின் முனிவர் மேலோன் புரமெரி படுத்த முக்கண்
வானவன் அருளி னாலே வல்விரைந் தேகித் தாதை
யானவன் முன்னர் எய்தி அடிமுறை வணங்க அன்னான்
தானுள மகிழ்ந்து கண்டாங் கெடுத்தனன் தழுவிக் கொண்டான். 8

தவத்திடை யுற்ற தன்மை மொழிகெனத் தனயன் தானும்
உவப்புறு தாதை கேட்ப உள்ளவா றுரைத்த லோடும்
நிவப்புறு முவகை மிக்கு நின்குலத் தவர்க்குள் நின்போல்
எவர்க்குள திணைய நோன்மை யாதுநிற் கரிய தொன்றே. 9

பாருளார் விசும்பின் பாலார் பயனுகர் துறக்க மென்னும்
ஊருளார் அல்லா ஏனை உலகுறு முனிவர் தம்மில்
ஆருளார் நின்னை ஒப்பார் ஐயநீ புரிந்த நோன்மை
காருளார் கண்டத் தெந்தை யன்றிமற் றெவரே காண்பார். 10

எனப்பல புகழ்த லோடும் இவன்வழி மரபு தன்னில்
மனப்படும் ஒருசேய் பின்னாள் மறலியைக் கடக்குங் கூற்றால்
வினைப்பகை இயல்பு நீக்கும் விமலன தருளால் வேறோர்
நினைப்பது வரலுந் தாதை நெடுமகற் குரைக்கல் உற்றான். 11

கிளத்துவ துனக்கொன் றுண்டால் கேண்மதி ஐய மேனாள்
அளப்பரு மறைக ளாதி அறைந்தன யாவ ரேனுந்
தளத்தகு பரிசு மன்றால் சால்புடை அந்த ணாளர்
கொளப்படு கடனே யாரும் நாற்பெருங் கூற்ற தன்றே. 12

உணற்கரும் பிரமந் தன்னில் ஒழுகல்இல் லறத்தில் நிற்றல்
வனத்திடைச் சேறல் பின்னர் மாதவத் துறவில் வாழ்தல்
எனப்படும் அவற்றி னாதி இயற்றினை யின்று காறும்
நினக்கது புகல்வ தென்னோ நீயவை அறிதி யன்றே. 13

பின்னவை இரண்டும் பின்னர்ப் பேணுதல் பேச வொண்ணா
முன்னதும் இயற்ற லாலே முற்றிய இடையின் வைத்துச்
சொன்னதோர் கடன்இஞ் ஞான்று தொடங்கிய வேண்டுந் தூயோய்
அன்னதன் நிலைமை தன்னை ஆற்றினை கோடி யென்றான். 14

முனிவரன் இதனை ஆங்கண் மொழிதலும் இதனைக் கேளா
இனியதோர் உறுதி சொற்றார் எந்தையார் எனக்கிஃ தென்னா
மனமுற முறுவல் செய்து மதலையாம் ஒருவற் கீது
வினையறு தவத்தின் நீரும் விளம்புதல் மரபோ வென்றான். 15

வேறு

பேதைப் படுக்கும் பிறவிக் கடல்நீந்தும்
ஓதித் திறத்தை உணர்ந்துடையோன் ஆதலினால்
காதற் புதல்வன் கவுச்சிகனென் போன்தனது
தாதைக் கினைய பரிசுதனைச் சாற்றுகின்றான். 16

முன்னருள பாச முயக்கறுக்க வேண்டியநான்
பின்னுமொரு பாசம் பிணிக்கப் படுவேனேல்

தன்னிகரில் ஈசன் றனையெவ்வா றெய்துவன்யான்
இன்னலெனும் ஆழி யிடைப்பட் டுலைவேனே. 17

மொய்யான தில்லா முடவன்ஒரு வன்தனது
கையா னவையிரண் டுங் கந்தாத் தவழ்தருவான்
ஐயா அதற்கும் அரும்பிணியொன் றெய்தியக்கால்
உய்யானே யானும் உவன்போல் தளர்வேனோ. 18

மொய்யுற் றிடவே முயலுந் தவத்தினன்றிப்
பொய்யுற்ற இல்லொழுக்கம் பூண்டுவினை போக்குவது
**மெய்யுற் றிடுதுகளை மிக்க புனலிருக்கச்**
**செய்யற்சின் னீரிடத்துத் தீர்க்குஞ் செயலன்றோ.** 19

மண்ணுலகி லுள்ள வரம்பில் பெரும்பவத்தைப்
பெண்ணுருவ மாகப் பிரமன் படைத்தனனால்
அண்ணல் அஃதுணர்தி அன்னவரைச் சிந்தைதனில்
எண்ண வரும்பாவம் எழுமையினும் நீங்குவதோ. 20

ஆதரவு கொண்டே அலமந்த ஐம்புலமாம்
பூதவகை யீர்க்கப் புலம்புற்ற புன்மையினேன்
மாதரெனுங் கணமும் வந்தென்னைப் பற்றியக்கால்
ஏதுசெய்கேன் அந்தோ எனக்கோ [illegible]மே. 21

பன்னாளும் பாரிற் பருவரலின் மூழ்குவிக்கும்
பின்னாள் நிரயப் பெரும்பிலத்தி னாடுய்க்கும்
எந்நாளில் ஆண்டகையோர்க் கின்பம் பயந்திடுமோ
மின்னார்கள் தம்மை விழைவுற்ற வேட்கையதே 22

துன்பம் நுகரும் வினையின் தொடர்ச்சியினோர்
இன்பம் நுகர்வார்போல் ஏந்திழையார் கட்பட்டார்
**தன்பல் மிகநடுங்க ஞாளி தசையில்லா**
**என்பு கறித்திட்டால் இருஞ்சுவையும் பெற்றிடுமோ.** 23

அஞ்சன வைவேற்கண் அரிவையர்தம் பேராசை
நெஞ்சு புகின்ஒருவர் நீங்கும் நிலைமைத்தோ
எஞ்சல்புரி யாதுயிரை எந்நாளும் ஈர்ந்திடுமால்
நஞ்சம் இனிதம்ம ஓர்நாளும் நலியாதே. 24

கள்ளூற்ற கூந்தல் கனங்குழைநல் லார்கருத்தில்
கொள்ளப் படுமெண் குணிக்குந் தகைமையதோ
தள்ளற் கரிதாகித் தம்மொடுபண் ணுட்பழகி
உள்ளூற்ற தேவும் உணர்தற் கரிதன்றோ. 25

ஓதலும் ஒன்றா உளமொன்றாச் செய்கையொன்றாப்
பேதை நிலைமை பிடித்துப் பெரும்பவஞ்செய்
மாதர் வலைப்பட்டு மயக்குற்றார் அல்லரோ
சாதல் பிறப்பில் தடுமாறு கின்றாரே. 26

ஆனால் உலகில் அருங்கற் பினையுடைய
மானார் இலரோ எனவே வகுப்பீரேல்
கோனான தங்கள் கொழுநன் இயல்வழுவாத்
தேனார் மொழியாரும் உண்டு சிலர்தாமே. 27

உற்ற வுலவையிடை ஓர்புலிங்கம் ஊட்டியக்கால்
கற்றை விடுசுடர்மீக் கான்று கனல்பிக்கும்
பற்றுதல் செல்லாத பலவினும்போய்ப் பற்றிடுமால்
அற்றெனலாம் ஈங்கோர் அரிவைமுயங் காதாமே. 28

சந்திரற்கு நேருவமை சாலுந் திருமுகத்துப்
பைந்தொடிக்கை நல்லார் பலரும் புடைசூழக்
குந்தமொத்த நாட்டத்துக் கோதமனார் பன்னியினால்
இந்திரற்கு நீங்கா இடர்ப்பழிஒன் றெய்தியதே. 29

வேறு

கூன்முகத் திங்கள் நெற்றிக் கோதையர் குழுவுக் கெல்லாந்
தான்முதல் இறைவி யாகத் தன்கையாற் சமைக்கப் பட்ட
மான்முக நோக்கி முன்னோர் மலரயன் மையல் எய்தி
நான்முகன் ஆனான் என்ப நாமுண ராத தன்றே. 30

மற்றுள முனிவர் தேவர் மாயமாங் காமந் தன்னால்
உற்றிடு செயற்கை யெல்லாம் உரைப்பினும் உலப்பின் றாமால்
அற்றலா நிற்க யான்அவ் வாயிழை மடந்தை கூட்டம்
பெற்றிடும் ஒழுக்கந் தன்னைப் பேணலன் பிறப்பு நீப்பேன். 31

பூண்டகு விலங்கல் திண்டோட் புரந்தரன் முதலோர் சீரும்
வேண்டலன் இல்வாழ் வென்னும் வெஞ்சிறை அகத்தும் வீழேன்
மாண்டகு புலத்தின் மாயும் மயக்கொரீஇத் தவமென் றோதும்
ஈண்டிய வெறுக்கை மேவி இன்பமுற் றிருப்ப னென்றான். 32

இவைபல உரைத்த லோடும் இருந்தபுச் சகன்தான் இந்தக்
குவலய மதிக்கு மாற்றாற் கூறும்இல் லொழுக்கந் தன்னை
நவையென இகழா நின்றான் நான்மறைத் துணிவுங் கொள்ளான்
தவமயல் பூண்டான் என்னாத் துயர்கொடு சாற்ற லுற்றான். 33

புலத்தியன் போலு மேலோய் பொருவின்மாங் கலஞ்சேர்பொன்னின்
கலத்தியல் வதுவை பூண்டோர் கன்னியைக் கலத்தல் செய்து
குலத்தியல் மரபின் ஓம்பக் குமரரைப் பயந்தே அன்றோ
நலத்தியல் தவத்தை ஆற்றி நண்ணருங் கதியிற் சேரல். 34

மன்பதை உலக மேபோல் மாலுறு மயங்கு காம
இன்பநீ நுகர்தற் கேயோ இசைத்தனன் இறந்த மேலோர்
துன்பமும் நிரயஞ் சேர்வுந் துடைத்திடுந் தொன்மை நோக்கி
அன்புறு புதல்வர்க் காக அரிவையைக் கோடி ஐயா. 35

சித்திரம் இலகு செவ்வாய்ச் சீறடிச் சிறுவர் தம்மைப்
புத்திர ரென்னுஞ் சொற்குப் பொருணிலை அயர்த்தி போலாம்

இத்தக வதனை நாடி இல்லறம் பூண்டு நிற்றல்
உத்தம நெறியே யாகும் தவத்தின தொழுக்கும் அஃதே. 36

குவவுறு நிவப்பின் மிக்க கோடுயிர் குடுமிக் குன்றின்
இவர்வுறு காத லாளர் இயற்படு சார லெய்தித்
திவவொடு போத லன்றிச் சேணுற உகளுந் தன்மைக்
குவமைய தாகும் இன்னே உயர்தவத் தொழுக உன்னல். 37

தருவினில் விலங்கில் அன்ன தகையன பிறவிற் சால
வருபயன் கோடற் கன்றே மற்றவை வரைதல் செய்யார்
பெருகும்இல் லறத்தி னோடும் பெருமகப் பொருட்டால் நீயும்
அரிவையை மணந்து பின்னுள் அருந்தவம் புரிதி அன்றே. 38

இந்தநன் னிலைமே னுளே எண்ணிலை இந்நாள் காறும்
முந்துசெய் கடன தாற்றி முற்றினை முறையே பன்னுட்
சிந்தனை செய்த வானோர்க் கவிமுதற் சிறப்புச் செய்யாய்
மைந்தநீ இன்னே நோற்கும் வண்ணமே எண்ணற் பாற்றே. 39

இந்திரர் புகழுந் தொல்சீர் இல்லறம் புரிந்து ளோர்க்குத்
தந்தம தொழுக்கந் தன்னில் தகுமுறை தவறிற் றேனுஞ்
சிந்திடுந் தீர்வும் உண்டால் செய்தவர்க் கனைய சேரின்
உய்ந்திடல் அரிதால் வெற்பின் உச்சியின் தவற லொப்ப. 40

சுழிதரு பிறவி யென்னுஞ் சூழ்திரைப் பட்டுச் சோர்வுற்
றழிதரு துயர நேமி அகன்றிடல் வேண்டு மேனுங்
கழிதரு நாளான் அல்லாற் கதுமெனத் துறக்க லாமோ
வழிமுறை நும்மு னோரின் மற்றது புரிதி மன்னோ. 41

தேவரும் முனிவர் தாமுஞ் செங்கண்மா லயனும் மற்றும்
யாவரு மடந்தை மாரோ டில்லறத் தொழுகுந் தன்மை
மேவரப் பணித்தான் அன்றே விமலையோ டணுகி மேனாட்
டாவரும் புவன மாதி சராசரம் பயந்த தானு. 42

மறுக்கலை அவன்றான் செய்த வரம்பினை வழியை வேண்டி
வெறுக்கலை எனது கூற்றை விலக்கலை உலகின் செய்கை
செறுக்கலை இகலு மாற்றாற் செப்பலை சிறிது மாற்றந்
துறக்கலை எமரை இன்னே தொன்முறை உணர்ந்த தூயோய். 43

வேறு

ஆடக வனப்புடை அருந்ததியை நீங்கான்
மாடுற இருத்தியும் வசிட்டமுனி யென்போன்
நீடுதவ நோன்மைகொடு நின்றனன் அதன்றிப்
பீடுகெழு ஞாலமிசை பெற்றபழி யுண்டோ. 44

துயக்குறு பவத்திடை தொடர்ச்சியறு தூயோர்
நயப்பொடு வெறுப்பகலின் நாளுமட மாணர்
முயக்குறினும் மாதவ முயன்றிடினும் அன்னோர்
வியத்தகு மனத்துணர்வு வேறுபடு மோதான். 45

மேனவியல் பான்வரையும் மெல்லியலை மேவில்
தானமுள தாகும்அரி தானதவ மாகும்
வானமுள தாகுமிவண் மண்ணுறு முளதாகும்
ஊனமில தாகும்அரி தொன்றுமிலை யன்றே. 46

காண்டகைய தங்கணவ ரைக்கடவு ளார்போல்
வேண்டலுறு கற்பினர்தம் மெய்யுரையில் நிற்கும்
ஈண்டையுள தெய்வதமும் மாமுகிலு மென்றால்
ஆண்டகைமை யோர்களும் அவர்க்குநிக ரன்றே. 47

ஆயிழையொ டின்புறும் அறத்தைமுத லாற்றாய்
தூயதவ நன்னெறி தொடங்கல்புரி வாயேல்
மாயமிகு காமவிடம் வந்தணுகின் அம்மா
மேயவிதி காக்கினும் விலக்கியிட லாமோ. 48

துறந்தவர்கள் வேண்டியதோர் துப்புரவு நல்கி
இறந்தவர்கள் காமுறும் இருங்கடன் இயற்றி
அறம்பலவும் ஆற்றிவிருந் தோம்புமுறை யல்லால்
பிறந்தநெறி யாலுளதோர் பேருதவி யாதோ. 49

மெத்துதிறல் ஆடவரும் மெல்லியல்நல் லாருஞ்
சித்தமுறா நன்கினொடு தீதுசெயல் ஊழே
உய்த்தபடி யல்லதிலை யாம்உழுவர் ஒண்செய்
வித்துபய னேயலது வேறுபெற லாமோ. 50

நற்றவம தாகுமில றந்தனை நடாத்திச்
சுற்றமற நீங்குதுற வேதுறவ தம்மா
மற்றது புரிந்திடின் உனக்குநவை வாரா
அற்றது மறுத்துரையல் ஆணைநம தென்றான். 51

அன்னபல மாமுனி யறைந்திடலும் ஓரா
முன்னமறை யாதிய மொழிந்ததுணி வென்றூர்
பன்னகம் அணிந்திடு பரன்பணியும் என்றூர்
என்னினி உரைப்பதென எண்ணி இனை கின்றான். 52

தத்தமத ருட்குரவர் தாவில்வளம் நீங்கி
அத்தியிடை யாழ்கெனினும் அன்பினது செய்கை
புத்திரர்கள் தங்கள்கட னும்புதுமை யன்றே
இத்திறம் மறுக்கலன் இரைந்திடுவன் யானும். 53

தந்தைசொல் மறுப்பவர்கள் தாயுரை தடுப்போர்
அந்தமறு தேசிகர்தம் ஆணையை இகந்தோர்
வந்தனைசெய் வேதநெறி மாற்றினர்கள் மாறுச்
செந்தழல வாயநிர யத்தினிடை சேர்வார். 54

ஆதலின் விலக்கல்முறை அன்றெனவலித்துக்
கோதறு குணத்தின்மிகு குச்சகர்தம் அம்பொற்

பாதம திறைஞ்சிமுனி யேல்பணியில் நிற்பன்
ஓதுவ துனக்குள தெனக்கழறல் உற்றான். 55

தன்னுரைகொ ளாதமனை வாழ்க்கையது தன்னில்
வெந்நிரயம் வீழும்வகை யேவிழுமி தம்மா
அன்னரொடு மேவியமர் ஆடவர் தமக்குப்
பின்னுமொரு கூற்றுமுள தோபிணியும் உண்டோ. 56

என்னுரையி னிற்சிறிதும் எஞ்சலில வாகி
மன்னுமியல் பெற்றிடு மடந்தையுள ளேல்அக்
கன்னிதனை யான்வரைவல் காயெரிமுன் என்னாச்
சொன்னமொழி கேட்டுமகிழ் வுற்றுமுனி சொல்லும். 57

வேறு

யானும் உய்ந்தனன் என்கிளை யுய்ந்தன இனையதால் நினை யீன்றாள், தானும் உய்ந்தனள் தவங்களும் உய்ந்தன தண்ணளி யது மற்றால், வானும் உய்ந்தன மண்ணுல குய்ந்தன வாசவ னெனவாழுங், கோனும் உய்ந்தனன் என்னுரை மறுமலுட் கொண்டனை அதனாலே. 58

வேண்டும் வேட்கையை உரைத்தியால் மைந்தநீ விளம்பிய இயல்பெல்லாம், பூண்டு குற்றமோர் சிறிதுமில் லாததோர் பூவையைப் புவியின்பாற், தேண்டி நின்வயிற் புணர்க்குவன் அங்கது செய்கலா தொழிவேனேல், மாண்டி றந்திடுங் குறைமதிக் கதிரென மாய்களென் தவமென்றான். 59

இனைய பான்மையிற் குச்சகன் கூறுரை இயம்பலுந் திருமால் முன், புனையும் மெய்ப்பெயர் தரித்தரேய் ஆங்கவன் பொலங்கழல் தனைப்பூண்டோர், தனயன் உய்பொருட் டாலிது புகன்றனை தவத் தினில் தலையான, முனிவ நீயுனக் கரியதாய் ஒருபொருள் முச்சகந் தனிலுண்டோ. 60

ஆவ தேனும்யான் உரைப்பதுண் டத்தனை யற்றவர் அருளும் யாய், சாவ தாயினர் தன்னையர் இல்லவர் தங்கையர் இலராஞோர், காவ லாடவர் தம்முடன் உதித்திடார் காசினி தனிலன்னோர், வீவ தாயினர் பெருங்கிளை இல்லவர் வியத்தகு திருவற்றோர். 61

குடிப்பி றந்திலர் பிணியுறும் இருமுது குரவர்பாற் குறுகுற்றோர், கடுத்த யங்கிய மிடற்றிறை யாதியாங் கடவுளர் பெயர்கொள்ளா, தடுத்த மாக்கடம் பெயர்பெறு பீடிலர் அலகைதன் நாமத்தோர், படித்த லந்தனில் புன்னெறிச் சமயமாம் படுகுழிப் பட்டுள்ளோர். 62

பிணியர் மூங்கையர் பங்கினர் வெதிரினர் பிறர்மனை தனிற் செல்வோர், கணிகை மாதரின் விழிப்பவர் பன்முறை காளையர் தமை நோக்கி, நணிய காதலான் முன்கடை நிற்பவர் நலம்பெறப் புனை கின்றோர், தணிவில் உண்டியர் துயில்மிகும் இயல்பினர் தன்னினும் மூப்புற்றோர். 63

ஒருமை தங்கிய கோத்திர மரபினர் உயர்ந்தவர் குறளானோர், பருமை தங்கிய யாக்கையர் மெல்லுருப் படைத்தவர் பயனில்லாக், கருமை தங்கிய வடிவினர் பொன்னெனக் கவின்றெழு காயத்தோர், இருமை தங்கிய பரப்பினர் விளர்ப்பினர் எருமையின் உருமிக்கோர். 64

நாணி லாதவர் ஆடவர் புணர்ப்பினில் நணியவர் நகைக்கின்றோர், ஏணி லாதவர் பெருமிடல் சான்றவர் இருமுது குரவோர்தம், ஆணை நீங்கினர் சினத்தினர் இகலினர் அடுதிறம் முயல்கின்றோர், காண வேணடினர் நடமுது லாயினர் காமஞற் கவல்கின்றோர். 65

ஈசன் அன்பிலர் பெருந்தகை முனிவரை இகழ்பவர் உயிர்மீது, நேச மென்பன இல்லவர் தங்குல நெறிதனில் நில்லாதோர், மாசு தங்கிய குணத்தினர் நிறையிலார் மனமொனும் காப்பிலோர், தேசி கன்றனை மனிதனென் றுன்னினர் தேவரைச் சிலையென்றோர். 66

பத்தின் மேற்படும் ஆண்டினர் பூத்திடு பருவம்வந் தணுகுற் றோர், ஒத்த பண்பிலர் அச்சமில் மனத்தினர் உருமென வுரை செய்வோர், அத்தன் அன்னையீந் தருளுமுன் ஒருவர்பால் ஆர்வமுற் றவர்சேர, வைத்த சிந்தையர் பெருமிதம் உற்றுளோர் மடமொடு பயிர்ப்பில்லோர். 67

பிறப்பின் எல்லையில் வறுமிலார் தோற்றிய பின்மையே இழக் கின்றோர், மறுப்ப யின்றிடுங் கண்ணினர் படவிகை வயங்கிய நோக் கத்தார், குறிப்பின் மெல்லென வெஃகியே விழித்திடுங் குருடர்சாய் நயனத்தோர், சிறப்பில் பூனையின் நாட்டத்தர் கணத்தினில் திரி தரு செங்கண்ணோர். 68

தூறு சென்னியர் நரைமுதிர் கூந்தலர் துகளுறும் ஐம்பாலார், வீறு கோதையர் சின்னமார் குழலினர் விரிதரும் அளகத்தோர், ஈறில் செம்மயிர்ப் பங்கியர் நிலனிடை இறக்கிய கேசத்தோர், ஊறு சேர் தரும் ஓதியர் விலங்கென உரமிகு குரலுள்ளோர். 69

சிறுகு கண்ணினர் மிகநெடுந் துண்டத்தர் சேர்ந்திடு புருவத் தோர், குறிய காதினர் உயர்தரும் எயிற்றினர் கோணுறு கண்டத் தோர், மறுவி ராகிய முகத்தினர் சுணங்குறு மணிமுலை மார்பத் தோர், வெறிய தாகிய நுசுப்பிலர் சிலையென வியன்மிகு வயினுள் ளோர். 70

காய நூல்முறை உரைத்திடும் இயல்பிலாக் கடிதட நிதம்பத் தோர், வாயும் அங்கையும் நகமுமுள் ளடிகளும் வனப்புறு சிவப் பில்லோர், மேய சின்மயிர் பரந்திடு பதத்தினர் மென்சிறை எகினம் போல், தூய நன்னடை இல்லவர் அங்குலி தொல்புவி தோயா தோர். 71

இனைய தன்மைய ராகிய மாதர்கள் ஏனையர் இவர்யாவரும், புனையு மங்கல மாகிய கடிவினை புரிதர வரையாதோர், அனைய ரேயெனின் வேண்டலன் முழுவதும் அவரியல் அணுகாத, வனிதை யுண்டெனின் வேண்டுவன் தேர்ந்தனை மரபினில் தருகென்றான். 72

காட்டில் நின்றிடு குற்றியின் நோற்புறு கவுச்சிகன் இவைகூறக், கேட்டு மூரலும் உவகையுங் கிடைத்தனன் கேடில்சீர் உலகுள்ள, நாட்ட கந்தனில் நாடிநல் லியல்புள நங்கையை நின்பாலிற், கூட்டு கின்றனன் மானுதல் ஒழிகெனக் குச்சகன் உரைசெய்தான். 73

உரைத்த குச்சகன் மைந்தனை நிறுவியே ஒல்லைசென் றகிலத்தில், திருத்த குஞ்சுடர் மலிதரு செம்பொனிற் செய்ததோர் அணிநாப்பண், அருத்தி சேர்தரக் குயிற்றிட வேண்டியோர் அருமணி தனைக்கொள் வான், கருத்தி லுன்னுபு தெரிபவன் போல்ஒரு கன்னியைத் தேர்கின்றான்.74

வேறு

அன்னவன் தன்னேர் முனிவரர் சிலர்வந் தணுகலும் அவரொடும் விறைவிச், சென்னிதன் தேயத் தநாமயம் என்னுஞ் செயிரிலா வனத்துசத் தியன் பால், கன்னிகை யிருத்தல் உணர்ந்துமல் றவன்பாற் கதுமெனச் சேற லுங் காணூஉத், தன்னடி வணங்க வெதிருறத் தொழுது தழுவியே அவனொடுஞ் சார. 75

மாசற வியன்ற உறையுளிற் கொடுபோய் வரன்முறை வழாமலே அமைத்த, ஆசனத் திருத்திக் கன்னிகை யொடுதன் பன்னியை யாயிடை அழைத்துத், தேசிக னுற்றான் பணிமின்நீர் என்னுச் சென் னியால் இறைஞ்சுவித் தூரிய, பூசனை புரிந்து நகையொடு முகமன் புகன்றன வளாயினன் புனிதன். 76

அறுசுவை கெழுவும் நறியசிற் றுண்டி அமுதினில் தூயன அருத் திக், குறைவறும் அடிகட் கென்னிடை வேண்டுங் கொள்கைய தென் னெனக் கூற, மறுவறு தவத்துக் குச்சக முனிவன் மகிழ்ந்துநீ மாத வம் புரிந்து, பெறுமகள் தன்னை யெனதொரு மகற்குப் பேசுவான் பெயர்ந்தனன் என்றான். 77

இனையசொல் வினவி முனிவரன் மகிழா என்மகள் இயல்சேர், உனதுமைந் தற்கு நல்கமுன் செய்த உயர்தவம் என் கொலென் றுரைத்து, மனமுற நகையும் உவகையுங் கிளர மணவினை இசைந்துமா தவத்துப், புனிதனை அங்கட் சிலபகல் இருத்திப் போற்றி செய் தொழுகுறும் பொழுதின். 78

வேறு

பங்கமில் உசத்தியன் பன்னி யாகிய
மங்கலை விடுத்திட மகள்வி ருத்தைதான்
அங்குள இகுளையர் ஆயந் தன்னுடன்
செங்கயல் பாய்புனல் திளைப்பப் போயினாள். 79

காடுற வந்திடு கலுழி மாண்புனல்
ஆடினள் மகிழ்சிறந் தணங்க னாரொடு
மாடுறு பொதும்பர்போய் மலர்கொய் தன்னவை
சூடினள் இருந்தனள் தொடலை ஆற்றியே. 80

பாசிழை மங்கையர் பண்ணை யோடுறீஇ
ஆசறு பொதும்பினும் அணங்கை யன்னவள்
மாசறு தாரகை மரபிற் சூழ்தருந்
தேசறு மதியெனத் திரும்பும் வேலையே. 81

உருகெழு கனையொலி உருமுக் கான்றுடங்
கருமுகில் இஃதெனக் கனன்று காய்கனல்
சொரிதரும் விழியது சூர்த்த மெய்யது
பெருமத நதியொடு பெயருகின்றதே. 82

தாழுறு கரத்தது தடத்தின் பால்பெனக்
காழுறும் எயிற்றது கறைகொள் காலதால்
ஏழுயர் குறும்பொறை இபமொன் றோற்றெதிர்
பாழிய வரைதுகள் படுத்துச் சென்றதே. 83

காண்டலும் வெருவினர் கவன்றவ் வாறுசெல்
ஆண்டகை யோர்களும் அகன்று சிந்தினார்
நீண்டிடு கடலிடை நிமிர்ந்த வெவ்விடம்
ஈண்டலும் இரிந்தபுத் தேளிர் என்னவே. 84

கன்னிகை விருத்தையாள் கண்டு துன்புறு
அன்னமென் னடையினர் அகன்று சிந்தலும்
என்னினி இழைப்பதென் றிரங்கி யேங்கியே
உன்னருங் கடுப்பினில் உஞற்றி யோடலும். 85

**கீழ்ந்தறை போகிய கிளைஞ ராமெனத்**
தாழ்ந்திடு பசும்புதல் செறியத் தான்மறைந்
தாழ்ந்திடு கூவலொன் றணுக அன்னதில்
வீழ்ந்தனள் அழுந்தினள் விளிவுற் றுளரோ. 86

முடங்குளை அலங்குறு முதிய பூநுதல்
மடங்கலின் ஏறெதிர் வரினும் மாறுகொள்
கடங்கலுழ் மால்கரி கல்லென் ஆர்ப்பொடு
நடந்தது மலையமா றூடு சாரவே. 87

இரிந்திடு மாதரார் யாண்டு மாகியே
விரிந்திடு வோர்குழீஇ வியர்க்கு மேனியர்
சரிந்திடு கூந்தலர் தளரும் நெஞ்சினர்
பிரிந்திடும் உவகையர் பெயர்ந்து நாடினார். 88

தண்டம தெங்கணுந் தானஞ் சிந்திடக்
கொண்டலின் எய்திய கோட்டு மாதிரங்
கண்டிலர் கன்னிகை தனையுங் காண்கிலர்
உண்டிலை யெனவுயிர் உயிர்ப்பு நீங்கினார். 89

மண்ணிடை யாறென வழிக்கொண் டேகவே
கண்ணிணை புனலுகக் கலுழ்ந்து சோர்வுறுத்

துண்ணென உணர்வுறத் துளங்கிச் சூழ்கனல்
புண்ணுறு வோரெனப் புலம்பல் மேயினார். 90

வேறு

பெண்ணுக் கணிகலமே பேரழகுக் கோருருவே
கண்ணுக் கணியே கமலத்துச் செந்திருவே
மண்ணிற் புனல்படிந்தாய் வானதியும் ஆடுவதற்
கெண்ணித் துணிந்தோ எமைவிட்டுப் போயினையே. 91

வன்னப் புனலாட்டி வல்லே புறங்காத்தென்
மின்னைத் தருதி ரெனவே விடைகொடுத்த
அன்னைக்கென் சொல்வேம் அடுகளிற்றின் முன்னாக
உன்னைத் தனிவிட் டுயிர்கொண்டு போந்தனமே. 92

ஐயர் உசத்தியரும் அன்னையெனும் மங்கலையும்
வையம் பரவுகின்ற மாதுலராங் குச்சகருங்
கையறவின் மூழ்கக் கரந்தாய் இனியொருகால்
செய்ய முகமுந் திருநகையுங் காட்டாயோ. 93

என்னப் பலவும் புலம்பி இரங்குற்றே
உன்னற் கருஞ்சீர் உசத்தியன்றான் நற்றவத்தின்
மன்னுற்ற தெய்வ வனத்தின் மனைவாழ்க்கைப்
பன்னிக் கிவையுரைத்துப் பாவைநல்லார் ஆவலித்தார். 94

கேட்டிடலும் அன்னை வயிறதுக்கிக் கேழ்கிளர்தீ
ஊட்டரக்கே யென்ன உருகி மனமறுகி
வாட்டடங்கண் நீர்குதிப்ப வாய்வெரீஇத் தன்கணவன்
தாட்டுணையில் வீழ்ந்து புகுந்தபடி சாற்றினளால். 95

ஒன்றுபுரி காட்சி முனிவன் உவைகேட்டுக்
கன்றுபிரி தாயின் கவன்றரற்றிக் கன்னியொடு
சென்றுபிரி வுற்றோரை நோக்கிச் சினக்களிறு
கொன்றதுவோ அஞ்சாது கூறுமெனச் செப்புதலும்.

தூயபுன லாடித் துறைபுகுந்து சூழ்பொதும்பில்
ஆயமுடன் ஆடி யகன்றிங்கு வந்திடலுங்
காயுமழல் வெங்கட் கடகளிறு வந்ததுகண்
டோயுமுணர் வெய்தி எல்லோமும் ஓடினமால். 97

ஓடி யுலையா ஒருவர் நெறியொருவர்
கூடல் இலதா அணியின் குழாஞ்சிந்திச்
சாடு மதகரியில் தப்பி விருத்தைதனைத்
தேடியங்கண் காணாது சென்றனம்யாம் என்றிடலும். 98

சென்றாங்கவ் வெல்லைதனில் தேடித் தியங்குற்று
நின்றான் மகள்தன் நிறங்கிளரும் பொற்கலனோர்
ஒன்றாக வெவ்வே றொருநெறியில் சிந்திடக்கண்
டென்றாய் படர்ந்தநெறி ஈதுகொலென் றேமுற்றான். 99

பூண்போ லியநெறியே தொட்டுப் புகல்விதனைக்
காண்போ மெனவே கனங்குழையா ரோடேகி
மாண்போய கூவலொன்று வந்துறுக ஆங்கதனில்
சேண்போய தன்மகளைக் கண்டு தெருமந்தாள். 100

வேறு

கூவலுறு வதுநோக்கி நெடிதுயிர்த்து விழிவழிநீர் குதிப்பக் குப்புற், றுவலியா மகளையெடுத் தகன்கரையின் பாற்படுத்தி அழுங்கலோடும், பாவையர்கள் தழீஇக்கொண்டு புலம்பினரால் அதுகேட்டுப் பயந்த நற்றாய், காவிலுறு கோகிலம்போல் நெடிதரற்றிப் பெருந் துயரக் கடலுட் பட்டாள். 101

தன்பால்வந் தவதரித்த நங்கைதனைக் கைவிட்டுத் தரியா ளாகி, அன்பாலே உயிர்பதைப்ப வயிறதுக்கி ஆகுலியா அரற்றி யேங்கி, மின்பாலோர் மின்படிந்த தன்மையெனா அவளாக மிசையே வீழ்ந்து, தென்பாலிற் புகுந்தனையோ ஓமகளே யெனப்புலம்பித் தேம்ப லுற்றாள். 102

அன்னேயோ அன்னேயோ ஆகொடிய தறனேயோ அறியேன் அந்தோ, முன்னேயோ நெடுங்காலங் குழவியின்றிப் பெருநோன்பு முயன்று பெற்ற, மின்னேயோ உயிரிழந்து வெள்ளிடையிற் கிடந் திடுமால் விதியார் செய்கை, இன்னேயோ யாரொருத்தி பெண்பிறந்து பெற்றபயன் இதுவே யன்றோ. 103

புலிக்கணங்கள் திரிகானில் ஒருமானை வளர்த்ததனைப் போக்கி நின்றே, அலக்கணுறு வோரெனவே கைவிட்டுத் தமியேனும் அழுங்கா நின்றேன், மலர்க்கமலத் திருவனைநிகர் என்மகளைக் கொல்லியமுன் வந்த தந்தக், கொலைக்களிற்றின் வடிவன்றே கொடியேன் செய் பெரும்பவத்தின் கோல மன்றோ. 104

அறங்காட்டிற் சென்றதுவோ தெய்வதமும் இங்கிலையோ அரிதா முத்தித், திறங்காட்டுந் தவநெறியும் பொய்த்தனவோ **கலியுமினிச் சேர்ந்த தேயோ**, மறங்காட்டும் வனக்களிறு வந்தடர்க்க ஈண்டெனது மாது மாண்டு, புறங்காட்டிற் கிடந்திடுமோ என்னேயென் னேயிது வோர் புதுமை யாமே. 105

வேறு

என்றிவை பலவும் பன்னி இடருழந் தரற்றும் வேலை
மன்றலங் குழலின் மாதர் வளைந்தனர் இரங்கி மாழ்க
ஒன்றிய கேளிர் அல்லா ரியாவரும் உருகி நைந்தார்
அன்றவண் நிகழ்ந்த பூசல் ஆகுலம் அறைதற் பாற்றோ. 106

கோட்டமில் சிந்தை யோனுங் குச்சகன் குறுகி யங்கண்
நாட்டநீர் பனிப்பச் சோருந் நங்கையர் தம்பா லெய்தி
மீட்டினித் தருவன் மாதை விம்மலிர் என்று வேறோர்
மாட்டுற விருந்த தந்தைக் கினையன வகுத்துச் சொல்வான். 107

மறைமுத லாய நுண்ணூல் மருளற உணரா மாக்கள்
சிறியரே முதியர் பாலர் சேயிழை மகளிர் இன்னோர்
உறுவதோர் அவலஞ் செய்தாய் ஊழ்வினை முறையும் ஓராய்
அறிவநீ இன்னே யாயின் ஆரிது தணிக்கற் பாலார். 108

கேளையா மனத்தில் துன்பங் கிளத்தலை கேடு நீங்கி
நீளயா வுயிர்த்தார் போலிந் நேரிழைக் கன்னி தன்னை
நாளையான் விளித்து நின்பால் நல்குவன் நல்க நீநங்
காளையா னவற்றுப் பின்னுட் கடிமணம் புரிதி அன்றே. 109

ஐயமென் றுளத்தி லுன்னி அழுங்கலை விதியு மற்றே
மெய்யுணர் வதனுற் கண்டாம் விருத்தைதன் யாக்கை தன்னை
மொய்யுறு தயிலத் தோணி மூழ்குவித் திருத்தி யின்றே
ஒய்யென நோற்று மீட்டுத் தருகுவன் உயிரை யென்றான். 110

சாற்றிய துணர்ந்து தாதை தயிலத்தி லிட்டு மாதைப்
போற்றினன் இருப்ப மேலோன் போயொரு பொய்கை மூழ்கிக்
கூற்றுவற் புகழ்ந்து நோற்பக் கொடுங்குழை மடவார் அஞ்சக்
காற்றெறன முன்னர் வந்த களிறுமீண் டணைந்த தம்மா. 111

தடமிகு புனலுட் புக்குத் தாளினல் உழக்கிச் சாடிப்
படவர வனைய செய்கைப் பருவலித் தடக்கை தன்னல்
இடைதொறுந் துழாவி நின்ற இருந்தவ முனிவற் பற்றிப்
பிடர்மிசை யேற்றிக் கொண்டு பெரிதுசேண் பெயர்ந்த தன்றே. 112

கோதறு குணத்தின் மேலாங் குச்சகன் என்னுந் தொல்பேர்
மாதவன் உணர்ந்து பின்னர் மதக்களி றதனை நோக்கி
ஈதெனைப் பற்றிச் செல்வ தென்கொல்கா ரணமென் றெண்ணி
ஓதியின் வலியா லன்ன தூழ்முறை உன்ன லுற்றான். 113

வேறு

மாவ தத்தினை இழைத்திடும் பூட்கையின் மதநீர்
காவ தத்தினுங் கமழ்தரு கலிங்கநாட் டதன்பால்
ஆவ தத்தநேர் மாக்கள்வாழ் அரிபுரம் அதனில்
தேவ தத்தன்என் றுளன்ஒரு வணிகரில் திலகன். 114

தவத்தின் அன்னவன் பெறுமகன் தருமதத் தன்எனப்
புவிக்கண் மேலவர் புகழ்செய அறம்புரி புகழோன்
கவற்சி யின்றியே மூவகைப் பொருளையுங் காண்போன்
உவப்பு நீடிய இருநிதிக் கிறையினும் உயர்ந்தோன். 115

தந்தை அன்னையும் இறத்தலுந் தமியனே யாகிச்
சிந்தை வெந்துயர் உழந்துபின் ஒருவகை தேற
அந்த வேலையின் அவன்பெருந் திருவினை அகற்ற
வந்து தோன்றினன் மனமருள் செய்வதோர் வாதி. 116

முண்டி தப்படு சென்னியன் தாதுவின் முயங்கு
குண்ட லத்தினன் கோலநூல் மார்பினன் நீற்றுப்

புண்ட ரத்தியல் நெற்றியன் கஞ்சுகன் புதியோன்
கண்டி கைக்கலன் புனைந்துளோன் வேத்திரக் கரத்தோன். 117

அவனைக் கண்டனன் அடிமுறை வணங்கினன் அருவாஞ்
சிவனைக் கண்டன னெனப் பெருமகிழ் சிறந்தான்
புவனிக் குள்ளவர் யாவரினுஞ் சாலவும் புதியர்
தவமிக் கோரிவர் என்றுகொண் டுறையுளிற் சார்ந்தான். 118

பொன்ன ருங்கலந் திருத்துபு குய்யுடைப் புழுக்கல்
நன்ன லம்பெற அருத்தினன் முகமனும் நவின்றான்
பின்னர் அன்னவன் றனையெதிர் நோக்கினன் பெரியோய்
என்னி வண்வந்த தென்றனன் வணிகருக் கிறைவன். 119

ஈசன் தந்திடு விஞ்ஞையொன் றெமக்குள தெவர்க்கும்
பேசுந் தன்மைய தன்றது குரவர்பாற் பெறினும்
நேசம் பூண்டவர்க் குரைப்பது நெஞ்சினில் சிறிதும்
மாசின் றுயரிற் குணர்த்துவன் அஃதென வகுத்தான். 120

பரத மேயிது பம்புவின் வந்ததோர் தகைசால்
இரத முண்டது பொன்னெனச் செய்தனம் எமக்கோர்
அரிது மன்றது போல்வன பலவுள அவைதாம்
விரத மாதவர் அல்லதி யார்கொலோ விரும்பார். 121

காரி ரும்பையும் நாகத்திற் காட்டுதுங் கரிய
சீரி ரும்பினைப் பொன்னென உரைபெறச் செய்வாம்
மேரு வுங்கயி லாயமும் என்றிரு வெற்பை
யாரும் நோக்கவே காட்டுதும் இவைநமக் கரிதோ. 122

எய்தும் ஈயமும் இரதமும் வெள்ளிய தெனவே
செய்து மன்றியும் வங்கத்திற் செம்பொனுந் தெரிப்பாம்
நொய்தின் அன்னது வலியுறக் காட்டுதும் நுவலுங்
கைத வம்பயில் மாக்களுக் கிணையன கழறும். 123

இரும்பி னிற்செம்பு வாங்குவம் ஈயமும் அற்றே
வரம்பி லாததோர் தரணியண் டங்களை மரபின்
அரும்பொன் வண்ணம தாக்குவம் வல்லவா றதைய
விரும்பி னுமெனின் யாண்டுமோர் அளப்பில வேண்டும். 124

ஒன்று கோடிபொன் னாக்குவங் கோடிய துளவேல்
குன்று போலவே கோடியிற் கோடிசெய் குவமால்
நின்ற னக்குள பொருளெலாந் தருதியேல் நினது
மன்றல் மாளிகை நிதிக்கிடம் இல்லென வகுப்பாம். 125

என்ன வேமொழி சோரனை வணங்கினன் இமைப்பின்
முன்னர் உள்ளதுந் தான்றனை துரிமையால் முயலப்
பின்னர் எய்திய நிதியமும் பேதையான் அவற்றின்
மன்னு பூண்களுங் கொணர்ந்தனன் முன்புற வைத்தான். 126

வைத்த மாநிதி நோக்கலும் வணிகரில் திலகர்
உய்த்த செல்வமும் இதுகொலோ ஓவென உரையாக்
கைத்த லங்கொடு கைத்தலம் புடைத்துடுக் கணங்கள்
நத்த வேலையில் ஒருங்குபட் டாலென நகைத்தான். 127

இந்த நின்பொருள் நம்முடை விஞ்சையில் இறைக்கும்
வந்தி டாதுநாம் உருக்குறு முகந்தனில் வழுவிச்
சிந்து கின்றதற் கிலையிது நமதுபின் திரியின்
அந்த மில்பொருள் கொடுக்குவம் வைத்தியென் றறைந்தான் 128

முனியல் ஐயநீ வேண்டிய பெருநிதி முழுதும்
இனிது நாடியே கொணருவன் இருத்தியென் றுரைத்துப்
புனையும் ஆடையும் நிலங்களும் மணிகளும் பூணும்
மனையும் மாக்களும் பகர்ந்தனன் நிகரிலா வணிகன். 129

பொரும தத்தினை இழைத்திடு மருப்புயர் புழைக்கைப்
பெரும தக்கரி யென்னவே மயங்கினன் பெரிதும்
வரும தத்தமென் றறத்தையும் பகர்ந்துமெய் வணிகன்
தரும தத்தனும் பெயரினை நிறுவினன் தரைமேல். 130

இத்தி றத்தினில் தேடிய பெருநிதி எனைத்துங்
கைத்த லங்கொடு தாங்கியே கரவன்முன் காண
வைத்து நிற்றலும் மகிழ்ந்தனன் அவையெலாம் வாங்கி
மொய்த்த செங்கனல் தீயிடை உருக்குதல் முயன்றான். 131

திரட்டி யாவையும் ஒருரு வாக்கினன் செழும்பொன்
இரட்டி தூக்கிய இரதமாங் கொருசிலை யிட்டு
மருட்டி ஆடக முழுவதும் உரைத்தவை வலிதா
உருட்டி மட்பெருங் குகையினில் மருந்தையுள் ளுறுத்தான். 132

பண்ணு றுத்திய கனகமுள் ளிட்டதன் பாலும்
எண்ணு றுத்திய மிசைக்கணுங் களங்கமொன் றிட்டு
மண்ணு றுத்திநற் றுகில்கொடு பொதிந்தனன் மருங்கிற்
கண்ணு றுத்திய செந்தழற் புடைமிசை கரந்தான். 133

நூற்று நான்கொடு நான்குகுக் குடபுடம் நொய்தின்
வீற்று வீற்றதா விட்டது நோக்கினன் மிகவும்
மாற்று வந்தது பழுக்குமோர் வராகியின் மருளேல்
காற்றி லாததோர் உறையுள்காட் டென்றனன் கரவன். 134

சேமஞ் செய்ததோர் உறையுளைக் காட்டலுஞ் சென்று
வாமஞ் செய்ததோர் இந்தனக் குவான்மிசை மறவோர்
ஈமஞ் செய்தசெந் தழற்கொடு வராகிமே விட்டுத்
தூமஞ் செய்தனன் அங்கியும் அவனெதிர் துரந்தான். 135

ஓங்கி நாட்டநீர் பொழிதர ஆருயிர் உலைய
வீங்கு கின்றமெய் வெதும்புற எங்கணும் வியர்ப்ப

மூங்கை யாமென மொழிகிலான் போவது முயலான்
பாங்கி ருந்திடு வணிகர்கோன் பட்டதார் பகர்வார். 136

எல்லை அன்னதிற் பொதிந்திடு பொற்குகை யெடுத்து
மெல்லெ னத்தன தாடையிற் கரந்தனன் வெய்யோன்
வல்லை யக்குகை போலஒன் றிருந்தது மருங்கில்
செல்ல வைத்தனன் தமற்பெரும் புகையையுந் தீர்த்தான். 137

தத்த இக்குகை நின்கையில் தாங்கினை தமர்மேல்
வைத்தி என்றனன் அவனது புரிதலும் மரபின்
அத்த ருஞ்செயற் புரியவா யாவையும் அமைத்து
வித்த கம்பெறச் சேமியா ஒருசெயல் விதித்தான். 138

வேறு

உண்டி இகந்துரை யாடலை யாகிப்
பெண்டிரை வெஃகல் பெருப்பிறர் தம்மைக்
கண்டிடல் இன்று கருத்தினில் எம்மைக்
கொண்டிரு முப்பகல் கோதில் குணத்தோய். 139

நெய்கமழ் செஞ்சடை நீலிதன் முன்னோர்
மொய்கனல் வேள்வி முடித்திடல் உண்டால்
செய்கடன் அன்னது தீர்த்தபின் நாலாம்
வைகலின் வருதும் மற்றிவண் என்றான். 140

அம்முறை செய்கென ஆங்கவன் அடியை
மும்முறை தாழ்ந்து முதற்பெரு வணிகச்
செம்மல வன்புடை சென்றிலன் நின்றான்
மைம்மலி சிந்தையன் வல்லை அகன்றான். 141

காவத மோரொரு கன்னலின் ஆகப்
போவது செய்து புறத்துரு மாறி
வாவினன் வேறொர் வளாகம தூற்றான்
ஏவலின் வைகினன் இத்தலை வணிகன். 142

முப்பகல் போதலும் மூதறி வுள்ளோன்
செப்பிய நாள்வரை சென்றுள வன்றே
இப்பகல் வந்திலன் என்னை அவன்சொல்
தப்புவ தோவென வேதனை கின்றான். 143

நீடிய தொல்புகழ் நீலி இருக்கை
நாடினன் மேதரு நன்னகர் எங்கும்
தேடினன் மாலுறு சிந்தைய னானான்
வாடினன் மீண்டனன் மாளிகை வந்தான். 144

அடுத்துமுன் வைத்த அருங்குகை தன்னை
எடுத்தது நோக்க இரும்பது வாக
வடுத்தவிர் சிந்தையன் மாயைகொ லென்னா
விடுத்தனன் அன்னது வீழுமுன் வீழ்ந்தான். 145

அத்தம் அனைத்தும் அகன்றிட லோடும்
பித்தின் மனத்தொடு பீழை யனுகி
எய்த்தனன் ஆயுளின் எல்லையும் எய்தத்
தத்தனும் விண்ணிடை சார்ந்தனன் அன்றே. 146

அறந்தனை விற்ற அருஞ்செய லாலே
மறந்தரு தத்தனு மால்கரி யாகிப்
பிறந்தனன் முன்னுறு பெற்றிய தெல்லாம்
மறந்தனன் என்று மனத்திடை கொண்டு. 147

மாற்றுவன் இப்பவம் வல்லையி னென்னுச்
சாற்றினன் முன்பு தவம்புரி வேலை
நோற்றிடு மோர்பகல் நோன்பவை தான்இவ்
வாற்றல்இ பத்துழை யாகுக வென்றான். 148

இப்பரி சங்கண் இயம்புத லோடும்
அப்பொழு தன்னவன் ஆண்டுறு வேழம்
மெய்ப்படி வந்தனை வீட்டினன் யாருஞ்
செப்பரி தாகிய தேவுரு வானான். 149

அந்தர துந்துபி யார்த்தன வானோர்
சிந்தினர் பூமழை சேணிடை நின்றும்
வந்தது தெய்வத மானம தன்பால்
இந்திர னுமென ஏறினன் 150

பாசிழை மங்கையர் பற்பலர் சுற்று
வீசினர் சாமரை விண்ணுறை கின்றோர்
ஆசிகள் கூறினர் அங்கவண் நிற்குந்
தேசிக னரடி செங்கை குவித்தான். 151

நோக்கினன் மாதவ நோன்மை யுளானை
வாக்கினில் வந்தன வந்தனை செய்தான்
நீக்கரும் வல்வினை நீக்கினை யென்னு
மேக்குயர் புங்கவர் விண்ணுல குற்றான். 152

யேயவன் மேவுத லோடு
மண்ணிடை நின்றிடு மாதவன் முன்போல்
எண்ணரு நோன்ப தியற்றலும் அன்னோன்
கண்ணிய தென்றிசை காவலன் வந்தான். 153

முன்னுறு கூற்றுவன் முப்பகை வென்றோய்
உன்னிலை நோக்கி உவந்தனம் நம்பால்
என்னைகொல் வேண்டிய தென்றலும் அன்னோன்
தன்னடி வீழ்ந்திது சாற்றுதல் உற்றான். 154

உந்திய சீர்த்தி உசத்தியன் மானென்
மைந்தன் மணஞ்செய வந்தனன் அன்னாள்

மூந்துறு னென்னல் முடிந்தனள் முன்போல்
தந்தருள் என்றிது சாற்றுத லோடும். 155

அத்தகு போழ்தினில் அந்தகன் என்போன்
இத்தவன் வேண்டிய ஏந்திழை ஆவி
வைத்தன னேயது வல்லையின் மீட்டிங்
குய்த்திடு வாயென ஒற்றொடு சொற்றான். 156

கொற்றவன் இங்கிது கூறி மறைந்தான்
சொற்ற துணர்ந்திடு தூதுவன் முன்போய்
உற்றிடு மவ்வுயி ரைக்கொடு போந்து
மற்றவள் யாக்கையுள் வந்திடு வித்தான். 157

வேறு

உடற்குளுயிர் வந்திடலும் புகுந்ததுமெய் புணர்வுசிறி துயிர்த்த நாசி, துடித்தனகால் பதைத்ததுரந் துளங்கிமுகம் விளங்கியதால் துவண்ட தாகம், எடுத்தனகை யசைந்தனதோ ளிமைத்தனகண் விழித்தனவால் இளைய காலை, மடக்கொடியுந் துயிலுணர்ந்தாள் போலெழுந்தாள் எல்லோரும் மருங்கிற் சூழ்ந்தார். 158

அன்னையவள் தனைத்தழுவி இரங்குற்றாள் தந்தையெடுத் தணைத் துப் பல்காற், சென்னிதனில் உயிர்த்தேதன் இருகுறங்கின் மீமிசையே திகழச் சேர்த்தி, என்னடிகள் என்கடவுள் எனதுதவப் பயனாகும் எந்தை யென்னல், சொன்னபடி தவமியற்றி உய்வித்தான் இவனை யென்று துணிவிற் சொற்றான். 159

சுற்றுகின்ற கிளைஞர்களும் அல்லோரும் அதிசயிப்பத் தொல்லை ஞாலம், பெற்றதிரு அனையாள்தன் பெண்ணணங்கை முகநோக்கிப் பேதை நீயீண், டுற்றதுவும் இறந்ததுவும் மீண்டதுவும் முறைப் படவே உரைத்தி யென்னப், பொற்றொடியாள் அதுவினவிப் புகுந்த தொரு பரிசனைத்தும் புகல லுற்றாள். 160

நீடியமங் கையர்பண்ணை தன்னுடனே போந்ததுவும் நெடுநீர்க் கான்யா, றாடியதும் மீண்டதுவுங் கடகளிறு போந்ததுவும் அதனைக் கண்டே, ஓடியதுந் தானொருத்தி தனித்ததுவுங் கூவலிடை உலந்து வீழ்ந்து, வீடியதும் மீண்டதுவுந் தென்றிசைக்கண் நிகழ்வனவும் விரித்துச் சொற்றாள். 161

சொன்னமொழி யதுகேளா மிகமகிழும் வேலைதனில் துகளில் தூயோன், கொன்னவிலும் முத்தலைவேற் கூற்றுவன்றன் அருள் பெற்றுக் குறுகலோடு, முன்னுறவே எதிர்சென்று பெருங்கிளையும் பன்னியுமா முனியும் பெற்ற, கன்னியும்வந் தடிவணங்கிப் போற்றி செய வரன்முறையே கருணை செய்தான். 162

என்னுயிரும் பெருங்கிளைஞர் தம்முயிரும் இல்லறத்திற் கியன்ற பன்னி, தன்னுயிரும் நட்டோர்கள் தமதுயிரும் நின்றிடயான் தவத்திற் பெற்ற, மின்னுயிர்தந் தருளினையால் அரிதோரிற் கிதுவம்மா வேலை

ஞாலம், மன்னுயிர்காத் தளிப்பவனும் நீயெனவே எனதுள்ளம் மதித்த தன்றே. 163

வள்ளலையுன் றிருவுளத்தை யாருணர்வார் கவுச்சிகனு மகற் கியான் பெற்ற, தெள்ளமிர்த மனையமொழி விருத்தையெனுங் கன் னிகையைத் திசையின் நாடிக், கொள்ளுதற்கு வந்தனையோ கூற்றுவ னுற் போனவுயிர் குறுகி மீண்டு, மெள்ளவரும் படியழைத்துத் தந் திடுவான் வந்தனையோ விளம்பு கையா. 164

எனமுனிவன் தனைநோக்கி முகமன்கள் இவைபலவு மெடுத்துக் கூறி, அனையவனை யுடன்கொண்டு சுற்றத்தா ரெல்லாரு மடைந்து சூழ, மனைவியொடும் புதல்வியொடும் மடமாதர் தங்களொடும் வல்லை யேகித், தனதுறையுள் இடைப்புகுந்து வீற்றிருந்தான் ஆற்றரிய தவத் தின் மேலோன். 165

பின்புமொரு சிலவைகல் குச்சகனை அவணிருத்திப் பெரியோய் இங்ஙன், என்புதல்வி தனையளிப்பன் உன்மதலை தனைக்கொண்டே யேகு கென்னத், தன்புதல்வற் கொடுவரலும் விருத்தையெனுங் கன்னிகையைத் தழல்சான் றாக, அன்பினொடு நன்னுளி லோரை தனில் விதிமுறையே அருள்செய் தானல். 166

வேறு

அருள்புரிந் திடுதலும் அன்பி னுன்இயைந்
திருவரும் இல்லறம் இயற்றப் பல்பகல்
கருணைசெய் குச்சகன் கண்டு மாதவம்
புரிதர வேவட புலத்திற் போயினன். 167

போதலும் இருந்திடும் புனித வேதியன்
மாதவ வலியினல் மாதின் நோன்பினல்
மேதினி வியந்திட மிருகண் டென்னவோர்
காதலன் உதித்தனன் கணிப்பில் காட்சியான். 168

அப்புதல் வற்கியாண் டாறு சென்றுழி
மெய்ப்பிர மச்செயல் விளங்கு பான்மையால்
முப்புரி நூல்வினை முடித்துத் தாதைபோல்
செப்பரு மாதவஞ் செய்யப் போயினன். 169

ஊற்றமா மிருககண் டுயன் என்றிடும்
ஆற்றன்மா முனிவரன் அகல வன்னவன்
தோற்றமா கியசுதன் தொன்மை நாடியே
போற்றினன் ஆதியிற் புரியுஞ் செய்கடன். 170

சொற்கலை தெரிமருத் துவதி யென்றிடும்
முற்கலன் மகள்தனை முறைவ ழாதுபின்
நற்கலை யணிகலன் நல்கி நீக்கிய
வற்கலை யுடையினன் வதுவை முற்றினன். 171

அநாமயம் என்னும் பேரொடு
பொருந்திய வனத்திடைப் புதல்வர் இன்றியே
வருந்தினன் தமரொடும் மாது தன்னொடும்
அருந்தவன் காசியை அடைதல் மேயினன். 172

அடைந்ததோர் பொழுதினில் அமரர் யாவருங்
கடைந்திடு திரைக்கட லனைய கங்கைநீர்
குடைந்தனன் ஆடினன் குழுமி மாதவர்
மிடைந்திடு மறுகிடை விரைவில் மேவினான். 173

பொன்றிரண் மாமதில் புடைய தாமணி
கன்றிகை யென்பதோர் கடவுள் ஆலயஞ்
சென்றனன் சூழ்ந்தனன் திங்கள் வேணியான்
மன்றமர் திருவடி வணங்கிப் போற்றினான். 174

மெய்ப்படு மறையுணர் மிருகண் டென்பவன்
அப்பெருங் கோயிலுக் கணித்தொர் பாங்கரில்
செப்புறும் ஆகமத் தெளிவு நாடியே
மைப்பெருங் கண்டனை வழிபட் டானரோ. 175

ஆதவம் பனிமழை அனிலத் தச்சுறுப்
பாதவ மாமெனப் பருவ மாறினும்
பேதைபங் குடையவெம் பிரானை உன்னியே
மாதவம் புரிந்தனன் மதலை வேண்டியே. 176

அருந்தவம் ஓரியாண் டாற்றத் தொல்லைநாட்
பொருந்திய மூவெயில் பொடித்த புங்கவன்
வரந்தனை உதவுவான் வந்து தோன்றலும்
இருந்தவ முனிவரன் இறைஞ்சிப் போற்றினான். 177

முந்துறு முனிவரன் முகத்தை நோக்கிநீ
சிந்தையில் விழைந்ததென் செப்பு கென்றலும்
மைந்தனை வேண்டினன் வரத்தை நல்கென
எந்தையும் முறுவல்செய் தினைய கூறுவான். 178

வேறு

தீங்குறு குணமே மிக்குச் சிறிதுமெய் யுணர்வி லாமல்
மூங்கையும் வெதிரு மாகி முடமுமாய் விழியும் இன்றி
ஓங்கிய ஆண்டு நூறும் உறுபிணி யுழப்போ னாகி
ஈங்கொரு புதல்வன் தன்னை யீதுமோ மாத வத்தோய். 179

கோலமெய் வனப்பு மிக்குக் குறைவிலா வடிவ மெய்தி
ஏலுறு பிணிகள் இன்றி எமக்குமன் புடையோ னாகிக்
காலமெண் ணிரண்டே பெற்றுக் கலைபல பயின்று வல்ல
பாலனைத் தருது மோவுன் எண்ணமென் பகர்தி யென்றான். 180

மாண்டகு தவத்தின் மேலாம் மறைமுனி அவற்றை யோரா
ஆண்டவை குறுகி னாலும் அறிவுள னாகி யாக்கைக்

ஈண்டொரு தவறு மின்றி எம்பிரான் றின்பா லன்பு
பூண்டதோர் புதல்வன் றானே வேண்டினன் புரிக வென்றான்.181

என்றிவை துணிவி னாலே இசைத்தலும் ஈசன் நிற்கு
நன்றிகொள் குமரன் றன்னை நல்கின மென்று சொல்ல
நின்றிடு முனிவன் போற்றி நெஞ்சகம் மகிழ்ச்சி யெய்தி
ஒன்றிய கேளி ரோடும் உறைந்தனன் உறையும் நாளில். 182

பூதல இடும்பை நீங்கப் புரைதவிர் தருமம் ஓங்க
மாதவ முனிவர் உய்ய வைதிக சைவம் வாழ
ஆதிதன் னருளி னாலே அந்தகன் மாள அன்னான்
காதலி உதரத் தாங்கோர் கருப்பம்வந் தடைந்த தன்றே. 183

அடைதலும் அதனை நோக்கி அறிதரு முனிவன் ஆண்டை
விடையவன் அடியார் யார்க்கும் வேண்டிய வேண்டி யாங்கே
நெடிதுபல் வளனும் ஈந்து நிறைதரு திங்க டோறுங்
கடனியல் மரபு மாற்றிக் காசியின் மேவி னானே. 184

கறையுயிர்த் திலங்கு தந்தக் காய்சின அரவங் கவ்வக்
குறையுயிர்ப் படிவத் திங்கள் அமிர்தினைக் கொடுத்திட் டாங்கு
மறையுயிர்த் தருளுஞ் செவ்வாய் மதலையை வயாவின் மாழ்கிப்
பொறையுயிர்த் தருளில் தந்தாள் பொறைதரு திருவைப் போல்வாள்.

மீனமும் முடிந்த நாளு மேவுற மிதுனஞ் செல்ல
ஊனமில் வெள்ளி தானும் ஒண்பொனும் உச்ச மாகுந்
தானமுற் றினிது மேவத் தபனனே முதலா வுள்ள
ஏனையர் முனிவர் நாகர் இடந்தொறும் இருப்ப மன்னோ. 186

நண்ணினன் புவியின் மைந்தன் நவமணிக் குலமும் பொன்னுஞ்
சுண்ணமும் மலருந் தாதுந் தூயமென் கலவைச் சாந்தும்
தண்ணுறு நானச் சேறுந் தலைத்தலைக் கொண்டு தாவில்
விண்ணவர் மண்ணு ளோர்கள் வியப்புற வீசி ஆர்த்தார். 187

தேவதுந் துபிகள் ஆர்த்த செய்தவை யோம்பி மாற்றும்
மூவர்கள் அன்றி ஏனோர் முறைமுறை ஆசி செய்தார்
யாவதென் றுணர்தல் தேற்றா திங்கர் அன்றி நேமி
காவல்செய் உலகம் யாவுங் களிமயக் குற்ற வன்றே. 188

தந்தையும் அதனைக் கேளாத் தடம்புனற் கங்கை மூழ்கி
அந்தணர் முதலோர்க் கெல்லாம் ஆடகம் பலவும் நல்கி
முந்துறு கடன்கள் ஆற்ற முளரிமேல் முனிவன் மேவி
மைந்தனுக் குரிய நாமம் மார்க்கண்டன் என்று செய்தான். 189

மறுப்படாத் திங்கள் போல வளர்தலும் மதியந் தோறும்
உறுப்படை உபநிட் டானம் ஓதனம் பிறவும் முற்ற
நெறிப்படு மோரி யாண்டின் நெடுஞ்சிகை வினையும் ஆற்றிச்
சிறப்புடை இரண்டாம் ஆண்டிற் செவிநெறி புரித லுற்றான்.190

ஏதமில் ஐந்தின் மூந்நூல் இலக்கண விதியுஞ் செய்தே
ஓதிடுங் கலைக ளெல்லாம் உள்ளுற வுணர்த்துங் காலை
வேதமும் பிறவுங் கொண்ட வியன்பொருள் தெரிந்து மேலாம்
ஆதியே சிவனென் றெண்ணி அவனடி அரணென் றுற்றான். 191

அரனைமுன் இறைஞ்சி யன்னான் அன்பரைத் தாழ்ந்து தங்கள்
குரவனை வணக்கஞ் செய்து கோதறு முனிவர் தம்மைப்
பரவியே பயந்த மேலோர் பாதபங் கயங்கள் சூடிப்
பிரமமாம் ஒழுக்கம் நாளும் பேணினன் பிறப்பு நீப்போன். 192

இந்தவா றியலுங் காலை **எண்ணிரண் டான யாண்டும்**
**வந்ததால்** அதனை நோக்கி மைந்தனை நோக்கி வாளா
தந்தையும் பயந்த தாயுந் தனித்தனி இருந்து சால
வெந்துயர்க் கடலின் மூழ்கி விம்மலுற் றிரங்கி நைந்தார். 193

ஆங்கது மதலை காணா அடியிணை வணங்கி அன்னோர்
பாங்குற அணுகி நீவிர் பருவரல் உறுகின் றீரால்
ஈங்கிது வென்னே என்னும் யாதுமொன் றறிதல் தேற்றேன்
நீங்குமின் அவலம் நும்பால் எய்திய நிகழ்த்து மென்றான். 194

கூறிய மொழியுட் கொண்டு குமரநீ யிருக்க நம்பால்
வேறொரு துயர மெய்தி மெலிவதும் உண்டோ மேனாள்
ஏறுடை அமல மூர்த்தி யாண்டுநின் தனக்கீ ரைந்தும்
ஆறுமென் றளித்தான் அந்நாள் அடைதலின் அவலஞ் செய்தேம். 195

என்றுரை செய்த தாதை இடருறு முகத்தை நோக்கி
ஒன்றுநீர் இரங்கல் வேண்டாம் உயிர்க்குயி ராகி யென்றும்
நின்றிடும் அரனை யேத்தி அருச்சனை நிரப்பிக் கூற்றின்
வன்றிறல் கடந்து நும்பால் வல்லைவந் தடைவன் மன்னோ. 196

இருத்திரால் ஈண்டே என்னா ஏதுக்கள் பலவுஞ் செப்பிக்
கருத்துற நெடிது தேற்றிக் கான்முறை வணங்கி நிற்பத்
திருத்தகு குமரற் புல்லிச் சென்னியும் மோந்து முன்னர்
வருத்தமும் நீங்கிச் சிந்தை மகிழ்ந்தனர் பயந்த மேலோர். 197

இருமுது குரவர் தத்தம் ஏவலின் ஈசன் என்னும்
ஒருவன தருளும் அன்பு முடனுறு துணையாய்ச் செல்லப்
பொருவரு மகிழ்ச்சி பொங்கப் பொள்ளெனப் பெயர்ந்து போகித்
**திருமணி கன்றி கைப்**பேர்ச் செம்பொன்ஆ லயத்திற் புக்கான். 198

என்புநெக் குருகக் கண்ணீர் இழிதர வலஞ்செய் தீசன்
முன்புற வணக்கஞ் செய்து முடிமிசை யடிகள் சூடித்
தென்புலத் தொருசா ரெய்திச் சிவனுருச் செய்து பன்னாள்
அன்புடன் அருச்சித் தேத்தி அருந்தவம் இயற்றி யிட்டான். 199

**வேறு**

ஈசனும் அவ்வழி யெய்தி நற்றவம்
பூசனை அதனொடு புரிதி யாலது

மாசில தாதலின் மகிழ்ந்து நீயினிப்
பேசுக வேண்டிய பெறுதற் கென்னவே. 200

ஐயனே அமலனே அனைத்து மாகிய
மெய்யனே பரமனே விமல னேயழற்
கையனே கையனேன் காலன் கையுறு
துய்யநேர் வந்துநீ உதவென் றேதலும். 201

அஞ்சலை அஞ்சலை அந்த கற்கெனுச்
செஞ்சரண் இரண்டையுஞ் சென்னி சேர்த்தலும்
உஞ்சனன் இனியென ஓத வொல்லையில்
நஞ்சணி மிடற்றினுன் மறைந்து நண்ணினுன். 202

நண்ணிய பின்னரே நவையின் மைந்தனுக்
கெண்ணிரண் டாண்டெனும் எல்லை செல்லலும்
விண்ணிடை முகிலென விசைகொண் டொல்லையில்
துண்ணென வோர்யம தூதன் தோன்றினுன். 203

பண்டுமுப் புரமெரி படுத்த புங்கவன்
புண்டரீ கப்பதம் பரவும் பூசனை
கண்டனன் வெருவிமார்க் கண்டன் தன்னையான்
அண்டுவ தரிதென அகன்று போயினுன். 204

தீயெழ நோக்கியே சென்றி டாதுசேண்
போயதோர் வல்லியம் போலுந் தன்மையான்
வேயென வந்துபின் மீண்டு தென்புல
நாயகன் அடிதொழா நவிறல் மேயினுன். 205

இந்திரர் புகழ்தரும் இறைவ கேட்டியால்
அந்தியின் நிறமுடை அண்ணல் பாலுறு
சிந்தையன் அவனடி சேருஞ் சென்னியோன்
சந்தத மவன்புகழ் சாற்றும் நோன்மையோன். 206

ஈசன தருச்சனை இயற்று கின்றனன்
ஆசறு மனத்தினன் அறிவன் அந்தணன்
காசியின் இடத்தன்மார்க் கண்ட னுமெனப்
பேசிய சிறப்புடைப் பெயர்பெற் றேங்குவான். 207

அன்னதோர் பாலனை அணுக அஞ்சினன்
முன்னரும் ஏகலன் முக்கண் எம்பிரான்
தன்னுழை இருந்தனன் தண்ட நாயக
உன்னுதி இதுவென உணரக் கூறினுன். 208

கூறிய அளவையிற் கூற்றன் துப்பினை
ஆறிய செந்தழற் கருத்தி னுலெனச்
சீறினன் உயிர்த்தனன் சிறுவன் ஆங்கவன்
ஈறில னுகிய இறைவ னேவென்றுன். 209

தருதியென் கணகரை யென்று தண்டகன்
உரைசெய நின்றதோர் ஒற்றன் ஓடியே
வருதிர்நும் மழைத்தனன் மன்னன் என்றிடக்
கரணர்கள் வந்தனர் கழல்வ ணங்கினார். 210

இறையவன் அவ்வழி எவருங் காணுறா
அறைகழல் அண்ணலை யருச்சித் தேத்திய
மறுவறு காட்சியான் மார்க்கண் டப்பெயர்ச்
சிறுவனுக் கிறுவரை செப்பு மென்னவே. 211

சித்திர குத்தரென் றுரைக்குஞ் சீரியோர்
ஒத்திடும் இயற்கையர் உணர்வின் மேலையோர்
கைத்தல மிருந்ததங் கணக்கு நோக்கியே
இத்திறங் கேளென இசைத்தல் மேயினார். 212

கண்ணுதல் இறையவன் கருதி மேலைநாள்
எண்ணிரண் டாண்டென இறுதி கூறினான்
அண்ணலே யென்றதால் அதுவும் ஆங்கவன்
பண்ணிய பூசனை அறத்தின் பாலதே. 213

முதிர்தரு தவமுடை முனிவ ராயினும்
பொதுவறு திருவொடு பொலிவ ராயினும்
மதியின ராயினும் வலிய ராயினும்
விதியினை யாவரே வெல்லும் நீர்மையார். 214

ஆதலின் அமருல கடைவ தாயினன்
பேதுறு நிரயமும் பிழைத்து நீங்கினான்
ஈதவன் நிலைமையென் றிருவ ருஞ்சொல
மேதகு தண்டகன் வெகுட்சி எய்தினான். 215

அந்தகன் அத்துணை யமைச்ச னாகிய
வெந்திறற் காலனை விளித்துக் காசியில்
அந்தணன் ஒருமகன் அவன தாவியைத்
தந்திடு கென்றலுந் தரணி எய்தினான். 216

மற்றவன் காசியில் வந்து மாசிலா
நற்றவன் இருந்துழி நணுகி நான்மறைக்
கொற்றவன் பூசையுங் குறிப்பும் நோக்கியே
எற்றிவண் வருவதென் றெண்ணி யேங்கினான். 217

விழியிடைத் தெரிவுற மேவி மைந்தனைத்
தொழுதனன் யாரைநீ சொல்லு கென்றலும்
முழுதுல குயிரெலா முடிக்கும் ஆணையான்
கழலிணை யடிமைசெய் கின்ற காலன்யான். 218

போந்ததிங் கெவனெனப் புகலு வீரெனின்
ஆய்ந்தது மொழிகுவன் ஆதி நாயகன்

ஈந்திடு காலமெண் ணிரண்டு மென்னலே
தேய்ந்தது தென்புலஞ் சேர்தல் வேண்டுநீர். 219

வேறு

தடுக்குந் தன்மைய தன்றிது சதுர்முகத் தவற்கும்
அடுக்குந் தன்மையே புதுவது புகுந்ததோ அன்றே
கொடுக்குந் தன்மைபோற் காத்திடுந் தன்மைபோற் கூற்றன்
படுக்குந் தன்மையுங் கறைமிடற் றிறையருட் பணியே. 220

ஆத லால்உமை விளித்தனன் அன்றியும் அமலன்
பாத மாமலர் அருச்சனை புரிவது பலரும்
ஓத வேமன மகிழ்ந்துமைக் காணிய வுன்னிக்
காத லாகியே நின்றனன் தென்றிசைக் கடவுள். 221

அடுத லோம்பிய செய்கையன் என்பதால் அவனைக்
கொடியன் என்பரால் அறிவிலார் செய்வினை குறித்து
முடிவில் ஆருயிர் எவற்றிற்கும் முறைபுரிந் திடலால்
நடுவன் என்கின்ற தவன்பெயர் உலகெலாம் நவிலும். 222

சிந்தை மீதினில் யாவதும் எண்ணலீர் தென்பால்
அந்த கன்புரம் அடைதிரேல் அவனெதிர் அணுகி
வந்து கைதொழு தேத்தியே நயமொழி வழங்கி
இந்தி ரன்பதம் நல்குவன் வருதிரென் றிசைத்தான். 223

மாற்ற மிங்கிது கேட்டலும் மதிமுடி அரனைப்
போற்று மன்பர்கள் இந்திரன் உலகினும் போகார்
கூற்று வன்றனை துலகினும் நும்மொடு குறுகார்
ஏற்ற மாகிய சிவபதம் அடைந்தினி திருப்பார். 224

நாத னூர்தம தடியவர்க் கடியவன் நானும்
ஆத லானும தந்தகன் புரந்தனக் கணுகேன்
வேதன் மாலமர் பதங்களும் வெஃகலன் விரைவில்
போதி போதியென் றுரைத்தலும் நன்றெனப் போனான். 225

போன காலனும் மறலியை வணங்கியே புகுந்த
பான்மை யாவையும் உரைத்தலும் உளம்பதை பதைப்ப
மேனி மார்பகம் வியர்ப்புற விழிகனல் பொழியக்
கூனல் வார்புரு வக்கடை நிமிர்ந்திடக் கொதித்தான். 226

அழைத்திர் மேதியை யென்னலும் போந்ததால் அதன்மேல்
புழைக்கை மால்கரி யாமென வெரிநிடைப் புகுந்து
நிழற்று கின்றதோர் கவிகையுந் துவசமும் நிவப்ப
வழுத்தி வீரர்கள் சுற்றிட அந்தகன் வந்தான். 227

போந்து காசியின் முனிமகன் இருந்துழிப் போகிச்
சேர்ந்த குஞ்சியும் முகில்புரை மேனியுஞ் சினத்திற்
காந்து கண்களும் பிடித்ததோர் பாசமுங் கரத்தில்
ஏந்து தண்டமுஞ் சூலமு மாகியே எதிர்ந்தான். 228

வேறு

வந்து தோன்றலும் மார்க்கண்ட னென்பவன்
அந்த கன்வந் துறுகின னாமெனச்
சிந்தை செய்தவன் செய்கையை நோக்கியே
எந்தை யாரடி யேத்தி இறைஞ்சினான். 229

அன்ன வேலையில் அந்தகன் மைந்தநீ
மன்னி னைந்தனை யாவ தியற்றினை
முன்னை யூழின் முறைமையும் முக்கணான்
சொன்ன வாறுந் துடைத்திட லாகுமோ. 230

சிறிதும் ஊழ்வினைத் திண்மையுந் தேர்கிலாய்
உறுதி யொன்றும் உணர்கிலை போலுமால்
இறுதி யேபிறப் பென்றிவை யாவரும்
பெறுவர் அன்னது பேசுதல் வேண்டுமோ. 231

பீடு சாலும் பெருந்தவர்க் காயினுங்
கூடு றுவது கூடுமொன் றுன்னியே
நாடி யின்னணம் நண்ணுதல் கற்றுணர்
ஆட வர்க்கும் இயற்கைய தாகுமோ. 232

ஈச னார்தம் இணையடி மீமிசை
நேச நெஞ்சினை நித்தலும் நீபுரி
பூசை வெம்பவம் போக்குவ தன்றியான்
வீசு பாசம் விலக்கவும் வல்லதோ. 233

சிந்து வின்கட் செறிமணல் எண்ணினும்
உந்து வானத் துடுவினை எண்ணினும்
அந்த மின்றியென் ஆணையின் மாண்டிடும்
இந்தி ரன்றனை எண்ணிட லாகுமோ. 234

இற்ற வானவர் தம்மையும் என்னினீ
றுற்ற தானவ ராகியுள் ளோரையும்
முற்ற ஓதில் முடிவில தாதலால்
மற்றை யோரை வகுத்திடல் வேண்டுமோ. 235

கணக்கு முண்டகக் காமரு கண்ணினான்
தனக்கு முண்டு சதுர்முகற் குண்டுமற்
றெனக்கு முண்டு பிறப்பிறப் பென்றிடின்
உனக்கு முண்டென் றுரைத்திடல் வேண்டுமோ. 236

வாச மாமல ரிட்டு வழிபட
ஈச னார்முன் எனக்கருள் செய்தன
ஆசி லாவிவ் வரசியல் ஏந்திய
பாச சூலம் படைமழுத் தண்டமே. 237

தேவர் காப்பினுஞ் செய்தளித் தீறுசெய்
மூவர் காப்பினும் மொய்ம்பின ராயினோர்

ஏவர் காப்பினுங் காத்திட இன்றுநின்
ஆவி கொண்டன்றி மீண்டும் அகல்வனே. 238

துன்ப மென்பது கொள்ளலை சூலிதன்
அன்ப ராயினும் அந்தம்வந் தெய்திடில்
தென்பு லந்தனிற் சேர்த்துவன் திண்ணமே
என்பின் நீயினி யேகென் றியம்பலும். 239

மைந்தன் ஆங்கது கேட்டு மறலிகேள்
எந்தை யாரடி யார்தமக் கில்லையால்
அந்தம் என்பதுண் டாயினும் நின்புரம்
வந்தி டார்வெள்ளி மால்வரை ஏகுவார். 240

அனையர் தன்மை அறைகுவன் ஆங்கவர்
புனித மாதவ ராயினும் பொற்புடை
மனையின் வாழ்க்கையின் மல்கின ராயினும்
வினையின் நீங்கிய வீட்டின்பம் எய்துவார். 241

ஏதந் தீர்சுடர் தன்னையும் எண்ணும்ஐம்
பூதந் தன்னையும் போதிகன் தன்னையும்
பேதஞ் செய்வர் பிறப்பொழித் தோரவர்
பாதஞ் சேர்தல் பரபதஞ் சேர்வதே. 242

உன்னை எண்ணலர் உம்பரை எண்ணலர்
மன்னை எண்ணலர் மாமலர்ப் பண்ணவன்
தன்னை எண்ணலர் தண்டுள வோனையும்
பின்னை எண்ணலர் **பிஞ்ஞகன் அன்பினோர்.** 243

நாதன் தன்னையும் நாதன தம்புயப்
பாதஞ் சேர்ந்து பரவினர் தம்மையும்
பேதஞ் செய்வது பேதைமை நீரென
வேதங் கூறும் விழுப்பொருள் பொய்க்குமோ. 244

செம்மை யாகிய சிந்தையர் சீரியோர்
வெம்மை என்பதை வீட்டி விளங்கினோர்
தம்மை யுந்துறந் தேதலை நின்றவர்
இம்மை தன்னினும் இன்பத்தை மேவுவார். 245

இன்மை யாவதி யாண்டுமில் லாதவர்
நன்மை என்ப தியல்பென நண்ணினோர்
புன்மை யான பொருள்விரும் பார்அவர்
தன்மை யாவரே சாற்றவல் லார்களே. 246

**வேறு**

அன்னோர் தன்மை தேர்கிலை வையத் தவர்போல
உன்னா நின்றாய் ஆங்கவர் தம்பா லுறுகின்ற
என்னா விக்குந் தீங்கு நினைத்தாய் இவையெல்லாம்
உன்னா விக்கும் இத்தலை மைக்கும் ஒழிவன்றோ. 247

தீதா நின்ற வாசகம் என்றான் செவிகேட்க
ஓதா நின்றாய் மேல்வரும் ஊற்ற முணர்கில்லாய்
பேதாய் பேதாய் நீயிவண் நிற்கப் பெறுவாயோ
போதாய் போதாய் என்றுரை செய்தான் புகரில்லான். 248

கேட்டான் மைந்தன் கூறிய மாற்றங் கிளர்செந்தீ
ஊட்டா நின்ற கண்ணினன் யானைச் சுறுமாற்றால்
காட்டா நின்றாய் நம்முயிர் கூற்றன் கைக்கொள்ள
மாட்டான் என்றே எண்ணினை கொல்லோ வலியில்லாய். 249

என்றான் வாளைத் தேறினை ஆர்த்தான் இவண்நேரே
நின்றால் வாரான் என்று நினைந்தே நெடுநீலக்
குன்றா மென்னப் பாலகன் முன்னங் கொலைவேலான்
சென்றான் பாசம் வீசுவ தற்குச் சிந்தித்தான். 250

எறிந்தான் பாசம் ஈர்த்திடல் உற்றான் இதுபோழ்தில்
அறிந்தான் தானும் ஈசனை யுத்தி அடிநீழற்
பிறிந்தான் அல்லன் மற்றினி இந்தப் பெருமைந்தன்
மறிந்தான் அன்றோ என்றிமை யோரும் மருளுற்றார். 251

ஈர்க்கும் பாசங் கந்தர முற்றும் இடரில்லா
மார்க்கண் டன்முன் தோன்றினன் நின்பால் வருதுன்பந்
தீர்க்கின் றாம்நீ அஞ்சலை என்றே திரையாழிக்
கார்க்கண் டத்துக் கண்ணுதல் ஐயன் கழறுற்றான். 252

மதத்தான் மிக்கான் மற்றிவன் மைந்தன் உயிர்வாங்கப்
பதைத்தான் என்று உன்னிவெ குண்டான் பதிமூன்றுஞ்
சிதைத்தான் வாமச் சேவடி தன்னால் சிறிதுந்தி
உதைத்தான் கூற்றன் விண்முகில் போல்மண் ணுறவீழ்ந்தான். 253

வீழுங் காலத் தம்புய ஞதி விண்ணோர்கள்
வாழுந் தன்மைத் தெவ்வுல கென்று மறுகுற்றார்
சூழும் வேலை ஆர்த்தில தண்டத் தொகையெல்லாங்
கீழும் மேலும் நெக்கன பாருங் கிழிந்தன்றே. 254

பாங்காய் நின்ற தானையும் ஊரும் பகடுந்தான்
ஏங்கா நின்றே பார்மிசை வீழா இறவுற்ற
தீங்காய் நின்ற செய்வினை யாளர் சிதைவாகிப்
போங்கா லத்திற் சேர்ந்தவர் தாமும் போகாரோ. 255

அந்தக் காலத் தெம்முயிர் காப்பான் அமனுண்டால்
வந்தக் கூற்றன் என்செய்வ னென்று வாடுற்றான்
சந்தப் பாவிற் போற்றுதல் செய்தே தனிநின்ற
மைந்தற் காணா உ எம்பெரு மானும் மகிழ்வுற்றான். 256

வேறு

மைந்த நீநமை வழுத்தி மாசிலா
முந்து பூசனை முயன்ற தன்மையால்

அந்த மில்லதோர் ஆயுள் நிற்கியாந்
தந்து நல்கினும் என்று சாற்றினன். 257

சாற்றும் எல்லையில் தனது தாளிணை
போற்று கின்றவன் பூசை செய்திடும்
ஏற்ற தாணுவுக் கிடைய தாகவே
கூற்றின் கூற்றுவன் குறுகுற் றனரோ. 258

மறைய வன்கணும் மன்னு தென்புலத்
திறைய வன்கணும் இகல்பற் றின்றரோ
அறிவர் தேர்குறின் ஐயன் செய்தன
முறைய தாகுமால் முதன்மைப் பாலதே. 259

நின்ற மைந்தனும் நித்தன் மேனியை
ஒன்றும் அன்பினல் உன்னி யேமணி
கன்றி கையெனுங் கடவுள் ஆலயஞ்
சென்று நாதன்றாள் சென்னி சேர்த்தினன். 260

புந்தி நைந்திடப் புலம்பி நாட்டநீர்
சிந்தும் வேலையில் திளைத்துச் சாம்பிய
தந்தை அன்னைதாள் தழுவித் தாழ்ந்திடா
முந்து மாகுலம் முழுதும் மாற்றினன். 261

அங்கண் சில்பகல் அமர்ந்து நீங்கியே
செங்கண் ஏறுடைச் செல்வன் மல்கியே
தங்கு கின்றநற் றனம் யாவையும்
பொங்கு காதலிற் போற்றல் மேயினன். 262

அத்தன் ஆலயம் அனைத்தும் வைகலும்
பத்தி யோடுமுன் பரவி யேமிகுஞ்
சுத்த னுகியே தொலைவில் ஆருயிர்
முத்தி யெய்தினன் முழுது ணர்ந்துளான். 263

விண்ணின் பாலுளன் விரும்பிப் போற்றுவோர்
கண்ணின் பாலுளன் கருத்தின் பாலுளன்
மண்ணின் பாலுளன் மற்ற வன்செயல்
எண்ணின் பாலதோ இசையின் பாலதோ. 264

முண்ட கத்திடை முளைத்த வன்துயில்
கொண்ட வெல்லையைக் குணிக்கி லாவதென்
அண்டம் நல்கியோன் துஞ்ச ஆங்கவன்
கண்ட கற்பமோ கணக்கி லாதவே. 265

அன்ன வன்றனை அலக்கண் செய்திடுந்
தென்ன வன்உயிர் சிதைந்து போதலால்
பன்ன கத்திறை பரித்த பார்மிசை
மன்னு பல்லுயிர் வளர்ந்து மல்கிற்றே. 266

முடிவின் றாருயிர் முற்றும் பற்பகல்
மடிவின் றாகியே மலியும் பான்மையால்
படியின் மங்கையும் பரம்பொ றாதுமால்
அடியின் வீழ்ந்துதன் அயர்வு கூறினாள்.

கொண்டல் வண்ணனுங் குலிச பாணியும்
புண்ட ரீகமேற் பொலிந்த போதனும்
அண்டர் யாவரும் அணுகி ஆலமார்
கண்டன் மேவுறுங் கயிலை மேவினார்.

காவி யம்மலர் கடுத்த கந்தரத்
தேவு பொற்பதஞ் சென்னி சேர்த்திய
தாவில் பங்கயச் சதுர்மு கத்தனும்
பூவை வண்ணனும் போற்றல் மேயினார்.

நீல கண்டனும் நிமலன் முன்னரே
ஏலும் அன்பொடுந் தாழ்ந்து போற்றலும்
மாலை நோக்கிநீர் வந்த தென்னென
ஏது மாற்றினால் இதனைக் கூறுவான்.

வேறு

பங்கய மிசைவரு பகவன் ஆதியா
இங்குள தலைவர்கள் எவரும் இத்துணைத்
தங்கள்தம் அரசியல் தவாது போற்றினார்
அங்கவர் தமக்குநீ அளித்த வண்ணமே. 271

ஐயநீ எனக்குமுன் அளித்த காப்பினைத்
துய்யநின் திருவருள் துணைய தாகவே
வைகலும் புரிகுவன் வழாது மற்றதற்
கெய்திய தோர்குறை இசைப்பன் கேட்டிநீ. 272

நின்பெருந் திருவருள் நினைகி லாமையால்
தென்புலக் கோமகன் சிதைந்து போயினான்
மன்பதைக் குலம்பிற வளர்ந்து மிக்கன
துன்பமுற் றனள்அவை சுமக்கும் பூமகள். 273

தன்புடை எவற்றையுந் தாங்கு கின்றவள்
துன்புற உயிரெலாந் தோன்றித் தோன்றியே
பின்பிற வாமலே பெருகி வைகுமேல்
என்படும் என்படும் எனது காவலே. 274

இறுத்திடும் அரசினுக் கெவரு மில்லைநீ
செறுத்திடல் அந்தகன் செய்த தீமையைப்
பொறுத்தருள் அவன்றனைப் புரிதி ஈங்கிது
மறுத்திடல் என்றடி வணங்கி வேண்டவே. 275

அந்தக எழுகென அமல நாயகன்
முந்தருள் புரிதலும் முடிந்த கூற்றுவன்

வந்தனன் தொழுதனன் வணங்கித் தாள்பட
உய்ந்தனன் அடியனென் றுணர்ந்து போற்றினன். 276

போற்றிடு தருமனைப் புராரி நோக்கியே
சாற்றிடு கின்றனன் நயங்கு கண்டிகை
நீற்றொடு புனைந்தமை நினையும் நீரர்பால்
கூற்றுவன் யானெனக் குறுகு வாயலை. 277

நண்ணருங் கதிபெறு நமது தொண்டரை
மண்ணுல கத்தவர் மனித ரேயென
எண்ணலை அவர்தமை யாமென் றெண்ணுதி
கண்ணுறின் அன்னவர் கழலின் வீழ்தியால். 278

கண்ணிய மனமொழி காயம் ஈறதா
எண்ணிய கருவிகள் இடைய தாகவே
புண்ணிய மொடுபவம் புரியும் ஏனையர்
விண்ணொடு நிரயமேல் மேவச் செய்திநீ. 279

என்றருள் புரிந்துநின் படையொ டேகென
மன்றமர் அடிமிசை வணங்கி முன்னரே
பொன்றிய பகட்டொடும் பொருநர் தம்மொடும்
தென்றிசை புகுந்துதன் செயலின் மேவினன். 280

சித்தசற் புரிதரு செங்கண் மான்முதல்
மொய்த்திடு கடவுளர் முனிவர் மும்முறை
நித்தனை வணங்கினர் கயிலை நீங்கினர்
தத்தம துறையுளில் சார்தல் மேயினர். 281

கொன்னவில் அடுபடைக் கூற்றன் பண்டுபோல்
இன்னமும் விளைகுவ தென்கொ லோவென
மன்னருள் பெற்றமார்க் கண்டன் மாக்கதை
பன்னினர் முன்னமும் படர்தற் கஞ்சுமால். 282

ஆதலிற் குச்சகன் அருந்த வத்திலோர்
மாதுயிர் அளித்தனன் மால்க ளிற்றினைக்
காதுகை நீக்கியொண் கடவு ளாக்கியே
மேதகு விண்ணிடை மேவச் செய்தனன். 283

உதவிய மிருகண் டுயன் மால்அயன்
முதலவர் புகழ்தரு முதன்மை பெற்றனன்
விதிமுறை அவனருள் மிருகண் டொப்பிலோர்
புதல்வனைப் பெற்றனன் புரிந்த நோன்மையால். 284

அப்பெருந் திருமகன் ஆற்றும் நோன்பினால்
தப்பரும் விதியினைத் தணந்து கூற்றுவன்
துப்பினை அகற்றியே தொலைவு கண்டுபின்
எப்பொழு தத்தினும் இறப்பின் றுயினன். 285

ஆகத் திருவிருத்தம் - 486.



# 6. மாயையுபதேசப்படலம்

—oo-

அன்னது சுரதமே அறிதிர் ஆதலால்
இன்னமும் மொழிகுவன் இயற்று நோன்பென
முன்னுறு காசிப முனிவன் செப்பலும்
நன்னய மாயவள் நகைத்துக் கூறுவாள்.

மறைதெரி முனிவநீ வாய்மை யாகிய
உறுதியை மொழிந்தனை உயர்ந்த வீடுறும்
அறிவுடை முனிவரர்க் கன்றி நாமருள்
சிறுவருக் கித்திறஞ் செப்ப லாகுமோ.

நன்பெருஞ் செல்வமும் நவையில் கொற்றமும்
இன்பமும் அழிவிலா திருக்கும் ஆயுளும்
மன்பெருஞ் சீர்த்தியும் மறுவில் வாழ்க்கையும்
அன்புடை யினையவர் அடைதல் வேண்டுமால்.

காதலால் அவையெலாங் கடிதிற் பெற்றிட
மாதவ முனிவர வகுத்தி யென்றலும்
ஈதுகொ லோவுன தெண்ணம் நீயவர்க்
காதகும் இயல்பினை அறைதி யென்னவே.

மாயவள் தன்சிறார் வதனம் நோக்கியே
தூயவிம் முனிவரன் சொற்ற துண்மையே
ஆயினும் உங்களுக் காவ தன்றவை
நீயிர்கள் கேண்மென நெறியிற் கூறுவாள்.

மாற்படு புந்தியின் மறுவில் சேதனம்
பாற்படும் உயிர்க்கெலாம் பவத்தின் மாண்பயன்
நூற்படு கல்வியின் நுவல்வ ளத்தினின்
மேற்படு கின்றதில் விழுமி தில்லையே. 6

திருமைகொள் வளனொடு தீதில் கல்வியாம்
இருமையின் ஒன்றினை எய்தி டாதெனின்
அருமைகொள் அவ்வுயிர் அதனின் ஆற்றவும்
பெருமைய துடையது பேயின் தோற்றமே.

பிறந்தநல் லுயிர்க்கெலாம் பெருமை நல்கிய
இறந்ததோர் பொருண்மைய திரண்டின் வன்மையும்
அறிந்தவர் தெரிவரேல் அரிய கல்வியில்
சிறந்தது திருவெனச் செப்ப லாகுமால். 8

சொற்றரு கலையெலாந் தொடர்ந்து பற்பகல்
கற்றவ ராயினுங் கழிநி ரப்பினால்
அற்றவ ராவரே ஆக்கம் வேண்டியே
பற்றலர் தம்மையும் பணிந்து நிற்பரால். 9

அளப்பருங் கல்வியும் ஆக்கம் யாவையுங்
கொளப்படு தன்மையிற் குறைவு றுதவை
வளர்த்தலின் மேதக வனப்புச் செய்தலிற்
கிளத்திடின் மேலது கேடில் செல்வமே. 10

நூலுறு கல்வியை நுனித்து நாடியே
வாலறி வெய்திய வரத்தி னோர்களும்
மேலுறு திருவொடு மேவு றுரெனின்
ஞாலமங் கவர்தமை நவையுள் வைக்குமால். 11

அளப்பரும் விஞ்சையே அன்றி மேன்மையும்
உளப்படு தருமமும் உயர்ந்த சீர்த்தியுங்
கொளப்படு கொற்றமும் பிறவுங் கூட்டலால்
வளத்தினிற் சிறந்தது மற்றொன் றில்லையே. 12

ஆக்கமிங் கொருவரால் அணுக வேண்டுமேல்
ஊக்கமுண் டாவரேல் உறுவர் அன்னது
நீக்கமில் கொள்கையின் நிற்ப ரேயெனின்
மேக்குறு பெருந்திரு விரைவின் மேவுமால். 13

அவ்வளம் பலவகைத் தாகும் ஆங்கவை
எவ்வரும் பெறுகிலர் இயல்பின் யாவையுஞ்
செவ்விதின் நீர்பெறச் சிந்தை செய்யுமின்
உய்வது வேறிலை உறுதி யீதலால். 14

எங்கள்பால் னென்னலின் யாமந் தோன்றலால்
துங்கமா நிருதர்தங் கதியில் துன்னினீர்
உங்களுக் கொன்னலர் உம்பர் யாவருந்
தங்கள்தம் முயற்சியால் தலைமை பெற்றுளார். 15

நீவிர்கள் அனையரின் நிவந்த கொள்கையர்
ஆவிர்கள் போலுமால் ஆக்க மெய்துவான்
மூவிரும் முயலுதிர் முயலும் பெற்றியை
ஏவிருங் கேட்கயான் எடுத்துக் கூறுகேன். 16

ஆனதோர் இத்திசை ஆலந் தீவெனத்
தானறை கிற்பர்இத் தரைக்கு நேரதாய்ப்
போனதோர் உத்தர பூமி யாயிடை
தானவர் நோற்றிடத் தகுவ தென்பதே. 17

அப்புவி யதனிடை ஆற்றற் கீறிலா
இப்பரி சனமொடும் ஏகி யாயிடை
ஒப்பறு குண்டமும் ஒழிந்த செய்கையும்
மெய்ப்பட இயற்றுதிர் வேள்வி செய்யவே. 18

காரிகொள் இந்தனங் கதழ விட்டுமுன்
ஆரழல் மூட்டியே அழலின் பண்டமுஞ்

சோரியும் ஊன்களும் பிறவுந் தூவியே
வீரர்கள் புரிதிரால் வெய்ய வேள்வியே. 19

செங்கண்மால் அயன்முதல் தேவர் யாவரும்
எங்களு யகனென இறைஞ்ச மேதகு
கங்கைவார் சடைமுடிக் கடவுட் போற்றியே
பொங்குதீ வேள்வியைப் புரிதிர் பற்பகல். 20

அம்மகம் புரிதிரேல் அருளின் முன்னுறீஇ
மைம்மலி மிடறுடை வான நாயகன்
மெய்ம்மையின் நீவிர்கள் வெஃகி யாங்கெலாம்
இம்மையின் எய்துமா றினிது நல்குமால். 21

மூண்டவிவ் வேள்வியை முயல மூவிரும்
ஆண்டுசென் றுற்றுழி அன்ன தற்கவண்
வேண்டிய பொருளெலாம் வேறு வேறதா
ஈண்டுற வுதவுவன் ஏகு வீரென்றாள். 22

தந்திர நெறிகளுந் தவறில் பான்மையும்
மந்திர முறைகளும் மற்று முள்ளவும்
இந்திர வளனுறும் இயல்பின் மூவர்க்கும்
முந்திர வுதவிய முதல்வி நல்கினாள். 23

இன்னதோர் காலையில் ஈன்ற மாயவள்
தன்னொடு தந்தையைத் தாழ்ந்து போற்றியே
அன்னவர் விடுத்திட அவுணர் மேலையோன்
பின்னவர் தம்மொடும் பெயர்வுற் றேகினான். 24

ஆகத் திருவிருத்தம் - 510.



# 7. மாயை நீங்கு படலம்

ஏகிய காலையில் இணையில் மாயவள்
மோகமொ டயலுற முனியை நோக்கியே
போகுவன் யானினிப் புதல்வர்ப் பேணுவொன்
நீகவ லேலென நிறுவிப் போயினாள்.

போதலும் முனிவரன் புந்தி யுள்ளுறும்
ஆதர வுந்திட அவள்பின் னேகியே
ஏதில ளுமென எனைவிட் டேகுதல்
நீதிய தாகுமோ உரைத்தி நீயென்றான்.

ஆயிழை புகலுவாள் அழுங்கல் மாதவ
சேயினர் பொருட்டுனைச் சேர்ந்த தன்றியீண்

டேயது நின்னுடன் இருக்க அன்றியான்
மாயவள் அறிகென மறைந்து போயினுள். 3

அருவினள் சேறலும் அற்பு தத்தவள்
வருபொருள் யாவையும் மறைந்து போயின
வெருவரு முறைபுரி வேந்தை விட்டகல்
திருவொடு பெயர்வதோர் செல்வம் போலவே. 4

மாணலன் எய்திய மாயை தன்னுருக்
காணலன் ஆகிய கமலத் தோன்மகன்
பூணலன் தெளிவினைப் பொருமி ஏங்கியே
ஆணலன் அழிவுற அழுங்கி மாழ்குவான். 5

வாவியுந் தடங்களும் வரையும் ஏனவுந்
தேவருங் காமுறச் செறிந்த அற்புதம்
யாவையுங் காண்கிலான் இரங்கி நின்றனன்
ஆவியில் குரம்பையன் ஆகு மென்னவே. 6

மைந்தன துறுதுயர் மலரின் மேவிய
தந்தைதன் உணர்வினுல் தகவின் நாடியே
அந்தர நெறியில்வந் தங்கண் மேவலும்
எந்தைவந் தனன்கொலென் றெழுந்து தாழவே. 7

ஆசிகள் செய்துநின் னரிய நோன்பொரீஇக்
காசிப மெலிவது கழறு கென்றலும்
பேசினன் நிகழ்ந்தன பிரமன் கேட்டுளங்
கூசினன் அவன்மனங் கொள்ளத் தேற்றுவான். 8

வேதமுங் கலைகளும் உணர்ந்து மேலதா
மூதறி வெய்திய முனிவ நீயொரு
மாதுதன் பொருட்டினுல் மையல் எய்தியே
பேதுறு கிற்றியோ பேதை மாந்தர்போல். 9

கண்டதோர் நறவமே காம மேயென
எண்டரு தீப்பொருள் இருமைத் தென்பரால்
உண்டுழி அழிக்குமொன் றுணர்வை யுள்ளமேற்
கொண்டுழி உயிரையுங் கொல்லு மொன்றரோ. 10

உள்ளினுஞ் சுட்டிடும் உணருங் கேள்வியிற்
கொள்ளினுஞ் சுட்டிடுங் குறுகி மற்றதைத்
தள்ளினுஞ் சுட்டிடுந் தன்மை ஈதினுல்
கள்ளினுங் கொடியது காமத் தீயதே. 11

ஈட்டுறு பிறவியும் வினைகள் யாவையுங்
காட்டிய தினையதோர் காம மாதலின்
வாட்டமில் புந்தியான் மற்றந் நோயினை
வீட்டினர் அல்லரோ வீடு சேர்ந்துளார். 12

நெஞ்சினும் நினைப்பரோ நினைந்து ளார்தமை
எஞ்சிய துயரிடை சண்டை உய்த்துமேல்
விஞ்சிய பவக்கடல் வீழ்த்தும் ஆதலால்
நஞ்சினுந் தீயது நலமில் காமமே. 13

ஆதலிற் காமமுற் றழுங்கல் நீபுணர்
மாதரும் வஞ்சக மாயை யாகுமால்
தீதிவண் இழைத்தனை தீரத் தொன்மைபோல்
நீதவம் புரிகென நிறுவி ஏகினான். 14

மாறகல் நான்முகன் வாய்மை தேர்தலுந்
தேறினன் மையல்நோய் தீர்ந்து காசிபன்
ஏறமர் கடவுளை இதயத் துன்னியே
வீறொடு நோற்றனன் வினையின் நீங்குவான். 15

ஆண்டவண் அகன்றிடும் அணங்கு தன்சிறார்
மூண்டிடு தீமகம் முயலு மெல்லையில்
வேண்டிய துத்துவான் விமலற் போற்றியே
பூண்டனள் பெருந்தவம் புகரின் ஏவலால். 16

காசிபன் மாயையைக் கலந்த வண்ணமும்
ஆசுறும் அவுணர்கள் வந்த வண்ணமும்
பேசினம் அங்கவர் பெற்ற பேற்றினை
ஈசன தருளினால் இனியி யம்புவாம். 17

ஆகத் திருவிருத்தம் - 527.



# 8. அசுரர் யாகப் படலம்

—oo—

அன்னைதன் ஏவலால் அழல்ம கஞ்செய
உன்னின னாகியே ஒல்லை ஏகிய
முன்னவன் இளைஞர்தம் முகத்தை நோக்கியே
இன்னது கேண்மென இசைத்தல் மேயினான். 1

அடல்கெழு பெருமகம் அதனை ஆற்றவே
வடதிசை செல்வுழி மல்கு தானையின்
கடையொடு நெற்றியில் காவ லாகியே
படருதி ராலெனச் சூரன் பன்னினான்.

இனிதென அடிதொழு திளவல் தாரகன்
அனிகம தீற்றினில் அடைவல் என்றனன்
முனிதரு கோளரி முகத்து மொய்ம்பினான்
தனியகல் நெற்றியிற் சார்வல் என்றனன்.

பின்னர் இருவரும் பேசி இத்திறம்
முன்னவன் விடைகொடு முறையிற் போயினர்
அன்னவர் பணியினல் ஆர்ப்புற் றெழீஇச்
சென்னெறி படர்ந்தன சேனை வெள்ளமே. 4

வேறு

தானவர் அனிக வெள்ளந் தரைமிசைப் பெயர்த லோடும்
மானில மடந்தை ஆற்ருள் வருந்தினள் பணிக ளோடு
கோனுமங் கயரா நின்ருன் குலவரை கரிகள் மேரு
ஆனவுஞ் சலித்த ஆதிக மடமும் அழுங்கிற் றன்றே. 5

மண்டுறு பூழி ஈட்டம் மலரயன் உலகந் தாவி
விண்டல மீது போதல் மேதினி அசுர வெள்ளம்
எண்டரு நிலைமைத் தன்ருல் யான்பொறுக் கல்லேன் என்னக்
கொண்டல்வண் ணத்த னேடு கூறுவான் சேறல் போலும். 6

காழுறும் அவுணர் தானைக் கனைகழல் துழனி முன்னர்
ஆழியங் கடலும் நேரா ஆர்த்திடுங் கொல்லோ என்ன
ஊழுறு சினங்கொண் டென்ன உலப்பிலா அவுணர் தாளில்
பூழிய தெழுந்து சென்று புணரிவாய் பொத்திற் றன்றே. 7

மரந்துகள் பட்ட மேரு வரையெனச் சிறந்த மெய்ப்பூ
தரந்துகள் பட்ட யாதுந் தனதெனத் தாங்கு சேடன்
உரந்துகள் பட்ட நேரும் உயிர்துகள் பட்ட தொன்னுட்
புரந்துகள் பட்ட தேபோல் புவிதுகள் பட்ட தன்றே. 8

ஆடலின் அவுண வெள்ளத் தரவமும் அனையர் செல்ல
நீடிய பூழி தானும் நெறிப்பட வருத லோடும்
நாடிய அமரர் அஞ்சி நடுக்குறு நமது வேதா
வீடினன் கொல்லோ நீத்தம் விண்ணுறும் போலும் என்ருர். 9

மாசகல் திருவின் மிக்க மாயவள் முன்னந் தந்த
தேசுறும் அவுண வெள்ளந் திசையெலாம் அயுதம் என்னும்
யோசனை யெல்லை யாக உம்பரி னிடத்து மற்றைக்
காசினி யிடத்து மாகிக் கலந்துடன் தழுவிச் சென்ற. 10

அஞ்சினன் அமரர் வேந்தன் அயர்ந்தனன் அங்கிப் புத்தேள்
எஞ்சினன் வன்மை கூற்றன் இனைந்தனன் நிருதி எய்த்தான்
தஞ்சமில் வருணன் வாயுத் தளர்ந்தனன் தனதன் சோர்ந்தான்
நெஞ்சழிந் தனன்ஈ சானன் நிருதர்பேர் அரவஞ் சூழ. 11

வள்ளுறு மெயிற்றுச் செங்கண் வலிகெழும் அவுணர் தானை
வெள்ளம தேகப் பூழி வீரிந்தெழீஇ யாண்டும் போகிப்
பொள்ளென மெய்யே தீண்டிப் புறத்தெழில் அழித்த வானோர்
உள்ளுணர் வழித்த தன்றே அனையர்கள் ஆர்க்கும் ஓதை. 12

பேருமிவ் வவுணர் தானைப் பெருக்கின தணியின் முன்னர்
ஆரழல் வெருவு சீற்றத் தரிமுகன் செல்லக் கூழை

தாரக விறலோன் செல்லத் தலையளி புரிந்து நாப்பட்
சூரனென் றுரைக்கும் வெய்யோன் துணைவனை ஏகி னானால். 13

வேறு

ஆன பொழுதத் தவர்க்கா ணியநினைந்து
தானவர்கள் போற்றுந் **தனிக்குரவன்** தண்டரள
மானமிசை யூர்ந்து வந்தணுகி வல்லவுணர்
சேனையெனச் செல்லுந் திரைக்கடலைக் கண்ணுற்றான். 14

கண்ணின்ற வீரர் கடுப்பும் பெருமிடலும்
உண்ணின்ற காழ்ப்பும் உரனுங் கொடுந்திறலும்
எண்ணங்கொள் வேர்வும் இகலுந் தெரிவுற்றுத்
துண்ணென்ன நெஞ்சம் **புகரும்** துளக்குற்றான். 15

கண்டேன் இவர்தங் கடுந்திறலின் ஆட்சிதனைப்
பண்டே அவுணர் அளப்பிலரைப் பார்த்துணர்வேன்
தண்டே னிதழியான் தன்னருளின் வண்ணமோ
உண்டே இவருக் கொருவர்நிகர் உற்றாரே. 16

வானோர் இறையுடனும் மாலுடனும் மற்றுள்ள
ஏனோ ருடனும் இகலாடி வென்றிடுகை
தானோர் பொருளோ தமையெதிர்ந்த மாற்றலர்தம்
ஊனோ டுயிரை யொருங்குண்ணுந் தீயவர்க்கே. 17

இன்னோர்தம் வன்மைக் கிறுதி யிலவேனும்
முன்னோர் தமைப்போல் முயலுந் தவவலியும்
பின்னோர் வரமும் பெரும்படையுங் கொண்டிலரால்
அன்னோ இவர்க்குங் குறையுண்மை ஆகியதே. 18

தண்டத் திறையைக் கடந்த தனியாற்றல்
கொண்டுற் றவற்கே குறைகண் டிலம்ஏனை
அண்டத் தவர்க்கும் அனைவர்க்கும் ஒவ்வொர்குறை
உண்டத் தகைமை எவரும் உணர்குவரால். 19

ஆதலின்இன் னோர்பால் அடைவுற் றிடும்வறுமை
போதுசில நோன்பு புரியின் அகன்றிடுமால்
ஈதுநிலைத் தன்றே **இழிந்தோர் உயர்ந்திடுவர்**
**காதி புதல்வன் இதற்குக் கரியன்றே.** 20

என்னப் பலவும் இசைத்துநின்று தானவர்கள்
மன்னர்க்கு மன்னாக வாழ்வெய்து சூரபன்மன்
முன்னுற் றிடவும் முகமன் மொழிந்திடவும்
உன்னுற் றனனால் உணர்வுசேர் காப்பியனே. 21

தீயின் திறமுருக்குஞ் சீற்றத் தவுணன்எதிர்
போயங் குறவும் புகன்றிடவுந் தானரிதால்
ஏயுந் தகுவருடன் என்னுழையிற் சார்வதற்கோர்
மாயங்கொள் விஞ்சை புரிவேன் எனமதித்தான். 22

மண்ணில் உயிரை வசிகரிக்கும் மந்திரமொன்
றெண்ணி விதிமுறையே நோக்கி யெதிர்சென்று
நண்ணிய வெஞ்சேனை நரலைநடு வட்புக்கான்
அண்ணல் அவுணற் கணித்தாய் அடைகுற்றான். 23

கள்ள மிகுமவுணர் சிந்தையெனுங் காழிரும்பா
யுள்ள உருகி உரைகெழுமா யத்தீயின்
எள்ள வருங்கறையும் ஏகிநயந் திட்டனவால்
வெள்ளி மிகப்புணர்க்கின் மேலையுரு நின்றிடுமோ. 24

சூழிக் கடலில் துவன்றும்அவு ணப்படைஞர்
காழற்ற புந்தியொடு கைதொழலும் கேசரிக்கும்
பூழைக் கரன்றனக்கும் முன்னைப் புரவலன்முன்
கேழுற்ற வாசி குரவன் கிளத்திடுவான். 25

வாலாதி மான்தேர் மகபதிக்கும் ஏனையர்க்கும்
மேலாதி தானவர்கள் வெய்யதுயர் நோயகற்ற
ஏலாதி யோகடுகம் என்றுரைக்கும் இன்மருந்து
போலாதி யென்ன அவுணன் புகன்றிடுவான். 26

காரையூர் கின்ற கடவுளர்கோன் வைகலுறும்
ஊரையோ மேலை உலகுதனில் உள்ளாயோ
பாரையோ கட்செவிகள் பாதலத்தை யோஎந்தாய்
யாரைநீ தேற்றேன் இவணுற்ற வாறென்றே. 27

உன்பால்என் நெஞ்சம் உருகும் அஃதன்றி
என்பா னதும்உருகா நிற்கும் எனையறியா
தன்பாகி நின்ற தருந்தவத்தை ஆற்றவனம்
தன்பால் அணுகுதற்குத் தாளுமெழு கின்றிலவே. 28

நன்னேயம் பூண்டு நடந்தாய் உயிரெல்லாம்
அன்னே யெனவந் தளிக்குந் தகையாயோ
இன்னே யுனையெதிர்ந்தேன் யாக்கை மிகவருந்தி
முன்னே தமியேன் புரிந்ததவம் மொய்ம்பன்றே. 29

வேறு

என்றலுங் கவிஞன் கேளா இருவிசும் பாற்றிற் செல்வேன்
உன்றனி மரபிற் கெல்லாம் ஒருபெருங் குரவ னுனேன்
நன்றிகொள் புகரோன் என்னும் நாமமுற் றுடையேன் நின்பாற்
சென்றனன் உறுதி யொன்று தெளித்திடல் வேண்டி யென்றான். 30

அவுணர்கள் முதலா யுள்ளோன் ஆங்கது வினவி யாற்ற
உவகைய னாகி எந்தாய் உய்ந்தனன் இவண்யான் என்னாக்
கவிஞனை அணுகி நின்று கைதொழூஉப் பரவ லோடுஞ்
சிவனருள் நெறியால் அன்னோன் இத்திறஞ் செப்ப லுற்றான். 31

நூறொருடர் கேள்வி சான்றோய் நோற்றுநீ இருக்கு மெல்லை
ஊறுசெய் கிற்பர் ஒன்னார் உனையவை குறுகா வண்ணங்

கூறுதுந் திறனென் றென்னக் கூற்றுவற் கடந்த மேலோன்
மாறின்மந் திரம தொன்று மரபுளி வழாமல் ஈந்தான். 32

மொய்கெழு கூற்றை வென்ற முதல்வன்மந் திரத்தை நல்கி
வைகலும் இதனை யுன்னி மனத்தொடு புலனொன் றாக்கிப்
பொய்கொலை களவு காமம் புன்மைகள் உருமே போற்றிச்
செய்குதி தவத்தை யென்னச் செவியறி வுறுத்தல் செய்தான். 33

அப்பரி சனைத்துந் தேரா அவனடி வணங்கி எந்தாய்
இப்பணி புரிவன் என்ன எல்லைதீர் ஆசி கூறி
மெய்ப்புகர் மீண்டு சென்றான் மேதகும் அவுணர் சூழ
ஒப்பரு மாயை செம்மல் வடபுலத் தொல்லை போனான். 34

வழிமுறை பயக்க நோற்கும் வடபுலந் தன்னி லேகிப்
பழுமர வனத்தில் ஆங்கோர் பாங்கரில் குறுகிச் சூரன்
அழல்கெழு மகத்தை யாற்ற அயுதயோ சனையுள் வைத்துச்
செழுமதி லதுசூழ் பான்மை செய்திடச் சிந்தை செய்தான். 35

அடல்கெழு தானை யாரும் அவுணர்தங் குழுவைக் கூவிப்
படிதனில் அடுக்கல் யாவும் பறித்தனர் கொணரு வித்து
வடவரை நிவப்பிற் சூழ வாரியாப் புரிவித் தாங்கே
நடுநெடு வாயில் போக்கி ஞாயிலும் இயற்று வித்தான். 36

நூற்படு செவ்வி நாடி நொய்தென அங்கட் செய்த
மாற்பெரு மதிலைச் சூழ வரம்பறு தானை தன்னை
ஏற்புடை அரண மாக இயற்றுவித் தியாருஞ் செல்ல
நாற்பெருந் திசையி னூடு நலனுற வாய்தல் செய்தான். 37

பூமியும் வானும் ஒன்றப் பொருப்பினாற் புரியப் பட்டு
நாமியம் புரிதா நின்ற நாமநீள் காப்பும் அப்பால்
ஏமுறும் அவுண வெள்ளத் தெடுத்திடும் எயிலுஞ் சேர்ந்து
நேமியங் கிரியுஞ் சூழ்ந்த நிசியுநேர்ந் திருந்த வன்றே. 38

ஞாயிலின் வேலி மான நகங்களால் அடுக்கல் செய்த
பாயிரு நொச்சி தன்னிற் படைகுலாம் புரிசை தன்னில்
வாயில்க டோறும் போற்ற மந்திர முறையாற் கூவி
நேயமொ டடுபோர் மாதை நிறுவினன் நிகரி லாதான். 39

ஆளரி முகத்தன் முன்னோன் அடுக்கலாற் படையாற் செய்த
நீளிகல் வாரி முன்னர் நெறிகொள்மந் திரத்தாற் கூவிக்
கூளிகள் தொகையும் மோட்டுக் குணங்கரின் தொகையுஞ் சீற்றக்
காளிகள் தொகையுஞ் சூழ்போய்க் காப்புற நிறுவி விட்டான். 40

கயிரவ மனைய செங்கட் காளிகள் முதலோர் தம்மைச்
செயிரற நிறுவிப் பின்னர்ச் சீர்கொள்மந் திரத்தாற் பன்னி
அயிர்ற நெடிது போற்றி அவுணர்கோன் அங்கண் வந்த
வயிரவ கணத்தை வேள்வி காத்திட வணங்கி வைத்தான். 41

வேறு

தள்ளரி தாகிய காப்பிவை செய்திடு தனிவீரன்
உள்ளுற ஆயிர வாயிர யோசனை யுறுநீளங்
கொள்வதொ ராழமு மாயிட வோரோம குண்டந்தான்
நள்ளிடை யேபுரி வித்தனன் மாமகம் நலமாக. 42

ஆதித னக்கனல் வேள்வி இயற்றிட அடுசூரன்
வேதித னைப்புரி வித்திடு காலையில் வியன்ஞாலம்
பாதகர் எம்மை வருத்தினர் என்று பதைப்புற்றுப்
பேதுற வெய்தி இரங்கி ஒடுங்கினள் பெயர்வில்லாள். 43

ஆழம தாயிரம் யோசனை யாவவண் அகழ்செய்கை
ஊழுற நாடிய சேடனும் ஆயிடை உறைவோருங்
கீழுறு வார்இவண் எய்துவர் தானவர் கிளையென்றுத்
தாழுற வேகினர் முன்னுறு தொன்னிலை தனைநீங்கி. 44

ஆழ்ந்திட அம்மக வேதியி யற்றலும் அதுபோழ்தில்
தாழ்ந்திடு நீத்தமெ ழுந்திட நாடிய தனிவேந்தன்
சூழ்ந்தனர் நுங்களை உண்குவர் மீதெழல் துணிபன்றே
போழ்ந்தனை பாதல மேகென அவ்வழி போகிற்றால். 45

போதலும் அப்புனல் அவ்வழி கீழிடை போகின்ற
பாதலம் ஈறெனும் ஏழ்நிலை யோரது பாராகின்
றீதிவண் வந்துள தென்னென அற்புத வியல்எய்தாப்
பேதுறு கின்றனர் தீங்கிது வென்று பிடித்தாராய். 46

சீறரி மாமுகன் முன்னவ னாகிய திறன்மேலோன்
மாறகல் குண்டம திவ்வகை நாப்பண் வகுப்பித்தே
நூறுடன் எட்டது சூழ்தர ஆக்குபு நுவல்வேதி
வேறுமொ ராயிர வெட்டவை சுற்ற விதிப்பித்தான். 47

மூவகை வேதியும் ஆனபின் வேள்வியை முயல்வானாய்
ஆவதொர் பல்பொருள் வேண்டி நினைந்தனன் அருள்யாயைப்
பாவனை பண்ணலும் அங்கது கண்டனள் பரிவெய்தித்
தேவர்கள் தேவன தின்னரு ளால்இவை சேர்விப்பாள். 48

சீயம் வயப்புலி யாளியொ டெண்கு திறற்கைம்மாப்
பாய்பரி செச்சைகள் ஆதிய வாகிய பன்மாவின்
தூய புழுக்கலின் ஊனவி நேமி தொகுப்பித்தாள்
ஆய வுடற்குரு திக்கடல் தன்னையும் அமர்வித்தாள். 49

பழிதரும் எண்ணெயெ னுங்கடல் ஓரிடை பயில்வித்தாள்
இழுதெனும் வாரிதி தானுமொர் சாரில் இருப்பித்தாள்
தொழுதகு பால்தயிர் நேமியும் ஓரிடை தொகுவித்தாள்
வழிதரு மட்டெனும் வேலையும் ஓரிடை வருவித்தாள். 50

ஐயவி காருறு தீங்கறி யேமுதல் அழல்காலும்
வெய்யன பல்வளன் யாவையும் ஓர்புடை மிகுவித்தாள்

நெய்யுறு முண்டியின் மால்வரை யோர்புடை நிறைவித்தாள்
மையறு தொல்பசு யாவையும் ஓர்புடை வருவித்தாள். 51

அரும்பெறல் நாயக மாகிய வேதியின் அகல்நாப்பண்
வரும்பரி சால்நிறு வுற்றிட மேலுயர் வடிவாகிப்
பெரும்புவி உண்டுமிழ் கண்ண பிரான்துயில் பெற்றித்தாய்
உரம்பெறு **வச்சிர கம்பம** தொன்றினை உய்த்திட்டாள். 52

தெரிதரு செந்நெலின் வால்அரி யோர்புடை செறிவித்தாள்
அரிசனம் நீவிய தண்டுல மோர்புடை அமைவித்தாள்
மருமலர் மான்மத மாதிய ஓர்புடை வருவித்தாள்
சுருவையும் நீடுத ருப்பையும் ஓர்புடை தொகுவித்தாள். 53

ஆலமு யிர்க்கும் வரம்பில தாருவின் அணிகொம்பர்
வாலிதின் மெய்ச்சமி தைக்குல மாமென வரையேபோல்
சாலமி குத்தனள் ஓர்புடை வேள்வி தனக்கென்றோர்
பாலின்நி ரைத்தனள் கொள்கல மாகிய படியெல்லாம். 54

**பொன்னின் அகந்தோறும் வெள்ளி முளைத்திடு பொருளேபோல்**
செந்நெலின் உற்றிடு தீம்பொரி யோர்புடை செறிவித்தே
துன்னிய வெண்முதி ரைக்குல மோர்புடை தூர்த்திட்டாள்
பின்னரும் வேண்டுவ யாவையும் நல்கினள் பெருமாயை. 55

மூவகை யாயிர யோசனை எல்லையின் **முரண்வேள்விக்**
காவன நல்கினள் போதலும் யாய்செய லதுநோக்கி
ஓவிது யாரின் முடிந்திடும் வேண்டுவ உய்த்தாளே
ஏவரு மெண்ணஇவ் வேள்வியி யற்றுவன் இனியென்றான். 56

ஊன்புகு பல்வகை ஆவியும் ஈண்டிய வுலகெல்லாந்
தான்புகு தன்விறல் காட்டிய நாட்டிய தாணுப்போல்
மேன்புகு சூரன் நடுத்திகழ் வேதியின் மிகுநாப்பண்
வான்புகு வச்சிர கம்பம் நிறீஇயினன் வலிதன்னால். 57

வச்சிர கம்பம் நிறீஇயின பின்னர் மகம்போற்றும்
நொச்சியின் நாற்றிசை வாயில் தொறுந்தொறும் நொய்திற்போய்
அச்சுறு வீர மடந்தையை உன்னி அருச்சித்துச்
செச்சைக ளாதிய ஊன்பலி நல்குபு செல்கின்றான். 58

**வேறு**

செல்லுஞ் சூரன் நொச்சியின் நாப்பட் செறிகின்ற
கல்லென் வெஞ்சொற் பூதர் தொகைக்குங் கணமென்றே
சொல்லும் பேயின் பல்குழு வுக்குஞ் சோர்வின்றி
ஒல்லும் பான்மை ஊன்பலி யாவையும் உதவுற்றான். 59

சீற்றத் துப்பிற் காளிக ளுக்குந் தென்பாலில்
கூற்றைக் காயும் வயிரவர் தங்கள் குழுவுக்கும்
ஏற்றத் தோடும் அர்ச்சனை செய்தே யினிதாகப்
போற்றிப் போற்றி ஊன்பலி வேண்டுந புரிகுற்றான். 60

சூழாம் எட்டே யாயிர வேதி தொறுநாப்பட்
காழார் நஞ்சின் இந்தனம் இட்டுக் கனல்மூட்டித்
தாழா மேதன் தம்பிய ரோடுந் தகுசூரன்
ஊழால் நாடுற் றானவி வர்க்க முறநேர்ந்தான். 61

நேருந் தோறும் எந்தைதன் நாம நெறிசெப்பிச்
சேரும் அன்பா லன்ன தவன்பாற் செலவுய்த்துச்
சூரன் பின்னர் இம்மகம் ஆற்றுந் தொழில்வல்லோன்
ஆரென் றுன்னித் தாரக னைப்பார்த் தறைகின்றான். 62

ஏற்றஞ் சேரிவ் வேதிகள் தோறும் இறைதாழா
தூற்றங் கொண்டே ஏகினை வேள்வி யுலவாமல்
ஆற்றுந் தன்மை வல்லவன் நீயே அதுவல்லே
போற்றிங் கென்னாக் கூறி நிறுத்திப் போகுற்றான்.

அப்பா லேகி நூறுடன் எட்டாம் அகல்வேதி
துப்பா லெய்தி முன்னவை யேபோல் தொடர்வேள்வி
தப்பா தாற்றிச் சீய முகத்தோன் றனைநோக்கி
இப்பா லுற்றிம் மாமகம் ஆற்றாய் இனிதென்றான். 64

வேறு

தெரிய இன்னணஞ் செப்பி அவுணர்கோன்
அரியின் மாமுகத் தானை அவண்நிறீஇப்
பெரிது நள்ளுறு பெற்றியிற் செய்ததன்
உரிய வேதியின் ஒல்லையின் மேவினான். 65

வேதி யெய்தி விதியுளி அர்ச்சனை
யாது மோர்குறை இன்றியி யற்றியே
மாதொர் பங்குடை வள்ளலை உன்னியோர்
ஏதில் வேள்வி இயற்றுதல் மேயினான். 66

நஞ்சு பில்கு நவையுடைத் தாருவின்
விஞ்சு சாகை வியன்துணி யாவையும்
புஞ்ச மோடு பொருக்கென வேதியில்
துஞ்சி டும்வகை சூரனுந் தூவினான். 67

ஆல மாகி அமர்தரு வின்னெலி
கோலின் ஆக்கிய கொந்தழ லிட்டுமுன்
ஏல மூட்டி இழுதெனு மாமழை
சீல மந்திரத் தோடு சிதறினான்.

அன்ன தற்பினர் அம்பொற் குழிசிகள்
துன்னு கின்ற துணிபடும் ஊன்தொகை
வன்னி யின்கண் மரபின்நின் றுய்த்தனன்
செந்நி றக்குரு திக்கடல் சிந்தியே. 69

செய்ய தோர்மகச் செந்தழல் மீமிசைத்
துய்ய ஓதனஞ் சொன்முறை தூர்த்தனன்

நெய்யும் எண்ணெயும் நீடிய சோரியும்
வெய்ய பாலுந் ததியும் விடுத்துமேல். 70

மேன சாலியின் வெண்பொரி யின்குவை
ஆன நல்கி அழிதரும் ஈற்றினில்
வானு லாய மறிகட லாமெனத்
தேனும் ஆலியுந் தீமிசைச் சிந்தியே. 71

தோரை ஐவனஞ் சூழ்தடத் துற்றநீ
வாரம் எனல் இறுங்கொடு மற்றவும்
மூரி யெள்ளு முதிரையின் வர்க்கமுஞ்
சேர வுய்த்தனன் நெய்க்கடல் சிந்தினன். 72

கொடிய ஐயவி கூர்கறி யாதியாப்
படியில் வெய்ய பலபொருள் யாவையும்
நெடிதும் ஓச்சினன் நேயம தாகிய
கடலை வன்னி கவிழ்த்தன னென்பவே. 73

இன்ன பல்வகை யாவும் இயல்பினாற்
பொன்னு லாஞ்சடைப் புண்ணியன் றன்னையே
முன்னி வேள்வி முயன்றனன் ஞாலமேல்
துன்னு சீர்த்தியன் சூரபன் மாவென்பான். 74

வேறு

சூர னுமவன் அவ்வழிப் பெருவளஞ் சுட்டி
வீர வேள்வியை வேட்டலுஞ் செந்தழல் விரைவின்
ஆரும் அச்சுற வெழுந்துமீச் சென்றன அடுதீப்
பாரை நுங்கிவா னுலகெலாம் உணவெழும் பரிசின் 75

வானம் புக்கது மாதிரம் புக்கது மலரோன்
தானம் புக்கதெவ் வுலகமும் புக்கது தரைக்கீழ்
ஏனம் புக்குமுன் நாடருங் கழலினாற் கியற்றுங்
கானம் புக்கதோர் வேள்வியின் எழுங்கொழுங் கனலே. 76

பானு வின்பதஞ் சுட்டது பனிமதி பதமும்
மீனெ னும்படி நின்றவர் பதங்களும் மேலோர்
போன மேக்குயர் பதங்களுஞ் சுட்டது புலவோர்
கோனு றும்பதஞ் சுட்டது வேள்வியிற் கொடுந்தீ. 77

செற்று வாசவன் பதந்தனைச் சுட்டபின் சேண்போய்
மற்றை மேலவர் பதமெலாஞ் சுட்டது மருங்கில்
சுற்று பாலர்தம் புரங்களுஞ் சுட்டது சூரன்
அற்ற மில்வகை ஆற்றிய வேள்வியுள் அனலே. 78

காலம் எண்ணில தவம்புரி காசிப முனிவன்
பாலன் ஈண்டையில் வலியினோர் மகமது பயில
ஏல நீடுதீ யுலகெலாம் முருக்கிய தென்னில்
மேல வன்செயும் பரிசெலாம் யாவரே விதிப்பார்.

கார்ம றைத்தன கதிர்மதி மறைத்தன கரியோன்
ஊர்ம றைத்தன அயன்பதம் மறைத்தன உலவா
நீர்ம றைத்தன நெருப்பையும் மறைத்தன நீடும்
பார்ம றைத்தன இடையிடை யெழும்புகைப் படலை. 80

சொற்ற வேதிஇவ் வியற்கையால் எரிந்தது சூரன்
பிற்றை யோர்கள்தம் எட்டுநூ றுயிரபேதம்
உற்ற வேதிகள் யாவையும் எரிந்தன ஒருங்கே
முற்றும் வன்னிகள் இறுதிநாள் உலகின்மொய்த் தெனவே. 81

வேள்வி இத்திறஞ் சூர்புரி தன்மையை விரைவில்
கேள்வி யாலுணர் இந்திரன் அச்செயற் கேடு
சூழ நாடினன் முடிப்பருந் தன்மையில் துளங்கி
ஆழ்வ தோர்துயர்க் கடலிடை அழுந்தினன் அயர்ந்தே. 82

சூன்மு கக்கொண்டல் மேனியும் முனிவரர் தொகையும்
நான்மு கத்தனுஞ் சூரபன் மன்செயல் நாடிப்
பான்மை மற்றிது யாவரே புரிவர்இப் பதகன்
மேன்மை பெற்றிட முயன்றனன் கொல்லென வெருண்டார். 83

இந்த வண்ணத்தின் ஒருபதி னாயிரம் யாண்டு
முந்து சூர்தன திளைஞரோ டருமகம் முயல
அந்தி வார்சடைக் கண்ணுதல் நின்மலன் அவன்பால்
வந்தி லானது தேர்ந்தனன் நிருதர்கோன் மாதோ. 84

கண்ணு தற்பரன் அருள்செயாத் தன்மையை கருத்தில்
எண்ணி இச்செயற் குறுவனே சிவனென இசையாப்
பண்ணு மத்தொழில் பின்னவர் தங்கள்பாற் பணித்து
விண்ண கத்தின்மீச் சென்றனன் கடவுளர் வெருவ. 85

வான கத்திடை நிற்புறு சூரபன் மாவாந்
தான வர்க்கிறை வாள்கொடே ஈர்ந்துதன் மெய்யின்
ஊன னைத்தையும் அங்கிமேல் அவியென ஓச்சிச்
சோனை யொத்ததன் குருதியை இழுதெனச் சொரிந்தான். 86

சோரி நெய்யவா ஊன்களே அவியவாச் சூரன்
வீர மாமகம் புரிவுழித் தனதுமெய்ம் மிசையூன்
ஈர ஈரவே முன்னையின் வளர்தலும் இதுகண்
டாரும் அச்சுறத் தெழித்தனன் விம்மித மானான். 87

சிந்தை யிற்பெரு மகிழ்ச்சிய னாகியிச் செய்கை
எந்தை யற்புறு நிலையதோ வெனமனத் தெண்ணா
மந்த ரப்புய நிருதர்கோன் பின்னும்அம் மரபால்
அந்த ரத்திடைத் தசைப்பெரு வேள்வியை அயர்ந்தான். 88

ஆண்டொ ராயிரம் இம்மகம் அந்தரத் தியற்ற
நீண்ட மாலுடன் நான்முகன் தேடரும் நிமலன்

ஆண்டும் வந்திலன் சூரன்அத் தன்மைகண் டழுங்கி
மாண்டு போவதே இனிக்கட னெனமனம் வலித்தான். 89

உன்னி இத்திறஞ் சூரபன் மாவெனும் ஒருவன்
வன்னி சுற்றிய ஆதிகுண் டத்திடை வதிந்து
செந்நி றத்ததாய் ஆணையால் அங்கியிற் சிதையாக்
கொன்னு னைத்தலை வச்சிர கம்பமேற் குதித்தான். 90

கடிதின் உச்சியின் றுருவியே வச்சிர கம்பத்
தடிதனிற்சென் றுசூரபன் மாவெனும் அவுணன்
படிவ முற்றுநுண் துகளுற உளம்பதை பதைத்து
முடிய மற்றது கண்டனன் மடங்கல்மா முகத்தோன். 91

கண்ட காலையின் உளம்பதை பதைத்தது கண்கள்
மண்டு சோரிநீர் கான்றன கரங்களும் வாயுங்
குண்ட வேள்வியில் தொழில்மறந் திட்டன குறிப்போர்
உண்டு போலுமென் றையுற ஒதுங்கிய துயிரே. 92

துயர்ப்பெ ருங்கடல் நடுவுற ஆழ்ந்துதொல் லுணர்ச்சி
அயர்த்து மால்வரை யாமென மறிந்தனன் அறிவு
பெயர்த்தும் வந்துழிப் பதைபதைத் தமலந்து பெரிதும்
உயிர்த்து வாய்திறந் தன்னவன் புலம்புதல் உற்றான். 93

வேறு

மாயை தரும்புதல்வா மாதவஞ்செய் காசிபற்கு
நேய முருகா நிருதர் குலத்திறைவா
காயமுடன் நின்னையான் காணேனல் எங்கொளித்தாய்
தீய மகம்பலநாட் செய்துபெற்ற பேறிதுவோ. 94

தாயுந் தலையளிக்குந் தந்தையுநீ தானவரை
ஆயுந் தலைவனும்நீ ஆவியும்நீ என்றிருந்தோய்
நீயங் கதனை நினையா திறந்தனையே
மாயுஞ் சிறியோர்க்கு மற்றிங்கோர் பற்றுண்டோ. 95

வீரனே தானவர்க்குள் மிக்கோனே மிக்கபுகழ்ச்
சூரனே நின்போல் தொடங்கிஇந்த வேள்விதனை
ஆரனே கம்வைகல் ஆற்றினர் ஆற்றியநீ
ஈரநே யங்கொள்ளா தெம்மைஅகன் றேகினையே. 96

நின்கண் அருளில்லா நீர்மையுண ராய்பன்னாட்
புன்கண் உறுவாய் புரமூன்று முன்னெரித்த
வன்க ணரைக்குறித்தே மாமகஞ்செய் தாய்அதற்கோ
உன்கண் உளதாம் உயிர்தனையுங் கொண்டனரே. 97

உன்போல் உயிர்விட் டுயர்மகஞ்செய் தோரும்அரன்
தன்போல் அருளாத் தகைமையரும் ஆங்கவைகண்
டென்போல் உயிர்கொண் டிருந்தோரும் இல்இவருள்
வன்போ டியமனத்து வன்கண்ணர் ஆர்ஐயா. 98

ஈசன் அருளால் எரிவேள் வியைஓம்பிப்
பேரரிய வன்மைதனைப் பெற்று நமதுயிரும்
ஆசில் வளனும் அகற்றுவரென் றேயயர்ந்த
வாரவனும் இன்றே மனக்கவலை தீர்ந்ததுவே. 99

எல்லாரும் போற்ற எரிவேள் வியைஓம்பிப்
பல்லா யிரநாட் பழகி எமக்குமிது
சொல்லா திறந்தாய் துணைவராய் நம்முடனே
செல்லார் இவரென்று சிந்தைதனிற் கொண்டனையோ. 100

ஈண்டாருங் காண எரியினிடைத் தம்பமிசை
வீண்டாய் உயிர்போய் விளிந்தாய் மிகும்வன்கண்
பூண்டாய்நின் மெய்யும் ஒளித்தாய் புலம்புமியாம்
மாண்டாலும் உன்றன் மதிவதனங் காண்போமோ. 101

என்றின் னனசொற் றிரங்கி அரிமுகத்தோன்
முன்றன்னை நல்கி முலையளிக்குந் தாய்காணுக்
கன்றென்ன வீழ்ந்தழுங்கக் கண்டதனைத் தாரகனுங்
குன்றென்னத் தன்கை குலைத்தரற்றி வீழ்ந்தனனே. 102

வீழ்ந்தான் உயிர்த்தான்அவ் வேள்விக் களமுற்றுஞ்
சூழ்ந்தான் புரண்டான் துளக்கையி னுல்நிலத்தைப்
போழ்ந்தா னெனவே புடைத்தான் துயர்க்கடலுள்
ஆழ்ந்தான்விண் ணஞ்ச அரற்றினன் தாரகனே. 103

சிங்க முகனுந் திறல்கெழுவு தாரகனுந்
தங்கண் முதல்வன் தவறுற் றதுநோக்கி
அங்கண் அரற்ற அதுகண்ட தானவர்கள்
பொங்குங் கடல்போல் பொருமிப் புலம்பினரே. 104

தாரகனுஞ் சீயத் தனிவீ ரனும்அவுணர்
ஆரும் நெடிதே அரற்றும் ஒலிகேளாச்
சீரில் வியனுலகில் தேவர்கோன் தன்னொற்றால்
சூரன் மகத்தீயில் துஞ்சு செயல்உணர்ந்தான். 105

தண்டார் அகலச் சதமகத்தோன் தானவர்கோன்
விண்டா னெனவே விளம்புமொழி கேளா
அண்டா மகிழ்ச்சியெனும் ஆர்கலியிற் பேரமுதம்
உண்டா னெனவேதன் உள்ளங் குளிர்ந்தனனே. 106

சிந்தை குளிர்ந்து செறியுமுரோ மஞ்சிலிர்த்து
முந்து துயர முழுதுந் தொலைத்தெழுந்து
வந்து புடைசூழும் வானோ ருடன்கடவுள்
தந்தி மிசையெய்தித் தனதுலகம் நீங்கினனே. 107

பொன்னுலகம் நீங்கிப் புரைதீர் மதிக்கடவுள்
தன்னுலகம் நீங்கித் தபனன் பதங்கடந்து

துன்னும் அவுணர் துயருஞ் செயல்காண்பான்
மின்னுலவு மேக வியன்பதத்தில் வந்தனனே. 108

விண்ணுடர் தங்களுடன் வேள்விக் கிறைவிசும்பின்
நண்ணு மகிழா நாகையாத்தன் நற்றவத்தை
எண்ணு வியவா இரங்கும் அவுணர்தமைக்
கண்ணுர நோக்கிக் களிப்புற்று நின்றனனே. 109

நின்றதொரு காலை நிருத ருடன்அரற்றித்
துன்றுதுயர் மூழ்கிச் சோர்கின்ற சீயமுகன்
நன்றெனுயிர் போக நானிருப்ப தேயிங்஫ன்
என்று கடிதுமனத் தெண்ணி எழுந்தனனே. 110

அன்ன திறல்அவுணன் ஆயிரமென் றுள்ளஅகன்
சென்னிபல வுந்தனது செங்கைவா ளால்ஈர்ந்து
முன்னம் முதல்வன் முயன்ற பெருவேள்வி
வன்னி அதனுள் மறம்பேசி இட்டனனே. 111

ஈர்ந்து தலைகள் எரியில் இடுமுன்னர்ச்
சேர்ந்த வனையான் சிரங்கள் அவைமுழுதும்
பேர்ந்தும் அரிந்து பிறங்கு தழலினிடை
நேர்ந்து தனிநின்றான் நிருதர்க் கிறையோனே. 112

முன்னோன் எழுந்து முயலுஞ் செயல்நோக்கிப்
பின்னோன் தனது பெருஞ்சிரமுந் தான்கொய்து
மன்னோன் மகமியற்றும் வான்தழலி னுள்ளிட்டான்
அன்னோ வெனவே அவுணர் குழுஇரங்க. 113

சென்னி தனையரிந்து செந்தழலின் நாப்பணிடு
முன்ன மதுபோல வேறே முளைத்தெழலும்
பின்னும் அனையான்அப் பெற்றிதனை யேபுரிய
அன்ன படிகண்ட அவுணர் தமிற்சிலரே. 114

தங்கள் சிரமுந் தனிவாளி னுல்துணியா
அங்கி மிசையிட்டும் அதன்கண் உறவீழ்ந்தும்
அங்கி உயிரதனை மாற்றிடலுஞ் சூரன்போல்
சிங்க முகனும்எரி செல்லத் துணிந்தனனே. 115

மோனத்தின்[1] வேள்வி முயன்றதொரு முன்னவன்போல்
வானத் தெழுவான் வலித்துமனங் கொண்டிடலுங்
கானக் கடுக்கை கலைமதிசேர் செய்யசடை
ஞானப் பொடி[2]புனையும் நாதனது கண்டனனே. 116

ஆகத் திருவிருத்தம்—643.

1 மோனம் - மௌனம். 2 ஞானப்பொடி - விபூதி.

# 9. வரம்பெறு படலம்

—oo—

கண்ட கறைமிடற்றுக் கண்ணுதலோன் சுந்தரனை
விண்டு முதலோர் வியப்பவே வெண்ணையிலாட்
கொண்ட தொருபனவக் கோலந் தனைத்தரித்துத்
தண்டும் ஒருகை தனில்ஊன்றி வந்தனனே. 1

அங்கண் மகவேதி அணித்தாக வேகுறுகிச்
சிங்க முகனைச் சிவபெருமான் கண்ணுற்றே
இங்கு மிகநீ ரெவரும் இரங்குகின்றீர்
நுங்கள் பரிசு நுவலு மெனமொழிந்தான். 2

எந்தை பெருமான் இயம்ப அதுநாடித்
தந்தை யனையார் தமியேந் துயர்கண்டு
வந்து வினவுகின்றார் மற்றிங் கிவர்அருள்சேர்
சிந்தை யினரென்று சீயமுகன் உன்னினனே. 3

உன்னி அமலன் உகள மலர்ப்பதமேல்
சென்னி பலவுஞ் செறியப் பணிந்தெழுந்தெம்
இன்னல் வருவாயும் எமது வரன்முறையும்
பன்னி யிடுவ னெனவே பகர்கின்றான். 4

வேறு

தந்தை யாவான் காசிபனே தாயும் மாயை தானென்பான்
மைந்தர் யாங்கள் ஒருமூவர் மக்கள் பின்னும் பலருண்டால்
எந்தம் அன்னை பணிதன்றே லியாங்கள் ஈசன் றனக்காக
இந்த வனத்தில் மூவருமிவ் வேள்வி தன்னை இயற்றினமே. 5

அங்கப் பரிசே யாண்டுபல அகல மகத்தை ஆற்றிடவுங்
கங்கைச் சடையோன் முன்னின்று கருணை சிறிதுஞ் செய்திலனால்
எங்கட் கெல்லாம் முன்னவனும் இகல்வெஞ் சூர னதுநாடி
மங்குற் செறியும் வானிற்போய் வாளால் தசையீர்ந் திட்டனனே. 6

மின்போல் இலங்கும் வாளாற்றன் மெய்யிற் றசைகள் ஈர்ந்துளத்தில்
துன்போர் இறையும் இல்லாத சூரன் மகத்தீ மிசையிடலும்
முன்போல் தன்னூன் வளர்ந்திடவே பின்னும் அஃதே முயன்றதற்பின்
தன்போல் ஒளிர்வச் சிரகம்பத் தலைவீழ்ந் துருவித் தழல்புக்கான். 7

புக்கு முன்னோன் ஈறுகிப் போந்த காலை யாங்கண்டு
மிக்க மனத்தில் துயர்கொண்டு வெருவிப் புலம்பி எமதுயிரும்
ஒக்க விடவே நினைந்தேமால் உம்மைக் கண்டோ ரிறைதாழ்த்தோம்
தக்க திதுநம் வரன்முறையுந் தமியேந் துயரு மெனமொழிந்தான். 8

மொழிந்த காலை அங்கணின்ற முக்கண் இறைநும் முன்னோன்போல்
ஒழிந்து நீரும் மாயாதே உமது சூரன் தனையின்னே

அழிந்த தீயுள்நின் றெழுவித் தருள்செய் கின்றும் அதுகாண்டிர்
கழிந்த சோகம் விடுதிரெனக் கங்கை தன்னை நினைந்தனனே. 9

முன்னாள் அம்மை அங்குலியின் முளைத்த கங்கை தனிலெங்கோன்
மின்னார் சடையிற் கரந்தனவே யன்றி மகவான் விரிஞ்சன்மால்
என்னா நின்ற மும்மையினோர் இருக்கை தோறும் அளித்தவற்றுட்
பொன்னாட் டிருந்த நதிதன்னைப் புந்தி மீதில் உன்னினனே. 10

மாயோன் தன்பால் முற்கொண்ட வலிசேர் தண்ட மேந்திவரு
தூயோன் உன்ன அக்கங்கை துண்ணென் றுணர்ந்து துளங்கி விண்ணோர்
ஆயோர் எவரும் வெருக்கொள்ள அளப்பில் முகங்கொண் டார்த்தெழுந்து
சேயோ ரெல்லாம் அணித்தாகத் திசையோர் அஞ்சச் சென்றதுவே. 11

மேலா கியவிண் ணுலகனைத்தும் விரைவிற் கடந்து மேதினியின்
பாலாய் எங்கள் பிரான்பதங்கள் பணிந்து பணியாற் படர்செந்தீ
ஏலா நின்ற நடுக்குண்டத் திடையே புகலும் எறிகடல்வாய்
**ஆலா லம்வந் துதித்ததென அவுணர் கோமா னார்த்தெழுந்தான்.** 12

தொன்மை போல வேதியினிற் சூர பன்மாத் தோன்றலுமத்
தன்மை கண்ட அரிமுகனுந் தார கப்பேர் வீரனுமாய்
இன்மை கொண்டோர் பெருவளம்பெற் றென்ன மகிழ்வுற் றெல்லையிலா
வன்மை யெய்திக் கடிதோடி மன்னன் பதமேல் வணங்கினரே. 13

தங்கோன் தன்னைப் பின்னோர்கள் தாழுஞ் செயலைத் தானவர்கண்
டெங்கோன் வந்தான் வந்தானென் றெவருங் கேட்ப எடுத்தியம்பிப்
பொங்கோ தஞ்சேர் கடன்மதியப் புத்தேள் வரவு கண்டதென
அங்கோ தையினால் வாழியவென் றவனைப் போற்றி ஆர்த்தனரே. 14

எண்மேற் கொண்ட நிருதர்குழாம் ஏத்த எரிநின் றெழுசூரன்
மண்மேற் கொண்ட திறங்காணூஉ வானோர் தொகையும் மகபதியும்
**விண்மேற் கொண்ட புயல்கண்ட வியன்கோ கிலம்போல்** வெருவித்தம்
முன்மேற் கொண்ட செல்லலொடும் ஓடித் தம்மூர் உற்றனரே. 15

**வேறு**

அரந்தைதனை இகந்தஇரு துணைவர்களும் பாங்குற அவுணர் சேனை, பரந்துபல வாழ்த்தெடுப்பச் சூரபன்மன் திகழ்வேலை படியும் வானும், நிரந்தபுனற் கங்கைதனை வருவித்து மறையவன்போல் நின்ற எம்மான், கரந்துதனை உணர்கின்ற உருவினொடு தோன்றினால் ககன மீதே. 16

நாரிபா கமும்இமையா முக்கண்ணுந் திருப்புயங்கள் நான்குமாகி, மூரிமால் விடைமேல்கொண் டெம்பெருமான் மேவுதலும் உன்னி நோக்கிப், பாரின்மீ மிசைவீழ்ந்து பணிந்தெழுந்து பலமுறையும் பரவிப் போற்றிச், சூரனா ராதபெரு மகிழ்சிறந்து துணைவரொடுந் தொழுது நின்றான். 17

நின்றுபுகழ் சூரபன்மன் முகநோக்கி நமையுன்னி நெடிது காலம், வன்றிறன்மா மகமாற்றி எய்த்தனையால் வேண்டுவதென் வகுத்தி

யென்னப், பொன்றிகழு மலர்க்கமலப் பொகுட்டுறைவோன் முதலிய புத் தேளிர் யாரும், இன்றெமது தலைமையெலாம் போயிற்ரு லெனச் சொல்வான். 18

கொன்றுரும் புவிப்பாலாய்ப் பலபுவனங் கொண்டவண்டக் குழுவுக் கெல்லாம், மன்ருகி யுறல்வேண்டும் அவைகாக்குந் தனியாழி வரலும் வேண்டும், உன்னுமுன் அவையனைத்துஞ் செல்லுவதற் கூர்திகளும் உதவல் வேண்டும், எந்நாளும் அழியாமல் இருக்கின்ற மேனியுமெற் கீதல் வேண்டும். 19

அலையாழி மிசைத்துயில்கூர் பண்ணவனே முதலோர்கள் அமர் செய் தாலும், உலையாது கடந்திடுபேர் ஆற்றலொடும் பலபடையும் உதவல் வேண்டும், தொலையாமே எஞ்ஞான்றும் இருந்திடலும் வேண்டுமெனச் சூரன் வேண்டக், கலையார்வெண் மதிமிலைச்சுஞ் செஞ்சடிலத் தனிக்கடவுள் கருணை செய்வான். 20

மண்டலனக்கா யிரகோடி அண்டங்க ளுளவாகு மற்ற வற்றுள், அண்டமோ ராயிரத்தெட் டுகநூற்றெட் டாள்கவென அருளால் நல்கி, எண் டொகைபெற் றிடுகின்ற அவ்வண்டப் பரப்பெங்கும் ஏகும் வண்ணம், திண்டிறல்பெற் றிடுகின்ற இந்திரஞா லமதென்னுந் தேரும் நல்கி. 21

எண்ணுபல புவனங்கள் கொண்டஅண்டத் யென்றும் போற்றக், கண்ணனது நேமியினும் வலிபெறுமோர் அடலாழி கடிதின் நல்கி, அண்ண லுறு சினவேற்றுக் கோளரியூர் தியும்நல்கி அகிலத் துள்ள, விண்ணவர்கள் யாவருக்கும் அன்றுமுதன் முதல்வனும் மேன்மை நல்கி. 22

மேற்றிகழும் வானவரைத் தானவரை ஏனவரை வெற்றி கொள்ளும்
ஆற்றலொடு பெருந்திறலும் பாசுபத மாப்படையே ஆதி யாகித்
தோற்றமுறு கின்றதெய்வப் படையனைத்தும் எந்நாளுந் தொலைந்தி டாமல்
ஏற்றமிகும் வச்சிரமா கியமணிமே னியுமுதவி இதற்குப் பின்னர். 23

ஆறுசேர் கங்கைதனை விண்ணுலகு தனிலேவி அக்கங் கைக்குங்
கூறுசேர் பெருவேள்விச் செந்தழற்குந் தோற்றமெய்திக் குலவும் வண்ணம்
வீறுசேர் பெருங்கடல்போல் ஒருபதினு யிரகோடி வெள்ள மாகுந்
தாறுபாய் கரிதிண்டேர் வயப்புரவி அவுணரெனுந் தானை நல்கி, 24

வேறு

துன்னுறு பெரும்புகழ்ச் சூர பன்மனுக்
கின்னதோ ரருள்புரிந் திட்ட வெல்லையில்
அன்னவற் கிளைஞர்வந் தடிப ணிந்தெழத்
தன்னிகர் இல்லதோர் தலைவன் கூறுவான். 25

வேறு

சூரன் என்பவன் தோளிணை போலவே
வீரம் எய்தி விளங்கிநூற் றெட்டுகஞ்

சீரின் மேவுதிர் தேவர்கள் யாரையும்
போரில் வென்று புறந்தரக் காண்டிரால். 26

தேவர் யாவருஞ் சென்று தொழப்படு
மூவ ராகி மொழிந்திடு நுங்களைத்
தாவி லாதநஞ் சத்தியோன் றேயலால்
ஏவர் வெல்பவர் என்று விளம்பிமேல். 27

ஈறு ருத விரதமுந் தன்பெயர்
கூறு தெய்வப் படையுங் கொடுத்திடா
வேறு வேறு மிகவருள் செய்துமேல்
ஆறு சேர்சடை ஆண்டகை ஏகினன். 28

ஆகத் திருவிருத்தம் - 671.



# 10. சுக்கிரனுபதேசப் படலம்

—oo—

அற்று இன்ற வேலையின் முன்னோர் அரணம்போற்
சுற்று நிற்குந் தானவர் தங்கோன் தொலைவில்சீர்
பெற்றான் என்னுந் தன்மையை உன்னிப் பெருவன்மை
உற்று ரொல்லென் றார்த்தனர் ஆற்ற உவப்பெற்றார். 1

ஊழியில் வேதன் கண்டுயில் வேலை உலகஞ்சூழ்
ஆழிக ளேழும் ஆணையின் நிற்றல் அதுநீங்கி
மாழைகொள் மேருச் சுற்றிய தென்ன மகத்தெல்லை
சூழறல் நீங்கிச் சூர்முதல் தன்பால் துன்னுற்றார். 2

கண்டார் ஆர்த்தார் கான்மிசை வீழ்ந்தார் கமழ்வேரி
கொண்டார் ஒத்தார் கைத்தொழு கின்றார் குப்புற்றார்
அண்டா ஓகை பெற்றனர் தொன்னாள் அயர்வெல்லாம்
விண்டார் வெஞ்சூர் தன்புடை யாகி விரவுற்றார். 3

முன்னா குற்றோ ரிற்சிலர் தம்மை முகநோக்கி
இந்நாள் காறும் நீர்வலி யீர்கொ லெனவோதி
மன்னா குற்றோன் அல்லருள் செய்ய மகிழ்வெய்தி
அன்னார் யாரும் இன்னதொர் மாற்றம் அறைகுற்றார். 4

தீயுண் டாகுங் கண்ணுதல் கொண்ட சிவனுண்டு
நீயுண் டெங்கட் கோர்குறை யுண்டோ நிலையாகி
ஏயுஞ் செல்வஞ் சீரொடு பெற்றோம் இடரற்றோம்
தாயுண் டாயின் மைந்தர் தமக்கோர் தளர்வுண்டோ. 5

என்பார் தம்பால் அன்பின னாகி இறைபின்னோர்
தன்பா லாக நிற்புழி இந்தத் தகுவன்றான்

வன்பா லானான் செய்வதென் என்னா வானோர்கள்
துன்பாய் அச்சுற் றேங்கினர் ஆவி தொலைவார்போல். 6

வேறு

சேனை நள்ளிடைச் சீர்கெழு வன்மையான்
மேனை தன்மை விருப்பினிற் கண்ணுறீஇ
மான மேற்சென்று மன்னொடுந் தானவர்
சோனை மாரியில் தூமலர் தூவினார்.

தூசு வீசினா சூர்முதல் வாழியென்
றாசி கூறினர் ஆடினர் பாடினர்
பேச லாத பெருமகிழ் வெய்தினார்
வாச வன்றன் மனத்துயர் நோக்கினார். 8

அண்ண லார்அரு ளால்அழல் வேதியின்
கண்ணில் வந்த கணிப்பில் படைக்கெலாம்
எண்ணி லோரை இறையவர் ஆக்கினான்
நண்ணி நாளும் நவையறப் போற்றவே.

கண்ண கன்புயக் காவலன் தானைகள்
மண்ணும் வானமும் மாதிர வெல்லையுந்
தண்ண றச்செலத் தம்பியர் தம்மொடும்
எண்ணி வேள்வி இருங்களம் நீங்கினான். 10

நீங்கி மீண்டு நெடுந்தவத் தந்தைதன்
பாங்கர் எய்திப் பணிந்து பரமனால்
வாங்க லுற்ற வரத்தியல் கூறியே
யாங்கள் செய்வகை என்னினி யென்னவே. 11

தந்தை கேட்டுச் சதமகன் வாழ்வினுக்
கந்த மாகிய தோவண்ட ருக்கிடர்
வந்த தோவெம் மறைநெறி போனதோ
எந்தை யார்அருள் இத்திற மோவெனா. 12

உன்னி யுள்ளத் துணர்வுறு காசிபன்
தன்னின் வந்த தனயரை நோக்கியே
முன்னை நுங்கண் **முதற்குருப் பார்க்கவன்**
அன்ன வன்கண் அடைகுதிர் அன்பினீர். 13

அடைதி ரேயெனின் அன்னவன் உங்களுக்
கிடைய றாவகை இத்திரு மல்குற
நடைகொள் புந்தி நவின்றிடும் நன்றெனா
விடைபு ரிந்து விடுத்தனன் மேலையோன். 14

விட்ட காலை விடைகொண்டு வெய்யவன்
மட்டி லாத வயப்படை யோடெழா
இட்ட மான இயற்புக ரோனிடங்
கிட்டி னானது கேட்டனன் ஆங்கவன். 15

கேட்டு ணர்ந்திடு கேழ்கிளர் தேசிகன்
வாட்ட நீங்கி மகிழ்நறை மாந்தியே
வேட்ட மெய்தி விரைந்துதன் சீடர்தங்
கூட்ட மோடெதிர் கொண்டு குறுகவே. 16

கண்ட சூரன் கதுமெனத் தன்பெருந்
தண்ட முன்சென்று தம்பியர் தம்மொடு
மண்டு காதலின் மன்னிய தேசிகன்
புண்ட ரீகமென் பொன்னடி தாழ்ந்தெழ. 17

நன்று வாழிய நாளுமென் றுசிகள்
நின்று கூறி நிருதர்க் கிறைவனைத்
தன்று ணைக்கரத் தால்தழு விப்புகர்
என்றும் வாழ்தன் னிருக்கைகொண் டேகினான். 18

ஏகு மெல்லை இளவற் கிளவலை
வாகு சேர்ந்தநம் மாப்படை போற்றெனா
யூக மோடு நிறீஇயுர வோனொடும்
போகல் மேயினன் புந்தியில் சூரனே. 19

ஆரு யிர்த்துணை யான அரிமுகன்
வார முற்றுடன் வந்திட வந்திடுஞ்
சூர பன்மனைச் சுக்கிரன் தன்னிடஞ்
சேர வுய்த்துச் செயன்முறை நாடியே. 20

ஆச னங்கொடுத் தங்கண் இருத்தியே
நேச நெஞ்சொடு நீடவும் நல்லன
பேசி நீர்வரும் பெற்றியென் னேவெனுத்
தேசி கன்சொலச் செம்மல் உரைசெய்வான். 21

ஓங்கு வேள்வி உலப்பறச் செய்ததும்
ஆங்க னம்வந் தரனருள் செய்ததும்
தாங்க ரும்வளந் தந்ததுங் காசிபன்
பாங்கர் வந்த பரிசும் பகர்ந்துமேல். 22

தாதை கூறிய தன்மையும் முற்றுற
ஓதி யாமினி ஊக்கிம் யியற்றிடும்
நீதி யாது நிகழ்த்துதி நீயெனத்
தீது சால்மனத் தேசிகன் கூறுவான். 23

பாச மென்றும் பசுவென்றும் மேதகும்
ஈச னென்றும் இசைப்பர் தனையெனப்
பேசல் மித்தை பிறிதிலை ஆவியுந்
தேசு மேவு சிவனுமொன் றுகுமே. 24

தீய நல்லன வேயெனச் செய்வினை
ஆயி ரண்டென்பர் அன்னவற் றேதுவால்

ஏயு மால்பிறப் பென்பர்இன் பக்கடல்
தோயும் என்பர் துயருறு மென்பரால். 25

ஒருமை யேயன்றி ஊழின் முறைவிராய்
இருமை யுந்துய்க்கும் என்பர்அவ் வெல்லையில்
அரிய தொல்வினை யானவை ஈட்டுமேல்
வருவ தற்கென்பர் மன்னுயிர் யாவையும். 26

ஈட்டு கின்ற இருவினை யாற்றலான்
மீட்டு மீட்டும் விரைவின் உதித்திடும்
பாட்டின் மேவும் பரிசுணர்ந் தன்னவை
கூட்டு மென்பர் குறிப்பறி தாஞ்சிவன். 27

சொற்ற ஆதியுந் தோமுறு வான்றனை
உற்ற ஆவியும் ஒன்றல ஒன்றெனில்
குற்ற மாகும்அக் கோமுதற் கென்பரால்
மற்ற தற்கு வரன்முறை கேட்டிநீ. 28

ஆதி யந்தமின் றாகி அமலமாஞ்
சோதி யாயமர் தொல்சிவன் ஆடலின்
காத லாகிக் கருதுதல் மாயையாற்
பூதம் யாவும் பிறவும் புரிவனால். 29

இடங்கொள் மாயையின் யாக்கைக ளாயின
அடங்க வும்நல்கி அன்னவற் றூடுதான்
கடங்கொள் வானிற் கலந்துமற் றவ்வுடல்
மடங்கு மெல்லையின் மன்னுவன் தொன்மைபோல். 30

இத்தி றத்தின்எஞ் ஞான்றும்அவ் வெல்லைதீர்
நித்தன் ஆடல் நிலைமை புரிந்திடும்
மித்தை யாகும் வினைகளும் யாவையும்
முத்தி தானு முயல்வதும் அன்னதே. 31

பொய்ய தாகும் பொறிபுலம் என்றிடின்
மெய்ய தோவவை காணும் விழுப்பொருள்
மையில் புந்தியும் வாக்கும் வடிவமுஞ்
செய்ய நின்ற செயல்களும் அன்னதே. 32

அன்ன செய்கைகள் அன்மைய தாகுமேற்
பின்னர் அங்கதன் பெற்றியின் வந்திடும்
இன்னல் இன்பம் இரண்டுமெய் யாகுமோ
சொன்ன முன்னைத் துணிபின வாகுமே. 33

மித்தை தன்னையும் மெய்யெனக் ம
அத்த குந்துய ரானதும் இன்பமும்
நித்த மாகும் நிமலனை எய்துமோ
பொத்தி லான பொதியுடற் காகுமே. 34

தோன்று கின்றதும் துண்ணென மாய்வதும்
ஏன்று செய்வினை யாவதுஞ் செய்வதும்
ஆன்ற தற்பரற் கில்லை அனையதை
ஊன்றி நாடின் உடற்குறு பெற்றியே. 35

போவ தும்வரு கின்றதும் பொற்புடன்
ஆவ தும்பின் அழிவதுஞ் செய்வினை
ஏவ தும்மெண்ணி லாத கடந்தொறும்
மேவு கின்றதொர் விண்ணினுக் காகுமோ. 36

அன்ன போல்எங்கும் ஆவியொன் றாகியே
துன்னி நின்றிடு தொல்பரன் வேறுபா
டென்ன தும்மிலன் என்றுமொர் பெற்றியான்
மன்னும் அங்கது வாய்மையென் றோர்திநீ. 37

தஞ்ச மாகும் தருமநன் றுலென
நெஞ்ச கத்து நினைந்து புரிவதும்
விஞ்சு கின்ற வியன்பவந் தீதென
அஞ்சு கின்றது மாம்அறி வின்மையே. 38

யாது யாதுவந் தெய்திய தன்னதைத்
தீது நன்றெனச் சிந்தைகொள் ளாதவை
ஆதி மாயையென் றுய்ந்தவை ஆற்றுதல்
நீதி யான நெறிமைய தாகுமே. 39

தருமஞ் செய்க தவறுள பாவமாங்
கருமஞ் செய்யற்க என்பர் கருத்திலார்
இருமை தன்னையும் யாவர்செய் தாலுமேல்
வருவ தொன்றிலை மாயம்வித் தாகுமோ. 40

கனவின் எல்லையில் காமுறு நீரவும்
இனைய வந்தவும் ஏனை இயற்கையும்
நனவு வந்துழி நாங்கண்ட தில்லையால்
அனைய வாம்இவண் ஆற்றுஞ் செயலெலாம். 41

இம்மை யாற்றும் இருவினை யின்பயன்
அம்மை எய்தின்அன் றேவடை யப்படும்
பொய்ம்மை யேயது பொய்யிற் பிறப்பது
மெய்ம்மை யாகும தோசுடர் வேலினோய். 42

நெறிய தாகுமிந் நீர்மையெ லாம்பிறர்
அறிவ ரேயெனின் அன்னதொர் வேலையே
பெறுவர் யாமுறும் பெற்றியெ லாமவை
உறுதி யுண்டெனின் உண்மைய தாகுமே. 43

சிறிய ரென்றுஞ் சிலரைச் சிலரைமேல்
நெறிய ரென்றும் நினைவது நீர்மையோ

இறுதி யில்லுயிர் யாவுமொன் றேயெனு
அறிதல் வேண்டுமஃ துண்மைய தாகுமே. 44

உண்மை யேயிவை ஓதியி னோர்உணர்
நுண்மை யாம்இனி நுங்களுக் காகிய
வண்மை யுந்தொல் வழக்கமும் மற்றவுந்
திண்மை யோடுரை செய்திடக் கேட்டிநீ. 45

தேவர் தம்மினுஞ் சீதர னாதியோர்
ஏவர் தம்மினும் ஏற்றம தாகிய
கோவி யற்கையுங் கொற்றமும் ஆணையும்
ஓவில் செல்வமும் உன்னிடை யுற்றவே.

வேறு

உற்றதோர் மேன்மை நாடி உன்னைநீ பிரம மென்றே
தெற்றெனத் தெளிதி[1] மற்றத் திசைமுகன் முதலோர் தம்மைப்
பற்றலை மேலோ ரென்று பணியலை இமையோர் உங்கள்
செற்றலர் அவரை வல்லே செறுமதி சிறுவன் சிந் 47

இந்திர னென்போன் வானோர்க் கிறையவன் அவனேநென்னல்
அந்தமில் அவுண ர் தங்கள் ஆருயிர் கொண்டான் அன்னோன்
உய்ந்தனன் போகா வண்ணம் ஒல்லையில் அவனைப் பற்றி
மைந்துறு நிகளஞ் சேர்த்தி வன்சிறை புரிதி மாதோ. 48

சிறையினை இழைத்துச் செய்யுந் தீயன பலவுஞ் செய்து
மறைபுகல் முனிவர் தம்மை வானவர் தம்மைத் திக்கின்
இறையவர் தம்மை நாளும் ஏவல்கொண் டிடுதி அன்னோர்
உறைதரு பதங்க ளெல்லாம் உதவுதி அவுணர்க் கம்மா. 49

கொலையொடு களவு காமங் குறித்திடும் வஞ்ச மெல்லாம்
நிலையெனப் புரிதி யற்றால் நினக்குமேல் வருந்தீ தொன்றும்
இலையவை செய்தி டாயேல் இறைவநீ விரும்பிற் றெல்லாம்
உலகிடை ஒருங்கு நண்ணு உனக்கெவர் வெருவும் நீரார். 50

வண்டுழாய் மிலைச்சுஞ் சென்னி மால்விடைப் பாகன் தந்த
அண்டமா யிரமே லெட்டும் அனிகமோ டின்னே ஏகிக்
கண்டுகண் டவண்நீ செய்யுங் கடன்முறை இறைமை யாற்றி
எண்டிசை புகழ மீண்டே ஈண்டுவீற் றிருத்தி யென்றான். 51

ஆகத் திருவிருத்தம்–722.

1. இது மாயாவாத உபதேசம் ஆகும்.

# 11. அண்டகோசப் படலம்

—oo—

தீயதோ ரினைய மாற்றஞ் செப்பலும் இதுநன் றெந்தை
ஏயின பணியில் நிற்பன் இறையவன் எனக்குத் தந்த
ஆயிரத் தெட்டெண் ணுேதும் அண்டங்கள் நிலைமை யாவும்
நீயுரை யென்ன ஆசான் நிருபனுக் குரைக்க லுற்ருன். 1

மேலுள பொருளுந் தத்தம் விளைவது நிற்க இப்பால்
மூலமாம் பகுதி தன்னின் மூளைத்திடும் புந்தி புந்தி
ஏலுறும் அகந்தை ஒன்றின் எய்தும்ஐம் புலனும் ஆங்கே
வாலிய ககனந் தொட்டு மாநிலங் காறும் வந்த. 2

அப்பெரும் புவிக்குத் தான்ஓர் ஆயிர கோடி யண்டம்
ஒப்பில வென்ன உண்டால் ஒன்றினுக் கொன்று மேலாச்
செப்புறு நிலைமைத் தன்று தெரிந்திடிற் பரந்து வைகும்
வைப்பென லாகும் அன்ன மற்றவை அம்பொன் வண்ணம். 3

அங்கண்மா ஞாலத் தண்டம் ஆயிர கோடி தன்னில்
இங்குநீ பெற்ற அண்டம் ஆயிரத் தெட்டி னுள்ளுந்
துங்கமாம் அண்ட மொன்றின் இயற்கையைச் சொல்லு கின்றேன்
செங்கைசேர் நெல்லி யென்னச் சிந்தையிற் காண்டி யன்றே. 4

கதிரெழு துகள்எண் மூன்று கசாக்கிர கந்தான் ஆகும்
இதுதொகை இருநான் குற்ற தீலிக்கையவ் விலிக்கை யெட்டால்
உதிதரும் யூகை யன்ன யூகையெட் டியவை யென்ப
அதினிரு நான்கு கொண்ட தங்குலத் தளவை யாமே. 5

அங்குலம் அறுநான் கெய்தின் அதுகரம் கரமோர் நான்கு
தங்குதல் தனுவென் றுகும் தனுவிரண் டதுஓர் தண்டம்
இங்குறு தண்ட மான இராயிரங் குரோசத் தெல்லை
பங்கமில் குரோசம் நான்கோ ரியோசனைப் பால தாமே. 6

அந்தயோ சனையின் எல்லை ஐம்பதிற் றிரண்டு கோடி
வந்ததிவ் வண்டத் திற்கும் மாயிரும் பரவை வைப்பும்
முந்திய நிவப்பு மாகும் மொழிந்திடும் அண்டங் கட்கும்
இந்தவா றளவைத் தென்றே எண்ணுதி இலைகொள் வேலோய். 7

ஒண்புவ னிக்குக் கீழாம் யோசனை ஐம்பான் கோடி
திண்புவி தனக்கு மேலாய்ச் சேர்தரும் அளவும் அஃதே
மண்புகழ் மேரு வுக்கு மாதிரம் அவையோ ரெட்டும்
எண்படும் ஐம்பான் கோடி கடாகத்தின் எல்லை யோடும். 8

அண்டமார் கடமோர் கோடி அதற்குமீ தினிலோர் கோடி
திண்டிறல் காலச் செந்தீ யுருத்திரர் செம்பொற் கோயில்
ஒண்டமுற் கற்றை யுள்ள தொருபது கோடி மீக்கட்
கொண்டெழு தூம வெல்லை குணிக்கின்ஐங் கோடி யாமே. 9

அரித்தவி சுயர்ச்சி ஆங்கோர் ஆயிரம் அளவைத் தாகும்
பரத்தலும் அதற்கி ரட்டி படர்தரு காலச் செந்தீ
உருத்திரர் அழலின் மேனி யோசனை அயுத மாகுந்
திருத்தகு பலகை வாள்வில் செஞ்சர மேந்திச் சேர்வார். 10

ஓங்கிய காலச் செந்தீ யுருத்திரர் தம்மைப் போல்வார்
ஆங்கொரு பதின்மர் சூழ்வர் அன்னவர் ஏவல் ஆற்றிப்
பாங்குற வொருபான் கோடிப் பரிசன மேவும் அன்னோர்
பூங்கழல் வழுத்தி ஆதி கமடம்அப் புவனம் வைகும். 11

அன்னதோர் புவன மீக்கண் அடுக்குறு நிலைய வாகித்
துன்னுறு நாலேழ் கோடி தொகைப்படு நிரயத் தெல்லை
உன்னத மான கோடி ஒன்றெழு முப்பான் மேலும்
பன்னிரண் டிலக்கம் அண்டத் தளவுறும் பரப்பு மன்னோ. 12

உற்றிடு நிரய மீதில் ஒன்றிலா இலக்கம் நூறு
பெற்றிடு முயர்வு தன்னிற் பிறங்குமோர் புவனம் கீழ்மண்
பற்றிய இரும்பு நாப்பண் பச்சிமம் பசும்பொற் சோதி
மற்றதன் மேல்பா கத்தில் வதிவர்கூர் மாண்டர் என்போர். 13

காழக முகத்தர் கூர்வாய்க் கணிச்சியம் படைசேர் கையர்
ஊழியங் கனலை அன்ன உருவினர் திரியுங் கண்ணர்
மாழையம் பீட மீக்கண் வைகுகூர் மாண்டர் தம்பால்
சூழுருத் திரராய் உள்ளோர் தொகுதியை அளக்கொ ணாதால். 14

அப்புவ னத்து மீதே அந்தரம் இலக்க மொன்பான்
செப்புவர் அதனுக் கும்பர் சிறந்தபா தலங்கள் என்ப
ஒப்பறு பிலமொன் றற்கே ஒன்பஃதி லக்க மாக
இப்படி அறுபான் மூன்றும் இலக்கமேழ் பிலத்தின் எல்லை. 15

பரத்தினி லுறுங்க ணிட்ட பாதலம் எட்டி லக்கம்
அரத்தினுக் ககற்சி வெவ்வே றயுதமாம் அவைமுப் பாகம்
உரத்தகும் அவுணர் கீழ்பால் ஒள்ளெயிற் றரகர் நாப்பண்
திருத்தகும் அரக்கர் மேல்பால் சிறந்துவீற் றிருந்து வாழ்வோர். 16

இதன்மிசை இலக்க மொன்பான் ஆடகர் இருக்கை யாகும்
இதன்மிசை வெளிஓர் கோடி இலக்கமும் இருப துண்டால்
இதன்மிசைக் களிறு பாந்தள் எட்டுடன் சேடன் ஏந்தும்
இதன்மிசைப் புவியின் ஈட்டம் எண்பஃதி லக்க மாமே. 17

ஈடுறு பிலங்கட் கெல்லாம் இறைவராய்ப் பாது காப்போர்
ஆடகர் தாமே நாகர் அவுணர்வாள் அரக்கர் அன்னோர்
தாடொழு சனங்கள் அண்ட கடமுதல் தரையீ றாகக்
கோடியோர் ஐம்பான் ஆருங் குணித்தனை கோடி யன்றே. 18

பலவகைப் பிலங்கட் கெல்லாம் பரமதாய் உற்ற தொல்பார்
உலகினுள் விரிவும் அங்கண் உள்ளவும் உரைப்பன் கேட்டி

குலவிய சம்பு சாகங் குசைகிர வுஞ்சம் கோதில்
இலவுகோ மேத கம்புட் கரம்இவை ஏழு தீவே. 19

பரவுமிவ் வுலகில் உப்புப் பால்தயிர் நெய்யே கன்னல்
இரதமா மதுநீ ராகும் எழுகடல் ஏழு தீவும்
வரன்முறை விரவிச் சூழும் மற்றதற் கப்பால் சொன்னத்
தரையது சூழ்ந்து நிற்கும் சக்கர வாளச் சையம். 20

அன்னதற் கப்பால் வேலைக் கரசனும் புறத்தி லாழி
பின்னது தனக்கும் அப்பால் பேரிருள் சேர்ந்த ஞாலம்
மன்னவ காண்டி அப்பால் வலிகெழும் அண்டத் தோடு
துன்னுமிப் பொருள்கள் யாவுஞ் சூழ்ந்துகொண் டிருக்கு மன்றே. 21

எல்லைதீர் முன்னைத் தீவோ ரிலக்கமாங் கடலும் அற்றே
அல்லன தீவும் நேமி அதற்கதற் கிரட்டி யாகச்
சொல்லினர் ஆங்நன் கண்ட தொகையிரு கோடி அன்றி
நல்லதோர் ஐம்பான் மேலும் நான்கெனும் இலக்க மாமே. 22

ஐயிரு கோடி சொன்னத் தணிதலம் அதுசூழ் நேமிச்
சையமோர் அயுத மாகும் சார்தரு புறத்தின் நேமி
எய்திய கோடி மேலும் இருபதோ டிலக்க மேழாம்
மையிருள் சேர்ந்த பாரின் எல்லைமேல் வகுப்பன் மன்னோ. 23

ஆரிருள் உலகம் முப்பான் அஞ்செனுங் கோடி மேலும்
ஓரொரு பத்தொன் பானூ றுற்றநான் கயுதமாகும்
பேரிருள் சூழ்ந்த அண்டப் பித்திகைக் கனமோர் கோடி
பாரிடை யகலந் தேரில் பாதியோர் ஐம்பான் கோடி. 24

நடைதரு தொன்னூ லாற்றுன் நாம்புகல் கணிதந் தன்னை
உடையதோர் திசையே இவ்வா றுரைத்தமா திரத்தும் வைக்கின்
வடகொடு தென்றி கீழ்மேல் மற்றுள கோண முற்றும்
நொடிதரிற் கோடி கோடி நூறுயோ சனைய தாமே. 25

முள்ளுடை மூல மான முண்டகத் தவிசின் மேய
வள்ளறன் வலது மொய்ம்பான் வந்தசா யம்பு மைந்தன்
அள்ளிலை வேற்கை நம்பி அன்புடை விரதன் ஞாலம்
உள்ளதோ ரெல்லை முற்றும் ஒருதனிக் குடையுள் வைத்தான். 26

அங்கவன் தனது மைந்தர் அங்கிதீ ரன்மே தாதி
துங்கமாம் வபுட்டி னோடு சோதிட்டுத் துதிமான் தொல்சீர்
தங்குமவ் வியனே மிக்க சவனனும் எழுவர் தாமும்
பங்குகொண் டேழு தீவும் பாதுகாத் தரசு செய்தார். 27

வேறு

சீரியசம் புத்தீபம் புரந்த அங்கி தீரன்என்போன் தான் அருளுஞ் சிறுவ ராயோர், பாரதன்கிம் புருடன்அரி கேது மாலன் பத்திரா சுவ னன்இளா விருத னென்போன், ஏருடைய இரமியன்நல் லேமப்

பேரோன் இயற்குருவாம் ஒன்பதின்மர் இவர்கள் பேரால், ஓரொருவர்க் கொவ்வொன்று நாவற் றீவை ஒன்பதுகண் டமதாக்கி உதவி னானால். 28

விண்ணுயர்சம் புத்தீவின் நடுவு நின்ற மேருவரை பொங்குமலர்ப் பொகுட்டுப் போல, நண்ணுமதற் கியோசனைஉன் னதம்எண் பத்து நான்குளவா யிரமாகும் ஞாலம் ஆழ்ந்த, தெண்ணிரண்டா யிரம் சென்னி யகலம் முப்பா னிராயிரமாம் பராரையெல்லை அதனிற் பாதி, வண்ணமிகு மேகலைமூன் றதனுள் உச்சி வாய்த்திடுமே கலையினிற்பல் சிகர மல்கும். 29

மேருவரை அதற்குநடுப் பிரமன் மூதூர் மிக்கமனோ வதிஅதற்கு மேலைத் திக்கின், நாரணன்வாழ் வைகுண்டம் வடகீழ் பாலின் நாதனமர் சோதிட்கம் திசைக ளெட்டுஞ், சீரியல்இந் திரன்முதலாம் எண்மர் தேயந் தெற்குமுதல் வடக்களவு மருங்கு தன்னில், நேரிய தோர் தேசமது செவ்வே போகும் நெடும்பூழை யொன்றுளது நினைக மாதோ. 30

அந்தவரைக் கீழ்த்திசைமந் தரமாம் வெண்மை அதன்தெற்குக் கந்தமா தனம்பொன் மேல்பால், சுந்தரமாம் விபுலம்நீ லம்வடக்குச் சுபார்சுவம்மா துளைப்போது கடம்பு ஜம்பு, நந்தியதோர் போதிஆல் குணபா லாதி நாற்றிசையில் வரைமீது நிற்கும் நாவல், முந்துயிரண் டாயிரயோ சனையாம் ஏனை மூத்தருவும் இதிற்பாதி மொழியும் எல்லை. 31

அத்தகைய கீழ்த்திசையில் அருணம் மேல்பால் அசிதோதம் தென்றிசைமா னதமே யல்லா, உத்தரத்தின் மாமடுநீர் நிலையாய் மேவும் உய்யானஞ் சயித்திரதங் குணக்கு வைகும், வைத்தபெரு நந்தனந்தக் கிணத்தில் ஓங்கும் வைப்பிரசங் குடக்கமரும் வடாது பாங்கின், மெத்துதிரு தாக்கியம்உற் றிடுமிவ் வாறு மேருவரைச் சாரலிடை விரவு மன்றே. 32

கடிகமழும் நாவலொன்று தென்பால் நின்ற காரணத்தால் பாரதன்றன் கண்ட முற்றும், இடனுடைய நாவலந்தீ வெனப்பேர் பெற்ற தித்தருவின் திங்கனிநீ ராறுய் மேருத், தடவரையைப் புடைசூழ்ந்து வடபாற் சென்று சாம்புநதப் பெயர்பெறுமச் சலிலந் துய்த்தோர், உடல் முழுதும் பொன்மயமாய் அயுத மேலும் ஒருமூவா யிரமாண்டங் குறுவர் அன்றே. 33

நாற்றிசையில் வரைப்பரப்பு மேல்கீழ் தானும் நவின்றிடின்மே ருவிற்பாதி அதற்குக் கீழ்பால், மாற்றரிய மாலியவான் மேல்பாற் கந்த மாதனந்தென் றிசைநிசதம் ஏம கூடம், ஏற்றஇமம் வடபால்நீ லம்சு வேதம் இயற்சிருங்கம் எட்டுவரை இவையாம் நீலம், மேற்றிகழ்பொன் மணி கனகம் பனியே நீலம் வெண்மைமதி காந்தம்இவை மேனி தாமே. 34

நிசதமொடு பொற்கூடம் இமையங் கீழ்மேல் நெடுங்கடலைத் தலைக்கூடி நிமிரும் சோமன், திசையுளபூ தரமூன்றும் அனைய எட்டுத் திண்கிரியும் இராயிரயோ சனைவான் செல்லும், வகையில்கந்த மாத

னமா லியவான் என்னும் மால்வரைகள் தமதகலம் அயுதம் மற்றை, அசலமிரு மூன்றுமிரா யிரம்இத் தீவுள் அமருநவ கண்டவெல்லை அறை வன் மாதோ. 35

கோதில்வட கடல்முதலாச் சிருங்கங் காறுங் குருவருடம் சிருங்க முதற் சுவேத மட்டும், நீதிஇர ணியவருடம் சுவேத நீல நெடுங்கிரியின் நடுவண்இர மியமாம் மேருப், பூதரஞ்சூழ் வருடம்இளா விருதமாகும் பொலிந்தகந்த மாதனமேற் புணரி நாப்பண், கேதுமால் வருடம்மா லியவான் தொட்டுக் கீழ்கடலின் இறுவாய்பத் திரம தாமே. 36

அம்புவியின் நிசதமுதல் ஏமங் காறும் அரிவருடம் ஏமமுதல் இமைய நாப்பண், கிம்புருடம் தென்கடற்கும் இமைய மென்னுங் கிரிக்குநடுப் பாரதமாம் கேது மாலோ, டிம்பர்புகழ் பத்திரமுப் பத்து நாலா யிரம்நின்ற தொன்பதினா யிரமா மெல்லை, உம்பர்தம துலகனைய பரத மென்னும் ஒன்றொழிந்த கண்டமெட்டும் உற்று ளோர்க்கே. 37

ஆங்குருநாட் டுறைபவர்ஓர் பொழுதின் யாய்பால் ஆடுவு மக டுவு மாகத் தோன்றித், தாங்கள்விழை விற்புணர்வர் அவர்க்குத் தெய்வத் தருமலர்கள் உதவும்உணக் கனியுங் காயும், ஓங்குபச்சை நிறம் ஆயுள் அயுத மேலும் ஒருமூவா யிரம்அதற்குள் வடபா கத்திற், பாங்கமர்வர் முனிவரர்சா ரணரே சித்தர் பதின்மூவா யிரம்ஆயுள் படிகம் வண்ணம். 38

பரவுபத்தி ராசுவத்தோர் கனிகாய் துய்ப்போர் பதின்மூவா யிரம்ஆயுள் படைத்த சேயோர், இரணியத்தோர் பலநுகர்வோர் மதிநேர் மெய்யர் இராயிரமைஞ் ஞூறயுதம் ஆண்டு பெற்றோர், பொருவரிய இரமியத்தி னுள்ளோர் ஆலின் புன்கனிகள் மிசைகுவர்பூங் குவளை போல்வார், வருடமவர்க் கொருபதினா யிரமே யன்றி மற்றுமிரண்டாயிர மாச் சொற்ற தொன்னூல். 39

விராவும்இளா விருதத்தோர் வெளிய மெய்யர் மிசைவதுதீங் கரும்பிரதம் அயுத மேலும், இராயிரமாம் யுகம்கேது மாலந் தன்னில் இருப்பவர்பைங் குவளைநிறம் இனிதி னுண்டல், பராரையுள கண்டகி யின் கனியே ஆயுள் பத்துளவா யிரம்அரிகண் டத்து வாழ்வோர், ஓராயிரமோ டொன்பதினா யிரம தெல்லை உணவுகனி காய்மதியம் ஒளிய தன்றே. 40

போற்றியகிம் புருடத்தோர் இறலித் தீய புன்கனியே மிசைவர் நிறம் பொன்மை ஆயுள், சாற்றியிடும் ஓரயுதம் ஏமகூடத் தடவரைத் தென் பால்இமைய வடபால் தன்னில், ஏற்றமிகுங் கயிலைநிற்கும் அதற்கு மீதே இமையாமுக் கட்பகவன் உமையா ளோடும், வீற்றிருப்பன் ஊழிதனில் அண்டங் காறு மேலொடுகீழ் சென்றிடுமவ் வெற்பு மாதோ. 41

இந்தவிரு நாற்கண்டத் துறையும் நீரார் இன்னல்பிணி நரை திரைமூப் பிறையுஞ் சேரார், முந்தையுகம் போலவே மூன்றி னுள் ளும் மொய்ம்புநிறை அறிவுடலம் முயற்சி ஆயுள், அந்தமில்சீர் முத

லெல்லாம் ஒருதன் மைத்தா அடைகுவர்முன் பாரதத்தில் அவத ரித்து, வந்துபுரி வினைப்பயனை நுகர்வர் என்பர் வானமுகில் சென்று புனல் வழங்கா தங்஑ன். 42

பாரதத்துள் ளார்அவனி கிளைத்து மற்றும் பஃறெழிலும் புரிந்து மறம் பாவம் ஈட்டிப், பேரருள்பெள திகமெழுவா யான மூன்றிற் பெறுபயன்கொண் டுய்வர்என்பர் பெருமை யாற்றல், சீரறிவு நிறை ஆயுள் உருவம் உண்டி செய்கையுகங் களுக்கியைந்த திறனே சேர்வர், தோரைமுதற் பலபைங்கூழ் விளையுள் ஆக்கந் தூயகனி காய்கந்தம் பிறவுந் துய்ப்பார். 43

நாலிருகண் டத்தோரும் விண்ணு ளோரும் நரகினரும் அவ்விடத் தில் நண்ணி வைகி, மேலையிரு வினையாற்றி அவற்றிற் கேற்ற வியன் பயன்கள் துய்ப்பரெனா விளம்பு மாற்றால், சீலமிகு **பாரதமாங் கண்ட மொன்றே** தீவினைநல் வினையாகுஞ் செயற்கைக் கெல்லாம், மூல மொரு குறைபெறினே வந்து தேவர் முனிவர்களுந் தவம்பூசை முயல் வர் அங்கண். 44

கவிபுகழும் **பரதனும்**இந் திரனும் பேரோன் கசேருகன்தா மிரபன் னன் கபத்தி நாகன், சவுமியனே கந்தருவன் வருணன் என்னுந் **தனய** **ருடன்** குமரியெனும் **வனிதை தன்னை**, உவகைதனில் உதவிஅவர் தத்தம் பேரால் ஒன்றற்கோ ராயிரம்யோ சனைய தாகப், புவிபுகழ்**பா ரதத்தை நவ கண்ட மாக்கிப்** பொற்பினுடன் அனையவர்க்குப் புரிந்தான்அன்றே.

கங்கைகவு தமியமுனை கவுரி வாணி காவிரிநன் மதைபாலி கம்பை பம்பை, துங்கபத் திரைகுசைகோ மதிபாஞ் சாலி சூரிசிகி பாபகரை தூத பாபை, சங்கவா கினிசிகைபா ரத்து வாசி சார்வரிசந் திரபாகை சரயு வேணி, பிங்கலைகுண் டலைமுகரி பொருநை வெஃகாப் பெண்ணை முதல் **ஆறனந்தம்** பெருகி நண்ணும். 46

மன்னுமகேந் திரமலயஞ் சையஞ் சத்தி மாலிருடம் பாரியாத் திரமே விந்தம், என்னுமலை ஓரேழுங் காஞ்சி யாதி எழுநகருந் தான மொரா யிரமேல் எட்டும், பன்னும்அரு மறைமுதலோர் மேய தேயம் பற்பலவுஞ் சுருதிமுறை பயில்வு மேவி, மெய்ந்நெறிசேர் **வதுகுமரி கண்டம்** ஏனை மிலேச்சரிடம் ஒரெட்டும் வியப்பி லாவே. 47

இங்கிவைசம் **புத்தீவி னிடனே** தண்பால் இருங்கடல்சூழ் **சாகத்தின் எல்லை தன்னில்**, தங்கியகோ **மேதாதி** அவற்கு மைந்தர் சாந்தவயன் சிசி ரன்கோ தயன்ஆ னந்தன், துங்கமிகு சிவனெடுகே மகன்சி றந்த துரு வன்இவர் பேராலேழ் வருட மாக்கி, அங்கவருக் கருள்புரிந்தான் கட வுள் **வாயு** ஆரியர்விங் தகர்குகரர் ஆண்டு வாழ்வார். 48

சோமகமே சுமனஞ்சந் திரமே முந்துந் துந்துபிவப் பிராசனநா ரதியந் தொல்சீர்க், கோமதமாம் எழுகிரியுஞ் சிவைவி பாபை குளிர் அமிர்தை சுகிர்தைமநு தத்தை சித்தி, மாமைதரு கிரமையெனும் ஆறங் கேழும் மருவியிடும் ததிக்கடல்தான் வளைய நின்ற, ஏமமுறு **குசத்தீவில் வபுட்டு** வென்னும் இறையவற்குஞ் சிறுவர்களாய் எழுவ ருண்டால்.49

சுப்பிரதன் உரோகிதனே தீரன் மூகன் சுவேதகன்சித் தியன் வயித்தி தன்னென் ஹேறுதும், இப்புதல்வர் பேராலேழ் வருட மாக்கி ஈந்தனன்உன் னதங்குமுதங் குமாரம்மேகம், வைப்புறுசந் தகம்மகிட மேது ரோணம் மலேயேழுஞ் சோணேவெள்ளி மதியே தோமை, ஒப் பறுநேத் திரைவிமோ சனேவி ருத்தி ஓரேழு நதியுளவால் உலவை புத்தேள். 50

தர்ப்பகரே கபிலர்சா ரணர்கீ லத்தர் தண்டர்விதண் டகராண் டைச் சனங்கள் ஆவார், அப்புற நெய்ப் புணரிகிர வுஞ்ச தீபம் அதற்கு மன்னன் சோதிட்டாம் அவன்றன் மைந்தர், மெய்ப்படுசா ரணன் கபிலன் கிருதி கீர்த்தி வேணுமான் இலம்பகன்உற் பிதனே யென்னச், செப்புமெழு பேராலேழ் வருட மாக்கிச் சிறப்புடனே அவரரசு செய் தற் கீந்தான். 51

மன்னுகுசே சயம்அரிவித் துருமம் புட்பா வருத்தம்இமம் துதி மானே மந்த ரந்தான், என்னுமலே ஏழுசிவை வித்தூத பாபை இமை புனிதை பூரணேயோ டகில பாபை, சென்னெறிசேர் தம்பைஎனு நதி யோரேழு சேர்ந்துளது தபதர்சடா வகர்மந் தேகர், பன்னுபுகழ் அனே கர் அவர் சனங்க ளாவார் பங்கயனே அங்குடைய பகவன் அம்மா. 52

மற்றதனுக் கப்பாலே அளக்கர் கன்னல் வளேந்துடைய தீபஞ் சான் மலியாம் அங்கட், கொற்றவனுந் துதிமானன் அவன்றன் மைந்தர் குசலன்வெய்யன் தேவன்முனி அந்த காரன், அற்றமிலா மனேரதன் துந் துபியாம் அன்னோர்க் களித்தனன்ஏழ் கூறுக்கி யசலம் ஏழுஞ், சொற்றிமிரம் சுரபிவா மனம்வி ருத்தம் துந்துபிசம் மியத்நடம்புண் டரீகம் நிற்கும். 53

போதுகுமு தங்கவரி யாதி யாமை புண்டரிகை மனேபமைசந் தியையென் றேறுதுஞ், சீதநதி யேழுசெல்லும் புட்க லாதர் சிறந்திடு புட் கரர்தனியர் சிசிரர் என்போர், ஏதமிலா துறைசனங்கள் கடவுள் ஈசன் இதற்குமப்பால் மதுக்கடல்சூழ்ந் திருந்த தீபம், மேதகுகோ மேத கம்அவ் வியனே தொன்னுள் வேந்தன்அவற் கெழுமைந்தர் மேனுள் வந்தார். 54

தூயவிமோ கனன்மோகன் சகலன் சோமன் சுகுமாரன் குமா ரன்மரீ சகனும் மைந்தர்க், காயதையேழ் கூறுபுரிந் தளித்தான் சிங்கம் அத்தம்உத யம்சலகம் கிரவுஞ்சம் ஆம்பி, கேயம்இர மியங்கிரியேழ் அயாதி தேனுக் கிளர்கபத்தி சுகுமாரி குமாரி இக்கு, மாயைநதி ஏழுள மந் தகர்ஆ மங்கர் மாகதர்மா னசர்மாக்கள் மதிமுன் தெய்வம். 55

புடையினது தூயபுனற் கடலாந் தீபம் புட்கரமன் னன்சவனன் புதல்வ ரானேர், அடல்கெழுவு தாதகிமா பீத னென்போர்க் கதனே யிரு கூறுபடுத் தளித்தான் என்ப, இடபமகேந் திரம்வருணம் வராக நீலம் இந்திரமந் திரியமெனும் ஏழு வெற்புக், குடிலேசிவை உமை தரணிசுமனே சிங்கை குமரியெனும் எழுநதியுங் கொண்டு மேவும். 56

மேனிலா வியாகரர் நாகர் என்போர் மேவியமர் பரிசனம்வெய் யவனே புத்தேள், ஆனதோர் புட்கரத்தின் முடிவில் ஐம்ப தாயி ரம்யோ சனைதன்னில் அசல மொன்று, மானசோத் தரம்எனவே சகட க் கால்போல் வட்டணைபெற் றிடுமதன்கண் மகவா னுக்கும், ஏனை யோர் எழுவருக்குங் குணபா லாதி எண்டிசையி னும்பதங்கள் எய்தும் அன்றே. 57

பொங்குதிரைப் புணரிகளின் முடிவு தோறும் புடையுறவே வளைந்தொவ்வோர் பொருப்பு நிற்கும், இங்குளதோர் சாகமுதல் தீப முற்றும் இருக்குநர்க்கு நரைதிரைமூப் பின்னல் இல்லை, அங்கவர்கள் கலியினுங்கிம் புருடர் தன்மை யடைவர்பதி னுயிரமாண் டமர்வர் அப்பால், தங்கியது தபனியப்பார் அதனைச் சூழ்போய்த் தடம்பெருநே மிப்பொருப்புச் சார்வுற் றன்றே. 58

நேமிவரை அதற்கிப்பாற் சுடரே அப்பால் நிசிப்படலஞ் செய்ய மணி நிறனே மன்னர், காமருசீர் இயக்கர்இராக் கதரே வெம்பேய்க் கணங்கள்அமர்ந் திடுவர்திசைக் கடவு ளோருந், தாமுடைய மாதிரத் தின் மேரு வின்கண் தங்குதல்போல் வைகுவர்அங் கதனுக் கப்பால், ஏமமுறு புறக்கடல்அங் கதனுக் கப்பால் இருளாகும் அதற்கப்பால் எய்தும் அண்டம். 59

ஊழினெறி யால்தத்தம் உயிரைத் தாமே ஒழிவுசெய்தோ ருந் தெருளு முணர்வி லோரும், ஆழிவரைப் புறஞ்சூழ்வர் அப்பா லாகும் ஆரிருள்சேர் எல்லைதனில் அநாதி யீசர், வாழுமொரு பெருங்கயிலை யுண்டவ் வண்ட மருங்கதனிற் கணநிரைகள் வதிந்து மல்குஞ், சூழுறு சம் புத்தீப முதலா அண்டச் சுவர்காறும் புவியென்பர் தொல்லை யோரே. 60

இப்புவியின் மேற்கணத்தின் உலக மாகும் இதன்மிசைக்குய் யக லோகம் இதற்கு மீது, வைப்புடைய ஈரைங்கால் வயங்கு தேயம் மற்றதன்மேல் எழுபுயலும் வழங்கு மெல்லை, முப்பதினு யிரகோடி முகில்ஒவ் வொன்றை முறைசூழ்வுற் றிடும்அதற்கு முன்ன ராகச், செப்பரிய கிம்புருடர் கருட ராஞோர் சித்தர்கள்விஞ் சையர்இயக்கர் செறியும் மூதூர். 61

இங்கிதன்மேற் சுரநதிசெல் விடனே அப்பால் இரவிபதம் தர ணிக்கோர் இலக்க மாகும், அங்கதனின் முப்பான்முக் கோடி தேவர் அருக்கனுடன் வழிக்கொள்வர் அதற்கு மீதே திங்கள்உல கோரிலக்கம் உம்பர் தன்னில் செறிதருதா ரகையுலகம் இலக்கஞ் சேணிற், பொங் கொளிசேர் புதன்உலகீ ரிலக்கம் அப்பாற் புகர்உலகம் ஈரிலக்கம் பொருந் திற் றன்றே. 62

அந்தரமேற் சேய்உலகீ ரிலக்கம் மேலே அரசன்உல கீரிலக்கம் அதற்கு மீதே, மந்தன்உல கீரிலக்கம் அதன்மேல் ஓரேழ் மாமுனிவர் உலகி லக்க மாகும் அப்பால், நந்துருவன் உலகிலக்கம் புவர்லோ கத்தின் நலத் தகைய தொகைபதினைந் திலக்க மாகும், இந்தவுல கத்துமிசை யுடைய தேயம் எழுவகையா மருத்தினமுங் கெழுவு மெல்லை. 63

தொகலோடு சேர்தருமிப் பதத்தின் மீதிற் **சுவர்லோகம்** எண்பத்தஞ் சிலக்க மாங்கே, புகலோடு வானவரும் பிறரும் போற்றப் புரந்தரன்வீற் றிருந்தரசு புரிவன் அப்பால், **மகலோகம்** இருகோடி **மார்க்கண்டாதி மாமுனிவர்** பலர்செறிவர் மற்ற தன்மேல், இகலோகம் பரவுசன **லோகம்** எல்லை எண்கோடி பிதிர்தேவர் இருப்பர் அங்கண். 64

**தவலோகம்** உன்னதமீ ராறு கோடி சனகர்முத லாவுடைய வனகர் சேர்வர், அவண்மேற்சத் **தியவுலகம்** ஈரெண் கோடி அயன்இன்பத் தலம்உலக மளிக்குந் தானம், நவைதீரும் பிரமபதம் மூன்று கோடி நாரணன்வாழ் **பேருலகம்** ஓர்முக் கோடி, **சிவலோகம்** நாற்கோடி அதற்கு கோளகையுங் கோடி யாமே. 65

வேதமொடு தந்திரமும் அவற்றின் சார்பு மிருதிகளும் பிறநூலும் வேறு வேறு, ஓதிடுமண் டத்தியற்கை மலைவோ வென்றால் உண்மை தெரிந் திடிற்படைப்பும் உலப்பில் பேதம், ஆதலினால் அவ்வவற்றின் றிரிபு நாடி அறிந்தஉனக் கீண்டுண்மை யதுவே சொற்றும் ஏதமில் இவ் வண்டத்தில் புவன நூற்றெட் டிறையருள்சேர் உருத்திரர்தம் மிருக்கை யாமே. 66

**வேறு**

இந்த அண்டத்தின் இயற்கைய முன்னுனக் கிறைவன்
தந்த அண்டங்கள் ஆயிரத் தெட்டுமித் தகைமை
மைந்த நீசென்று காணுதி யெனவகுத் துரைப்ப
அந்த மில்லதோர் மகிழ்ச்சியின் உணர்ந்தனன் அவுணன். 67

ஆகத் திருவிருத்தம் - 789.

# 12. திக்குவிசயப் படலம்

—oo—

குணங்கள் பற்பல உணர்த்திய குரவன்றன் கழல்கள்
வணங்கி வாளரி முகனொடு விடைகொண்டு வயமான்
அணங்கு வைகிய திறலுடைச் சூரர்கோன் அவுணர்
இணங்கு தானையங் கடலிடைப் புக்கனன் இமைப்பில். 1

சேனை யின்றலை புகுதலுந் தாரகன் சென்று
கோனை வந்தனை செய்துதன் முன்னவற் குறுகி
ஆன பான்மையின் வணங்கிமுன் னின்றிட ஆசான்
போன எல்லையிற் புகன்றன பரிசெலாம் புகன்றான். 2

ஆவ தாகிய பரிசெலாங் கேட்டுணர்ந் தவனுந்
தாவி லாததன் மனங்கொடு நன்றிது தலைவ
மேவ லார்களை யாமினி வென்றிட விரைவில்
போவ தேகடன் என்றனன் அன்னதோர் பொழுதின். 3

அந்தி வார்சடைக் கண்ணுதற் கடவுள்தன் அருளான்
மைந்தர் மூவரும் பெற்றதொல் வரங்களும் வலியுஞ்
சிந்தை யுள்ளுற நாடியே யளியொடுஞ் சேணில்
வந்து தோன்றினள் தொல்லைநாள் நோற்றிடு மாயை. 4

தோன்று மெல்லையின் முந்துறக் கண்டுவெஞ் சூரன்
ஆன்ற தம்பியர் தம்மொடும் அசமுகி யோடும்
ஊன்றும் அன்பொடு பணிதலும் அன்னைதன் உள்ளம்
ஈன்ற ஞான்றினும் உவந்தனள் ஆசிகள் இசைத்தாள். 5

ஆசி கூறியே வேள்வியிற் செய்கையும் அதனுக்
கீசன் நல்கிய வரங்களுங் கேட்டனன் ஈண்டு
நேச மோடுமைக் காணிய வந்தனன் நீவிர்
வாச வன்முத லோர்தமை வெல்லுதிர் வலியால். 6

வென்ற பின்னர்எவ் வுலகமும் புரந்துமே தினியில்
என்றும் வாழுதிர் மாயைகள் வேண்டிடின் என்னை
ஒன்றும் அன்புடன் உன்னுதிர் உன்னிய பொழுதே
சென்று வெஃகிய தன்மைகள் செய்தியான் முடிப்பேன். 7

ஈத லால்உமைப் பிரியலன் பன்முறை யானே
காத லோடுமைக் காணிய செல்குவன் கலந்து
பேத நீரற இருத்திரால் ஈண்டெனப் பேசி
மாதும் ஏகினள் மைந்தர்கள் மூவரும் வணங்க. 8

தோடு லாவிழிப் பொற்றொடி ஏகலுஞ் சூரன்
கோடி தேருடன் தானவர் தங்களைக் கூவி
நீடு நம்பெருந் தானைகள் நிதிபதிக் கேகப்
பாடல் மாமுர சறைமினோ கடிதெனப் பணித்தான். 9

அரசன் ஏவலும் அவுணர்கள் அன்னவா றறைந்து
முரசம் எற்றினர் கேட்டலும் அத்திசை முன்னி
உரைசெய் நான்முகன் உறங்குழிப் புவிகொள ஒருங்கே
திரைசெய் வான்கடல் சென்றெனச் சென்றது சேனை. 10

பத்து நூறுடன் ஆயிர மாதியாய்ப் பலவாங்
கொத்து நீடிய சென்னியர் கொடுமைசேர் குணத்தோர்
மெத்து பல்படை ஏந்திய கரத்தினர் விறலோர்
கத்து வார்கடல் ஆர்ப்பினர் அவுணர்தங் கணத்தோர். 11

விண்ணிற் பாய்வன இரவிதேர் பாய்வன வேலைக்
கண்ணிற் பாய்வன திசைகளிற் பாய்வன கனல்மேற்
பண்ணிற் பாய்வன வரைகளிற் பாய்வன பரவை
மண்ணிற் பாய்வன புரவிகள் அளப்பில மாதோ. 12

பாறு சென்றிடக் கொடியினஞ் சென்றிடப் பலபேய்
வேறு சென்றிடப் பாரிடஞ் சென்றிட விண்மேல்

மாறு சென்றிடப் பிளிறொலி சென்றிட மதநீர்
ஆறு சென்றிடச் சென்றன யானையின் அனிகம். 13

மேருச் சையமுங் கயிலையும் அல்லது வேறு
நேரற் கொத்திடு கிரிமிசைச் செல்வன நீலக்
காரிற் செல்வன விண்மிசைச் செல்வன கடல்சூழ்
பாரிற் செல்வன செல்வன ஆழியம் பஃறேர். 14

மூன்று கோடியோ சனையதாய் நாற்றிசை முற்றும்
ஆன்ற வெல்லையின் அவ்வகைத் தாகிய அனிகம்
ஏன்று சென்றன சென்றதோர் அளவையின் இனன்போல்
தோன்று பொன்சுடர் அளகையை அடைந்தன தூசி. 15

பூதம் ஐந்தினும் மிகவலி யுடையது பொலன்சேர்
ஆத வன்றனித் தேரினுஞ் சிறப்புற்ற தவனில்
சோதி பெற்றது பேருணர் வுள்ளது தொல்சீர்
மாதி ரங்களை அகற்சியான் மறைப்பது மன்றோ. 16

என்று மேயழி வில்லது மேருவோ டிகலுங்
குன்று போலுவ தகிலமும் இமைப்பினிற் குறுகிச்
சென்று மீள்வது குறிப்பினிற் செல்வது சிதையா
ஒன்று கோடிய வாம்பரி பூண்டுள தொருங்கே. 17

அழிவி லாப்பல சாரதி உள்ளதங் களப்பில்
விழுமி தாகிய படையெலாங் கொண்டது மேவார்
ஒழிய அன்னவர் தேர்மிசைச் செல்லுவ துருமேற்
றெழிலி அச்சுறப் பன்மணி கறங்குவ தென்றும். 18

பாரை நேர்தரு பரப்பின துலகெலாம் படைத்த
நாரி பாதியன் அளித்தருள் இந்திர ஞாலத்
தேரின் மால்வரை மிசையுறும் வயப்புலி செலல்போல்
சூரன் ஏறியே போந்தனன் அவுணர்கள் தொழவே. 19

ஆண்டவ் வெல்லையில் ஆயிர மாயிரம் யாளி
தாண்டு வெம்பரி ஆயிர மாயிரந் தடந்தோள்
நீண்ட பாரிடம் ஆயிர மாயிர நிரலே
பூண்ட தேர்மிசை ஏறியே அரிமுகன் போந்தான். 20

காலும் உள்ளமும் பின்னுற முன்னுறு கவனக்
கோல மாப்பதி னாயிரம் பூண்டதோர் கொடிஞ்சிச்
சால மார்தரு வையமேற் புகுந்துதா ரகனும்
ஆல மென்பது சென்றென நடந்தனன் அன்றே. 21

அன்ன தாரக வீரனும் அரிமுகத் தவனும்
மன்ன னோர்இரு பாங்கரு மாயினர் வந்தார்
துன்னு தானவத் தானையந் தலைவர்கள் தொலையாப்
பொன்னின் மாமணித் தேரொடும் ஏகினர் புடையில். 22

விரவு கின்றதோர் ஏனையர் சேனையின் வீரர்
கரியெ னுங்கடல் மீதினுங் கலினமார் கவனப்
பரியெ னுங்கடல் மீதினும் முதல்வனைப் பரவி
இரும ருங்கினும் போயினர் கூற்றனும் இரங்க. 23

அடல்செ றிந்திடும் ஒன்பதிற் றிருவகை யாகும்
படைக ளேந்தியே அளவிலா அவுணர்கள் பரவிக்
கடல்கி ளர்ந்தவண் சூழ்வன போன்றுகா வலர்தம்
புடையில் வந்தனர் அசனியும் அச்சுறப் புகல்வார். 24

இன்ன தன்மையி னுற்படை சூழ்தர இதன்பாற்
துன்னு தேரென உள்ளவுந் துரகமுள் ளனவும்
பன்னெ டுங்கரி உள்ளவும் அவுணர்கள் பலரும்
மன்னி வந்திட நடுவுற ஏகினன் மன்னன். 25

வயங்க ளார்த்திடு தானவ ரோதையும் மான்தேர்
அயங்க ளார்த்திடு மோதையும் அன்னவை அணித்தாய்க்
கயங்க ளார்த்திடு மோதையுங் கண்டையின் கலிப்பும்
இயங்க ளார்த்திடு மோதையும் மிக்கன வெங்கும். 26

அரியெ னுந்திறல் அவுணர்கள் அங்கையி லேந்தும்
உரிய வெம்படை முழுவதும் ஒன்றொடொன் றுரிஞ்ச
எரிபி றந்தன செறிந்தன எம்பிரான் முனிந்த
புரமெ னும்படி யாகிய வரைகளும் புவியும். 27

நிரந்த தானவர் எழுந்திடப் பூழிகள் நிலமேற்
பரந்து வானகம் புகுதலும் அனையது பாரா
விரிந்து போவதை நீங்கியே அவைதனை எய்தக்
கரந்து வைகினன் ஆழியந் தேருடைக் கதிரோன். 28

பூந டுங்கின பணிக்குலம் நடுங்கின புரைதீர்
வான டுங்கின மாதிரம் நடுங்கின வரைகள்
தாந டுங்கின புணரிகள் நடுங்கின தறுகட்
டீந டுங்கின நிருதர்கோன் பெரும்படை செல்ல. 29

இனைய தன்மையிற் சேனைகள் தம்மொடும் இறைவன்
தனதன் மாநகர் வளைந்தனன் அன்னதோர் தன்மை
வினவி யோடியே தூதுவர் இயக்கர்கோன் மேவுங்
கனக மாமணிக் கோநகர் சென்றனர் கடிதின். 30

வேறு

சென்றிடும் ஒற்றர் தங்கோன் சேவடிக் கமலந் தாழ்ந்து
வன்றிறற் சூர பன்மன் மாநகர் வளைந்து கொண்டான்
இன்றினி யழியும் போலும் ஈண்டுநீ யிருத்தல் சால
நன்றல அனிகத் தோடு நடத்தியால் அமருக் கென்றார். 31

தூதுவர் உரைத்தல் கேளாத் துன்புகூர் துளக்க மெய்தி
ஏதமில் அவுணர் தம்மை யாம்வெலற் கரிது முக்கண்

ஆதிதன் வரங்கொண் டுள்ளார் அவர்ப்புகழ்ந் தாசி செய்வான்
போதுதல் கடனே யென்னுப் பொருக்கென எழுந்து போனுன். 32

போயினன் அளகை அண்ணல் புட்பக மீது சென்று
தூயதோர் இயக்க ரோடுஞ் சூரனைத் தொழுது போற்றி
ஏயின ஆசி கூறி யான்நுமக் கடிய னென்ன
நீயினி திருத்தி யென்றே விடுத்தனன் நிருதர் போற்ற. 33

வேறு

அன்னது கண்டுழி அவுணர் மாப்படை
மின்னவிர் முகிலினம் வெருவ ஆர்த்தன
துன்னுறும் இனையவ ரோடுஞ் சூரனும்
மன்னவன் அவ்வழி மகிழ்ச்சி எய்தினுன். 34

அதுபொழு தவுணர்கள் அளகை யூடுபோய்
நிதிகளும் மணிகளும் நீடு மானமுஞ்
சிதைவறு படைகளுந் தேரும் மாக்களுங்
கதிகெழு களிறுடன் கவர்ந்து மேவினுர். 35

மைம்மலி தானவர் வலிந்து வவ்வலாற்
பொய்ம்மையில் பெருவளம் யாவும் போக்கிய
செம்மையில் அந்நகர் திருவும் நீங்கிய
கைம்மைதன் வடிவெனுங் காட்சித் தாயதே. 36

ஆறலை கள்வரின் அவுணர் யாவருஞ்
சூறைகொண் டந்நகர் தொலைத்துப் போதலும்
ஊறுகொள் நிதிபதி உள்ளம் நாணியே
வீறகல் அளகையின் மீண்டும் ஏகினுன். 37

ஆண்டுறு தனதனை அடித்தொண் டாற்றுவான்
மாண்டனன் இவனென மனத்தி லுன்னியே
ஈண்டிய தானையொ டிமைப்பிற் பாகரைத்
திர் தேரெனச் சூரன் போயினுன். 38

அளகையை நீங்கியே ஆசைக் கீறதாய்
உளநகர் எய்தினன் ஒளிரு நீலமார்
களனுரு வெய்திய கடவுள் வைகிய
வளநகர் ஈதென மன்னன் உன்னினுன். 39

அந்தமா நகரைவிட் டவுணர் கோமகன்
முந்துதன் படையொடு முனிந்து கீழ்த்திசை
இந்திரன் நகர்புக இதனை நாடியே
வெந்துயர் அமரர்கோன் விண்ணிற் போயினுன். 40

போயதை நாடிஅப் புரத்தை முற்றவுங்
காயெரி கைக்கொளக் கடிதின் நல்கியே
ஆயிடை அனிகமோ டகன்று வெய்யசெந்
தீயுறு நகரிடைச் சேறல் மேயினுன். 41

சேறலும் நாடியத் தீயின் பேரினன்
ஈறகல் வெஞ்சினம் எய்தி ஆயிர
நூறெனுங் கோடியர் நொய்திற் சூழ்தர
மாறிகல் புரிந்திட வந்து நேர்ந்தனன். 42

நேர்தலும் அங்கிதன் நீடு தானையுஞ்
சார்தரும் அவுணர்தம் படையுந் தாமுருப்
போர்தலை மயக்குறப் பொருத எல்லையிற்
சூர்தரு கனல்படை தொலைந்து போயதே. 43

தன்படை உடைதலுந் தழலின் பண்ணவன்
துன்படை மனத்தனாய்த் தொல்லை ஊழிநா
ளின்படை உலகெலாம் ஈறு செய்திடு
வன்படை பேருரு வல்லை தாங்கினன். 44

சிறந்திடும் அவுணர்கோன் சேனை மாக்கடல்
வறந்திட இப்பகல் மாய்ப்பன் யானென
நிறைந்திடும் அவுணமா நீத்தம் எங்கணுஞ்
செறிந்தனன் வளைந்தனன் சிதைத்தல் மேயினான். 45

கடல்கெழு சேனையைக் கலந்து பாவகன்
சடசட முதிரொலி தழங்கப் புக்குலாய்
அடலுறு மெல்லையில் அதுகண் டாழிவாய்
விடமென உருத்தனன் வீரன் தாரகன். 46

உருத்திடு தாரகன் ஒருதன் தேரொடு
மருத்தினும் விசையுற வந்து தானையை
எரித்திடும் அங்கியை எதிர்ந்து செங்கையில்
தரித்திடு கார்முகந் தன்னை வாங்கினன். 47

வானவர் தமையும்இவ் வன்னி தன்னையும்
ஏனையர் தம்மையும் முடிப்பன் இன்றெனாத்
தேனிவர் இதழியந் தேவன் மாப்படை
ஆனதை எடுத்தனன் அருச்சித் தேத்தியே. 48

எடுத்திடு மெல்லையில் எரிகண் டிங்கிது
தொடுத்திடின் உலகெலாந் தொலைக்கும் என்னையும்
முடித்திடும் நான்முகன் முதலி னோரையும்
படுத்திடும் இன்றெனப் பையுள் எய்தினன். 49

சுடுங்கனற் கடவுளுஞ் சுருக்கித் தன்னுரு
ஒடுங்கினன் ஆகுலம் உற்றுச் சிந்தையும்
நடுங்கினன் தாரகன் முன்னர் நண்ணினன்
கடுங்கதி அதனொடுங் கரங்கள் கூப்பியே. 50

தோற்றுவித் துலகெலாந் தொலைக்கும் எம்பிரான்
மாற்றரும் படைக்கலம் மற்றென் மேல்விடப்

போற்றினை எடுத்திளப் புவனத் துள்ளவர்
ஆற்றலும் உயிர்களும் அதன்முன் நிற்குமோ. 51

கழிதரு சினங்கொளல் கடவுள் மாப்படை
விழுமிய தன்னதை விடுத்து ளாயெனின்
அழிதரும் உலகெலாம் அதுவும் அன்றியே
பழிபெறும் அன்னதோர் படையின் வேந்துமே. 52

பொறுத்தியென் பிழையெனப் போற்றி நிற்றலும்
கறுத்திடு மிடறுடைக் கடவுள் மாப்படை
செறுத்தவன் மீமிசைச் செல்ல விட்டிலன்
மறுத்தனன் சினத்தினை மகிழ்ச்சி எய்தினன். 53

எற்றிடும் எற்றிடும் இவனை வல்லையிற்
செற்றிடுஞ் செற்றிடுந் தீயன் சாலவுங்
குற்றிடுங் குற்றிடு மென்று கூறியே
சுற்றினர் அவுணர்கள் தீயைச் சூழவே. 54

தானவர் யாரையும் விலக்கித் தாரகன்
நீநம தேவலின் நிற்றி நின்னுயிர்
போனதை உதவினம் போதி போதிநின்
மாநக ரிடையென வல்லை கூறினன். 55

விடுத்தனன் அங்கியை விடுக்கு முன்னரே
அடுத்திடு தானவர் அவன்றன் ஊர்புகா
மடுத்திடு வளனெலாம் வாரி வாரிமீன்
படுத்திடு கோலினுர்தம் பரிசின் மீண்டனர். 56

வேறு

மீண்டனர் அவுணர் அங்கி வெள்கியே தன்னூர் புக்கான்
ஆண்டவண் அகன்று போனான் தாரகன் அவ்வா றெல்லாங்
காண்டலுஞ் சூர னென்போன் கலினமான் தேரைப் பாக
தூண்டுதி நடுவன் மேவுந் தொல்லைமா நகரத் தென்றான். 57

கடவுதி தேரை என்னக் கைதொழு தைய நொய்தின்
அடுதொழில் அவன்பால் உய்ப்பன் அன்னது காண்டி யென்னாப்
படர்தரும் வலவ ரோடும் பலிங்கன்என் றுரைக்கு மேலோன்
சுடர்மலி கதிரும் நாணத் துண்ணெனத் தூண்டி ஆர்த்தான். 58

ஆர்த்தன படருஞ் சேனை அதிர்ந்தன முரச மெங்கும்
போர்த்தன கரிதேர் வாசி புகுந்தன பூழி வேலை
தூர்த்தன துவசம் விண்ணைத் தொடர்ந்தன தூசி யென்னுந்
தார்த்தொகை முன்ன மேகித் தண்டனூர் உடைந்த வன்றே. 59

அடைதலும் நடுவன் தன்பால் ஆங்கொர்தூ தெய்தி நந்தங்
கடிநகர் கலந்த அந்தக் காசிப முனிவன் மைந்தர்
கொடியவெஞ் சேனை யென்னக் கூற்றெனுங் கடவுள் கேளா
இடியுறும் அரவம் என்ன ஏங்கினன் இரங்கு கின்றான். 60

வேறு

முன்னுறு தனதனும் முளரித் தேவனும்
மன்னனை யெதிர்கொளா வழுத்திப் போயினார்
அன்னது புரிவதே அழகி தாமென
உன்னினன் நடுவனும் உணர்வி னும்பரான். 61

தேற்றமொ டெழுந்துதன் மகிடஞ் சேர்ந்தனன்
ஏற்றமில் படைஞரும் ஈண்ட ஏகியே
கூற்றுவன் இமைப்பினிற் குறுகிச் சூரனைப்
போற்றினன் தொழுதனன் புகலும் ஆசியான். 62

திருத்தகு மறலிதன் செய்கை நோக்கியே
அருத்தியின் மகிழ்வுறும் அவுணன் நம்பணி
பரித்தனை யீண்டுநின் பரிச னத்தொடும்
இருத்தியென் றனையனை ஏவிப் போயினான். 63

இறுதியை இயற்றுவான் இருக்கை யென்பதோர்
மறிகடல் அதனிடை வளங்கொள் வாரியைத்
திறலுறும் அவுணர்தஞ் சேனை சென்றரோ
முறைமுறை கவர்ந்தன முகிலின் தன்மைபோல். 64

கூற்றுவன் பெருவலி குறைந்த வண்ணமும்
போற்றினன் போயதும் புந்தி உன்னியே
ஆற்றவும் மகிழ்வுறீஇ அனிக மோடுதென்
மேற்றிசை நிருதிமேல் விரைவின் ஏகினான். 65

நிருதியும் இஃதெலாம் நேடி யாமிவர்ப்
பொருவதும் அரியதாற் போரி யற்றினும்
வருதிறல் இல்லையால் வசைய தேயெனக்
கருதினன் அவரொடு கலத்தற் குன்னினான். 66

உன்னினன் தானையோ டொருங்கு மேவியே
மன்னவன் எதிர்புகா வழுத்தி மற்றவன்
தன்னடி வணங்கியுன் தமரி யானெனப்
பன்னினன் தாரகன் பாங்கர் ஏகினான். 67

அருகுற வருதலும் அவுணர் கோமகன்
நிருதியின் நகரினை நீங்கி யேகலும்
வருணனும் மருத்துவும் வாரி தன்னினும்
செறி உலகினும் இமைப்பிற் போயினார். 68

போதலும் அவரவர் புரத்தைச் சூறைகொண்
டேதம தியற்றுவித் தெழுவ கைத்தெனும்
பாதல வுலகினிற் படர்ந்து தானவ
ராதியர் போற்றிட அருள்செய் தேகினான்.

உற்றனன் நாகர்கோன் உலகில் அன்னவன்
செற்றமொ டேசெருச் செய்யத் தானையால்

வெற்றிகொண் டேயவன் வியந்து போற்றிட
மற்றவன் இருக்கையோர் வைகல் வைகினான். 70

அத்தலை உரகர்கோன் அமரர் தந்திட
வைத்திடும் அமுதினை வலிதின் வாங்கியே
மெய்த்தகு தம்பிய ரோடு மேன்மையால்
துய்த்தனன் அகன்றனன் சூர பன்மனே. 71

ஏனைய பிலந்தொறும் ஏகி அவ்வயின்
மேனதோர் விருந்தினை வியப்பின் நாடியே
மானவர் படையொடும் வல்லை மீண்டனன்
போனதோர் நிலைதொறும் புகழை நாட்டினான். 72

வேறு

பூவுல கிடையே போந்து புணரியோன் றகன்று மற்றைத்
தீவினை யொருவிச் சூரன் சேனைமா நீத்தஞ் சூழ
மாவொடு புவனி போற்ற வரியரா அணையின் நேமிக்
காவலன் துயில்கூர் பாலின் கடலிடைக் கடிது புக்கான். 73

புக்கதோர் வேலை யன்னோன் போர்ப்படை அவுணர் யாரும்
மைக்கடன் மேனி மாயோன் மன்னினன் ஈண்டை யென்னா
அக்கடல் அதனைத் தொன்னாள் அமரர்கள் கடைந்த தேபோல்
மிக்கதோர் ஆர்ப்பி னோடும் விரைவுடன் கலக்க லுற்றார். 74

ஆர்த்திடு முழக்கங் கேளா அம்புயத் திருவும் பாரும்
வேர்த்துடல் பதைப்ப அஞ்சி வெருக்கொடு கரிய மேனித்
தீர்த்தன தகலத் தூடு சேர்ந்தனர் தழுவ அன்னோன்
பார்த்தனன் அஞ்சல் என்று பகர்ந்தனன் துயிலை நீங்கி. 75

இம்மெனப் பணியின் மீதும் எழுந்தனன் இறுதி செய்யும்
வெம்மைகொள் கடவுட் டீயும் வெருவர உருத்துச் சீறி
நம்மையும் பொரவுந் தீயோர் நண்ணினர் போலும் அன்னார்
தம்வலி காண்டும் என்னாத் தடக்கைகள் புடைத்து நக்கான். 76

சிந்தையில் உன்னும் முன்னந் திறல்மிகும் உவணர்கோமான்
வந்தனன் அவன்பொற் றோள்மேல் மடங்கலே றென்னப் புக்குச்
சந்திரன் அனைய சங்குஞ் சக்கரங் கதைவாள் சாபம்
ஐந்தெனும் படையும் ஏந்தி அவுணர்தம் படைமுற் சென்றான். 77

கோட்டினன் சார்ங்க மென்னுங் குனிசிலை யினைநாண் ஓதை
காட்டினன் அவுணர் உள்ளங் கலக்கினன் கொண்ட செற்றம்
வீட்டினன் தானை யாவும் விலக்கினன் பகழி மேன்மேற்
பூட்டினன் சோனைக் கொண்மூ வாமெனப் பொழித லுற்றான். 78

பொழிந்திடு கின்ற காலைப் போர்கெழும் அவுணர் தானை
அழிந்தன தேரும் மாவும் ஆடலங் கரிகள் தாமும்
ஒழிந்தன விறலும் போரின் ஊக்கமும் படையு மெல்லாங்
கழிந்தன சூறை யுற்ற காரெனல் ஆய வன்றே. 79

சூழ்ந்திடும் அவுணர் சென்னி துணிந்தன தோளுந் தாளும்
வீழ்ந்தன கரங்கள் சிந்தி விரவின குருதி நீத்தம்
ஆழ்ந்திடு புணரி யெல்லாம் ஆயின அவனி தானுந்
தாழ்ந்தன பிணத்தின் குன்றந் தகைந்தன தபனன் தேரை. 80

ஒடிந்தன இரதம் ஆழி உருண்டன கவனப் பாய்மா
மடிந்தன களிறு நொந்து மாண்டன வயவர் பல்லோர்
முடிந்தனர் குருதி நீத்தம் மூடின அதனுள் மூழ்கிப்
படிந்தன அலகை ஈட்டம் பாரிடம் புரந்த வன்றே. 81

சுடர்கெழு நேமி அண்ணல் துயிலுறு பாலின் வேலை
இடையொரு சிறிது மின்றி எங்கணும் எருவை யாகி
அடைவது கடவு ளாடும் ஆரழல் அதனை உண்ணக்
கடையுகம் விரவு கின்ற காட்சியைப் போன்ற தம்மா. 82

விண்ணுலாம் படிவ மாயோன் மேதகும் உவணத் தோடு
மண்ணுலாம் கடலா மென்ன அவுணரை வளைந்து சுற்றி
எண்ணிலா உருவங் காட்டி யாவரும் போகா வண்ணம்
அண்ணல்வாம் பகழி சிந்தி அமர்செய்தான் அமரர் ஆர்ப்ப. 83

அடுசமர் புரியும் எல்லை ஆங்கவை உருத்து நோக்கி
உடைவதோர் அனிகந் தன்னை யொன்றுநீர் அஞ்ச லென்று
வடவரை யனைய ஆற்றல் மாபெருந் தனுவொன் றேந்தி
இடியுறழ் கடிமான் தேர்மேல் தாரகன் இமைப்பின் வந்தான். 84

வானில மளவு செய்த மலர்ப்பதத் தண்ணல் முன்னந்
தானெதிர் புகுந்து வெய்யோன் தன்பெருந் தனுவை வாங்கி
மேனகு சரங்கள் கண்ணன் மிசையுற வேலை மீதில்
சோனைவிண் பொழிவ தென்னத் துண்ணெனத் தூவி ஆர்த்தான். 85

ஆர்த்திடும் அளவை தன்னில் அச்சுதன் அயில்வே லென்னக்
கூர்த்திடும் உலப்பில் வாளி கொடியதா ரகன்றன் மேனி
தூர்த்தனன் தேரும் பாகுந் தொலைத்தலுஞ் சோர்வி லாதான்
பேர்த்தொரு தடந்தேர் உற்றுப் பெருஞ்சிலை வாங்கி னுனல். 86

உற்றிடும் அவுணன் மால்மேல் ஓராயிரம் பகழி ஓச்சி
அற்றமில் கருடன் மீதும் ஆயிரம் விசிக முய்ப்ப
மற்றவை அவன்பால் தீய மாசுணம் பலவுந் தங்கள்
பற்றலன் தன்னை வவ்வும் பரிசெனச் செறிந்த வன்றே. 87

ஆயிடை உவணர் கோமான் அலக்கணுற் றதனை நோக்கி
மாயவன் உலப்பி லாத வடிவினை யெய்தி அந்தத்
தீயவற் சூழ்ந்து வெம்போர் செய்துழி அவனுந் தங்கள்
தாயருள் மனுவை உன்னித் தானுமந் நிலைய னுனன். 88

தாரக வசுரன் தானுந் தணப்பில்பல் லுருவங் கொள்ளா
ஈரிரு வைகல் காறும் இந்திரை கேள்வ னோடு

பேரமர் புரிந்த வெல்லைப் பிதாமகன் இதனை நோக்கி
யாரிவன் எதிர்நிற் பாரென் றதிசய நீர ஞனன். 89

எல்லையங் கதனின் மாயோன் எறுழ்வலி அவுணன் ஏறுஞ்
சில்லியந் தேரும் மாவுந் திறன்மிகு வலவன் தானும்
வில்லொடு துணிந்துவீழ விசிகமோர் கோடி உய்த்தான்
ஒல்லையின் அதனை நாடி உம்பர்கோன் உவகை பூத்தான். 90

திண்டிறற் பரியுந் தேருஞ் சிலையொடு வலவன் தானுந்
துண்டம தடைத லோடுஞ் சூரனுக் கிளைய தோன்றல்
தண்டமொன் றெடுத்துக் கீழ்போய்த் தலைபனித் தமரர் அஞ்ச
அண்டமுங் குலுங்க ஆர்த்தங் கரிதனை யெதிர்ந்து சென்றான். 91

எதிர்வரும் அவுணன் தன்மேல் எண்ணிலாப் பகழி மாரி
விதியினை அளித்த மாயன் வீசலும் அவற்றை யெல்லாங்
கதைகொடு விலக்கிச் சிந்திக் கனன்றுமுற் கடிதிற் செல்ல
அதுதனை நோக்கி மாலும் ஆழியம் படையை உய்த்தான். 92

ஓரிமை யொடுங்கு முன்னர் உலகெலாந் தொலைக்குந் தன்மைப்
போரயில் நேமி தானும் புராரிதன் வரத்தாற் சென்று
தாரக வசுரன் கண்டந் தன்னைவந் தணுகிச் செம்பொன்
ஆரம தாயிற் றம்மா தவத்தினும் ஆக்க முண்டோ. 93

பணியுறு கடவுள் நேமிப் படையுமாங் கவுணன் கண்டத்
தணியதா யிருத்த லோடும் அரனருள் வரத்தை யுன்னித்
தணிவிலற் புதத்த னாகித் தாரகன் வலிய னென்னு
மணிகிளர் மேனி மாயோன் மற்றிது புகலல் உற்றான். 94

அயனொடு ததீசி யென்னும் அருந்தவத் தோனும் வெம்போர்
முயலுறும் அவுணர் யாரும் மொழிந்திடின் உனக்கொப் பல்லார்
செயலுரை யின்றி உண்டாற் சிறுவிதி மகத்தைச் செற்ற
வயமிகு கழற்கால் வீரன் மற்றுனக் கிணையா மென்றான். 95

வன்றிறற் கடவு ளாழி மணிப்பணி யாயிற் றென்றால்
வென்றியும் உனதே யன்றோ வேறினிப் போரும் உண்டோ
உன்றிறம் இதுவே என்னின் உனக்குமுன் னவராய் அங்கண்
நின்றவர் பெருமை தன்னை யாவர்கொல் நிகழ்த்தற் பாலார். 96

சங்கரன் மகிழும் ஆற்றல் தழல்மகம் பன்னாள் ஆற்றி
உங்களின் வலிபெற் றுள்ளார் அவுணரில் ஒருவர் இல்லை
இங்குமை வெல்வார் யாரே எமக்குநீர் தமரே யென்னு
மங்கல மரபின் ஆசி வரம்பில புகன்று போனான். 97

பார்த்தனர் அனைய தெல்லாம் பாயிருள் கான்ற மேனி
நீர்த்திரை அனைய செங்கை நிருதராம் புணரி யாயோர்
ஆர்த்தனர் அமரர் யாரும் அகன்றனர் அஞ்சி அங்கம்
வேர்த்தனர் விளிவோ ரென்ன மெலிந்தனர் விழுமத் துள்ளார். 98

மாதவன் அகன்ற காலை மற்றுமோர் வையத் தேறித்
தாதவிழ் தொடையல் வாகைத் தாரகன் தம்முன் நேராய்ப்
போதலும் அவனு மீண்டு புகுந்தவா றுணர்ந்து புல்லி
ஆதர மகிழ்ச்சி எய்தி அனிகமோ டகன்றான் அப்பால். 99

ஆழியங் கிரியின் காறும் அகலிட வரைப்பு முற்றச்
சூழுற நாடிப் போந்து தொல்லிரு விசும்பின் ஏகித்
தாழுறு நிலையிற் செல்லுந் தபனனே முதலோர் யாரும்
வாழியென் றுசி கூற வானுயர் துறக்கம் புக்கான். 100

வேறு

இந்தவா றவுணர்கோன் துறக்கத் தேகலும்
முந்திய ஒற்றரில் சிலவ ரோடியே
வந்தனன் சூரனும் வலியன் தானெனு
அந்தர நாயகன் அறியக் கூறவே. 101

அஞ்சினன் உயிர்த்தனன் அலந்து தேம்பினன்
துஞ்சின னேயென உணர்வு சோர்ந்துளான்
எஞ்சலில் வன்மைய திகந்து தன்னுடை
நெஞ்சினில் இனையன நினைத்தல் மேயினன். 102

அவ்வயிற் போந்திடும் அவுணன் தன்னெதிர்
செவ்விதிற் சென்றியான் செருவில் நேர்வனேல்
இவ்வுயிர்க் கிறுதியாம் இருப்ப னேல்இடர்ப்
பவ்வமுற் றிறந்திடாப் பழியில் மூழ்குவேன். 103

புன்செய லாய்இவட் புகுந் திடுஞ்செயல்
என்செய லால்வரும் இயற்கை யல்லது
பின்செயல் ஒன்றிலை பிறர்செய் கின்றதுந்
தன்செயல் என்பரால் சார்பின் மேலையோர். 104

திருவுறு கின்றுழி மகிழ்ந்துந் தீர்வுழிப்
பருவரல் எய்தியும் பாசந் தன்னிடை
அரிதுணர் கேள்வியர் அழுங்கு வார்கொலோ
வருவது வரும்அது மறுக்க லாகுமோ. 105

ஆதலின் அமர்இழைத் தாவி நீங்கலன்
பேதுறு கின்றிலன் பீழை யுற்றுளோர்
ஓதரு மகிழ்ச்சியும் உறுவர் ஆங்கது
செய் அவுணர்தந் திறத்துக் காண்பனல். 106

நாணொடும் ஒன்னலர் நகையுங் கொள்ளலன்
தூணமை துறழ்புயச் சூர பன்மனைக்
காணுவன் என்னினுங் கறுவு சிந்தையான்
ஏனுறு தனையிடும் எனையென் றெண்ணினன். 107

இம்முறை வாசவன் எண்ணி யேயெழீஇக்
கொம்மென மனையுடன் குயிலு ருக்கொடே

விம்முறு பீழையன் விண்ணிற் போயினன்
தெம்முனை அவுணர்கள் தேடிக் காண்கிலார். 108

ஒன்னலர் நாடுவ துணர்ந்து வானவர்
மன்னவன் ஆக்கமும் மாயும் போலுமால்
என்னினிச் செய்வதென் றிரக்க மெய்தியே
பொன்னகர் எங்கணும் பொலிவு மாய்ந்ததே. 109

பிடித்தனர் அமரரை அவுணர் பேதுற
அடித்தனர் குற்றினர் அனையர் தானையால்
தடித்திடுந் தோள்களைத் தமது கைகளால்
ஒடித்தன ராமென ஒல்லை வீக்கினார். 110

தண்ணளி யாவுமின் றுய தானவர்
விண்ணவர் தங்களை விழுமஞ் செய்திடா
அண்ணலந் திருவுறும் அரசன் முன்னுறத்
துண்ணென உய்த்தலுந் தொழுது போற்றுவார். 111

அவுணரில் உதித்தனை ஆற்று நோன்புறீஇச்
சிவனருள் பெற்றனை திசையி னோர்முதல்
எவரையும் வென்றனை என்னின் இங்கெமை
நவைபடச் செய்வதே நன்று போலுமால். 112

மறலியும் இருக்குமோ மற்றை மாதிரத்
திறைவரும் இமையவர் யாரும் உய்வரோ
இறுதியின் றாகுமே உலகம் ஈங்கொரு
சிறிதுநீ வெஞ்சினஞ் சிந்தை செய்யினே. 113

இற்றையிப் பகல்முதல் என்றும் எங்களுக்
குற்றதோர் கடவுள்நீ ஓம்பும் வேந்துநீ
பற்றுள தமரும்நீ பலரும் யாம்இனி
மற்றுன தேவலை மரபிற் செய்துமால். 114

வேறு

என்றிவை புகன்று போற்றும் இமையவர் தம்மை நோக்கி
நன்றுநுஞ் செய்கை யென்னு நகைசெய்து யாப்பு நீக்கி
மன்றநம் பணிமேல் கொண்டு வைகுதிர் இனிநீ ரென்னு
அன்றவர் தம்மை விட்டான் அழல்மகத் தாவி விட்டான். 115

வாசவன் வளத்தை யெல்லாம் அவுணர்கள் வவ்விச் செல்லப்
பேசரு மகிழ்ச்சி கொண்டு பின்னவர் பாங்கர் ஏகக்
காசிபன் அளித்த மேன்மைக் காதலன் அணிகஞ் சூழ
ஓசைகொள் மறைகள் ஆர்க்கும் உயர்மக லோகம் புக்கான். 116

கற்றுணர் கேள்வி யான்மார்க் கண்டேய முதி வானோர்
உற்றிடும் பதமாந் தொல்பேர் உலகமே முதல மூன்றும்
மற்றவர் பரவ நீங்கி மலரயன் பதத்திற் போகத்
தெற்றென அதனைத் தேர்ந்து திசைமுகன் துணுக்க முற்றான். 117

வேறு

வசையில் நோன்புடை வாலறி வுள்ளோர்
இசைகொள் வேதம் இயம்பினர் சூழ
நசையி னீரொடு நான்முக வேதா
அசுரர் கோனைய டைந்தன னன்றே. 118

ஆழி மால்கடல் அன்னதொர் சேனை
சூழ வேவரு சூரனை யெய்தி
வாழி வாழிய வைகலும் என்னுக்
கேழி லாசி கிளத்திய பின்னர். 119

முன்ன நீயிவண் வந்திட மேனாள்
என்ன நோன்பை இயற்றினை யோயான்
அன்ன வாறுண ரேன்சிவன் அல்லால்
உன்னி நாடி யுணர்ந்துளர் யாரே. 120

கற்றை வார்சடை யான்கழல் பேணி
அற்றம் நீங்கி அருந்தவம் ஆற்றி
மற்றிவ் வாறு வளத்தியல் யாவும்
பெற்று ளாய்பெரு வன்மை பிடித்தாய். 121

பொன்னை மேவு பொலன்கெழு மார்பன்
தன்னை வானவர் தங்களை யெல்லாம்
இன்ன நாள்இனை யோற்கொடு வென்றாய்
உன்னை நேருள ரோவுல கத்தில். 122

காத லான்மிகு காசிபன் மைந்தன்
ஆத லால்அவு ணர்க்கிறை நின்மூ
தாதை யான்சர தம்மிது நின்சீர்
ஏதும் என்புகழ் யான்பிறன் அன்றே. 123

என்று பன்முக மன்கள் இசைத்தே
நின்று தம்பியர் தங்களை நேர்ந்து
பொன்றி டாதபொ லஞ்சிலை திண்டேர்
ஒன்று தன்படை யும்முத வுற்றான். 124

வெருவ ரச்சுரர் வீற்றுறு பான்மை
இருவ ருக்கும் அளித்தலும் யாரும்
பரவு கொற்றவன் அன்னது பாராப்
பெருமகிழ்ச்சிகொள் பெற்றியன் ஆனான். 125

அருத்தி யெய்தி அயன்றனை யங்கண்
இருத்தி மாயைமுன் ஈந்தருள் மைந்தன்
மருத்து ழாய்முடி மன்னவன் வைகுந்
திருத்த கும்முல கத்திடை சென்றான். 126

அந்த வேலையில் ஆண்டுறும் மாலோன்
வந்து சூரபன் மாவினை யெய்தி

நந்தல் இல்லதோர் நாளொடு வாழ்கென்
றந்த மில்பல ஆசி புகன்றான். 127

ஆசி கூறினன் ஆற்றவும் இன்சொற்
பேச வேபெரு மாமகிழ் வெய்தி
மாசில் அவ்வுல கெங்கணும் வல்லே
பாச னத்தொடு பார்த்தனன் அன்றே. 128

பார்த்த பின்பணி யின்மிசை வைகுந்
தீர்த்தன் ஆண்டு திகழ்ந்துற நல்கிக்
கார்த்தி லங்குறு கந்தர முக்கண்
மூர்த்தி வைகிய மூதுல குற்றான். 129

வேறு

அரியயன் முதலா வுள்ள அமரர்கள் யார்க்குந் தத்தம்
உரியதோ ராணை யெல்லாம் உலப்புறு துதவி வைகும்
பரமன துலகம் நண்ணிப் பரிசனம் யாவும் நீங்கிச்
சுரர்புகழ் சூர பன்மன் துணைவர்க ளோடு போனான். 130

போந்தனன் அமலன் கோயிற் புறங்கடை வாயில் நின்றே
ஆய்ந்திடு நந்தி யெந்தை அருள்முறை உய்ப்பச் சென்று
காந்தளை யனைய செங்கைக் கவுரியோ டுறையும் முக்கண்
ஏந்தல்முன் அணுகி ஆர்வத் திறைஞ்சியே ஏத்தி நின்றான். 131

கண்டநஞ் சுடைய அண்ணல் கருணைசெய் தினிநீ யேனை
அண்டமுஞ் சென்று நாடி ஆணையால் அகிலம் யாவும்
எண்டிசை புகழும் ஆற்றால் இறைபுரிந் திருத்தி யென்னப்
புண்டரீ கத்தாள் போற்றி விடைகொண்டு புறத்து வந்தான். 132

புறந்தனில் வந்து சூரன் பொம்மெனத் தானை யெய்திச்
சிறந்திடு கின்ற அண்ட கோளகை சேர்த லோடு
மறந்தரு ஞமலி மேலோர் உருத்திரர் வரம்பி லோர்கள்
உறைந்தனர் அனைய ரெல்லாம் உமாபதி யருளுட் கொண்டார். 133

பாங்குறும் அண்டஞ் செல்லும் பான்மையில் வாயில் காட்டி
ஆங்கவர் விடுப்ப மற்றை அண்டத்துச் சூர பன்மன்
ஓங்கிய தானை யோடும் ஒல்லையிற் போகி யாண்டும்
ஈங்கிது போல நாடி யாரையும் வென்று போனான். 134

ஏனையண் டங்க ளெல்லாம் எம்பிரான் கணமா யுள்ளோ
ரானவர் அருளிற் போகி அகிலமும் நாடி அங்கண்
வானவர் தம்மை வென்று வளமெலாங் கவர்ந்து தன்பால்
தானவர் பலரை அங்கண் தன்னர சளிப்ப உய்த்தான். 135

இத்திறம் வீற்று வீற்றா எல்லையில் அண்டந் தோறும்
மெய்த்தம ராகி யுள்ள அவுணரை வேந்த ராக
வைத்தனன் துணைவ ரோடு மீண்டனன் மற்றிவ் வண்டப்
பித்திகை அதனுட் சென்று பெறலருந் துறக்க முற்றான். 136

ஆகத் திருவிருத்தம்—925.

# 13. எதிர்கொள் படலம்

—oo—

திண்டிறன் மாயையின் செம்மல் இத்திறம்
அண்டர்தந் துறக்கமேல் அடைந்த காலையிற்
பண்டிமை யோர்களாற் படருந் தானவர்
கண்டனர் மகிழ்ந்தனர் களிப்பின் மூழ்கினார். 1

ஆயவன் வருவதை அவுணர் தம்பெரு
நாயகற் கொற்றர்போய் நவில அன்னவன்
தூயநல் லமுதினைக் கிடைத்துத் துண்ணென
மேயின னெனக் களிப்பின் மேயினான். 2

தானையம் படையொடு தகுவர் கோமக
னனவெஞ் சூர்பெறும் அளப்பில் ஆக்கமுங்
கூனலம் பிறைதவழ் குடுமிச் செஞ்சடை
வானவன் கருணையும் மனங்கொண் டேகினான். 3

அன்னவன் புகர்தனை யடைந்து நங்குல
மன்னனை உற்றிட வல்லை செல்லுவன்
முன்னுற ஏகியெம் முறையுஞ் செய்கையும்
பன்னுதி யென்றுமுன் படர்வ தாக்கினான். 4

அன்னதோர் காலையில் அவுணர் தேசிகன்
முன்னுற மானமேல் முடுகி ஏகலுந்
தன்னுறு கிளைஞருந் தானும் ஆங்கவன்
பின்னுற மன்னவன் பெயர்ந்து போயினான். 5

மாசறு பேரொளி மான மீமிசைத்
தேசிகன் விரைவொடு செல்லும் எல்லையில்
காசிபன் அருள்மகன் கண்டு சேணிடை
ஈசனை யெதிர்ந்தென எதிர்கொண் டேகினான். 6

அஞ்சலி செய்தனன் அவுணன் அத்துணை
நெஞ்சக மகிழ்வொடு நின்று தேசிகன்
விஞ்சுக திருவொடு விசயந் தானெனு
எஞ்சலில் ஆசிகள் எடுத்துக் கூறினான். 7

ஆயது காலையில் அனையன் பாங்கரின்
மேயின அரிமுகன் வேழ மாமுகத்
தீயவன் இருவருந் தேரொ டேகியே
தூயதோர் புகர்அடி தொழுது போற்றினார். 8

ஏத்திடும் அவர்தமக் கியலு ஆற்றினால்
மீத்தகும் ஆசிகள் விளம்பி வேந்தனைப்
பார்த்தனன் உனக்கியாம் படுத்து கின்றதோர்
வார்த்தையுண் டன்னது வகுத்துங் கேட்டிநீ. 9

பங்கமில் காசிபன் பன்னி யாகிய
நுங்கையைப் பயந்துளான் நுனித்த கேள்வியான்
சங்கையற் றிருந்ததா னவரைத் தாங்கினான்
எங்களுக் கோர்துணை யென்னுந் தன்மையான். 10

ஈண்டையில் வாசவன் எதிர்ந்து பற்பகல்
மூண்டிடு வெஞ்சமர் முற்றி வீரத்தைப்
பூண்டனன் ஆதலிற் புழுங்கி மாரிநாள்
மாண்டிடு கதிரென மாழ்கி வைகினான். 11

அத்தகு மேலையோன் அவனி மீமிசை *
வித்திடு நாறுசெய் விளைவு காணாரு
எய்த்திடு நிரப்பினன் என்ன நின்னையே
நித்தலும் நோக்கினான் சிறுமை நீங்கவே. 12

தவங்கொடு முந்துநீ தழலை வேட்டதுஞ்
சிவன்புரி வரங்களுஞ் செப்பக் கேட்டனன்
உவந்தனன் ஆகுலம் ஒழித்து வைகினான்
நிவந்தன ஆங்கவன் நெடிய தோள்களே. 13

பற்றலர் புரமடு பரமன் ஈந்திடப்
பெற்றதோர் வரத்தொடு பெயர்ந்தி யாரையும்
வெற்றிகொண் டிவண்வரும் மேன்மை கேட்புரு
மற்றுனை அடைந்திட வருகின் றானெனா. 14

வன்றிறல் அவுணர்கோன் வருதல் காட்டியே
புன்றொழில் படுத்திய புகரு ரைத்தலுந்
துன்றிய கனைகழற் சூர னென்பவன்
நின்றனன் உவகையால் நிறைந்த நெஞ்சினான். 15

ஆர்ந்ததொல் கிளையொடும் அவுணர் காவலன்
சேர்ந்தனன் சூரனைச் செங்கையால் தொழாப்
போர்ந்திடும் ஆவியைப் பிரிந்த தோருடல்
சார்ந்திடு கின்றதோர் தன்மை என்னவே. 16

ஆயிடை வெய்யசூர் அவுணர் கோவினை
நீயினி திருத்திகொல் என்ன நீயுளை
தீயன அடையுமோ சிறுமை எய்துமோ
மேயநுங் குலமுறை விளங்கத் தோன்றினாய். 17

என்றிவை நயமொழி இயம்பி யேபுடை
சென்றன மாயையின் செய்யன் காதலன்
துன்றிய தகுவர்தம் அனிகஞ் சூழ்தர
வென்றியோ டவனிமேல் விரைவின் மீளவே. 18

வேறு

மண்ணுல கத்தில் வெஞ்சூர் வந்தனன் எனுஞ்சொற் கேளா
அண்ணலங் கமலத் தேவும் அமரர்கோ மானும் ஏனை

விண்ணவ ராயுள் ளோரும் வியத்தகு முனிவர் யாருந்
துண்ணென வந்து மாயோன் துயில்கொளுங் கடலிற் புக்கார். 19

கொய்துழாய் அலங்கல் மோலிக் குழகனைக் குறுகி நின்று
கைதொழு திறைஞ்சித் தாங்கள் கனைகழற் சூரன் தன்னால்
எய்திடு சிறுமை யெல்லாம் இயம்பினர் இனிமேல் யாங்கள்
செய்திடு கின்ற தென்கொல் செப்புதி பெரும வென்றார். 20

அன்றவர் உரைத்த மாற்றம் அச்சுதக் கடவுள் கேளாப்
புன்றொழில் தக்கன் வேள்வி புகுந்திடுந் தீமை தன்னால்
இன்றிது பொருந்திற் றம்மா யாரிது விலக்கற் பாலார்
ஒன்றினிச் செய்யுந் தன்மை கேண்மின்என் றோத லுற்றான். 21

பண்டெயின் மூன்றும் அட்ட பராபரன் வரம்பெற் றுள்ளான்
அண்டமெங் கெவையும் வென்றான் ஆதலால் நம்மால் வென்றி
கொண்டிடு திறத்தான் அல்லன் கொடியவச் சூரன் தன்னைக்
கண்டுசென் றிடுதும் ஈதே காரியம் போலு மென்றான். 22

செங்கம லத்தோ னாதி தேவரும் முனிவர் யாரும்
இங்கிது கரும மென்றே இசைந்தன ராகி நிற்ப
அங்கவ ரோடு மாயோன் அரவணைப் பள்ளி நீங்கித்
துங்கம துடைய தொல்சீர்ச் சூரனைக் காண வந்தான். 23

மருத்துழாய் மவுலி யாதி வானவர் முனிவர் யாருந்
திருத்தகு சூரன் நேரே சென்றுநின் றுசி கூறி
அருத்திய தாகப் போற்ற அவர்களுட் பதினோர் கோடி
உருத்திரர் தொகுதி யானோர் ஒருங்குடன் நிற்பக் கண்டான். 24

கண்டிடும் அவுணர் தங்கள் காவலன் இமையா முக்கண்
அண்டர்தம் பெருமான் என்ன அமைந்ததொல் வடிவ முள்ளார்
எண்டரு தொகையின் மிக்கார் ஈங்கிவர் யாவ ரென்னத்
தண்டுளவ லங்கல் மோலிப் பண்ணவன் சாற்றல் உற்றான். 26

ஆகத் திருவிருத்தம் - 950.



# 14. உருத்திரர் கேள்விப் படலம்

—oo—

மன்னவர் மன்ன கேண்மோ மற்றிது புகல்வன் வேதா
முன்னொரு கற்பந் தன்னில் மூவகை யுலகும் நல்கித்
துன்னுயிர் முழுதும் நல்கித் துண்ணென அகந்தை கொண்டு
தன்னையும் பரமென் றுன்னித் தாணுவை அயர்த்தான் அன்றே.1

எந்தையை மறந்து போதன் யாவையும் விதித்த லோடுந்
தந்திடும் அளவே யன்றிச் சராசரம் பெருகா வாக

நொந்தனன் குறையென் னென்றே நோக்கினன் எமைமுன் ஈன்ற
ஐந்தொழில் முதல்வன் தன்னை அயர்த்தனன் போலு மென்றான். 2

இனியவன் அருள்பெற் றன்றி இவ்விதி முடியா தென்னாத்
தனயனும் அளவில் காலந் தவம்புரிந் திடவும் முக்கட்
பனிமதி முடியோன் அன்னான் பாற்படா தொழிய அந்தோ
வினையினேன் முன்னந் தாதை வெளிப்படும் எவன்கொ லென்றான். 3

கழியுடல் புயமேற் கொண்ட கண்ணுதல் உருத துன்னி
இழுதைய ரென்ன ஏங்கி இன்னலுற் றுயிர்த்து வல்லே
அழுதனன் மகவென் செய்வான் அன்னதோர் வேலை கண்ணீர்
விழவிழ அலகை யாகி மிகவெழுந் தீண்டிற் றன்றே. 4

காண்டலும் அலகை ஈட்டங் கருத்திடர் உழப்ப வீழ்ந்து
மாண்டனன் போலச் சோர மன்னுயிர்க் குயிராய் நின்ற
ஆண்டகை யுணர்வு நல்கி அனையவன் கனவில் நண்ணி
ஈண்டினி வருந்தல் மைந்த எழுகென அருளிச் செய்வான். 5

மதித்தனை பரமென் றுன்னை மறந்தனை யெம்மை யற்றால்
விதித்திறங் கூடிற் றில்லை விரைந்தது முடிய நந்தம்
பதத்துளார் தம்மை உன்றன் பாங்குற விடுத்தும் என்றான்
உதித்திடல் இறத்த லின்றி உலகளித் துதவும் ஐயன். 6

அந்நெறி கனவிற் காணும் அற்புதத் தெழுந்து வேதன்
செந்நெறி பூண்டு வைகிச் சிந்தையில் தேற்ற மெய்தி
உன்னலும் அறுவ ரைவர் உருத்திர கணத்தோர் தாதை
தன்னரு ளதனால் நெற்றித் தலத்தினும் போந்து நின்றார். 7

நிற்றலும் அவரை நோக்கி நெற்றியந் தலத்தில் நீவிர்
உற்றதை எவன்கொ லென்ன உன்செயல் முடியு மாற்றால்
மற்றெமை விடுத்தான் நம்பன் ஆதலின் வந்தே மென்றார்
பற்றலர் புரமூன் றட்ட பண்ணவன் வடிவங் கொண்டோர். 8

பரமன துருவாய் நின்றோர் பதினொரு வோரும் இவ்வா
றருள்செய விரிஞ்சன் கேளா அன்பினால் என்பால் வந்தீர்
விரைவுடன் உயிர்கள் தம்மை விதிக்குதிர் என்னத் தத்தம்
உருவுபோற் பதினோர் கோடி உருத்திரர் தொகையைத் தந்தார். 9

ஆங்கது தெரிந்து வேதா ஆவிகள் வினைக்கீ டன்றி
நீங்களிவ் வாறு செய்கை நெறியதன் றென்ன லோடும்
ஓங்கிய உருத்தி ரேசர் ஒல்லையெம் பதத்திற் போதும்
ஈங்கிவண் உயிரை முன்போல் ஈந்தனை இருத்தி யென்றார். 10

என்றிவை உரைத்துப் போதன் யாவையும் படைப்பான் நல்கி
ஒன்றிய உணர்வின் மிக்க உருத்திரர் யாரும் வெள்ளிக்
குன்றுடை முதல்வன் தொன்னாட் கொடுத்திடும் புவனம் புக்கார்
அன்றுதாம் அளித்து ளோரை அமரரோ டிருத்தி ரென்றார். 11

அவனியை அளித்தோன் தன்பால் அடைந்துளார் அண்டந் தன்னில்
புவனமே லிருந்தார் அன்னோர் புரிந்திடத் தொன்னாள் வந்த
பவர்முதல் உருத்தி ரேசர் பதினொரு கோடி யுள்ளார்
இவர்சிவ னருளால் வானோர் இனத்துடன் ஈண்டி யுற்றார். 12

ஆகத் திருவிருத்தம் - 962.

# 15. நகர்செய் படலம்

-oo—

என அரி புகலக் கேளா இன்னதோ நிகழ்ச்சி யென்றான்
அனையதற் பின்னர் ஆண்டை அமரர்கம் மியனை நோக்கி
வனைகழற் சூர பன்மன் மற்றியாம் உறைதற் கொத்த
புனைதிரு நகரம் வல்லே புரிமதி புலவ வென்றான். 1

என்றலுங் கடவுள் தச்சன் இறைஞ்சியே நுமக்குச் செய்யும்
வென்றிகொள் மூதூ ருக்கு வியலிடம் உரைத்தி யென்ன
நன்றெனப் புகரோன் தானே நகர்களுக் கெல்லை கூற
அன்றவை வினவித் தென்பால் அளக்கரை அடைந்தான் அன்றே. 2

ஆசறு கடலி னூடே அயுதமோர் எட்டா யுள்ள
யோசனை எல்லை முன்னோன் உறுநக ராகக் கோலிக்
காசினி வரைகள் தம்மால் கதுமெனத் தூர்த்து மிக்க
பாசறை கொண்டே ஒப்ப அணித்தலம் படுத்துப் பின்றை. 3

காயுறு கதிர்கள் காஞ்சிக் கம்பைமா நீழல் வைகும்
நாயகி நரக மென்ன நாடொறுஞ் சூழு மாற்றால்
சேயுயர் விசும்பிற் போகச் செம்பொனால் மதிலைச் செய்து
வாயில்கள் நான்க மைத்து ஞாயிலும் வகுத்து நல்கி. 4

நாற்பெரு வாயி லூடு மேருவே நண்ணிற் றென்ன
மாற்பெருங் கோபு ரங்கள் மணிவெயில் எறிப்ப நல்கி
நூற்படும் ஒழுக்கம் நாடி நூறியோ சனையொன் றாகப்
பாற்படு மாட வீதி பற்பல அமைத்து மன்னோ. 5

முப்புரம் ஒருங்குற் றென்ன மும்மதில் அவற்றுள் நல்கி
ஒப்பருந் திருவின் வீதி உலப்பில புரிந்து சோமன்
வைப்பெனச் செம்பொன் மாடம் வரம்பில வகுத்து மாதர்
மெய்ப்படும் ஆடல் கூரும் வியலிடம் பலவுஞ் செய்து.

மாளிகை தோறுந் தெற்றி மண்டபம் அணிசேர் முன்றில்
கோளரி தயங்கு பொற்பிற் கோபுரங் குன்றம் அம்பொற்
சூளிகை அரங்க மன்றஞ் சுடருமேற் றலங்கள் தூய
சாளரஞ் சோலை வாவி தனித்தனி யாகத் தந்து.

வேறு

ஆயதன் நடுவுற அயுத வெல்லையில்
பாயதோர் நெடுமதில் பயில நல்கியே
மாயவள் திருமகன் வைக ஆங்கொரு
கோயிலை எழில்பெறக் குயிற்றி னாரரோ. 8

வாரணம் விரவுதேர் மக்கள் போந்திடுந்
தோரண வாயில்கள் தொடர்ந்த தெற்றிகள்
சீரணி தபனியச் சிகர கோபுரங்
காரணி மணிவரை கவின்கொள் சூளிகை. 9

ஆனைகள் பயில்விடம் அயங்கள் சேரிடம்
சேனைகள் உறைவிடம் தேர்கள் வைகிடம்
தானவர் தலைவர்கள் சாருந் தொல்லிடம்
ஏனைய அரக்கர்கள் இனிது சேரிடம். 10

நாடரும் விசும்புறை நாரி மாரெலாம்
ஆடலை இயற்றிடும் அரங்க மண்டபம்
பாடலின் முறைபயில் பைம்பொன் மண்டபம்
மாடக யாழ்முரல் வயிர மண்டபம். 11

மயில்புற வோதிமம் வன்ன மென்கிளி
குயில்முத லாகிய குலவு மண்டபம்
இயலுறு யூகமான் இரலை செச்சைகள்
பயிலுறு வாரணம் பரவும் மண்டபம். 12

சந்ததம் மறையொலி தழங்கு மண்டபம்
முந்திய வேள்விகள் முயலும் மண்டபம்
மந்திர வியல்பினோர் மருவு மண்டபம்
இந்திரன் முதலினோர் இருக்கும் மண்டபம். 13

திருமிகு நிருதர்கோன் தேவர் போற்றிட
அரசியல் புரியுமத் தாணி மண்டபம்
இருநிதி உளவெலாம் ஈண்டும் மண்டபம்
பரனருள் படைக்கலம் பயிலும் மண்டபம். 14

அருந்துறும் அமிர்துறழ் அடிசில் மண்டபம்
நரந்தையே பாளிதம் நறைகொள் சாந்தகில்
பெருந்துவர்க் காயடை பிறவுஞ் சாலவும்
இருந்திடு கின்றபேர் எழில்கொள் மண்டபம். 15

மானனை யார்பலர் மருவு மண்டபம்
ஆனதோர் ஊசலாட் டயரும் மண்டபம்
பானிலா உமிழ்தரு பளிங்கின் மண்டபம்
வானுயர் சந்திர காந்த மண்டபம். 16

மாமணி யொளிர்தரு வசந்த மண்டபம்
காமரு பவளமார் கவின்கொள் மண்டபம்

ஏமரு மரகதத் தியன்ற மண்டபம்
தாமரை உயிர்த்திடு தரள மண்டபம். 17

கோவியல் மரபினோர் கொள்கைக் கேற்றன
யாவையும் நல்கியே இதனுக் குள்ளுற
மாவுறு சூரபன் மாவுந் தன்குலத்
தேவியும் உறையவோர் உறையுள் செய்தரோ. 18

இங்கிது சூழ்தர எண்ணி லாதன
மங்கல நிறைதரு மாட வீதிகள்
அங்கவன் துணைவிய ராகி வந்திடும்
நங்கையர் மேவர நலத்தின் நல்கியே. 19

காவியுங் குமுதமுங் கமல முஞ்செறி
வாவிக ளோடைகள் பொய்கை வான்றொடு
பூவியல் தண்டலை பொலன்செய் குன்றுடன்
யாவையும் முறைபட இயற்றி னானரோ. 20

அள்ளலந் திரைக்கடல் அகழி யாகவே
யுள்ளுறு நகரிடை உறையுங் கோயிலில்
தள்ளரும் பொன்சுடர் தழைத்த பொற்பினால்
வெள்ளிய தானது மேலைப் பொன்னகர். 21

வேறு

இன்னவையும் ஏனவையும் எண்ணிமனத் தால்அருளித்
தன்னிகரில் அவுணர்பிரான் சயத்தோடு பெருந்தலைமை
மன்னவரு தலின்வீர மகேந்திரமே யாமென்றே
அந்நகருக் கோர்நாமம் அணிபெறுத்தி அளித்தனனே. 22

ஏமபுரம் இமையபுரம் இலங்கைபுரம் நீலபுரம்
சோமபுர மெனப்புகலுஞ் சுவேதபுரம் அவுணர்புரம்
வாமபுரம் பதுமபுரம் மகேந்திரமா புரமென்னுங்
காமர்புரத் தெண்டிசைக்குங் காட்சிபெற உதவினனால். 23

யாண்டகுசீர் கெழுவீர மகேந்திரமிவ் வாறுதவி
ஆண்டதுபோல் அகன்பரப்பில் ஆசுரமென் றொருநகரம்
நீண்டவட கடல்நடுவண் நிருதர்புகழ்ந் திடுமாற்றால்
காண்டகைய சீயமுகக் காவலற்கு நல்கினனே. 24

மற்றுளவெம் புணரிதொறும் வயின்வயின்சேர் தீவுதொறுங்
கொற்றமிகுஞ் சூரபன்மன் குலவுபெருந் தானையெலாஞ்
சுற்றமுடன் மேவுதற்குத் தொன்னகரம் பலவமைத்துக்
கற்றுணருஞ் சிறுவரொடுங் கம்மியன்மீண் டேகினனே. 25

வேறு

நீடு மேரு நெடுவரைத் தென்புடை
நாடு சீர்கெழு நாவலந் தீவினில்

கூடு கின்றபொற் கூடந் தனக்கொரு
மாடு போந்தனன் மாமயன் தாதையே. 26

பகரு கின்றஅப் பாற்படும் எல்லையில்
தகுவர் போற்றிடுந் தாரகற் காகவே
மகிழ்வின் நீரொடு மாயா புரமென
நகர மொன்றை அணிபெற நல்கினன். 27

வினையர் தம்மொடு விச்சுவ கன்மனும்
இனைய வூர்கள் இயற்றியம் மாயையின்
தனய னுக்கிவை சாற்றலும் நன்றெனா
அனிக மோடங் கடைந்தனன் என்பவே. 28

ஆகத் திருவிருத்தம் - 990.

# 16. ப ாபி ே கப் படலம்

—oo—

மற்றவ் வீர மகேந்திரம் நண்ணியே
உற்று நாடியவ் வும்பர்தங் கம்மியன்
கற்ற விஞ்சை வியந்து களிப்புறீஇக்
கொற்ற நீடுதன் கோயிலை நண்ணினன்.

நண்ணு கின்றுழி நான்முக னாதியாம்
விண்ணு ளோர்கள் வியன்முடி சூட்டுதும்
அண்ண லுக்கென் றவற்றிற்கு வேண்டிய
எண்ணில் பல்பொருள் யாவுமுய்த் தாரரோ.

கோவில் நண்ணிய கொற்றவன் மற்றொரு
தாவில் பீடிகை தன்மிசை வைகியே
மாவு லாவிய மால்கடல் தெண்புனல்
தேவர் ஆட்டச் சிறப்புடன் ஆடினன்.

ஆடி யம்பொனின் ஆடையு டீஇமலர்
சூடி ஒண்கலன் தூயன பூண்டுபின்
பீடு சேர்தரு பின்னவர் பால்வர
நீடு காதல் நிருதர் புகழ்வே.

நிகரி லாத நிருதர்க் கிறைதொழப்
புகரு மாமுனி வோரும் புகழ்ந்திட
மிகந டுங்கிய விண்ணவர் போற்றிட
மகப திக்கு மனந்தளர் வெய்தவே.

வந்து சீய மணித்தவி சேறினன்
அந்த வெல்லையில் அச்சுதற் காமெனும்

இந்தி ரத்திரு மாமுடி ஏந்தியே
சுந்த ரத்தொடு நான்முகன் சூட்டினான். 6

கண்டு தானவர் காசிபன் காதலன்
புண்ட ரீகப் பொலன்கழல் தாழ்ந்தெழா
அண்டொ ணாமகிழ் வால்அடுந் தேறலை
உண்டு ளாரின் உளங்களிப் பெய்தினார்.

அன்ன வேலை அமரர் முனிவர்கள்
பொன்ன வாநறும் போது கரங்கொடே
மன்னர் மன்னன் மணிமுடி யின்மிசை
முன்னி வாழ்த்தி முறைமுறை வீசினார். 8

வேறு

பாங்குறு தவிசின் பாலில் துணைவர்பங் கயன்மால் தம்மை
ஈங்கினி திருத்திர் என்ன இருந்தனர் ஏவ லாலே
ஓங்கிய மகவான் கொண்டான் களாசிஒண் ணிதியின் கோமான்
தாங்கினன் அடைப்பை மற்றச் சமீரணர் கவரி கொண்டார். 9

நிருதர்தங் குரிசி லான நெடுந்தகை யுடைவாள் கொண்டான்
பரிதியும் மதியும் அங்கட் பணிக்குடை நிழற்றி நின்றார்
வருணனும் மகாரும் ஆல வட்டம்வீ சினர்யாழ் வல்ல
கருடர்கந் தருவர் சித்தர் கானமங் கிசையா நின்றார். 10

முத்தலை அயில்வே லேந்தி முறைநெறி ஆற்றுங் கூற்று
மெய்த்தழற் கடவுள் தானும் வேத்திர மேந்தி யாண்டும்
எத்திறத் தவரும் நீங்க எரிவிழித் திடியி னார்த்துப்
பத்தியின் நிறுவிச் சூரன் பல்புகழ் பரவி நின்றார் 11

குரைகழல் நிருதி என்போன் கோடிக மதுகைக் கொண்டான்
இருமைசேர் குரவர் தாமும் எல்லைதீர் முனிவர் யாருந்
திரைகெழு கங்கைத் தூநீர் செம்பொனங் கலசஞ் சேர்த்துத்
துருவையின் மறையால் வாங்கித் துவலைதூர்த் தாசி சொற்றார். 12

அரம்பைமே னகையே மிக்க உருப்பசி யாதி யாகி
வரம்பறும் அமரர் மாதர் வரன்முறை விதியின் நாடி
நரம்பியல் சுருதி பாடல் இயத்தொடு படிந்து நண்ணித்
திரம்பயில் நடனம் மூன்றுஞ்[1] செவ்விதிற் புரிய லுற்றார். 13

இத்திறம் அமரர் யாரும் ஏனையர் தாமும் ஈண்டித்
தத்தம துரிமை தன்னைத் தவாநெறி தலைக்கொண் டாற்ற
மைத்தகு சூர பன்மன் மடங்கலந் தவிசின் மீதே
மெய்த்திரு நிகழ மன்னிப் பின்னிவை விளம்ப லுற்றான். 14

ஆகத் திருவிருத்தம்—1,004

1 நடனம் மூன்று – தேசிகம், வடுகு, சிங்களம் என்பன.

# 17. அரசுசெய் படலம்

—oo—

களித்திடு ஞிமிறும் வண்டுங் கலந்திட நறவம் பொங்கித்
துளித்திடு துழாய்மால் தன்னைச் சூரனும் அவுணன் பாரா
அளித்தவன் தன்மூ தாதை யாயினை அதனால் நின்னை
விளித்திடு மெல்லை தோறும் விரைந்திவண் மேவு கென்றான். 1

செங்கம லத்தின் மேவுந் திசைமுகத் தொருவன் தன்னைத்
துங்கமோ டரசு செய்யுஞ் சூரனும் வீரன் பாரா
இங்குநின் மைந்த ரோடும் என்னிடந் தன்னி லேகி
அங்கம்ஐ வகையும் நாளும் அறைந்தனை போதி யென்றான். 2

அறத்தினை விடுத்த தீயோன் அருக்கனை நோக்கி நம்மூர்ப்
புறத்தினில் அரண மீதாய்ப் போகுதல் அரிது கீழ்மேல்
நிறுத்திய சிகரி யூடு நெறிக்கொடு புக்கு வான்போய்
எறித்தனை திரிதி நாளும் இளங்கதிர் நடாத்தி யென்றான். 3

அறைகழற் சூர பன்மன் அவிர்மதி தன்னை நோக்கிப்
பிறையென வளரு மாறும் பின்முறை சுருங்கு மாறும்
மறைவொடு திரியு மாறும் மற்றினி விடுத்து நாளும்
நிறைவொடு கதிரோன் போல்இந் நீள்நகர் வருதி யென்றான். 4

பொங்கழல் முதல்வன் தன்னைப் புரவலன் விரைவின் நோக்கி
இங்குநம் மூதூர் உள்ளோர் யாவரே எனினும் உன்னின்
அங்கவர் தம்பா லெய்தி அவர்பணி யாவும் ஆற்றிச்
செங்கம லம்போல் யாவர் தீண்டினுங் குளிர்தி யென்றான். 5

சுடர்முடி யவுணர் செம்மல் தொல்பெருங் கூற்றை நோக்கிப்
படிமுழு துயிரை நாளும் படுப்பது போல நந்தங்
கடமத கரியை மாவைக் கணிப்பிலா அவுணர் தம்மை
அடுவது கனவும் உன்னா தஞ்சியே திரிதி யென்றான். 6

அண்டரும் உலவை யானை அவுணர்மாத் தலைவன் பாரா
எண்டரு நம்மூ தூரில் யாவரும் புனைந்து நீத்த
தண்டுளி நறவ மாலை தயங்குபூண் கலிங்கஞ் சாந்தம்
நுண்டுக ளாடு சுண்ணம் மாற்றுதி நொய்தின் என்றான். 7

காவலன் வருணன் தன்னைக் கண்ணுறீஇ நம்மூ தூரில்
நாவிவெண் பளிதஞ் சாந்தம் நரந்தமோ டளாவித் தீம்பால்
ஆவியின் வெளிய நொய்ய அரும்பனி நீரிற் கூட்டித்
தூவுதி இடங்க டோறுங் காற்றது துடைக்க வென்றான். 8

வாசவன் றன்னை நோக்கி மால்கெழு திருவின் மேலோன்
தேசுறு துறக்கம் வைகுந் தேவர்தங் குழுவி னோடும்
ஆசையங் கிழவ ரோடும் அருந்தவ ரோடும் போந்து
பேசிய பணிகள் ஆற்றித் திரிமதி பிழையேல் என்றான். 9

இந்நெறி சூர பன்மன் யாவர்க்கும் வீற்று வீற்றுத்
தன்னுறு பணியின் நிற்பான் சாற்றலும் அனையர் அஞ்சி
அன்னது செய்து மென்றே அனையவா றொழுக அன்னோன்
மன்னினன் அரசில் பின்றை மணஞ்செய உன்னி னானால். 10

மதிமுகத் திருவே போல்வாள் வானவர் புனைவன் தந்த
பதுமகோ மளைஎன் றோதும் பாவையைப் புகரோன் நாடிச்
சதுர்முகன் முதலாந் தேவர் தானவர் பிறரும் போற்ற
விதிமுறை வதுவை செய்து விழைவொடு மேவி யுற்றான். 11

அன்னதன் பின்னர் வானோர் அசுரர்கந் தருவர் சித்தர்
கின்னரர் இயக்கர் நாகர் கிம்புரு டாதி யானோர்
கன்னியர் அளப்பி லாரைக் கடிமணஞ் செய்து கூடித்
துன்னுபன் மலர்த்தேன் உண்ணுஞ் சுரும்பென இன்பந் துய்த்தான். 12

அரிமுகத் தவுணர் வேந்தற் கந்தகன் மகளா யுள்ள
திருமிகு விபுதை தன்னைச் சீர்மணஞ் செய்து நல்கி
நிருதிதன் புதல்வி யான நேரிழை சவுரி தன்னைக்
கரிமுக இளவல் சேரக் கடிமணம் புரிவித் திட்டான். 13

இவ்வகை மணஞ்செய் பின்றை இருதுணை வரையும் நோக்கி
மெய்வளம் பெறநுங் கட்கு விதித்திடும் மூதூ ரேகி
அவ்விரு கோடி வெள்ளம் அனிகமோ டிருத்தி ரென்னாத்
தெவ்வடு சூரன் அன்னோர் செல்லுமா றேவி னானால். 14

ஏவியே தனது தானைக் கிறைவரில் பலரை நோக்கி
நீவிர்கள் இரண்டு கோடி நீத்தமாம் அனிகத் தோடு
தீவுக டோறும் ஆழி இடந்தொறுஞ் செய்த மூதூர்
மேவுதிர் விரைவின் என்னா அனையரை விடுத்தான் மன்னோ. 15

மாறிலாத் திசைக ளெட்டும் வானுல கேழும் இப்பாற்
கூறுபா தலங்கள் யாவும் ஒழிந்தவுங் குறுகி யேதன்
ஈறிலா ஆணை போற்ற எல்லையில் அவுணர் தம்மை
ஆறெனுங் கோடி வெள்ளத் தனிகமோ டேகச் செய்தான். 16

விட்டிடு காலை தானே விண்ணுமண் ணுலகுந் திக்கோர்
எட்டொடு பிலனோ ரேழும் ஏனைய வரைப்பு மாகிக்
கிட்டின செறிந்து மொய்த்த கேடில்சீர் அவுணர் தானை
மட்டகல் வானம் பூத்த உடுக்களின் மலிந்த அன்றே. 17

எங்கணுந் தனது தானை இடையறு தீண்ட லோடுந்
துங்கவெஞ் சூர பன்மன் தானுறை தொன்மூ தூரில்
அங்கணோ ரிலக்கம் வெள்ளத் தவுணர்தந் தானை தன்னை
மங்கல இருக்கை தோறும் மரபுளி இருத்தி மன்னோ. 18

கரிபரி யாளி எண்கு கடுவயப் புலியே ஏனம்
அரிமரை முகத்து வீரர் அவுணர்தந் தலைவ ரானோர்

இருவகை நான்மை யோர்க்கும் எண்டிசை நகரும் ஈந்து
வருபடை அயுதத் தோடும் மகேந்திரங் காக்கச் செய்தான். 19

ஞாயில்கள் செறிந்த நொச்சி நாற்பெருந் தகைமைத் தான
வாயில்க டோறும் நாப்பண் வளநகர் இஞ்சி தோறும்
கோயிலின் இருக்கை தோறுங் குணிப்பிலா வீரர் தம்மை
நீயிர்கள் காமின் என்று நிலைப்பட நிறுவி யிட்டான். 20

துர்க்குணன் தரும கோபன் துன்முகன் சங்க பாலன்
வக்கிர பாலன் தீய மகிடனே முதலோர் தம்மைத்
தொக்கமந் திரிக ளாகத் துணைக்கொடே சூர பன்மன்
மிக்கவா னவர்கள் போற்ற வீற்றிருந் தரசு செய்தான். 21

ஆகத் திருவிருத்தம் - 1,025.

# 18. தேவரை யேவல்கொள் படலம்

—oo—

அரசு செய்தலும் அந்தர நாதனுஞ்
சுரரு மேனை முனிவருந் தொக்குறீஇ
வரைசெய் மாட மகேந்திர மாபுரத்
தொருவன் ஏவலின் முன்னம் ஒழுகுவார். 1

கொலைவல் சிங்க முகன்பதி குஞ்சரத்
தலைவன் மாப்பதி சார்ந்தவர் தம்பதி
பலவு மேகிப் பணித்தன ஆற்றியே
உலைவர் வைகலும் ஊசலின் நீர்மையார். 2

வேறு

ஊனமுற்றோர் போலிவ்வா றுலைகின்ற காலத்தில் ஒருநாட் சூரன், வானகத்துத் தலைவனையும் அமரரையும் வருகவென்று பபை தனுக கூவித், தானவர்க்குத் தம்பியர்நீர் அவர்பணியும் பணியன்றோ தரங்க வேலை, மீனனைத்துஞ் சூறைகொண்டு வைகலுமுய்த் திடுதிரென விளம்பி னுனல். 3

உரைக்குமொழி யதுகேளா அனைய ரெலாம் உள்நடுங்கி உயங்கி வெள்கித், திரைக்கடலின் மீன்றனக்குத் தருகென்றான் இதற்கினிநாஞ் செய்வ தேதோ, விரைக்கமலத் தனிக்கடவுள் இப்படியும் நந்தலையில் விதித்தான் என்று, இரக்கமொடு மறுத்தலஞ்சி அத்திறமே புரிதுமென இறைஞ்சிப் போனார். 4

போகின்ற நெறியின்கண் இமையவரும் புரந்தரனும் பொருமி யேங்கி, ஆகின்ற தெமக்கேயோர் பழியன்றோ அனையதுவந் தணுகா முன்னர்ச், சாகின்ற தேமிகவும் இனிதாகும் எமக்கதுவுஞ் சாரா

தந்தோ, வேகின்ற சிந்தையினேஞ் செய்வதெவன் எனப்புலம்பி வேலை புக்கார். 5

அவ்வேலை இமையவர்கோன் வருணனெனுங் கடவுளாகின் றழையா இந்த, மைவேலை தனக்கிறைவன் நீயன்றே நின்னினுமோர் வலியா ருண்டோ, கைவேலைப் பணியியற்றித் திமிங்கிலமே முதலாய கணிப்பின் மீன்கள், இவ்வேலை ஏற்றுதியேல் இடர்வேலைக் கரையி லெமை யெடுத்தி யென்றான். 6

வெள்ளைவா ரணக்கடவுள் உரைசெய்த மொழிகேட்டு விண்ணு ளோர்க்கு, வள்ளல்நீ இரங்குதியோ அத்தொழில்யான் புரிவனென வருணன் கூறி, அள்ளல்வே லையுட்புகுந்து தனதுபெருங் கரதலத் தால் அலைத்து வாரி, யுள்ளமீன் குலங்களெல்லாந் தடங்கரையில் வரையேபோல் உயர்த்த லுற்றான். 7

தடக்கடலின் வேலைதனில் வருணர்பிரான் ஒல்லைதனில் தந்த மீனத், தடுக்கல்முழு வதுநோக்கிக் கடவுளரை விளித்திவற்றை ஆற்ற லாலே, எடுப்பதுநுந் தொழிலென்றே இந்திரன்றான் விளம்புதலும் இமையோ ரெல்லாம், நடுக்கமுடன் உளம்பதைப்ப விழிபனிப்பக் கரங்குலைத்து நாணுக் கொண்டார். 8

சின்னதிமிங் கிலகிலமீ னுதியமீன் அடுக்கலினைத் தென்பால் வைகும், மன்னனுயிர் தனைவாங்கச் செங்கதிரோன் பெரும்புனலின் வடிவை வாட்டப், பன்னகரா கியதிறத்தாற் பிணித்திடும்அச் சுமைய தனைப் பகட்டின் வேந்தன், இன்னலுறு வானவர்பால் எடுத்தவவர் கொண்டேகி இரங்கு கின்றார். 9

**வேறு**

பன்னும் புகழ்ச்சூர பன்மனெனுந் தீயவனுன்
முன்னுந் துயர்க்கடலின் மூழ்கி முரணழிந்தேம்
துன்னும் பழியாந் தொழிலிதுவுஞ் செய்தனமால்
இன்னும் படுவதொழில் ஏதோ உணரேமே. 10

பேர்கின்ற நீலப் பிறங்கல்அனை யான்பணியால்
ஆர்கின்ற தின்றே ரலரே அஃதுயிரை
ஈர்கின்ற தந்தோ விதியே எமக்கிதுவுந்
தீர்கின்ற காலம் உளதோநீ செப்பாயே. 11

பூவுலகந் தன்னில் பொருந்துகின்ற மானுடரும்
பாவமென நூலில் பகருகின்ற இத்தொழிலை
ஏவர்புரி கின்றார் எமக்கோவந் தெய்துமதோ
தேவ கதியின் நிரயஞ் சிறப்புடைத்தே. 12

தக்க துணராத தானவர்கள் தங்களினும்
மக்களினுந் தாழ்வாம் வலைஞர்தொழில் செய்தனமால்
இக்கன வாழ்வை விரும்பியே யாஞ்செய்த
மிக்க தவமும் வினையாய் விளைந்ததுவே. 13

வேத நெறியை விலக்கினேம் மிக்குள்ள
போத நெறியாம் அதற்குப் புறம்பானேம்
தீதுடைய வெஞ்சூரன் சீற்றத்தாற் செப்புகின்ற
வேதநெறி செய்வேமேல் எம்மினுயர்ந் தாரெவரே. 14

தேனுலவுந் தாருத் திருநிழற்கீழ் இன்பமுறும்
வானவர்க ளென்றே மதிக்குந் தகைமையினேம்
ஈனமொடு மீன்சுமந்தே எல்லோர் களும்நகைக்கத்
தானவர்முன் செல்வதினுஞ் சாதல்மிக நன்றுநன்றே. 15

என்னு மொழிகள் இயம்பிப் புலம்புற்றுத்
துன்னு நிருதர்புகழ் சூரன் திருநகரின்
மன்னுதிசை யாளரொடும் வந்தனரால் அவ்வளவில்
அன்னசெயல் கண்டே அவுணர்உரை செய்குவார். 16

மாதோயந் தன்னை வயிறலைத்து மற்றிவர்தாம்
ஈதோ சிலமீன் தருகின் றனரென்பார்
மீதோ டியபரிதி வெய்யோன்முன் னுண்டவெறுங்
கோதோ எமக்குக் கொணர்கின்றார் என்றுரைப்பார். 17

தாங்கடற்குள் மீனந் தலைக்கொண்டு மேவுகின்றார்
ஈங்கிவர்க்கு நாணம் இலையோ சிறிதென்பார்
தீங்கிழைக்கின் யாரேனுஞ் செய்யாத தேதென்பார்
மூங்கையொத்து ளாரோ மொழியார் இவரென்பார். 18

முந்துற்ற தொல்லை முழுநீரின் வேலைதொறும்
பந்தத் துடன்வாழ் பரதவரே செய்கின்ற
இந்தத் தொழிலும் இவர்க்குவரு மோவென்பார்
சிந்திப்ப தென்னோ விதியின் செயலென்பார். 19

வேத நெறிமுறைமை விட்டார் வினைசெய்யும்
பேதை நெறியே பிடித்தார் இவரென்பார்
கோதுபடா நந்தங் குலத்தை மிகநலிந்தார்
ஏதுபடார் இன்னம் இமையோ ரெனவுரைப்பார். 20

மண்ணோர் களுமிகழும் வன்பழிதன் பால்வரவும்
விண்ணோர்க் கிறைவன் விரைவினுயிர் விட்டிலனாற்
கண்ணோ பெரிது கருத்தோ சிறிதென்பார்
பெண்ணோ அலிதானோ பேடோ வெனவுரைப்பார். 21

வேறு

இந்த வாறு பலரும் இயம்பிடப்
புந்தி நொந்து புலம்புபுத் தேளிர்கள்
தந்தி யூருந் தலைவனை முற்கொடு
வந்து தீயவன் வாய்தலுற் றாரரோ. 22

பரிதி வேந்தன் பணிமுறை நாடியே
வருதிர் ஈண்டென்று வாயிலர் கூறிடப்

பொருதி ரைக்கடல் மீன்கொடு போய்ச்சுரர்
ஒருத னிப்பெருங் கோயிலுள் உய்த்தனர். 23

எளித்தல் எய்தும் இமையவர் உய்த்தமீன்
துளித்த தேன்றொடைச் சூர்முதல் காணுறீஇக்
களித்து வந்து கடவுளர் வைகலும்
அளித்தி ரென்ன அழகிதென் றேகினர். 24

என்றும் ஆங்கவர் இச்செயல் ஆற்றியே
பொன்றி னரின் புலர்ந்து புலம்புறீஇத்
துன்று கின்ற துயர்க்கடல் மூழ்கியே
ஒன்றும் வேத வொழுக்கமற் றுரரோ. 25

ஆகத் திருவிருத்தம்–1,050.



# 19. புதல்வரைப் பெறுபடலம்

—oo—

அதுபொழு தவுணர் கோமான் ஆற்றிய தவத்தின் சீரால்
பதுமகோ மளையென் றோதும் பாவைதன் உதரம் போந்து
புதுமதிக் குழவி யேபோல் பொற்பொடு பொலிந்து முன்னம்
மதலையங் கொருவன் வந்தான் மறலிக்கு மறலி போல்வான். 1

வந்ததோர் மதலை தன்னை மன்னவர் மன்னன் காணூஉ
அந்தமில் மகிழ்ச்சி பொங்க அவுணர்தங் கிளைஞர்க் கெல்லாம்
நந்திய வெறுக்கை தன்னை நலத்தக வீச லுற்றான்
இந்திரன் முதலி னோரும் யாவரும் இடுக்கண் எய்த. 2

வீசிய பின்றை வானோர் மெல்லியர் அவுணர் மாதர்
ஆசிகள் புகன்று போற்றி அன்னதோர் மைந்தன் தன்னைக்
காசொடு வயிர முத்தங் கதிர்பொலந் தொட்டில் சேர்த்தார்
மாசகல் மதிய மேபோல் பைப்பய வளர்தல் உற்றான். 3

கட்டழ குடைய மைந்தன் கம்பலங் கொண்ட செம்பொன்
தொட்டிலில் துயிலு மெல்லை ஒருபகல் சுடரின் என்றாழ்
விட்டதோர் நூழை தன்னால் மேவியே அனையன் மெய்யிற்
பட்டதங் கதனை நாடிப் பரிதியைச் சுளித்துப் பார்த்தான். 4

பார்த்திடு கின்ற மைந்தன் பன்மணித் தொட்டில் நின்றுஞ்
சீர்த்தெழுந் தண்டம் பாய்ந்து செங்கதிர்ச் செல்வற் பற்றிக்
கார்த்திடு புயங்கங் கவ்வும் படித்தெனக் கரத்திற் கொண்டு
பேர்த்துமோர் இறையில் வந்தான் தவத்தினும் பெரிதோன் றுண்டோ. 5

தானுறை இருக்கை தன்னில் தருவர்கோன் தனயன் சாரா
ஆனதோர் செம்பொற் றொட்டில் அணிமணிக் காலி னூடே

பானுவை வலிதிற் கட்டிப் பண்டுபோல் துயின்றான் அங்கண்
வானவர் அதனை நோக்கி மனம்வெரீஇ மறுக்க முற்றார். 6

பரிதிவிண் சேறல் இன்றிப் பிழைத்தலும் பார்தந் துள்ளோன்
கருதியிந் திரனே ஏனைக் கடவுளர் யாருஞ் சூழ
நிருதர்கோன் தன்பால் வந்து நீடிருட் பகைவன் தன்னைத்
தருதிநின் மைந்தன் செய்த தனிச்சிறை நீக்கி யென்றான். 7

வேறு

மறைபு ரிந்தநான் முகன்இவை புகறலும் வானத்
திறைபு ரிந்திடும் இரவியை என்மகன் இன்னே
சிறைபு ரிந்ததை உணர்கிலேன் அவனது செய்யக்
குறைபு ரிந்ததென் பகர்தியென் றுரைத்தனன் கொடியோன். 8

சொற்ற வாசகங் கேட்டலும் ஆருயிர்த் தொன்மை
முற்று நாடிய நான்முகன் நின்மகன் முகமேல்
அற்ற மில்சுடர் ஆதபந் தீண்டிய ததனால்
பற்றி வெய்யவற் சிறைபுரிந் தானெனப் பகர்ந்தான். 9

மகவு தன்செயல் கேட்டலுஞ் சூரபன் மாவாந்
தகுவர் கோன்மிக மகிழ்ந்துநீர் என்மகற் சார்ந்து
மிகவும் நன்மொழி கூறியே ஆங்கவன் விடுப்பப்
பகல வற்கொடு போதிரால் ஈண்டெனப் பகர்ந்தான். 10

கேட்ட நான்முகன் நன்றென விடைகொண்டு கிளர்பொன்
நாட்டின் மேனகை முதலினோர் பாடலின் நலத்தால்
ஆட்டு பொன்மணித் தொட்டிலின் மிசையுறும் அண்ணல்
மாட்டு மேவிநின் றளவையில் ஆசிகள் வகுத்தான். 11

அன்பின் மைந்தனைப் புகழ்ந்துமுன் நிற்றலும் அனையான்
என்பெ றும்பரி சுமக்கென இன்னதோர் இரவி
துன்பு றுஞ்சிறை அகற்றுதி என்றலுந் தொல்லோய்
உன்பெ ரும்படை தருதியேல் விடுவனென் றுரைத்தான். 12

உரைத்த மைந்த, னுக கயன்றன தகன்படை யுதவ
செங்கதிர்ச் செல்வனை விடுத்தனன் நிருதன்
விரைத்த பங்கயக் கிழவனும் புதல்வனை வியந்து
பரித்தி யாலென உதவினன் மோகவெம் படையே. 13

படைய ளித்தலும் பகலொடு பங்கயத் தவற்கு
விடைய ளித்தனன் தாதையத் தன்மையை வினவி
நடைய ளித்தனன் புதல்வனுக் கன்னதோர் நன்னா
ளிடைய ளித்தனன் பானுகோ பன்எனும் இயற்பேர். 14

பானு கோபனென் றொருபெயர் பெற்றஅப் பாலன்
மானை நேர்விழி மங்கையர் மதனென மயங்க
ஆன பேருரு வெய்தியே அம்புயத் திருவின்
கோனொ டேபொரு தவன்றனைப் பெருந்திறல் கொண்டான். 15

பரிதி யின்பகை யாமிவற் பெற்றபின் பரிவால்
நிருதர் காவலன் அங்கிமா முகத்தனை நிறஞ்சேர்
இரணி யன்றனை வச்சிர வாகுவை எழிலார்
மருவு லாங்குழற் பதுமகோ மளைதர மகிழ்ந்தான். 16

மைத்த கூர்விழி ஏனைய தேவியர் மகிழ்வால்
உய்த்து நல்கிடச் சூரனும் வெய்யவன் ஒருங்கே
பத்து நூறுள மும்மைசேர் பாலரைப் பயந்தான்
இத்தி றத்தவர் தம்முடன் அங்கண்வீற் றிருந்தான். 17

வேறு

சீற்ற முற்றிடு சிங்க முகன்கணே
தோற்றி னன்அதி சூரன்என் றோர்மகன்
வீற்று நூற்றவர் மேவினர் அன்னவர்
ஆற்றல் யாவர் அறைந்திட வல்லரே. 18

அந்த நாளில் அவன்றன் இளவலாந்
தந்தி மாமுகத் தாரகன் தன்னிடை
முந்து செய்தவ மொய்ம்பினெர் மாமகன்
வந்து தோன்றினன் [1]வான்கதிர்ப் பிள்ளைபோல். 19

ஆமி வன்அசு ரேந்திரன் என்றவற்
கேம மான சுரவன் இசைப்பஅந்
நாமம் எய்தி நலம்பெறு காளையாய்க்
காமன் என்னக் கவின்றனன் யாக்கையே. 20

ஓத ருங்கலை யாவும் உணர்கினும்
ஏத மாவதோர் விஞ்சை இயற்றிடான்
பாத கம்புரி யான்பழி பூண்கிலான்
நீதி யன்றி எவையும் நினைகிலான். 21

வீறு கொண்டிகல் வீரம் புகன்றெதிர்
மாறு கொண்டவர் உண்டெனின் மற்றவர்
ஈறு கொண்டிட ஏற்றுர மேற்படை
ஊறு கொண்டிட உன்னுந் தகைமையான். 22

சிகரம் எண்ணில சேட்படு கள்ளிதான்
அகரும்[2] நல்கி அமர்ந்தென அன்னதோர்
மகனை நல்கி வளங்கெழு மாயமா
நகர வாழ்க்கையின் நண்ணினன் தாரகன். 23

ஆகத் திருவிருத்தம் - 1,073.



1 வான் கதிர்ப் பிள்ளை - பாலசூரியன். 2 அகர் - அகில்; பல அகில்களில் சதுரக்கள்ளி வைரமாகிய அகிலும் ஒன்று.

# 20. வில்வலன் வாதாவிப் படலம்

—oo—

அன்னவ ருடன்வந்தாள் அசமுகி எனுநாமம்
மன்னினள் ஒருவன்றன் மனையெனும் முறையில்லாள்
தன்னிறை தவிர்கின்றாள் தருமம திலள்வானோர்
பன்னியர் தமைமுன்னோர் படர்பயம் உறவுய்ப்பாள்.

ஆள்வினை புரியுள்ளத் தவமுனி வரர்ஆற்றும்
வேள்வினை யுறும்வண்ணம் வெந்தொழில் புரிகின்றாள்
நீள்வினை வடிவானாள் நிருதர்கள் குலமெல்லாம்
மாள்வினை யெனயாண்டும் வைகலும் உலவுற்றாள்.

கட்டழ குளதாகுங் காளையர் தமைநாடிக்
கிட்டினள் புணர்கிற்பாள் கேளிரை இகழ்வோரை
அட்டனள் நுகர்கின்றாள் அனையவள் ஒருவைகல்
முட்டினள் துருவாச முனியுறு தனியெல்லை.

அந்தநன் முனிதன்னை ஆயிழை அவள்காணாச்
சிந்துவன் இவனின்னே செய்தவம் அஃதன்றி
மைந்தர்கள் பெறுவேனால் வல்லையில் இவண்என்னாப்
புந்தியில் நினைவாயே போய்அவன் எதிருற்றாள்.

உறுதலும் முனிநாடி ஒண்டொடி தனியேநீ
குறுகிய தெவன்மாதோ கூறுதி யெனலோடும்
மறுவறு முனிநின்பால் மனமகிழ் வொடுமேவிச்
சிறுவர்கள் பெறவந்தேன் செப்புவ திதுவென்றாள்.

என்றலும் முனிசூரற் கிளையவள் எனநாடி
வென்றிகொள் மடமாதே மேலுறு தவமெல்லாங்
குன்றிடும் உனையின்னே கூடுவ னெனின்நீயும்
நின்றிடல் பழியல்லால் நீதியும் அலவென்றான்.

முனியிது பகர்வேலை மொய்குழல் மடமானாள்
இனியுனை மருவாதே ஏகலன் ஒருவிப்போம்
மனநினை வொழிகென்றே வன்மையி னெடுபுல்லி
அனையவன் இதழூறல் ஆரமு தயிலுற்றாள்.

-னு முகவெய்யாள் அனையனை வலிதாகக்
கூடினள் அதுபோழ்தில் குறுகினர் இருமைந்தர்
ஈடுறு வலிமிக்கார் இன்னவர் தமையன்னை
மாடுற வருகென்றே மகிழ்வொடு தழுவுற்றாள். 8

தழுவினள் பரிவோடுந் தன்புதல் வரைநோக்கி
மழகளி றனையீர்காள் வல்லவு ணரில்வந்தீர்
விழுமிய தவமாற்றி மேவுதிர் வலியென்ன
அழிதரு நிறைகொண்ட அசமுகி உரைசெய்தாள். 9

தாயின துருவாயுந் தந்தைதன் உருவாயும்
ஏயின இருமைந்தர் வில்வலன் வாதாவி
ஆயதொர் பெயர்பெற்றோர் அன்னைதன் உரைகொண்டே
தூயதொர் குரவோன்றன் துணையடி பணிகுற்றார். 10

மூண்டிடு வெகுளித்தீ முனிவரன் அடிதன்னைப்
பூண்டிடு திறன்மிக்க புதல்வரை யெதிர்நோக்கி
வேண்டிய தெவனென்ன வெய்யவள் தருமைந்தர்
ஈண்டுன தவமெல்லாம் யாம்பெற அருளென்றார் 11

ஆற்றிடு தவமெல்லாம் அருளெனின் அவைதாரேன்
வீற்றொரு பொருளுண்டேல் வினவுதிர் எனமேலோன்
சீற்றம துளராகிச் சிறுவர்கள் இவனாவி
மாற்றுதும் இவணென்று வல்லையின் எழலுற்றார். 12

இறுதிசெய் திடவுன்னி இகலுடன் எழுகின்ற
சிறுவர்கள் செயல்நாடிச் சினமொடு முனிநீவிர்
மறுவறு தவருக்கே வைகலும் இடர்செய்வீர்
குறுமுனி நுமதாவி கொள்ளுக இனியென்றான். 13

இனையது முனிசொற்றே எமையடு வர்களென்று
மனமுறு தனிவிஞ்சை மாயையின் மறைபோழ்தில்
தனயர்கள் இருவோருந் தந்தைதனைக்காணார்
அனைதனை விடைகொண்டே யாயிடை ஒருவுற்றார். 14

வேறொரு வனமெய்தி மெய்த்தவர் குழுவெல்லாங்
கோறலை மனமுன்னிக் குமரர்கள் இருவோரும்
தேறிய வுணர்வோடுந் திசைமுக வனைநோக்கி
ஈறகல் பகலாக எரியத னிடைநோற்றார். 15

செந்தழ லிடைநோன்பு செய்யவும் அயன்அங்கண்
வந்திலன் அதுநாடி மற்றொரு செயலுன்னி
வெந்திறல் இளையோனை வில்வல னெனும்வெய்யோன்
சுந்தர மணிவாளால் துணிபட எறிகுற்றான். 16

கையன துடல்கீறிக் கறையொடு தசையெல்லாம்
நெய்யுடன் அவியாக்கி நீடிய கனலூடே
வையகம் அருள்தாதை மந்திர முறையுய்த்து
வெய்யவன் ஒருவேள்வி விரைவொடு புரிகுற்றான். 17

தவமொடு மகமாற்றச் சதுர்முகன் அதுகண்டே
அவனியின் மிசைவந்தே அரியதொர் செயல்செய்வாய்
எவனருள் பரிசென்ன இணையடி தொழுதேத்தி
அவுணர்கள் வடிவாம்வில் வலன்இவை அறைகின்றான். 18

வன்னியில் அவியூணாய் மாண்டிடும் ஒருபின்னோன்
மெய்ந்நிறை வடிவோடும் விரைவுடன் வரல்வேண்டும்

என்னலும் வாதாவி எழுகென அயன்ஓத
அன்னதோர் பொழுதின்கண் ஆர்த்தவன் எழுந்திட்டான். 19

ஆங்கனம் அசுரேசன் அதிசய முளனாகித்
தீங்குடன் ஒருசூழ்ச்சி சிந்தையி னிடையுன்னிப்
பூங்கம லத்தோனைப் போற்றிசெய் தடியேனுக்
கீங்கொரு வரம்எந்தாய் ஈகென உரைசெய்வான். 20

புல்லயின் மறியேபோற் பொலிவுறும் வாதாவி
ஒல்லையின் இனிமேலும் உடல்துணி படுவானேல்
எல்லையில் பரிவால்யான் எம்பியை எழுகென்னத்
தொல்லையில் வடிவோடுந் தோன்றிமுன் வரல்வேண்டும். 21

இப்படி வரமொன்றே யான்பெற அருள்கென்றே
மெய்ப்படும் உணர்வில்லா வில்வலன் உரைசெய்ய
அப்படி பலகாலம் அதுமுடி கெனநல்கிச்
செப்பரு மறைவேதாச் சேணுடை நெறிசென்றான். 22

சேறலும் அதுகாலைச் சிறுவர்கள் இருவோரும்
ஏறென அமர்சூர்முன் ஏகியுன் மருகோர்யாம்
வேறல எனவோதி மேதினி முனிவோரைக்
கோறல்செய் பெருவன்மை கொண்டதும் உரைசெய்தார். 23

மன்னவன் அவர்தம்மை மகிழ்வொடு நனிபுல்லி
என்னுழை மருகீர்காள் இனிமையொ டுறுமென்ன
அன்னவர் சிலவைகல் ஆயிடை தனில்வைகிப்
பின்னுற இருவோரும் பெருநில மிசைவந்தார். 24

நவைதவிர் குடகின்கண் நால்வகை நெறிகூடுங்
கவலையின் வளமல்குங் கானக விடைதன்னில்
அவுணர்கள் தாம்அங்கோர் ஆச்சிர மஞ்செய்தே
எவரெவ ரும்வெஃகும் எப்பொருள் களுமுய்த்தார். 25

அன்னதொ ரிடைதன்னில் ஆரிட ராயுள்ளோர்
இன்னுயிர் கொளவுன்னி இருவருள் இளமைந்தன்
பொன்னிவர் திரிகோட்டுப் பொருதக ராய்நிற்க
முன்னவன் விரதஞ்செய் முனிவரின் இனிதுற்றான். 26

வில்வலன் எனவோதும் வெய்யவன் அவ்வெல்லைச்
செல்வதோர் முனிவோரைச் செவ்விதின் எதிர்கொண்டு
வல்விரை வொடுதாழ்ந்து மற்றும தடியேன்றன்
இல்வரு வீரென்று இயல்பொடு கொடுசென்றே. 27

இப்பகல் அடிகேளுக் கிவ்விடை உணவென்று
ஒப்பறு நெறிகூறி ஓதன வகையெல்லாம்
அப்பொழு தினிலட்டே அயமெனும் இளையோனைத்
துப்புறு கறியாகத் துண்டம துறுவித்தே. 28

உள்ளூறு குறியாகும் ஊன்முழு வதும்நாடி
வள்ளூறு சுடர்வாளால் வகைவகை படவீர்ந்தே
அள்ளூறு கறியாக அட்டபின் அவரவ்வூண்
கொள்ளூற நுகர்வித்தே கூவுவன் இளையோனை. 29

கூவிய பொழுதின்கட் கொறியெனும் உருவானோன்
ஆவிமெய் யுளனாகி அன்னவர் உதரத்தை
மாவலி யொடுகீண்டே வருதலும் இருவோருஞ்
சாவுறு முனிவோர்தந் தசையினை மிசைவாரால். 30

**வேறு**

வீடுறு முனிவர்ஊன் மிசைந்து தொன்மைபோல்
ஆடென முனியென அனையர் மேவியே
நாடொறும் இச்செயல் நடாத்தி யுற்றனர்
கேடுறு முனிவர்தங் கிளைகள் மாளவே. 31

ஆகத் திருவிருத்தம் - 1,104.

# 21. இந்திரன் கரந்துறை படலம்

—oo—

இப்படி அவுணர்கள் இனையர் ஏனையோர்
செப்பரு முனிவரைத் தேவர் தங்களை
ஒப்பறு நரர்தமை ஒறுப்ப மாயைதன்
வைப்புறு காதலன் அரசின் மன்னினான். 1

ஆயிரத் தெட்டெனும் அண்டம் யாவையுஞ்
சேயுயர் இந்திர ஞாலத் தேர்மிசை
ஏயெனும் அளவையில் ஏகி வைகலும்
நாயக முறையினை நடாத்தி நண்ணினான். 2

ஒருபகற் பாதலத் தூடு வைகிடும்
ஒருபகல் மாதிரம் உலவிச் சேர்தரும்
ஒருபகல் விண்பதந் தோறும் உற்றிடும்
ஒருபகல் அயன்பதத் துன்னி மன்னுமே. 3

தண்ணறுந் துளவினோன் தனது தொல்பதம்
நண்ணிடும் ஒருபகல் நாளு மிவ்வகை
எண்ணரும் உலகுதோ றேகி மாலையில்
துண்ணென மீள்வனால் சூர பன்மனே. 4

அவ்வகை யால்அர சாற்றும் எல்லையில்
எவ்வமில் சூர்முதல் இந்தி ரன்னெனுந்
தெவ்வினை வன்சிறை செய்து தேவியை
வவ்விய வுன்னினன் வருவ தோர்கிலான். 5

உன்னிய தீயவன் ஒருதன் தானையின்
மன்னனை விளித்துநீ வாசவன் றனை
இன்னதோர் பொழுதினில் எய்திப் பற்றியென்
முன்னுற விடுகென முன்னம் ஏவியே. 6

நீடிய தன்பெரு நிலயங் காப்பவர்
கோடுறு நிசிசரர் குலத்துள் தோன்றினர்
கேடகம் வாள்அயில் கெழுவு கையினர்
பாடவ மடந்தையர் பவங்கள் போன்றுளார். 7

ஒன்பது கோடியர் தம்மை ஒல்லையில்
அன்புடன் விளித்துநீர் அமரர் தம்மிறை
இன்புறு தேவியைப் பற்றி யீமென
வன்பொடு போக்கினன் மன்னர் மன்னனே. 8

போக்கலும் அவரெலாம் பொன்னின் நாட்டின்மேல்
ஊக்கம தாகியே உருத்துச் சேறலும்
நோக்கிய தூதுவர் நொய்திற் போகியே
மாக்கிளர் இந்திரன் மருங்கு நண்ணினர். 9

வந்தனர் அவுணரும் வயங்கொள் மாதரும்
அந்தமில் படையொடும் அடல்செய் நீரர்போல்
சிந்தனை யாவதோ தெரிந்தி லோமென
இந்திரன் வினவுற இசைத்து நிற்கவே. 10

பொம்மென அவர்தமைப் போக்கித் தீயினும்
வெம்மைகொள் நெஞ்சினர் வினைய முன்னியே
அம்மனை மனைவியோ டகன்று மாயையான்
இம்மென இப்புவி தன்னில் ஏகினன். 11

ஏகிய வெல்லையின் இகல்வெஞ் சூர்விடப்
போகிய மாதரும் பொருவில் வீரரும்
நாகர்தம் மிறையமர் நகரை நண்ணினர்
ஆகர முதலிய இடந்தொ றுய்குவார். 12

வினைவயிற் சென்றிடும் வீரர் யாவருந்
துனைமகத் திறைவனைத் துருவிக் கண்கிலர்
மனைவியைக் காண்கிலர் மாதர் யாவரும்
நினைவயர்த் துள்ளுறு கவலை நீடினர். 13

நாயகன் இவ்விடை நம்மைக் கூவியே
ஏயின செயலினை ஈறு செய்கிலம்
போயினன் சசியொடும் புலவர் கோனென
ஆயவன் நகரெலாம் ஆய்வுற் றுரரோ. 14

சுற்றினர் நகரெலாந் துருவித் தேவரைப்
பற்றினர் விலங்கலின் பகைவற் காட்டென

எற்றினர் புலோமசை யாண்டை யாளெனக்
குற்றினர் வாய்தொறுங் குருதி பாயவே. 15

விண்ணவர் யாவரும் வேந்துந் தேவியும்
நண்ணிய துணர்கிலம் நாங்கள் எங்களைத்
துண்ணென வருத்தலிர் துயர்கின் றேமெனுத்
தண்ணளி வருநெறி தளர்ந்து சாற்றவே. 16

விட்டனர் தேவரை விண்ணை நீங்கினர்
முட்டினர் மகேந்திர முதிய மாநகர்
கிட்டினர் வேந்தனைக் கிளர்ந்து வாலிடைப்
பட்டது புகன்றனர் பழிகொள் நெஞ்சினர். 17

போயினர் இருவரும் புறத்த ராயென
ஆயவர் மொழியவே அவுணர் மன்னவன்
தீயென வெகுண்டனன் தேடொ ணுததோர்
ம் அரவின் துன்புளான். 18

ஒற்றரிற் பலர்தமை யொல்லை கூவியே
பொற்றொடி அணங்கொடு பொன்னின் நாட்டவர்
கொற்றவன் இருந்துழிக் குறுகி நாடியே
சொற்றிடு வீரெனச் சூரன் தூண்டினன். 19

தோடவிழ் தெரியலான் தூண்ட ஒற்றர்கள்
ஓடினர் வீற்றுவீற் றுலக மெங்கணும்
தேடினர் காண்கிலர் திரிகுற் றார்இனி
நீடிய பொன்னகர் நிகழ்ச்சி கூறுகேன். 20

வேறு

செல்லெனும் ஊர்தி அண்ணல் தேவியுந் தானும் நீங்கச்
சொல்லருங் ககனம் பூத்த சோமனும் உடுவும் போன
எல்லியம் பொழுது போன்றே யாதுமோர் சிறப்பும் இன்றாய்ப்
புல்லென லாய தன்றே பொருவில்பொன் னகர மெல்லாம். 21

அழிந்தன வளங்க ளெல்லாம் ஆகுல மயங்கிற் றின்பம்
ஒழிந்தது வானோர் உள்ளம் ஒடுங்கிய துலக மெங்கும்
எழுந்தது புலம்ப லோதை யாவர்தங் கண்ணுந் தெண்ணீர்
பொழிந்தது சுவர்க்கம் ஆவி போனவர் போன்ற தன்றே. 22

இன்னனம் நிகழும் முன்னர் இந்திரன் இளவ லாகி
மன்னிய உபேந்தி ரன்றன் வானவர் உலகை நீங்கி
முன்னைவை குண்டம் புக்கான் முனிவரர் கலிக்கா வஞ்சிக்
கன்னிகை நோற்று மேவுங் காஞ்சியை யடைந்த வாபோல். 23

சேண்பதந் தன்னை நீங்குஞ் சிறியதோர் தந்தை தன்னைக்
காண்பது கருதிப் போந்து கடவுளர்க் கிறைவன் மைந்தன்
தூண்புரை கின்ற செம்பொற் றோளுடைச் சயந்தன் என்போன்
மாண்பொடு சிறிது வைகல் வைகுண்டத் திருந்தான் அன்றே. 24

இருந்திடு சயந்தன் என்போன் இந்திரன் இறைவி யோடுங்
கரந்துடன் போந்த வாறுங் காமரு துறக்கந் தன்னில்
விரைந்துவந் தவுணர் தேடி மீண்டிட விண்ணு ளோர்கள்
அரந்தையோ டுற்ற வாறும் அங்ஙனந் தேர்ந்தான் அம்மா. 25

தந்தைதன் மெலிவு காணில் தங்குடித் தலைமை யெல்லாம்
மைந்தர்கள் பரித்துக் கோடல் வழக்கதாம் அறனும் அஃதே
எந்தையு மில்லை யான்போய் என்னகர் காப்ப னென்னுப்
புந்தியி லுன்னி மைந்தன் பொன்னகர் தன்னில் வந்தான். 26

பொன்னகர் புக்க மைந்தன் புலம்புறு சுரரைக் கண்டு
தன்னுயிர் போலுந் தந்தை தாய்தனைக் காணு ளுகி
இன்னலங் கடலின் மூழ்கி ஏக்கமோ டிரக்க மிக்குப்
பின்னொரு செயலு மின்றிப் பித்தரே போல வுற்றான். 27

உற்றிடு மெல்லை தன்னில் உம்பர்கோன் மதலை யுள்ளந்
தெற்றெனத் தெளிப்ப வுன்னி நாரதன் என்னுஞ் சீர்சால்
நற்றவ முனிவன் செல்ல நடுக்கமோ டெழுந்து தாழ்ந்து
மற்றொரு தவிசு நல்கி இருத்தியே மருங்கு நின்றான். 28

நின்றிடு சயந்தன் சொல்வான் நித்தலும் வருத்தஞ் செய்யும்
வன்றிறற் சூரற் கஞ்சி மற்றெனைப் பயந்த மேலோர்
சென்றனர் சென்ற வெல்லை தெரிந்திலேன் எமக்குத் தீமை
என்றினி யகலுங் கொல்லோ எம்பிரான் இயம்பு கென்றான். 29

தருக்கினை இழந்து நின்ற சயந்தன்இத் தன்மை கூறப்
பொருக்கென முனிவன் ஓர்ந்து பொங்குபே ரருளால் நோக்கித்
திருக்கிளர் கின்ற தாங்கோர் செழுமணித் தவிசின் மீதில்
இருக்கென இருத்திப் பின்னர் இன்னன இசைக்க லுற்றான். 30

தீங்குவந் தடையு மாறும் நன்மைதான் சேரு மாறும்
தாங்கள்செய் வினையி னுலே தத்தமக் காய அல்லால்
ஆங்கவை பிறரால் வாரா அமுதநஞ் சிரண்டி னுக்கும்
ஓங்கிய சுவையின் பேதம் உதவினர் சிலரும் உண்டோ. 31

இன்பம தடைந்த காலை இனிதென மகிழ்ச்சி எய்தார்
துன்பம துற்ற போதுந் துண்ணெனத் துளங்கிச் சோரார்
இன்பமுந் துன்பந் தானும் இவ்வுடற் கியைந்த வென்றே
முன்புறு தொடர்பை ஓர்வார் முழுவதும் உணர்ந்த நீரார். 32

வறியவர் செல்வ ராவர் செல்வர்பின் வறிய ராவர்
சிறியவர் உயர்ந்தோ ராவர் உயர்ந்துளோர் சிறிய ராவர்
முறைமுறை நிகழும் ஈது முன்னையூழ் வினையே கண்டாய்
எறிக்திர் வழங்கும் ஞாலத் தியற்கையும் இனைய தன்றோ. 33

ஆக்கமும் வறுமை தானும் அல்லலும் மகிழ்வு மெல்லாம்
நீக்கமில் உயிர்கட் கென்றும் நிலையெனக் கொள்ளற் பாற்றோ

மேக்குயர் கடவுட் டிங்கள் வெண்ணிலாக் கதிரின் கற்றை
போக்கொடு வரவு நாளும் முறைமுறை பொருந்திற் றன்றே. 34

ஆதலின் உமது தாழ்வும் அவுணர் தம்உயர்வும் நில்லா
ஈதுமெய் யென்று கோடி இந்நகர் தணந்து போன
தாதையும் பயந்த தாயும் தம்முருக் கரந்து போந்து
மேதினி வரைப்பி னூடு மேவினர் போலு மன்றே. 35

மைந்தநீ தோற்று முன்னம் வானவர்க் கலக்கண் செய்த
தந்தியின் முகங்கொண் டுற்ற தானவன் துஞ்சும் வண்ணம்
அந்தநாள் உனது தந்தை முயன்றனன் அதனைப் போல
சூரன் மாயம் இன்னமும் முயல்வன் கண்டாய். 36

என்றிவை பலவுங் கூறி இன்னினி வெஞ்சூர் தானும்
பொன்றிடும் உமது துன்பும் பொள்ளென அகன்று போகும்
நன்றிது துணிதி யென்றே நாரத முனிவன் தேற்றிச்
சென்றனன் சயந்தன் அங்கண் இருந்தனன் தெட்ப மெய்தி. 37

வருந்திய அமரர் தம்மை மனப்படத் தேற்றி நாளுந்
திருந்தலன் பணித்த ஏவல் செய்திடத் தூண்டி வான்மேல்
இருந்தனன் சயந்த னென்போன் இருநிலத் திடைமுன் போன
புரந்தரன் செய்த தன்மை யானினிப் புகலு கின்றேன். 38

மெய்த்தரு நீழல் வைகும் வெறுக்கையை வெறுத்துப் பாரில்
சித்திர மனைவி யோடுந் தெக்கிண தேயம் புக்குப்
பத்துடன் இரண்டு நாமம் படைத்ததொல் காழி நண்ணி
இத்தல மினிதே யென்று இருந்தனன் இமையோர் கோமான். 39

அந்தநல் லிருக்கை தன்னில் அயர்வுயிர்த் திறைவி யோடும்
இந்திரன் இருந்த பின்னர் என்றுநாம் இறைவற் போற்றிப்
புந்திகொள் மகிழ்வாற் பூசை புரிதுமென் றுன்னி யாண்டோர்
நந்தன வனத்தை வைப்பான் நாடியே இனைய செய்வான். 40

சந்தகில் பலவு தேமாச் சரளமே திலகந் தேக்குக்
கொந்தவிழ் அசோகு புன்கு குரவொடு நாளி கேரம்
நந்திய கதலி கன்னல் நாகிளம் பூகம் வன்னி
முந்துயர் காஞ்சி வேங்கை முதலிய வேலி கோலி. 41

சாதியே கோங்கு நாகஞ் சண்பகம் இதழி ஞாழல்
பாதிரி வழையே குந்தம் பாரிசா தஞ்செ ருந்தி
போதுறு நரந்தம் வில்வம் பொலிகர வீரஞ் செச்சை
கோத்தறு மயிலை மௌவல் கொழுந்துசெவ் வந்தி முல்லை. 42

இவைமுத லாகி யுள்ள தருக்களும் புதலு மெல்லாம்
நவையறந் தெரிந்து வைத்தோர் நந்தன வனத்தைச் செய்ய
அவைமிக மலர்ந்த அம்மா அம்மலர் கொண்டு நாளுஞ்
சிவனடி அருச்சித் தங்கட் டேவியோ டிறைவன் உற்றான். 43

உற்றிடு மெல்லை தன்னில் உலகினில் அவுணர்க் கெல்லாங்
கொற்றவன் விடுத்த ஒற்றர் குவலயந் துருவிச் செல்ல
அற்றது தெரிந்து வல்லே அமரர்கோன் துணைவி யோடு
மற்றவண் வேணு வாகி மறைந்துநோற் றிருந்தான் மாதோ. 44

வேணுவின் உருப்போல் நின்று மெலிவொடு நோற்று நாளுந்
தாணுவை வழிபாட் டங்கட் சதமகன் சாரும் நாளிற்
காணிலர் ஒற்றர் போனார் கருமுகில் அவுணர் தங்கள்
ஆணையிற் பெய்யா தாக அவ்வனம் வாடிற் றன்றே. 45

நீடிய காமர் பூங்கா நெருப்புறு தன்மைத் தென்ன
வாடின நீரின் றாகி மற்றது மகத்தின் கோமான்
நாடினன் கவன்று தொன்னாள் நான்முகத் தவனும் மாலுந்
தேடரும் பரனை யுன்னி இரங்கினன் செயல்வே றில்லான். 46

திருந்தலர் புரமூன் றட்ட சேவகற் பரவ லோடும்
பொருந்தலர் பூங்கா வாடிப் போயின எனினும் பொன்றா
இருந்தலம் இதனில் யாரொன் றெய்துமால் மகவான் இன்னே
வருந்தலை என்றோர் மாற்றம் வானிடை எழுந்த தன்றே. 47

எழுவதோர் செஞ்சொற் கேளா எம்பிரான் அருளீ தென்னாத்
தொழுதனன் போற்றி மேனி துண்ணெனப் பொடிப்பச் சிந்தை
முழுவதும் மகிழ்ச்சி பொங்க மொய்ம்பொடே இருந்தான் அங்கண்
அழகிய நதியொன் றுற்ற வரன்முறை அறைய லுற்றேன். 48

ஆகத் திருவிருத்தம் - 1,152.



# 22. விந்தகிரிப் படலம்

அந்தப் பொழுதத் தளிகொண் டுடையோர்
சிந்தைக் கெளிதாஞ் சிவன்மெய் யருளான்
முந்துற் றுணர்நா ரதமா முனிவன்
விந்தக் கிரிமுன் னுறமே வினனால்.

மேவிப் பலஆ சிவிளம் புதலுந்
தேவப் படிவங் கொள்சிலம் புதொழா
ஆவற் புதம்வந் ததெம்மண் ணலெனா
ஏவப் படுபான் மையிசைத் திடுவான்.

மேருத் தனிவெற் புவிதிக் கரியோன்
ஊரிச் சிலையா கியமொய்ம் பதனால்
தாரித் துலகின் றவள்தன் மரபாற்
பேரற் பொடுவந் துபிறக் கையினால்.

குன்றுக் கிறையாய் உறுகொள் கையினுல்
என்றைத் தொடவிண் ணிலெழுந் துறலால்
இன்றிப் புவியா வையும்பித் தன்அடும்
அன்றைப் பகல்கா றும்அளித் திடலால். 4

ஓரா யிரமாம் முடியுள் ளதனுல்
காரார் களன்மே யகவின் கயிலை
சாரா வொருசார் வுறுதன் மையினுல்
சூரான் அவனுல் தொலைவில் லதனுல். 5

தாழுங் கதிருந் தருமேல் நெறியில்
வாழுஞ் சசியும் மலிதா ரகையும்
ஏழென் றிடுகோ ளுமியா வர்களுஞ்
சூழும் படிநின் றிடுதொன் மையினுல். 6

கொன்னே இமையோர் குடிகொண் டதனுல்
பொன்னேர் கொடுயர்ந் துபொருந் துதலால்
பன்னே மிகள்சூழ் வருபான் மையினுல்
தன்னேர் இலையென் றுதருக் கியதே. 7

பரந்தும் பர்நிமிர்ந் திடுபைம் பொன்வரை
பெருந்தன் மைமதித் திடுபெற் றியைநீ
தெரிந்தில் லைகொல்அன் னசெயற் கையெலாம்
விரைந்துன் னொடுசெப் பியமே வினனே. 8

என்றுன் முனிவோன் இதுகேட் டிடலும்
ஒன்று கியதே வுருவாய் எதிரும்
வன்றாழ் கிரிமா மறமுற் றுயிரா
நன்றால் இஃதென் றுநகைத் தறையும். 9

இல்லா யுளதொல் விறுமாப் பகலப்
பல்லார் இகழப் பகரும் விதியான்
அல்லா ரெனவே நனிநா ணமுறா
வில்லா கிவணெந் ததுமேன் மையதோ. 10

பொன்னுர் இமவான் புரிநோன் பதனுல்
அன்னுன் இடைவந் தமர்வுற் றனளால்
மன்னு குமவன் மகளா யினளோ
எந்நா ளுமியா ரையுமீன் றருள்வாள். 11

பாங்குற் றிடுபா ரினையாற் றுவனென்
றோங்குற் றனன்எவ் வுலகும் பரியா
ஆங்குற் றனவோ பலஅன் னவையுந்
தாங்குற் றதுகண் ணுதல்சத் தியதே. 12

விற்சூழ் கதிரோன் முதல்விண் ணவர்கள்
தற்சூழ்ந் தனர்அல் லதுசந் ததமும்

எற்சூழ்ந் திலரோ எழுதீ வுளவாங்
கற்சூழ்ந் திலரோ கடல்சூழ்ந் திலரோ. 13

பன்னிற் குவடும் பலவுண் டெனவே
உன்னுற் றிடுமோ உயர்கள் ளிகளின்
சென்னித் தொகையைத் தெரிசிக் கின்அயன்
தன்னைத் திலனோ தலைநான் குளவே. 14

கடிதா கியசூர் இதுகல் லெனவே
அடரா மல்விடுத் தனன்அன் றுதனை
நெடிதே யதுவுன் னிலன்நீள் பரிதிப்
படையா னினும்ஆற் றல்படைத் துளனோ. 15

தண்ணுற் றிடுபொன் மைதயங் குருவம்
நண்ணுற் றனமென் றுளநா டினனோ
எண்ணுற் றவன்நல் லுணர்வெய் திலனோ
மண்ணிற் புனைபா வைவனப் பதுவே. 16

தன்கண் ணுறுவா னவர்தாம் பலரும்
என்கண் ணமரா மல்இகழ்ந் தனரோ
நன்கண் ணுதல்நா யகனார் கயிலை
யின்கண் அருகுற் றிலதெக் கிரியே. 17

திருவைத் தவர்கண் டுயில்செங் கண்அரா
மருவித் தனைமுந் துமறைத் திடுநாள்
விரைவிற் படரு தைவெகுண் டுபறித்
தொருமுத் தலைகொண் டதுணர்ந் திலனோ. 18

கிளர்ப்புற் றிடுசிம் புளோர்கே சரிமுன்
அளப்பற் றிடுதன் னுருவண் டமெலாம்
வளர்ப்புற் றிடுஞான் றோர்மணிப் பரல்போல்
குளப்புற் றனன்ஈ துகுறித் திலனோ. 19

வரபத் திரைகேள் வன்மறம் புரியுஞ்
சரபத் துருவுற் றுழிதாழ் சிறையின்
விரவிப் படரு தையின்மின் மினிபோல்
திரிகுற் றனன்அன் னதுதேற் றிலனோ. 20

அறியுற் றிடுபா ரதமா னவெலாங்
குறியுற் றிடுதோல் முகர்குஞ் சரன்மேல்
எறியுற் றமருப் பினிலே டெனலாய்ப்
பொறியுற் றிடுமென் பதுபொய்த் திடுமோ. 21

தானோர் வரையல் லதுதா ரணியுண்
கோனோ அலன்அல் லதுகோ கனத
வானோன் அலன்வா சவன்அல் லன்அவன்
ஏனோ தனைமே லெனவெண் ணியதே. 22

என்று வடவெற் பையிழித் துரையா
அந்நா கம்வியக் கும்அகத் தையினை
நன்று ரதநீக் குவன்நா டுகெனு
முன்று வுருநீத் ததுமொய் வரையே. 23

வேறு

எண்டரு முகுந்தர் கோடி எல்லையின் மாயை யாக்கை
கொண்டனர் திரண்டு நீண்டு குலாய்நிமிர் கொள்கைத் தென்ன
விண்டொடர் விந்த மாங்கோர் விஞ்சையால் அகன்று சேண்போய்ப்
புண்டரி கத்தன் மேய புரத்துணை நிமிர்ந்த தன்றே. 24

உருக்கிளர் விந்த மென்னும் உருகெழு பிறங்கல் மேல்போய்ப்
பரக்கம தாகி அம்பொற் பனிவரை காறும் ஆன்று
நெருக்கிய தனைய பான்மை நிலமுழு தளந்த மேலோன்
திருக்கிளர் பொன்னந் தூசு புனைந்தெனத் திகழ்ந்த தம்மா. 25

விந்தமிந் நெறியால் ஆன்று மேக்குறக் கிளர்ந்து போகி
அந்தர நெறியை மாற்ற அலரிவெண் டிங்கள் சேயோன்
புந்திபொன் புகரே காரி புயங்கநாள் பிறரும் நோக்கிச்
சிந்தையில் துணுக்க மெய்தி இனையன செப்ப லுற்றார். 26

தானவர் செயலோ என்பார் தருமமில் அரக்க வெய்யோ
ரானவர் செயலோ என்பார் அல்லவேல் அயன்மா லென்னும்
வானவர் செயலோ என்பார் மாயமீ தாகும் என்பார்
மேனிமிர் பிறங்க லின்றி வெள்ளிடை இலைகொல் என்பார். 27

என்னிது வென்று போதத் தெம்பிரான் அருளால் நாட
அன்னது தெரித லோடும் ஆமிது விந்த மேருத்
தன்னுடன் இகலொன் றுண்டாய்த் தராதல வரைப்பில் வானில்
சென்னெறி விலக்கிற் றென்று சிந்தனை செய்து தேர்வார். 28

செம்பொன்மால் வரையின் பாங்கிற் சிவனடி யுன்னி நோற்றே
அம்புரா சியைமுன் னுண்டோன் அமர்ந்தனன் அவனீண் டுற்றால்
உம்பர்போய் நின்ற விந்தம் ஒடுங்கும்என் றியாரும் ஓர்ந்து
கும்பமா முனியை யுன்னி இனையன கூற லுற்றார். 29

ஆகத் திருவிருத்தம்–1,181.



# 23. அகத்தியப் படலம்

—oo—

பொன்னார் கழல்கள் அருச்சித்திடப் போது கொய்யுங்
கைந்நாக மாலை நினைந்தே கராவொன்று கௌவ
என்னு யகனே எனத்தன் கையெடுத் தழைப்ப
அன்னுன்அங் கெய்தி விடுவித்த தறிகி லாயோ.

பூவார் கமலத் தயன்நல்கிய பூவை தன்மேல்
தூவா மயலாய்க் கிளியாகித் தொடர்ந்து செல்லக்
காவாய் பரனே எனவோடுங் கலங்கல் என்றே
தேவாதி தேவன் அருள்செய்தது தேர்கி லாயோ. 2

சத்தார் பிருகு தனதில்லைத் தடிந்த வெல்லை
இத்தா ரணியில் அளவில்பிறப் பெய்து கென்ன
அத்தா அருளென் றரிநோற்றுழி ஐயன் வந்து
பத்தாக என்று நிறுவுற்றது பார்த்தி டாயோ. 3

தேவர்க் கெனினும் நிலத்தின்கட் செறிந்து வாழ்வோர்
ஏவர்க் கெனினும் ஒருதுன்புறின் எய்தி நீக்கல்
காவற் குரியார் கடனும்அக் கடமை தூக்கின்
மேவற் கரிதாந் தனிமுத்தியின் மேல தன்றோ. 4

தெள்ளத் தெளிந்த மறைக்கள்வனைச் செற்ற மீன்போல்
அள்ளற் கடலை ஒருநீ அகன்கை யடக்கிக்
கள்ளத் தவுணன் நிலைகாட்டிடநங் கண்ணில் வைத்த
கொள்ளைக் கருணை உலகெங்கணுங் கொண்ட தெந்தாய். 5

விந்தக் கிரிநார தன் சூழ்ச்சியின் மேரு வெற்போ
டிந்தப் பொழுதத் திகல்கொண் டுலகெங்கும் ஈரும்
அந்தத் துயருங் கயிலைக்கிணை யாவ வென்றே
சிந்தித் ததுகொல் எழுந்திட்டது சேண தெல்லாம். 6

மண்ணுற்ற வெல்லை அளவிட்டிடு மால்கொ லென்றே
எண்ணுற் றெவரும் வெருக்கொண்டிட ஈண்டை விந்தம்
விண்ணுற்ற அண்டத் துணையாய்மிசைப் போவ தையா
கண்ணுற்ற நோக்கம் விடுத்தேயிது காண்கி லாயோ. 7

மல்லற் கிரிவிண் ணெறிமாற்றலின் மற்றெ மக்குஞ்
செல்லற் கரிதாயது பாருடைத் தேய முற்றும்
எல்லைப் பொழுது மயக்குற்ற இவற்றை நீக்க
ஒல்லைக் குறியோய் வரல்வேண்டுமென் றுன்ன லுற்றார். 8

வேறு

உன்ன லோடும் உலகம் நனந்தலைப்
பொன்னின் மேருப் புடையோர் பொதும்பரின்
மன்னி நோற்றுறை வண்டமிழ் மாமுனி
தன்னு ளத்தில்அத் தன்மைகண் டானரோ. 9

மேக்கு யர்ந்திடும் விந்தத்தின் ஆற்றலை
நீக்கி வான நெறியினைத் தொன்மைபோல்
ஆக்கி அண்டர் குறையும் அகற்றுவான்
ஊக்கி னுன்முன் உததியை உண்டுளான். 10

துள்ளி கண்ணிடைத் தூங்குறக் கைதொழ
உள்ளம் என்பொ டுருகவு ரோமமார்

புள்ளி பொங்கப் புகழ்ந்து புரிசடை
வள்ளல் தன்னை மனத்திடை முன்னினான். 11

முன்னும் எல்லையில் மூரிவெள் ளேறெனும்
மின்னு தண்சுடர் வெள்ளிவெற் பின்மிசைப்
பொன்னின் மால்வரை போந்தெனப் புங்கவன்
துன்னு பாரிடர் சூழ்தரத் தோன்றினான். 12

ஆதி யுற்றுழி அச்சமொ டேயெழீஇ
மூது ரைத்தமிழ் முற்றுணர் மாமுனி
**கோதை யுற்றிடக் கொம்பொடு வாங்கிய**
**பாத வத்திற்** பணிந்தனன் பன்முறை. 13

சென்னி பாரில் திளைத்திடத் தாழ்ந்துபின்
முன்னர் நின்று முறைப்படப் போற்றலும்
மின்னு லாஞ்சடை விண்ணவன் வெஃகிய
தென்னை மற்ற தியம்புதி யாலென்றான். 14

விந்த மால்வரை மேருவை மாறுகொண்
டந்த ரத்தை யடைத்த ததன்வலி
சிந்த என்கட் சிறிதருள் செய்கெனாச்
சந்த நூற்றமிழ்த் தாபதன் கூறினான். 15

அக்க ணத்துனக் காற்றல் வழங்கினாம்
மிக்க விந்தத்தை வேரொடும் வீட்டிஅத்
தெக்கி ணஞ்சென்று சீர்ப்பொதி யத்திடைப்
புக்கு வைகெனப் புங்கவன் செப்பினான். 16

என்ற லுந்தொழு தேத்திநின் பூசனை
நன்று செய்ய நளிதடங் கூவலும்
நின்றி டாப்புனல் நீடவுந் தென்றிசைக்
கொன்றோர் தீர்த்தம் உதவுகென் றோதினான். 17

அனைய காலை அருங்கயி லாயமேல்
இனிது வைகிய ஏழ்நதி தன்னுளும்
**புனித மாகிய பூம்புனற் பொன்னியைப்**
பனிம திச்சடைப் பண்ணவன் முன்னினான். 18

அந்த வேலை அஃதுணர்ந் தேவெரீஇச்
சிந்தை பின்னுறச் சென்று திருமுனம்
வந்து காவிரி வந்தனை செய்தலும்
எந்தை நோக்கி இதனை இயம்புவான். 19

தீது நீங்கிய தென்றிசைக் கேகிய
கோதி லாத குறுமுனி தன்னொடும்
போதல் வேண்டும் பொருபுனற் காவிரி
மாது நீயென மற்றவள் கூறுவாள். 20

திண்மை ஐம்பொறி செற்றுளன் ஆயினும்
அண்ண லேயிவன் ஆண்டகை யாருமால்
பெண்ணி யானிவன் பின்செலல் நீதியோ
எண்ணின் ஈதும் இயற்கையன் றென்னவே. 21

திரிபில் சிந்தையன் தீதுநன் கிற்படா
ஒருமை கொண்ட உளத்தன்நம் மன்பருள்
பெரியன் ஈங்கிவன் பின்னுறச் செல்கெனு
அருள்பு ரிந்தனன் ஆல மிடற்றினுன். 22

ஆங்க தற்கிசைந் தந்நதி யின்றியான்
நீங்கி லாத முனியொடு பின்செல்வன்
ஓங்கல் மேய வொருவ இவன்றனை
நீங்கு காலத்தை நீயருள் கென்னவே. 23

நன்று நன்றிது நங்கைநின் காரணத்
தென்று நோக்கி இவன்கரங் காட்டுவன்
அன்று நீங்கி அவனியின் பாலதாய்ச்
சென்று வைகெனச் செப்பினன் எந்தையே. 24

செப்பு மாற்றஞ் செவிக்கமு தாதலும்
அப்பெ ரும்புன லாறவன் பின்செல
ஒப்ப லோடும் உயிர்க்குயி ராகியோன்
தப்பின் மாமுனிக் கின்னது சாற்றினுன். 25

நீடு காவிரி நீத்தத்தை நீயினிக்
கோடி உன்பெருங் குண்டிகைப் பாலென
நாடி யத்திறஞ் செய்தலும் நன்முனி
மாடு சேர்ந்தனள் மாநதி யென்பவே. 26

ஆய காலை அகத்திய தென்றிசைத்
தேய மேகெனச் சீர்விடை நல்குறுப்
பாயு மால்விடைப் பாகன் மறைந்தனன்
போயி னுன்செறி பூதரி னத்தொடும். 27

### வேறு

அத்தனங் கொருவ அன்னுன் அருளடைந் தங்கண் நீங்கி
மெய்த்தகு மதலை வேண்டி விதர்ப்பர்கோன் பயந்த **லோபா
முத்திரை தனை**முன் வேட்டு[1]மு துக்குறைத் திண்மை சான்ற
**சித்தனை யளித்த வள்ளல்** தென்றிசை நோக்கிச் சென்றுன். 28

ஆகத் திருவிருத்தம் - 1,209.

---

1. முதுக்குறைத் திண்மை சான்ற சித்தன் - புலத்திய முனிவன். முதுக்குறை - பேரறிவு.

# 24. கிரவுஞ்சப் படலம்

—oo—

பொன்றிகழ் வரையின் நின்றுங் குறுமுனி புவியே ஆறுத்
தென்றிசைக் கேகு மெல்லைத் திறலரிக் கிளவல் வாழ்க்கை
வன்றிறல் மாய மூதூர் வந்தெய்த ஆண்டை வைகும்
அன்றிலம் பேர்பெற் றுள்ள அவுணன்அத் தன்மை கண்டான். 1

வானுயர் உலகந் தன்னை வசுந்தரை யாக்கும் பாரை
ஏனைய ககன மாக்கும் எறிதிரைப் பரவை தன்னை
மேனிமிர் பிறங்க லாக்கும் வெற்பினைப் புணரி யாக்கும்
பானுவை மதிய மாக்கும் மதியினைப் பகலாச் செய்யும். 2

அணுவினை மேரு வாக்கும் அன்னதோர் மேரு வெற்பை
நுணுகிய அணுவே யாக்கும் நொய்தெனப் புவனி தன்னைப்
புணரிய தாக்கும் நேமிப் புணரியைப் புவன மாக்கும்
இணருறு நேமித் தீயை எல்லைநீ ராகச் செய்யும். 3

கன்னவின் அயுதத் தொன்றிற் கடவுளர்க் கேனும் நீத்தோர்
என்னவர் தங்கட் கேனும் எனைப்பல மாயஞ் சூழ்ந்து
பன்னெடுங் காலஞ் செல்லப் படுத்திடும் என்னின் அம்மா
அன்னவன் வன்மை யாவும் ஆரறிந் துறைக்கற் பாலார். 4

அத்தகு தகுவர் கோமன் அடற்கிர வுஞ்சன் என்போன்
மெய்த்தமிழ் முனிவன் செல்லும் வியனெறி விந்த மேபோல்
கொத்துயர் குவடு மல்கிக் குன்றுருக் கொண்டு தன்பால்
உய்த்திடு மாறு போக்கி உறுதலுங் குறியோன் கண்டான். 5

காண்டலும் வியந்து நன்றிக் கடிவரை நடுவ ணுக
ஈண்டிதோ ரத்தம் உண்டால் இவ்வழி நடத்தும் என்னு
ஆண்டத னிடையே போக அந்நெறி குரோச வெல்லை
மாண்டலும் இலதே யாக மற்றொரு சுரமுற் றன்றே. 6

அந்நெறி கண்டு தொன்னூல் அறைமுனி ஏக லோடுஞ்
சென்னெறி மேலின் றுகத் திரும்பினன் செல்லுங் காலை
முன்னுள நெறியுங் காணுன் முனிவரன் மயங்க ஓர்சார்
பின்னொரு வட்டை கண்டு பேதுற லோடும் போனுன். 7

ஆறது செல்லுமெல்லை அடலெரி கனைந்து சூழச்
சூறைகள் மயங்க மங்குல் துண்ணென மாரி தூவ
மாறகல் உருமுச் சிந்த வல்லிருட் படலை சுற்ற
வீறகல் மாயை சூழ்ந்தான் எறுழ்வலி அவுணர் கோமான். 8

மட்டுறு குறிய செம்மல் மற்றது நோக்கித் தீயோர்
பட்டிமை யொழுக்கீ தென்னுப் பயின்றிடு போத நீரால்
உட்டெளி பான்மை நாட ஊழ்த்திறந் தெரித லோடுங்
கட்டழல் என்னச் சீறிக் கரதலம் புடைத்து நக்கான். 9

நன்றுநன் றவுணன் கொல்லாம் நமக்கிது புரியு நீரான்
இன்றிவன் வன்மை நீப்பன் யாதெனை அவுண வெய்யோன்
குன்றுரு வதனிற் குற்றிக் குறுமுனி பாணித் தண்டால்
துன்றிரும் பூழை யாக்கிச் சூளிவை புகல லுற்றான். 10

மாண்மதி பெறுத வெய்யோய் மற்றுநின் தொன்மை நீங்கி
நீண்மலை யாகி ஈண்டே நின்றுதீ யவுணர்க் கெல்லாம்
ஏண்மிகும் இருக்கை யாகி இருந்தவத் தோர்க்கும் ஏனைச்
சேண்மலி கடவு ளோர்க்குந் தீத்தொழில் இழைத்தி பன்னாள். 11

மாற்படு நமது பாணி வலிகெழு தண்டால் உன்றன்
பாற்படு புழைகள் யாவும் பற்பல மாயைக் கெல்லாம்
ஏற்புடை இருக்கை யாக எம்பிரான் உதவுஞ் செவ்வேள்
வேற்படை தன்னிற் பின்னாள் விளிகுதி விரைவின் என்றான். 12

பழிதரும் இனைய சாபம் பகர்ந்துதன் சிரகந் தன்னில்
உழிதரு புனலை வாங்கி உளங்கொள்மந் திரத்தால் வீசி
அழிதர மாயை நீக்கி ஆண்டொரீஇ மீண்டு தென்பால்
வழியது செவ்வன் நாடி வண்டமிழ் முனிவன் போனான். 13

- 1,222.

# 25. விந்தம் பிலம்புகு படலம்

அன்னதோ ரவுணர் கோமான் அன்றுதொட் டசல மாகித்
துன்னெறி அவுணர் யாருந் துவன்றிய அரண மாகி
நென்னலின் முதனாள் காறு நின்றனன் அனையான் தன்னை
என்னையா ளுடைய நீயன் றியாவரே அடுதற் பாலார். 1

பைந்தமிழ் முனிவன் வான்றோய் பனிவரை யதனை நீங்கிக்
கந்தரஞ் செறிபொற் கோட்டுக் கடவுளர் வரைச்சா ரெய்தி
அந்தம தடைந்தோர்க் கங்கண் அருளினால் தனது மூல
மந்திரம் உணர்த்தும் முக்கண் வானவன் காசி புக்கான். 2

கங்கைசென் றொழுகுங் காசிக் கறைமிடற் றகில நாதன்
பங்கய அடிகள் தாழ்ந்து பரவல்செய் தாண்டு நீங்கித்
துங்கதை கொண்ட விந்தத் தொல்வரைக் கொருசா ரேகி
அங்கதன் நிலைமை நோக்கி அறிவன்ஒன் றியம்ப லுற்றான். 3

சேயுயர் நிவப்பிற் றாகிச் சேண்புகும் விந்த மென்னும்
மாயிருங் குவடு கேண்மோ மற்றியாம் பொதிய வெற்பில்
போயிருந் திடவே உன்னிப் போந்தனம் அதனுக் கின்னே
நீயொரு சிறிது செல்லும் நெறியளித் திடுதி யென்றான். 4

எறிகதிர் மதியி னுக்கும் ஏகருந் திறத்தால் வான
நெறியினை யடைத்துத் தொல்லை நெடியமால் போன்று நின்றேன்
குறியநிற் கஞ்சி யாறு கொடுப்பனோ எனது தோற்றம்
அறிகிலை மீண்டு போகென் றவ்வரை மொழிந்த தன்றே. 5

கேட்டலும் அதனைச் சீற்றங் கிளர்ந்திட நகைத்து நாதன்
தாட்டுணை யுன்னித் தொன்னாட் சதமகன் வேண்ட ஆழி
மாட்டுறச் செறித்த கையை மலரயன் பதத்தின் காறும்
நீட்டினன் தவமே யன்றி நெடும்பொருள் பிறவு முண்டோ. 6

அற்புதம் அமரர் கொள்ள ஆற்றவுங் குறியோன் விந்த
வெற்பின தும்பர் தன்னில் மீயுயர் குடங்கை சேர்த்தி
வற்புற வூன்ற வல்லே மற்றது புவிக்கட் டாழ்ந்து
சொற்பிலம் புகுந்து சேடன் தொன்னிலை அடைந்த தன்றே. 7

அள்ளலை யடைகின் றோரில் அரம்புகும் அடுக்க லஞ்சி
வள்ளலை யருளிக் கேண்மோ மற்றுனை வழிப டாமல்
எள்ளலை யிழைத்து மேன்மை இழந்தனன் தமியன் குற்றம்
உள்ளலை எழுவ தென்ஞான் றுரையெனக் கூறிற் றன்றே. 8

அன்னதோர் பொழுது தன்னில் அலைகடல் செறித்த அங்கை
முன்னவன் விந்த வெற்பின் மொழியினை வினவி யான்போய்
இந்நெறி யிடையே மீளின் எழுதியால் நீயு மென்னா
நன்னகை யோடு சொற்றான் நாரதன் சூழ்ச்சிக் கொப்ப. 9

வன்புலப் புவிக்குள் விந்தம் மறைதலும் அறிவின் நீராற்
புன்புலப் பகையை வென்றோன் கரத்தைமுன் போலச் செய்து
துன்புலப் புற்ற சிந்தைச் சுரர்கள்பூ மாரி தூர்ப்பத்
தென்புலப் பொதிய வெற்பிற் செல்வது சிந்தை செய்தான். 10

ஆயிடை விந்தம் பார்புக் கழுந்திட அகல்வா னத்துத
தேயம்வெள் ளிடைய தாகத் தினகரன் முதலாந் தேவர்
பாய்சுடர் விளக்கம் யாண்டும் பரந்தன சிறையை நீங்கி
ஏயென அளக்கர் நீத்தம் எங்கணுஞ் செறியு மாபோல். 11

அதுபொழு தலரி யாதி அமரர்கள் அகத்தி யன்பாற்
கதுமென அடைந்து போற்றிக் கைதொழு தெந்தை செய்த
உதவியார் புரிவர் நின்னால் உம்பரா றெழுகப் பெற்றோம்
பொதியமேல் இனிநீ நண்ணி இருத்தியெம் பொருட்டா லென்றார். 12

என்றலும் விழுமி தென்னா இசைவுகொண் டமரர் தம்மைச்
சென்றிட வானிற் றாண்டித் தெக்கிணந் தொடர்ந்து செல்லக்
குன்றமர் குடாது தேயங் குறுகும்வில் வலன்வா தாவி
அன்றுயிர் இழப்ப நின்றார் அகத்தியன் வரவு கண்டார். 13

ஆகத் திருவிருத்தம் - 1,235.



# 26. வில்வலன் வாதாவி வதைப் படலம்

—oo—

கண்டனர் இவனே போலுங் காய்சினத் தவுணர் ஆவி
கொண்டனன் வேலை முன்னங் குடித்துமிழ் கின்ற நீரான்
அண்டரை யருள்வா னுங்கொல் அடைந்தனன் அவனுக் கின்னே
உண்டியை யுதவி ஆவி கொள்ளுதும் ஊனென் றென்றார். 1

என்றிவை புகன்ற பின்னர் இளவல்வா தாவி யென்போன்
குன்றதன் புடையில் ஓர்சார் கொறியுருக் கொண்டு போந்து
மென்றழை புதலின் மேய வில்வலன் என்னு மேலோன்
ஒன்றிய புலத்தின் மிக்கோர் உருவுகொண் டுற்றான் அன்றே. 2

மீதுறு சடையும் நீறு விளங்கிய நுதலும் வேடங்
காதணி குழையின் சீருங் கண்டிகைக் கலனும் மேற்கொள்
பூதியுந் தண்டுங் கையும் புனையுரி யுடையு மாக
மாதவ வேடந் தாங்கி முனிவனோர் வல்லை சென்றான். 3

மெய்தரு புறத்துக் காமர் வியனுருக் கொண்டு தன்னுட்
**கைதவங் கொண்டு செங்கேழ்க் காஞ்சிரங் கனிபோல் மேய**
மைதிகழ் மனத்தின் நேர்போய் வண்டமிழ் முனிவர் போற்றி
ஐதென வணங்கி முக்கால் அஞ்சலி செய்து சொல்வான். 4

அடிகள்நீர் போத இந்நாள் அருந்தவம் புரிந்தேன் இன்று
முடிவுற வந்தீர் யானும் முனிவர்தம் நிலைமை பெற்றேன்
கொடியனேன் இருக்கை ஈதால் குறுகுதிர் புனித மாகும்
படியென உரைத்துப் பின்னும் பணிந்தனன் பதங்கள் தம்மை. 5

பணிதலும் ஒருதன் கையிற் பரவையம் புனலை வாரி
மணிபடு பதுமம் போல வாய்க்கொளும் முனிவன் தீயோன்
துணிவினை யுணரா னாகித் துண்ணென வுவகை தோன்ற
இணையறு தவத்தின் மிக்கோய் எழுதியென் றிதனைச் செற்றான். 6

ஆறெதிர் எண்ம ராகும் ஆயிர முனிவர் தம்பால்
வேறுள தவத்தர் தம்பால் மிக்கநின் னியற்கை தன்னில்
கூறுசெய் அணுவின் காறுங் குணமில சரதம் ஈது
தேறுதி இருக்கை யேது செல்லுதும் வருக வென்றான். 7

என்றருள் முனியை நோக்கி ஈதென துறையுள் என்னச்
சென்றனன் முடிவான் வந்த தீயவன் அவற்கொண் டேகி
மன்றதன் இருக்கை யுற்று மரபுறு தவிசிற் சேர்த்திப்
பொன்றிகழ் அடிகட் கேற்ற பூசனை புரிந்து சொல்வான். 8

எந்தைநீ யானும் ஏனை என்குலத் தவரும் உய்ய
வந்தனை போலும் இந்நாள் மற்றெனை திருக்கை வைகி
வெந்திடு புற்கை யேனும் மிசைந்தனை எனக்குச் சேடந்
தந்தருள் புரிந்து போதி தவத்தரில் தலைவ என்றான். 9

சொல்வல முனிவர் மேலோன் சூர்முதன் மருகா யுள்ள
வில்வலன் மாற்றங் கேளா விழுமிது பரிவின் மிக்கோய்
ஒல்வதோர் உணவு நின்பால் உவந்தியாம் அருந்திப் பின்னர்ச்
சொல்வது கடனா மென்று செப்பினன் தீமை தீர்ப்பான். 10

மேலவன் இதனைக் கூற வில்வலன் வணங்கி எந்தாய்
சீலமோ டடிசில் செய்வன் சிறிதுபோ திருத்தி யென்று
காலையங் கதனில் ஆண்டோர் கயப்புனல் படிந்து மூழ்கிச்
சாலவும் புனித னாகி அடுவதோர் சாலை புக்கான். 11

அத்தலை நிலத்தை நீரால் ஆமயம் பூசி யாண்டுஞ்
சித்திரம் உறுத்தி யாவுந் தேடிவால் வளையின் சின்னம்
ஒத்ததண் டுலமா சேக ஒண்புன லிடையே இட்டு
முத்திறம் மண்ணி மற்றோர் முழுமணிக் குழிசி உய்த்தான். 12

தாக்குறு திறலின் வெய்ய தழல்பொதி கருவி யான
ஆக்கிய செய்த தொன்றில் அழலினை அதனுள் மூட்டித்
தேக்ககில் ஆர மாட்டிச் சிருணத் தசும்ப ரொன்றில்
வாக்கிய வுலைப்பெய் தேற்றி மரபில்வால் அரியுள் ளிட்டான். 13

பதனறிந் துண்டி யாக்கிப் பாலுற வைத்துப் பின்னர்
முதிரையின் அடிசி லட்டு முன்னுறு தீம்பால் கன்னல்
விதமிகும் உணுக்கள் யாவும் மேவுற அமைத்துக் கொண்டு
புதுமணங் கமழுந் தெய்வப் புனிதமாங் கறியுஞ் செய்தான். 14

ஆற்றலால் மேடம் போலாய் ஆரிடர் உயிரை யெல்லாம்
மாற்றுவான் அமைந்து நின்ற இளவலை வலிதிற் பற்றிக்
கூற்றமே போல மேவும் முனிவன்முற் கொணர்ந்து கையில்
ஏற்றகூர்ங் குயத்தாற் காதி இருதுணி யாக்கி னானே. 15

அணிப்படு போர்வை நீக்கி அங்கமும் அகற்றி வாளால்
துணிப்பன துணித்தும் ஈர்ந்துஞ் சுவைத்திடும் உறுப்பூன் எல்லாங்
குணிப்பொடு குட்ட மிட்டுக் குழிசிகள் பலவிற் சேர்த்தி
மணிப்புனல் கொண்டு முக்கால் மரபினால் மண்ணல் செய்து. 16

உரைத்தவக் கறிக்கு வேண்டும் உவர்முதல் அமைந்த நல்கி
வருத்துறு கனன்மேற் சேர்த்தி வாலிதிற் புழுக்கல் செய்தே
அரைத்திடு கறியின் நுண்தூள் ஆதிதூய் இழுது பெய்து
பொரிப்பன பொரித்திட் டாவி போந்திடா வண்ணம் போற்றி. 17

கறியினுண் பொடியும் ஏனைக் கந்தமார் துகளும் அந்நாள்
வறையல்போ குற்ற தூய வாலரிப் பொடியும் நீவி
உறைகெழு துப்பும் வாக்கி யொழுகுபல் காயங் கூட்டித்
திறனொடும் அளாவி யாங்கோர் சிற்சில பாகு செய்து. 18

பின்னரும் பலகால் வேண்டும் பெற்றியிற் கரித்துச் செம்மி
முன்னுற அளிக்க நின்ற முதிரையின் புழுக்கல் அட்டுச்

செந்நல நீடுங் கன்னல் தீம்புளிங் கறியுஞ் செய்யா
அன்னதோர் தொடக்கம் யாவும் அருளினன் அருளி லாதான். 19

ஆசினி வருக்கை யாதி அளவையில் கனிகள் கீறித்
தேசமர் கன்னல் தீந்தேன் சேர்தரச் சிவணி யேனை
வாசமும் மலரும் இட்டு வரம்பில அமைத்துப் புத்தேள்
பூசனைக் குரிய அன்பாற் பொருக்கெனக் குவவு செய்தான். 20

குய்வகை யுயிர்ப்பின் மாந்திக் குவலயம் விரும்பு கின்ற
ஐவகை உணவும் ஆறு சுவைபட அளித்துப் பின்னும்
எவ்வகை யனவுந் தானே இமைப்பினில் அமைத்து வல்லே
கவ்வையி னோடுஞ் சென்று கடமுனி கழல்மேல் தாழ்ந்தான். 21

எந்தைநீ இன்ன காலை இரும்பசி யுடற்ற ஆற்ற
நொந்தனை போலும் மேனி நுணங்கினை தமியேன் ஈண்டுத்
தந்தனன் உணவி யாவுந் தளர்வற நுகரு மாறு
வந்தருள் என்று வேண்ட மற்றதற் கியைந்து போனான். 22

அட்டிடு சாலை மாட்டே அகத்தியற் கொடுபோய் ஆங்கண்
இட்டதோர் இருக்கை தன்னில் இருத்தியே முகமன் கூறி
மட்டுறு தூநீர் கந்த மலர்புகை தீபங்கொண்டு
பட்டிமை நெறியிற் பூசை புரிந்துபின் பதநேர் குற்றான். 23

வேறு

தெள்ளுஞ் சுடர்ப்பொன் இயல்கின்ற தட்டை திருமுன்னர் வைத்து நிரையா, வள்ளங்கள் வைத்து மிகுநாரம் உய்த்து மரபில் திருத்தி மறையோன், உள்ளங் குளிர்ப்ப அமுதன்ன உண்டி யுறு பேதம் யாவும் உதவா, வெள்ளம் படைத்த நறுநெய்ய தன்கண் விட்டான்தன் ஞவி விடுவான். 24

முறைவைப்பு நாடி முதன்மைக்கண் மேவு முதிரைப் புழுக்கல் மறியின், கறிவர்க்கம் ஏனை யவைசுற்றின் மேய கவினுற்ற கிண்ண மிசையே, உறவிட்டு நீட மதுரித்த யாவும் உடனுய்த் தொழிந்த வளனுஞ், செறிவித்து மேலை முனிகைக்குள் நீடு சிரகத்தின் நீரு தவினன். 25

பெருநீர் அடங்கு சிறுகையி னூடு பெறவுய்த்த தோயம் அதனை, இருபான்மை உண்டி யதுசூழும் வண்ண மிசையோடு சுற்றி யதுதான், ஒருகால் நுகர்ந்து பலகாலி னுக்கும் உதவிப்பின் உள்ள படியும், அரு காது செய்து மிகவே விரும்பி அயில்வான் தவங்கள் பயில்வான். 26

அடுகின்ற உண்டி கறிவர்க்க மேனை அவையன்பி லாத அசுரன், இடுகின்ற தேது முடிவெய்து காறும் இனிதுண்டு பின்றை முனிவன், கடிகொண்ட நாரம் அனையன் கொணர்ந்து கரமுய்ப்ப நுங்கி யெழுவான், பொடிகொண்டு தன்கை மலர்நீவி மிக்க புனல்கொண்டு மண்ணல் புரியா. 27

மைக்காரின் மெய்யன் அருள்கின்ற நாரம் வாய்க்கொண் டுமிழ்ந்து பலகால், முக்காவின் நுங்கி வாய்பூ சறுத்து முறைநாடி அங்க மெவையும், மிக்கானு மூறு புரியாவ தன்றி வேறுள்ள செய்கை பலவும், அக்காலை யங்கொர் புடையுற் றியற்றி அவண்வீற் றிருக்கும் அளவில். 28

வேதா அளித்த வரமுன்னி யேவில் வலனென்னும் வெய்ய அசுரன், போதா விருந்த முனியாவி கோடல் பொருளாக நெஞ்சின் நினையா, வாதாவி மைந்த இளையாய் விரைந்து வருகென்று கூற முனிவன், தீதார் வயிற்றின் இடையே எழுந்து திறல்மேட மாகி மொழிவான். 29

வேறு

எண்ணும லேமுன்பு கடலுண்ட தேபோல எனதூனும் உண்ட கொடியோன், உண்ணுடும் உயிர்கொண்டு வலிகொண்டு குறிதான உதரங் கிழித்து வருவன், அண்ணுவில் வலனேயெ னக்கூறி ஏதம்பி அரிபோல் முழங்கி யிடலும், மண்ணுடர் புகழ்கும்ப முனிதீயர் செய் திட்ட மாயந் தெரிந்து வெகுள்வான். 30

ஊன்கொண்ட கறியாகி நுகர்வுற்ற வாதாவி உயிர்போகி யுண்ட இயல்பே, தான்கொண்டு முடிகென்று சடரத்தை யொருகாலை தமிழ் வல்ல முனித டவலுங், **கான்கொண்ட எரிமண்டு சிறுபுன் புதற்போன்று** கடியோ னுமுடி வாகவே, வான்கொண்ட லெனஅங்கண் முன்னின்ற வன்தம்பி மாய்வுற்ற துன்னி வருவான். 31

மெய்க்கொண்ட தொன்னுள் உருக்கொண்டு முனிதன்னை வெகுளுற்றொர் தண்ட மதனைக், கைக்கொண்டு கொலையுன்னி வருபோழ்தில் முனிவன் கரத்தில் தருப்பை ஒன்றை, மைக்கண்டர் படையாக நினைகுற்று விடவில் வலன்முனு மடிவெய்தலும், அக்கண்ட கக்கள்வர் உறையுற்ற இடம்நீங்கி அப்பால் அகன்றனரோ. 32

ஆகத் திருவிருத்தம்–1,267.

# 27. காவிரி நீங்கு படலம்

—oo-

செங்கை தூங்கிய தீர்த்த நீரொடுங்
கொங்கின் பாற்செலக் குறிய மாமுனி
மங்கு கின்றஅம் மைந்தர் நேருறு
அங்கண் மேவினுர் அருந்த வத்தர்போல்.

நேரு மைந்தர்கள் இருவர் நீனிறக்
காரின் மேனியர் கறங்கு கண்ணினர்

தீரர் ஆற்றவுஞ் ஒல்லென
ஆர வாரஞ்செய் னாரரோ. 2

அண்மை யாகுவர் அகல்வர் மாமுனி
கண்முன் எய்துவர் கரந்து காண்கிலார்
விண்மு கிற்குளே மேவி ஆர்ப்பரால்
மண்மி சைப்பினும் வருவர் சூழ்வரே.

கோதில் ஆற்றல்சேர் கும்ப மாமுனி
ஈது நோக்கியே இவரை முன்னமே
காதி னும்நமைக் கருதி வந்தனர்
மாத வத்தினோன் மைந்தர் ஆதலால்.

பேர்கி லாதஇப் பிரம கத்திநோய்
தீரு மாற்றினால் சிவனை தாள்களை
ஆர்வ மோடிவண் அருச்சிப் பாமெனா
நேரின் மாமுனி நினைந்து நின்றரோ.

ஆசில் கொங்கினுக் கணித்தின் ஓரிடை
வாச மீதென மகிழ்ந்து வீற்றிரீஇ
ஈச னார்தமை இலிங்க மேனியில்
நேச நெஞ்சினான்

தூய குண்டிகைத் தோயம் அன்றியே
சேய மாமலர் தீபந் தீம்புகை
ஆய போனகம் ஆதி யானவை
ஏயு மாற்றினால் இனிது தேடினான்.

விழுமி தாகிய விரதர் வீயவே
வழியி ருந்திடும் வஞ்சர் ஆவிகோள்
பழிய கன்றிடப் பரமன் தாள்மிசை
அழிவில் அன்பொடே அருச்சித் தானரோ.

மங்கை பாகனை மற்றும் பற்பகல்
சிங்கல் இன்றியே சிறந்த பூசைசெய்
தங்கண் மேவினான் அவன்க ணாகிய
துங்க வெம்பவந் தொலைந்து போயதே.

அனைய காலையில் அரிய தீந்தமிழ்
முனிவ ரன்செயல் முற்றும் நாடியே
துனியில் நாரதன் தொல்லை வானவர்க்
கினிய கோமகன் நக எய் 10

தாணு வின்பதந் தன்னை உன்னியே
வேணு வாகியே மெய்த்த வஞ்செயுஞ்
சேணின் மன்னவன் செல்லு நாரதற்
காணும் எல்லையிற் கழல்வ ணங்கினான். 11

எழுதி மன்னவென் றெடுத்து மார்புறத்
தழுவி நன்றிவட் சார்தி யோவெனு
உழுவ லன்பினல் உரைப்ப வாசவன்
தொழுத கையினன் இனைய சொல்லுவான். 12

இன்று காறுநின் னருளின் யானிவண்
நன்று மேவினன் நாதன் பூசனைக்
கொன்ற துண்டுநீங் குரைப்பன் கேட்டியால்
குன்ற மன்னதோர் குணத்தின் மேலையோய். 13

கோதின் மாமலர் குழுவு தண்டலைக்
கேது நீரிலை இறந்து வாடுமால்
போதும் இல்லையால் பூசை செய்வதற்
கீத ரோகுறை யென்றி யம்பினன். 14

வேறு

இன்னவை பலவுங் கூறி இந்திரன் தவிசொன் றிட்டு
முன்னுற இருத்தித் தானும் முனிவரன் பணியால் வைக
அன்னதோர் அறிஞன் நின்னூர் அரசியல் பிறவும் ஈசன்
தன்னருள் அதனல் மேனாள் வருவது தளரேல் மன்னே. 15

ஆறணி சடையி னனுக் கருச்சனை புரிதற் கிங்கோர்
ஊறுள தென்றே ஐய உரைத்தனை அதுவும் வல்லே
மாறிடுங் காலம் ஈண்டு வந்ததப் பரிசை யெல்லாங்
கூறுவன் கேட்டி யென்னக் கோமகற் குரைக்க லுற்றான். 16

தன்னிகர் இலாத முக்கட் சங்கரன் பொதிய வெற்பின்
முன்னுறை கென்று கும்ப முனிவனை விடுத்த வாறும்
அன்னவன் விந்தந் தன்னை அகன்பிலத் திட்ட வாறும்
துன்னெறி புரிந்த வெஞ்சூர் மருகரைத் தொலைத்த வாறும். 17

அப்பழி தீரு மாற்றால் ஐதெனக் கொங்கின் நண்ணி
முப்புர மெரித்த தொல்லை முதல்வனை அருச்சித் தேத்தி
மெய்ப்பரி வாகி அங்கண் மேவிய திறனும் முற்றச்
செப்பினன் பின்னும் ஆங்கோர் செய்கையை உணர்த்த லுற்றான். 18

அருந்தவ முனிவன் கொங்கின் அமலனை அருச்சித் தங்கண்
இருந்திடு கின்றான் நாடி ஏகினன் அவன்பா லாகப்
பொருந்துகுண் டிகையின் மன்னும் பொன்னியா றதனை இங்கே
வரும்பரி சியற்றின் உன்றன் மனக்குறை தீரு மென்றான். 19

குரவனீ துரைத்த லோடுங் குறுமுனி கொணர்ந்து வைத்த
வரநதி தனையிக் காவில் வரவியற் றிடுமா றென்கொல்
பெருமநீ யுரைத்தி யென்னப் பேரமு தருத்தி யேத்திக்
கரிமுகத் தேவை வேண்டில் கவிழ்த்திடும் அதனை என்றான். 20

குணப்பெருங் குன்ற மன்ன கோதிலா அறிவன் இன்ன
புணர்ப்பினை இசைத்த லோடும் புரந்தரன் பொருமல் நீங்கிக்

கணிப்பிலா மகிழ்ச்சி யெய்திக் காசிபன் சிறுவர் கொண்ட
அணிப்பெருந் திருவும் நாடும் அடைந்தனன் போன்று சொல்வான். 21

எந்தைநீ இனைய எல்லாம் இயம்பினை அதனால் யானும்
உய்ந்தனன் கவலை யாவும் ஒருவினன் முனிவன் பாங்கர்
வந்திடு மாறும் ஈண்டு வரவுன தருளால் இன்னே
தந்திமா முகற்குப் பூசை புரிகுவன் தக்கோய் என்றான். 22

அருள்முனி இதனைக் கேளா அன்னதே கருமம் வல்லே
புரிகரி முகவற் கைய பூசனை யென்று கூறிப்
பரவிய இமையோர் கோனைப் பார்மிசை நிறுவிப் போந்து
சுரரெலாம் பரவு கின்ற தொல்லையம் பதத்தி னுற்றான். 23

சேறலும் புணர்ப்பு வல்லோன் திங்களும் அரவுங் கங்கை
யாறொடு முடித்த அண்ணல் அருள்புரி முதல்வன் றன்னை
மாறகல் மேனி கொண்டு வரன்முறை தாபித் தன்னோன்
சீறடி அமரர் கோமான் அருச்சனை செய்து பின்னர். 24

இக்கொடு தென்னங் காயும் ஏனலின் இடியுந் தேனும்
முக்கனி பலவும் பாகும் மோதக முதல முற்றுந்
தொக்குறு மதுர மூலத் தொடக்கமுஞ் சுவைத்தீம் பாலும்
மிக்கபண் ணியமு மாக விருப்புற நிவேதித் தானால். 25

இவ்வகை நிவேதித் தேபின் எம்பிரான் றன்னை ஏத்த
மைவரை யனைய மேனி மதகரி முகத்துத் தோன்றல்
கவ்வையோ டனந்த கோடி கணநிரை துவன்றிச் சூழ
அவ்விடை விரைவால் தோன்ற அஞ்சினன் அமரர் கோமான். 26

அஞ்சலை மகவா னென்ன ஐங்கரக் கடவுள் கூற
நெஞ்சகந் துணுக்கம் நீங்கி நிறைந்தபே ருவகை யெய்தி
உஞ்சன னென்று வள்ளல் உபயமா மலர்த்தாள் மீது
செஞ்செவே சென்னி தீண்டச் சென்றுமுன் வணக்கஞ் செய்தான். 27

பூண்டிகழ் அலங்கல் மார்பில் பொன்னகர்க் கிறைவன் முக்கண்
ஆண்டகை சிறுவன் தாள்மேல் அன்பொடு பணிந்து போற்ற
நீண்டதோர் அருளால் நோக்கி நின்பெரும் பூசை கொண்டாம்
வேண்டிய பரிசென் என்றான் வேழமா முகனை வென்றான். 28

இந்திரன் அதுகேட் டைய எம்பிராற் காக ஈண்டோர்
நந்தன வனத்தை வைத்தேன் அன்னது நாரம் இன்றிச்
செந்தழ லுற்றா லென்னத் தினகரன் சுடரால் மாய்ந்து
வெந்துக ளான தண்ணல் மேலடு புரமே யென்ன. 29

என்னலும் ஏந்தல் கேளா ஏழ்பெருந் தலத்தின் நீரும்
முன்னுறத் தருகோ வான முழுப்பெருங் கங்கை தானும்
பன்னதி பிறவும் இங்ஙன் விளித்திடோ பரவை யாவுந்
துன்னுறு விக்கோ ஒன்று சொல்லுதி வேண்டிற் றென்றான். 30

ஐங்கரக் கடவுள் இவ்வா றறைதலும் அனைத்தும் நல்கும்
பங்கயத் தயனு மாலும் பரவுறு பழையோய் இங்ஙன்
அங்கவற் றொன்றும் வேண்டேன் அதுநினக் கரிதோ யாதொன்
றிங்குனைக் கேட்ப னென்னா இனையன இசைக்க லுற்றான். 31

சகத்துயர் வடபொன் மேருச் சாரலின் நின்றும் போந்து
மிகத்துயர் எவர்க்குஞ் செய்யும் வெய்யவள் சிறுவர்ச் செற்று
மகத்துயர் விதியின் சேய்க்கு வருவித்த நிமலன் பொற்றாள்
அகத்தியன் கொங்கின் பால்வந் தருச்சனை புரிந்து மேவும். 32

அன்னவன் தனது மாட்டோர் அணிகமண் டலத்தி னூடே
பொன்னியென் றுரைக்குந் தீர்த்தம் பொருந்தியே இருந்த தெந்தாய்
நன்னதி யதனை நீபோய் ஞாலமேற் கவிழ்த்து விட்டால்
இன்னதோர் வனத்தின் நண்ணும் என்குறை தீரு மென்றான். 33

பாகசா தனன்இம் மாற்றம் பகர்தலும் பிறைசேர் சென்னி
மாகயா னனத்து வள்ளல் மற்றிது செய்து மென்னா
ஓகையால் அவனை அங்கண் நிறுவிப்போய் ஒல்லை தன்னில்
காகமாய் முனிபா லான கமண்டல மிசைக்கண் உற்றான். 34

கொங்குறு முனிவன் பாங்கர்க் குண்டிகை மீதிற் பொன்னி
சங்கரன் அருளின் வந்த தன்மையும் புணர்ப்பு முன்னி
ஐங்கரன் கொடியாய் நண்ண அகத்தியன் அவனென் றோரான்
இங்கொரு பறவை கொல்லாம் எய்திய தென்று கண்டான். 35

கண்டனன் பிள்ளை செல்லக் கரதல மெடாநின் றோச்ச
அண்டருக் கலக்கண் செய்த கயமுகத் தவுணற் செற்றோன்
குண்டிகை அதனைத் தள்ளிக் குனிர்புனற் கன்னி யன்னான்
பண்டையில் இசைவு செய்தான் பாரில்நீ படர்தி என்றான். 36

என்னலுங் காஞ்சி தன்னில் எம்பிரான் உலகம் ஈன்ற
அன்னைதன் அன்பு காட்ட அழைத்திட வந்த கம்பை
நன்னதி போல விண்ணும் ஞாலமும் நடுங்க ஆர்த்துப்
பொன்னியா றுலகந் தன்னில் பொள்ளெனப் பெயர்ந்த தன்றே. 37

பெயர்தலும் உமைதன் பிள்ளை பிள்ளையின் உருவம் நீத்துப்
பயிறரு மறைநூல் வல்ல பார்ப்பன மகன்போற் செல்லச்
சயமிகு தவத்தின் மேலோன் தன்மையங் கதனை நோக்கி
உயிர்முழு தடவே தோன்றும் ஒருவன்போல் உருத்து நின்றான். 38

தேவனோ அவுணன் தானோ அரக்கனோ திறலின் மேலோன்
யாவனோ அறிதல் தேற்றேன் ஈண்டுறு நதியைச் சிந்திப்
போவனோ சிறிது மெண்ணா அகந்தையன் போலும் அம்மா
யாவனோ வன்மை தன்னை அறிகுவன் விரைவின் என்றான். 39

விரைந்தவன் பின்னரேக மெய்வழி பாடு செய்வோர்
அரந்தையை நீக்கும் எங்கோன் அச்சுறு நீரன் போல

இரிந்தனன் போத லோடும் இருகையுங் கவித்த மாக்கித்
துரந்தனன் முனிவன் சென்னி துளக்குறத் தாக்க உன்னி. 40

குட்டுவான் துணிந்து செல்லுங் குறுமுனிக் கணிய ஞகிக்
கிட்டுவான் விசும்பி னூடு கிளருவான் திசைக டோறும்
முட்டுவான் பின்பு பாரின் முடுகுவான் அனையன் கைக்கும்
எட்டுவான் சேய ஞகி ஏகுவான் எவர்க்கும் மேலோன். 41

இப்படி முனிவன் சீற்றத் தலமர யாண்டு மேகித்
தப்பினன் திரித லோடுஞ் சாலவுந் தளர்ச்சி யெய்திச்
செப்பரி திவன்றன் மாயஞ் செய்வதென் இனியா னென்று
ஒப்பருந் தவத்தோன் உன்ன எந்தையஃ துணர்ந்தான் அன்றே. 42

ஓட்டமோ டலவு முன்னோன் ஒல்லையில் தனது மேனி
காட்டினன் முனிவன் காணுக் கதுமெனக் கலங்கி அந்தோ
கோட்டிப முகனே ஈண்டுக் குறுகினன் அவனை யானே
ஈட்டொடு துரந்தேன் கொல்லென் றேங்கினன் இரங்கு கின்றான். 43

இரங்கிய முனிவன் முன்னம் ஏந்தலைப் புடைப்பான் கொண்ட
கரங்களை எடுத்து வானில் காருரும் ஏறு வெற்பின்
உரங்கிழி தரவே நீங்கா துரப்பினில் வீழ்வ தேபோல்
வரங்கெழு தனது நெற்றி வருந்துறத் தாக்கல் உற்றான். 44

தாக்குதல் புரிந்த காலைத் தாரகப் பிரம மான
மாக்கய முகத்து வள்ளல் வரம்பிலா அருளி னோடு
நோக்கியுன் செய்கை என்னை நுவலுதி குறியோய் என்னத்
தேக்குறு தமிழ்தேர் வள்ளல் இனையது செப்பு கின்றான். 45

அந்தண குமரன் என்றே ஐயநின் சிரமேல் தாக்கச்
சிந்தனை புரிந்தேன் யாதுந் தெளிவிலேன் அதற்குத் தீர்வு
முந்தினன் இயற்று கின்றேன் என்றலும் முறுவல் செய்து
தந்தியின் முகத்து வள்ளல் அலமரல் தவிர்தி யென்றான். 46

என்றலுந் தவிர்ந்து முன்னோன் இணையடி மிசையே பல்கால்
சென்றுசென் றிறைஞ்சி யன்னோன் சீர்த்திய தெவையும் போற்றி
உன்றிறம் உணரேன் செய்த தவற்றினை உளத்திற் கொள்ளேல்
நன்றருள் புரிதி என்ன நாயகன் அருளிச் செய்வான். 47

புரந்தரன் எந்தை பூசை புரிதரு பொருட்டால் ஈண்டோர்
வரந்தரு காமர் தண்கா வைத்தனன் அதுநீ யின்றி
விரைந்தது பொலிவு மாழ்கி வெறுந்துகள் ஆத லோடும்
இரந்தனன் புனல்வேட் டெம்மை இயல்புடன் வழிபட் டிந்நாள். 48

ஆதலின் கொடிபோல் யாமுன் னரும்புனற் குடிகை மீது
காதலித் திருந்து மெல்லக் கவிழ்த்தனம் அதனை ஈண்டுப்
போதலுற் றிடவுஞ் சொற்றும் பொருதுநீ செய்த வற்றில்
யாதுமுட் கொள்ளேம் அவ்வா றினிதென மகிழ்தும் அன்றே. 49

ஈண்டுநீ புரிந்த தெல்லாம் எமக்கிதோ ராட லென்றே
காண்டுமா லன்றி நின்பால் காய்சினங் கொண்டேம் அல்லேம்
நீண்டசெஞ் சடையெம் மையன் நேயன்நீ எமக்கும் அற்றே
வேண்டிய வரங்கள் ஈதுங் கேண்மதி விரைவின் என்றான். 50

**வேறு**

என்னா இதுசெப் பலும்எம் பெருமான்
முன்னா கியதோர் முனிவன் பணியா
உன்னா ரருள்எய் தலின்உய்ந் தனன்யான்
நன்னா யகனே எனவே நவில்வான். 51

நின்பா லினும்அந் நெடுமா லுணரான்
தன்பா லினுமே தமியேன் மிகவும்
அன்பா வதொர்தன் மையளித் தருள்நீ
இன்பால் அதுவெஃ குவன்எப் பொழுதும். 52

இன்னே தமியேன் எனவே இனிநின்
முன்னே நுதலின் முறையால் இருகை
கொன்னே கொடுதாக் குநர்தங் குறைதீர்த்
தன்னே யெனவந் தருள்செய் யெனவே. 53

முத்தண் டமிழ்தேர் முனிஈ தறைய
அத்தன் குமரன் அவைநல் கினமால்
இத்தன் மையவே அலதின் னமும்நீ
சித்தந் தனில்வேண் டியசெப் பெனவே. 54

கொள்ளப் படுகுண் டிகையிற் குடிஞை
வெள்ளப் பெருநீர் மிசையுற் றடிகள்
தள்ளக் கவிழ்வுற் றதுதா ரணிமேல்
எள்ளிற் சிறிதும் இலதென் றிடவே. 55

ஊனாய் உயிராய் உலகாய்[1] உறைவோன்
மேனாள் அருள்செய் வியன்மா நதிதான்
போனா லதுபோற் புனலொன் றுளதோ
நானா டிடவே நலமா னதுவே. 56

அந்நீர் மையினால் அடியேற் கிவண்நீ
நன்னீர் நவையற் றதுநல் கெனவே
கைந்நீர் மையினாற் கடுகின் துணையாம்
முந்நீர் அயிலும் முனிவன் மொழிய. 57

காகத் தியல்கொண் டுகவிழ்த் திடமுன்
போகுற் றபுதுப் புனலாற் றிடையே

1 சிவஞானிகள், "மரத்தை மறைத்தது மாமத யானை" என்று திருமூலர் கூறியதுபோல் உலகாதிகளையும் சிவபெருமானாகவே காண்கின்றார்கள். அல்லாதவர்கள் உலகாதிகளாகவே காண்கின்றார்கள்; ஆதலின் " உலகாய் என்றார்.

மாகைத் தலகீட் டினன்வா னுலவும்
மேகத் திரைமால் கடல்வீழ்ந் தெனவே. 58

அள்ளிச் சிறிதே புனலம் முனிவன்
கொள்ளப் படுகுண் டிகையுய்த் திடலும்
உள்ளத் தைநிரப் பியொழிந் ததெலாம்
வெள்ளத் தொடுபார் மிசைமே வியதே. 59

முன்னுற் றதுபோல் முனிகுண் டிகைநீர்
துன்னுற் றதுமேல் தொலையா வகையால்
என்னிப் புதுமை யெனநோக் கினனுல்
தன்னுற் றமனத் தவமா முனியே. 60

பேருற் றிடுமிப் பெருநீர் அதனில்
வாரிச் சிறிதே வருகுண் டிகையில்
பாரித் தனன்இப் படிமுற் றுறுவான்
ஆரிப் படிவல் லவரா யினுமே. 61

அந்தத் திருமால் அயனே முதலோர்
வந்தித் திடவே வரமீந் தருளி
முந்துற் றிடுமூ லமொழிப் பொருளாம்
எந்தைக் கரிதோ இதுபோல் வதுவே. 62

என்றே நினையா இபமா முகவற்
சென்றே பணியாச் சிறியேன் குறையா
ஒன்றே துமிலேன் உதவுற் றனைநீ
நன்றே கவிழும் நதிநீ ரையுமே. 63

முந்தே முதல்வா முழுதுன் னருளால்
அந்தே யளவும் அளியில் சிறியேன்
உய்ந்தேன் இனியும் முனையுன் னுழிநீ
வந்தே அருள்கூர் மறவேல் எனவே. 64

அற்றா கவென அருள்செய் தயலே
சுற்றா வருதொல் படையோ டுமெழாப்
பற்றா னவர்நா டுபரம் பொருள்சேய்
மற்றா ரும்வியப் பமறைந் தனனே. 65

வேறு

மறைகின்ற எல்லைதனில் குறுமுனிவிம் மிதமாய்மன் னுயிர்கள் எங்கும், உறைகின்ற தனிமுதல்வன் புதல்வன்றன் கோலத்தை உணர்ந்து போற்றி, அறைகின்ற காவிரியைக் கண்ணுற்று நகைத்து வெகுண் டருள்கை நாடி, உறைகின்ற கொங்குதனை ஒருவித்தென் றிசைநோக்கி யொல்லை சென்றான். 66

ஆகத் திருவிருத்தம்—1,333.



# 28. திருக்குற்றாலப் படலம்

—oo—

செற்றாலம் உயிரனைத்தும் உண்டிடவே நிமிர்ந்தெழலுஞ் சிந்தை மேற்கொள், பற்றாலங் கதுநுகர்ந்து நான்முகனே முதலோர்தம் பாவை மார்கள், பொற்றாலி தனையளித்தோன் புகழ்போற்றி முகின் மேனிப் புத்தேள் வைகுங், குற்றாலம் ஆவதொரு வளநகரைக் குறுமுனிவன் குறுகி னானால். 1

அப்பதியில் அச்சுதனுக் காலயமொன் றுளதம்மா அவனி மீதில் ஒப்பிலதோர் திருமுற்றம் அஃதென்பர் இம்பரெலாம் உம்பர் தாமுஞ் செப்புவரா யிடைதன்னில் அந்தணர்கள் அளப்பில்லோர் செறிவர் அன்னார், மெய்ப்படுநூல் முறைகண்டு மோகத்தால் தமதுமத மேற்கொண் டுள்ளார். 2

அன்னவர்கள் எம்பெருமான் தன்னடியார் தமைக்காணின் அழன்று பொங்கி, முன்னுறுதொல் பகைஞரென மிகஇகழ்ந்து மற்றவர்தம் முகநோக் காராய்த், துன்னெறியே மேற்கொண்டு மறைபயில்வோர் என்பதொரு சொல்லே தாங்கித், தந்நெறியும் புரியாதங் கிருந்தனரால் அஃதுணர்ந்தான் தமிழ்நர் கோமான். 3

குறுமுனிவன் ஆங்கவர்தஞ் செயலுணர்ந்து குற்றால மென்னும் மூதூர், மறுகினிடை யேநடந்து மாயவன்தன் ஆலயமுன் வருதலோடும் நெறிவருமவ் வாலயத்திற் செறிகின்ற வைணவர்கள் நெடிது நோக்கிச், செறுநர்தமைக் கண்டுபதை பதைப்பார்போல் வெய்துயிர்த்துச் செயிர்த்துச் சொல்வார். 4

ஒல்லாத கண்டிகையும் நீறும்அணிந் தனையதனால் உலகில் தேவர், எல்லாரும் அறியவைய மேற்றானுக் கடியவன்நீ ஈண்டு செல்லச், செல்லாது கைத்தலத்தில் ஒருகோலுங் கொண்டனையாற் சிறியை போலும், நில்லாயெம் பெருமான்றன் மாநகரம் அணுகாது நீங்கு கென்றார். 5

என்றிடலும் வெகுளாது நகைசெய்து மறைநெறியை யிகந்து நின்றீர், துன்றியிவண் உறைகின்ற துணரேன்இத் திறமெவருஞ் சொன்னார் இல்லை, நன்றுநெறி யென்றுவந்தேன் நும்பான்மை உணர்வேனேல், நான்இம் மூதூர், சென்றிடவும் நினையேனால் முனியற்க யான்மீண்டு செல்வே னென்றான். 6

பொதியமலை தனிலேகும் முனிவன்இது புகன்றிடலும் பொருது நீயிப், பதியதனில் வருவதுவும் பாவமாம் ஈண்டுநீ படர்தி யென்ன, இதுசரதம் மொழிந்தீர்கள் தொல்லோர்தம் நூன்முறையும் ஈதே யென்னா, விதியருளுந் தக்கனார் வழிமுறையோர் தமைநீங்கி மீண்டு செல்வான். 7

சிட்டர்புகழ் கயிலைமலை காத்தருளுந் திருநந்தி தேவன் செங்கேழ், மட்டுறுபங் கயத்துறையும் நான்முகத்தோன் துருவாசன் மறைநூல் யாவுங்,

தட்டறவே உணர்பிருகு கவுதமன்கண் ணுவமுனிவன் ததீசி இன்னோர், இ பெருஞ் சாபமெலாம் பொய்த்திடுமோ எனவுன்னி ஏக லுற்றான். 8

ஏகலுறு குறுமுனிவன் உயிர்க்குயிராய் நின்றானை இகழ்வார் தங்கண், மோகமுறும் அகந்தையினை முதலோடுங் களைவனென முன்னி முன்னாட், போகியதன் மாயையினால் இரதத்தின் ஆவிபடு பொன்னே போலப், பாகவத மாகுவதோர் உருக்கொண்டான் கருணையினாற் பரவை போல்வான். 9

ஆளுடைய நாயகன்பால் அன்புடையான் மாயவன்றன் அடிய னேபோல், கோளுடைய மாயத்தான் மேனிகொண்டு மீண்டுமங்கட் குறுக லோடும், நீளிடையில் வரக்கண்ட வயிணவர்கள் எதிர்சென்று நெடிது போற்றித், தாளிடையில் வீழ்ந்திடலும் நாரணனுக் காகவெ னச் சாற்றி நின்றான். 10

அடிமுறையின் வணங்கியெழும் வேதியர்தங் களைநோக்கி அரி பால் அன்பு, முடிவிலைநும் பாலென்று மொழிந்தனர்அங் கதுகாண முன்னி வந்தாம், படியதனில் உமக்குநிகர் யாருமிலை நுமைக்கண்ட பரிசால் யாமுந், தொடர்வரிய பேருணர்வு பெற்றெனமென் றேபின் னுஞ் சொல்லல் உற்றான். 11

முத்திதரு பேரழகர் திருமலையி னிடையுற்றேம் முன்னம் அத் தீக்கி தனிலிருப்பச் செல்கின்றேம் நம்பெருமான் அமருங் கோயில், இத்தல மேல் உளதென்பர் அதுபரவும் விருப்புடையோம் என்ன கைத்தலத்தோர் விரற்சுட்டி அதுதிருமால் யனக் காட்ட லுற்றார். 12

காட்டுதலுங் கைதொழுது மாலுறையும் மந்திரத்தைக் கடிது ஈட்டமுடன் வலஞ்செய்து கண்ணபிரான் அடியிணையை ரெப், பாட்டிலுறு தொல்லடியார் தமைநோக்கி இவரை வழி படுதற் குள்ளம், வேட்டனமால் மஞ்சனமே முதலியன கொணர் மின்கள் விரைவின் என்றான். 13

நன்றெனவே சிலரேகித் தூயதிரு மஞ்சனமும் நறுமென் போதும், மன்றலுறு செஞ்சாந்தும் அணித்துகிலும் ஏனையவும் மரபிற் கொண்டு சென்றுமுனி வரன்முன்னம் உய்த்திடலும் அனையவர்தந் திறத்தை நோக்கி, இன்றிவரை யருச்சனைசெய் விதிமுறையைப் பார்த்திடுங்கள் யாரு மென்றே. 14

அறுகுமதி நதிபுனையுஞ் செஞ்சடையெம் பெருமானை அகத்துட் கொண்டு, சிறுகுமுரு வுடையமுனி நாரணனார் திருமுடிமேற் செங்கை யோச்சிக், குறுகுகுறு கெனஇருத்தி ஒள்ளரக்கிற் புனைபாவைக் கோல மீதும், அறுகுதழல் உற்றென்னக் குழைவித்தோர் சிவலிங்க வடிவஞ் செய்தான். 15

அல்லிமலர்ப் பங்கயனும் நாரணனும் எந்நாளும் அறியொ ணாத, எல்லையிலாப் பரம்பொருளைத் தாபித்து மந்திரங்க ளெடுத்துக் கூறித், தொல்லையுருக் கொண்டுமலர் மஞ்சனமே முதலியன தூய

ஆக்கி, ஒல்லைதனில் அருச்சிப்பக் காண்டலும்அவ் வந்தணர்கள் உருத்துச் சொல்வார். 16

காயத்தான் மிகச்சிறியன் முப்புரத்தை நீறுக்குங் கடவுட் காற்ற, நேயத்தான் இவ்விடையே முன்வந்தான் யாமிகழ நில்லா தேகி, ஆயத்தான் பாகவத வடிவாய்வந் திச்சமயம் அழித்தான் அந்தோ, மாயத்தான் பற்றுமினோ கடிதென்று குறுமுனியை வளைந்து கொண்டார். 17

பற்றிடுவான் வளைகின்றோர் தமைநோக்கி எரிவிழித்துப் பரவை தன்பால், உற்றவிடம் விடுத்ததெனை முனிவன்றன் வெகுளித்தீ உய்த்த லோடுஞ், சுற்றியது சுற்றியவர் தமைப்பின்னும் பொறிபடுத்தித் துரந்து செல்ல, மற்றவர்கள் இரிந்தேதம் பதியிழந்து சிதறினரால் மண்மே லெங்கும். 18

அன்னோர்கள் போயிடலும் இன்றுமுதல் சிவன்இடமீ தாயிற்றென்று, முன்னோனை அருச்சித்துப் பணிந்துவிடை கொண்டுதென்பால் முன்னிச் சென்று, பொன்னோடு மணிவரன்றி அருவியிழி தருபொதியப் பொருப்பில் நண்ணி, மன்னோமெய்த் தவம்புரிந்து வீற்றிருந்தான் அப்பரமன் மலர்த்தாள் உன்னி. 19

வேறு

பூவிரி கின்ற காமர் பொதும்பர்சேர் பொதிய வெற்பில்
தாவிரி கும்பத் தண்ணல் வந்திடு தன்மை சொற்றும்
மாவிரி கின்ற சாதி வனத்திடை மலர்ப்பூங் காவில்
காவிரி போந்த வாறும் ஏனவுங் கழறு கின்றாம். 20

ஆகத் திருவிருத்தம்–1,353.

# 29. இந்திரன் அருச்சனைப் படலம்

-oo—

கொடியுருக் கொண்டு முன்னங் குண்டிகை இருந்த பிள்ளை
படிமிசை அதனைத் தள்ளப் படர்ந்தகா விரியின் றன்மை
விடலருந் தளையின் நீக்கி வியனெறிப் படுத்த லோடும்
அடிகளின் அருளாற் செல்லும் ஆருயிர் போன்ற தன்றே. 1

பண்டொரு தந்தி யானோன் படர்சிறைப் புள்ளாய்த் தள்ளக்
குண்டிகை இருந்த நீத்தங் குவலயம் படர்ந்த பான்மை
எண்டருந் தடையால் வல்லோன் இருங்கடத் திட்ட பாந்தள்
மண்டலத் தொருவன் நீப்ப வழிக்கொளல் போன்ற தன்றே. 2

ஏதத்தின் ஒழுக்கு நீக்கும் இறைவனூல் ஒழுக்குந் தொல்லை
வேதத்தின் ஒழுக்கும் நோற்று வீட்டினை அடையும் நீரார்

போதத்தின் ஒழுக்கும் எங்கோன் புரிதரு கருணை யென்னும்
ஓதத்தின் ஒழுக்கு மென்னக் காவிரி யோடிற் றன்றே. 3

தள்ளரும் பரவை ஏழுந் தரணியைச் சூழ்ந்து நின்ற
உள்ளுறு தொடர்பு நாடி யாவையும் ஒருங்கு நண்ணிப்
பொள்ளெனப் புகுந்த தென்னப் புவியெலாம் பரவி ஆர்த்துத்
தெள்ளிதிற் கலங்கி நீத்தந் தெளிகிலா தொழுகிற் றுமால். 4

தெண்டிரைப் புணரி யெல்லாந் தினைத்துணை யாக வாரி
உண்டருள் முனிவன் தீர்த்தம் ஒன்றினை வேண்டு மெல்லை
அண்டர்தம் பெருமான் நல்க அன்னவன் கரத்தி லேந்துங்
குண்டிகைப் புனற்கு நேராக் கூறுதற் குவமை உண்டோ. 5

தொல்லையிற் குறியோன் வந்தான் துய்க்குமோ இன்னு மென்று
வல்லையில் தழைகள் பற்றி வாரிதி கூவிப் பாரின்
எல்லையிற் படர்ந்த தென்ன இலைசெறி பொதும்பர் ஈட்டம்
ஒல்லையிற் பரித்து மேல்கொண் டோடிய தொலிகொள் நீத்தம். 6

சந்தமும் அகிலுஞ் சங்குந் தரளமுங் கவரி தானுஞ்
சிந்துரத் தெயிறும் பொன்னும் மணிகளுந் திரைமேற் கொண்டு
வந்திழி நதியின் தன்மை வருணன்இப் பொருள்க ளெல்லாம்
இந்திரன் தன்பால் ஓச்ச ஏகுதல் போன்ற மாதோ. 7

வரையெனுந் தடம்பொற் றேரும் மதகரித் தொகையும் மாந்தர்
நிரைகளுந் தரங்க மாவும் நெறிக்கொடு மகவான் தன்பால்
விரைவொடு சேறல் சூரன் விண்ணவர்க் கரசன் மீது
பொரவிடு தானை வெள்ளம் போவன போன்ற தன்றே. 8

ஆவதோர் இனைய வாற்றால் அலையினால் அகல்வான் முட்டிக்
காவதம் பலவாய் ஆன்று காசினி அளந்து கீழ்பாற்
போவதோர் பொன்னி நீத்தம் புரந்தரன் இருந்து நோற்குந்
தாவறு வனத்திற் போதார் தண்டலை புகுந்த தன்றே. 9

ஓடுநீர் நீத்தப் பொன்னி யொல்லையிற் காமர் காவில்
பீடுற வருத லோடும் பேதுறு மகவான் காணு
ஆடினன் நகைத்தான் எங்கோன் அருச்சனை முடிந்த தென்று
பாடினன் முதல்வன் றளைப் பரவினன் படர்ச்சி தீர்ந்தான். 10

சீரினை யகற்றி நீங்காத் திருவினை மாற்றித் தொல்பேர்
ஊரினைக் கவர்ந்து தன்னோர் உயிருக்கும் இறுதி நாடுஞ்
சூரனை வென்றால் என்னத் தொலைவிலா மதர்ப்பு மிக்கான்
ஆரவன் உளத்திற் கொண்ட உவகையை அறைதற் பாலார். 11

பாடுறு பொன்னி நீத்தம் பாய்தலும் மகவா னேபோல்
வாடுறு கின்ற தண்கா வல்லையிற் கிளர்ச்சி யெய்தி
ஆடுறு பசிநோ யுற்றோர் அரும்பெறல் அமிர்தம் வந்து
கூடுற நுகர்ந்தால் என்னக் குளிர்ப்பொடு தளிர்த்த தன்றே. 12

வானிறை கின்ற கொண்மூ வார்துளி தலைஇய பின்றைக்
கானிறை மரனும் பூடும் வல்லியுங் கவின்று லென்ன
மேனிறை அடைகள் மல்கி விரிதரு சினையும் போதுந்
தானிறை கின்ற தம்மா **சதமகன் வளர்த்த பூங்கா.** 13

**வேறு**

வானில மளவிட வளர்ந்த புன்னைகள்
ஆனவை முழுவதும் அரும்பு கின்றன
தூநகை நிலத்திலத் தொடையல் மெய்யுடை
நீனிற மாயவன் நிலைஇய தொக்குமால். 14

தண்ணுறு பாசடை தயங்கு புன்னைகள்
கண்ணுறு வியன்சினை கவினப் பூத்தன
எண்ணுறு தாரகை ஈண்டி மொய்த்திட
விண்ணுறு முகிலினம் விளங்கிற் றென்னவே. 15

பண்படும் **அளியினம் பயிலு றுதன**
**சண்பக** அணிமரந் தயங்கிப் பூத்தன
எண்படு தபனியத் தியன்ற போதினை
விண்படு தருக்கொடு மேவல் போன்றவே. 16

புயற்பட லந்தொடும் புதுமென் பாடலம்
வியற்பட மலர்ந்தபூ விழுமென் வண்டினம்
அயற்பட ஊதுவான் வயந்தக் கம்மியன்
செயற்படு மணிச்சிறு சின்னம் போலுமால். 17

விண்டொடர் மதிகதிர் மிளிருந் தாரகை
கண்டிட வைகலுங் கணிப்பில் கண்ணடி
மண்டல நிரைத்துமண் மாது வைத்தெனக்
கொண்டலை யளவிய கோங்கு பூத்தவே. 18

மாமலர்க் கொன்றையும் மணிமென் பூவையுந்
தாமிரு புடையுறத் தளிர்த்த செய்யமா
ஏழுறு மாலயன் இடையில் வந்தெழு
தோமறு பரஞ்சுடர்த் தோற்றம் போன்றவே. 19

ஆதவன் மீதுபோய் அசையுந் தாழைகள்
மேதகு பாளைகள் மிசைதந் துற்றன
பூதலம் அணங்கினுர் புனைய நீட்டிய
கோதறு நித்திலக் கோவை போன்றவே. 20

வச்சிர மேனிய வரைகொள் காட்சிய
பச்சிளம் பூகம்வெண் பாளை கான்றன
நச்சுறு சோலையா நங்கைக் கெண்ணிலார்
எச்சமில் சாமரை இரட்ட ஏந்தல்போல். 21

மேற்றிகழ் செங்கர வீர மானவை
ஆற்றவுஞ் சினைதொறும் அரும்பு கின்றன

நாற்றடம் புயமுடை நாதற் கிந்திரன்
ஏற்றிய மணிச்சுட ரென்ன லாயதே. 22

அல்லிடை யன்றியே அலர்ந்த மாலதி
வல்லிகள் தருவெனும் மகிழ்நர் தங்களைப்
புல்லுவ பகலினும் பொருந்து மோவெனு
முல்லைகள் மலர்ந்தன முறுவல் செய்வபோல். 23

ஆசறு வாவியில் அலர்ந்த காவிகள்
பாசடை யிடையிடை பரவு கின்றன
தேசுறு தருநிழல் திருவில் துஞ்சிய
வாசவன் விழிகளின் மல்கு கின்றவே. 24

தொல்லையின் முறைநெறி யொருவித் தோயமேல்
வல்லையில் அங்கிகள் வந்துற் றுலென
அல்லியுஞ் சேயன அரத்த ஆம்பலும்
புல்லிய கிடங்கினிற் பொலிந்து பூத்தவே, 25

பாயிரும் புனற்கயம் பரந்த பாசடை
ஆயின இடையிடை அவிழ்ந்த பங்கயச்
சேயலர் வண்டினந் திளைப்பச் சேர்வன
காயெரி புகையொடு கானம் புக்கபோல். 26

எண்ணுமித் தருக்களுங் கொடியும் ஏனவுங்
கண்ணுற மலர்வதும் அரும்புங் காட்சியும்
வண்ணம தெற்றெனின் மாலைச் செக்கரும்
யும் உடுக்களும் விரவிற் றொக்குமால். 27

இந்திரன் மகிழ்வுற இனைய பானமையால்
நந்தன வனமெலாம் நன்று பூத்தலும்
அந்தநன் மலர்கொடே யாதிக் கன்பி ுல
முந்துறு பூசனை முயல முன்னினான். 28

விடியல்வை கறை[1] தனின் மேவி வண்டுதேன்
புடையுறு முன்னரே புரையி லாததோர்
கடிமலர் கொய்தனன் கொணர்ந்து கண்ணுதல்
அடிகளில் விதிமுறை அருச்சித் தானரோ. 29

அப்பெரு நாண்முதல் ஆதி அண்ணலை
இப்படி அருச்சனை இயற்றி வைகலும்
ஒப்பற நோற்றரோ உம்பர் கோமகன்
வைப்புறு சண்பக வனத் 30

ஆகத் திருவிருத்தம் - 1,383.

1. விஷயல்வைகறை - மிக விடியற் காலம்.

# 30. தேவர் புலம்புறு படலம்

—oo—

அந்நாள் அதனில் அவுணர்க் கிறைஏவல்
தன்னுன் மிகவுந் தளர்ந்து சிலதேவர்
எந்நாள் இப் புன்மை எமைநீங்கும் என் றிரங்கிப்
பொன்னுடு விட்டுப் புவிதன்னிற் போந்தனரே. 1

தீந்தமிழின் வைப்பான தெக்கிண தேயநண்ணி
மாந்தர்புகழ் காழி வனம்போந்து வானவர்தம்
வேந்துதனைக் கண்டு விரைநாண் மலரடிக்கீழ்ப்
போந்து பணிந்து புகழ்ந்து புகல்கின்றார். 2

ஒன்றே தருமம் ஒழிந்து புவனமெலாஞ்
சென்றே அடுகின்ற தீயவுணர் தந்துடக்கில்
அன்றே எமைவிட் டகன்றாய் உனக்கிதுவும்
நன்றே எமையாளும் நாயகனும் நீயன்றே. 3

கோட்டுக் களிற்றேடுங் கோளரியோ டும்புவியை
வாட்டுற் றிடுஞ்சூர வல்லியத்தின் வன்சிறையில்
ஈட்டுற்ற தேவர் எனும்பசுக்கள் தம்மையெலாங்
காட்டிக் கொடுத்துக் கரந்ததென்கொல் காவலனே. 4

ஏனம் பசுமான் இரலை மரைபடுத்த
ஊனும் வடியும் ஒலிகடலின் உள்ளபல
மீனுஞ் சுமந்து விறலசுரர்க் கேவல்செய்து
மானங் குலைந்து மறந்தோம் மறைகளுமே. 5

மையார் களத்தார் வரம்பெற்ற சூரனுக்குச்
செய்யாத ஏவலெலாஞ் செய்தோம் நெறிநீதி
எய்யாத மான மிவையெல்லாந் தானிழந்தோம்
ஐயா மிகவும் அலுத்தோம் அலுத்தோமே. 6

முந்நாளுந் தந்தி முகத்தவுணன் ஏவல்செய்து
பன்னுள் உழன்றோம் பரமர் அதுதீர்த்தார்
பின்னுளுஞ் சூரன் பெயர்த்தும் எமைவருத்த
இந்நாடி ரிந்தோம் இனித்தான் முடியாதே. 7

எந்நாளும் உன்னைப் புகலென் றிருந்தவியாந்
துன்று அவுணராற் சோர்ந்து துயருழப்ப
உன்று ருயிர்காத் தொளித்திங் கிருந்தனையால்
மன்று உனக்குத் தகுமோ வசையன்றே. 8

சூரன் முதலாச் சொலப்பட்ட வெவ்வசுரர்
வீரங் குலைந்து விளிவதற்கும் இவ்வுலகில்
ஆரும் பழிக்கத் திரிகின்றேம் ஆகுலங்கள்
தீரும் படிக்குஞ் செயலொன்று செய்வாயே. 9

என்னாப் பலவும் இயம்பி இரங்குதலும்
மன்னா கியமகவான் மாற்றம் அவைகேளா
அன்னார் மனங்கொண்ட ஆகுலத்தைக் கண்டுநெடி
துன்னா அயரா உயிரா உரைக்கின்றான். 10

மாயை உதவ வருகின்ற வெஞ்சூரன்
தீய பெருவேள்வி செய்யத் தொடங்குமன்றே
போய நமதுரிமை பொன்னாடுந் தோற்றனமென்
றோயு முணர்வால் உமக்கங் குரைத்திலனோ. 11

அற்றே மகஞ்செய் தமலன் தருவரங்கள்
பெற்றே நமது பெரும்பதமுங் கைக்கொண்டு
சற்றேனும் அன்பில்லாத் தானவர்கோன் தாழ்வான
குற்றே வலைநம்பாற் கொண்டான் குவலயத்தே. 12

நீள்வா ரிதியின் நெடுமீன் பலசுமந்து
தாழ்வாம் பணிபிறவுஞ் செய்துந் தளர்ந்துலகில்
வாழ்வா மெனவே மதித்திருந்தோம் மற்றதன்றிச்
சூழ்வால் ஒருதீமை சூரபன்மன் உன்னினனே. 13

என்னே அத்தீமை யெனவே வினவுங்காற்
பொன்னே அனைய புலோமசையைப் பற்றுதற்குங்
கொன்னே எனையுங் கொடுஞ்சிறையில் வைப்பதற்கு
முன்னே நினைந்தான் முறையில்லாத் தீயோனே. 14

ஆன செயலுன்னி அனிகந் தனைநம்பால்
வானுலகில் உய்ப்ப மதியால் அஃதுணர்ந்து
நானும் இவளும் நடுநடுங்கி அச்சுற்று
மேனி கரந்து விரைந்துவிண்ணை நீங்கினமால். 15

மீனும் வடியும் வியன்தசையுந் தான்சுமந்த
ஈன மதுவன்றி ஈதோர் பழிசுமக்கின்
மானம் அழிய வருமே அதுவன்றித்
தீன முறுசிறையுந் தீராது வந்திடுமே. 16

வெய்யவர்தம் வன்சிறையின் வீழின் முடிவில்லா
ஐயன் அடிகள் அருச்சித் தியாமெல்லாம்
உய்ய அவுணர் உயிரிழப்ப மாதவத்தைச்
செய்யும் நெறியுண்டோ வெனச்சிந்தை செய்தனனே. 17

சிந்தை அதனில் இனைய செயலுன்னி
அந்த மறுதுயரத் தாழும் நுழைவிட்டு
வந்து புவியின் மறைந்துதவஞ் செய்துமுக்கண்
எந்தை அடிகள் அருச்சித் திருந்தனனே. 18

அல்லல் புரியும் அவுணர்பணி யால்வருந்தித்
தொல்லையுள மேன்மையெலாந் தோற்றனமே மற்றினிநாம்

எல்லவரும் வெள்ளி மலைக்கேகி இறைவனுக்குச்
சொல்லி நமது துயரகற்றிக் கொள்வோமே. 19

வம்மின் எனவுரைப்ப வானோர் அதுகேளா
வெம்மி னதுகண்ட வியன்கண் டகியெனவும்
அம்மென் மயிலெனவும் ஆடி நகைசெய்து
தம்மின் மகிழ்ந்து மதர்ப்பினொடு சாற்றலுற்ருர். 20

கோவுநீ எங்கள் குரவனுநீ தேசிகன்நீ
தேவுநீ மேலாந் திருவுநீ செய்தவநீ
ஆவிநீ மற்றை அறிவுநீ இன்பதுன்பம்
யாவுநீ யாகில் எமக்கோர் குறையுண்டோ. 21

பார்த்துப் பணித்த பணிசெய்து நின்றன்னை
ஏத்தித் திரிதல் எமக்குக் கடனாகும்
நீத்துத் துயர நெறியுறுத்தி எம்மையென்றுங்
காத்துப் புரத்தல் உனக்குக் கடன்ஐயா. 22

தேரா அவுணர் திறந்தன்னை முன்தடிந்தாய்
சூரா தியருயிருங் கொள்ளுநெறி சூழ்கின்ருய்
பாராள் பவர்க்கும் பலமுனிவர்க் குஞ்சுரர்க்கும்
ஆராயின் நீயன்றி யாரே துணையாவார். 23

ஆதலால் எங்கள் அலக்கண் அகற்றிடுவான்
காதலாய் அத்தன் கயிலைக் கெமைக்கொண்டு
போதுநீ யென்னப் புரந்தரனும் நன்றென்று
கோதிலா உள்ளத் தொருசூழ்ச்சி கொண்டனனே. 24

ஆவ தொருகாலை அமரர்கோன் தானெழுந்து
தேவர் தமைநோக்கிச் சிறிதிங் கிருத்திரென
ஏவரையும் அங்கண் இருத்தியொரு தானேகிப்
பாவை அயிராணி பாங்கர் அணுகினனே. 25

ஆகத் திருவிருத்தம்–1,408



# 31. அயிராணி சோகப் படலம்

அன்னம் பொருவு நடையாள் அவன்வரலும்
முன்னங் கெதிரா முறையாற் பலமுறையும்
பொன்னங் கழலிணையைப் பூண்டு வணங்கியெழீஇ
என்னிங்கொ ரெண்ணமுடன் ஏகிற் றிறையென்ருள்.

அம்மொழியைக் கேளா அரசன் உரைசெய்வான்
வெம்மைபுரி சூரன் வியன்பணியா லேவருந்தி

எம்மை யடைந்தார் இனையசில தேவர்
தம்முன் இடர்பலவுஞ் சாற்றி இரங்கினரே.

அன்னோர் மனங்கொண்ட ஆகுலமும் நந்துயரும்
பொன்னார் சடைமுடியெம் புண்ணியற்குத் தாம்புகலின்
இந்நாள் அவுணர்க் கிறுவாய் தனைப்புரிந்து
தொன்னாள் உரிமை யளிப்பனென்னுந் துணிவால்.

ஆகின்ற துன்பத் தழலாற் பதைபதைத்து
வேகின்ற சிந்தை வியன்அமரர் தம்முடன்யான்
பாகொன்று தீஞ்சொல் உமைபாகன் பனிவரைக்குப்
போகின்றேன் ஈது புகலுதற்கு வந்தனனே.

என்னும் பொழுதில் இடருற் றிகல்வாளி
தன்னங்கம் மூழ்கத் தளர்ந்துவீழ் மஞ்ஞையென
அன்னம் பொருவு நடையாள் அயிராணி
மன்னன் திருமுன் மயங்குற்று வீழ்ந்தனளே.

வீழ்ந்தாள் தரிக்கரிதாம் வெய்ய துயர்க்கடலில்
ஆழ்ந்தாள் தனதறிவும் அற்றாள் பிரியாது
வாழ்ந்தாளென் செய்வாள் மகவான் அதுகண்டு
தாழ்ந்தா குலத்தோ டெடுத்தான் தடக்கையால். 6

ஆர்வமொடு கையால் அணைத்தே அவளைத்தன்
ஊருமிசை யேற்றி உணர்ச்சிவரும் பான்மையெலாஞ்
சேரவொருங் காற்றச் சிறிதே தெளிவுற்றாள்
காரின் மலிகின்ற மின்போலுங் காட்சியினாள். 7

சிந்தை மயக்கஞ் சிறிதகன்று தேற்றம்வர
முந்தை இடர்வந்து முற்றுந் தனைச்சூழ்ந்த
வந்த மடமான் அதுபோழ்தில் தன்னுள்ளம்
நொந்து நடுங்கி இனைய நுவல்கின்றாள். 8

பொன்னாடு விட்டுப் புவியின் வனத்திருந்து
முன்னார் அருள்கொண் டுவப்புற்று மேவினனால்
என்னா ருயிரே எனைநீ பிரிவாயேல்
பின்னார் துணையான் பிழைக்கும் நெறியுண்டோ. 9

வாகத்து நேமிக்கும் வான்பாடு புள்ளினுக்கும்
மேகத் திறமும் வியன்மதியு மாவதுபோல்
நாகத் துறைவோர்க்கு நாயகமே நீயலதென்
சோகத்தை நீக்கித் துணையாவார் வேறுண்டோ. 10

அன்றி யுனைப்பிரிந்தும் ஆவிதனைத் தாங்கவல்லேன்
என்றிடினும் யாதொருத்தி யாருந் துணையில்லை
ஒன்றுநெறி நீதி உணராத தீயவுணர்
சென்றிடுவர் நாளும் அவர்கண்டால் தீங்கன்றோ. 11

நீடு புகழ்சேர் நிருதர்கோன் சூழ்ச்சியினால்
தேடரிய பொன்னுலகச் செல்வத்தை விட்டிந்தக்
காடுதனில் வந்து கரந்து தவம்புரிந்து
பாடுபடு மாறும் பழிக்கஞ்சி யேயன்றோ. 12

தீய அவுணர் திரிவர் அவர்சிறியர்
மாயை பலபலவும் வல்லார் பவமல்லால்
ஆய தருமம் அறியார் பழிக்கஞ்சார்
நீயும் அஃதுணராய் அன்றே நெடுந்தகையே. 13

உன்னன் புடைய வொருமகனும் இங்கில்லை
துன்னுஞ் சுரருமில்லை தொல்களிற்றின் வேந்துமில்லை
பின்னிங் கொருமா தருமில்லை பெண்ணொருத்தி
தன்னந் தனியிருக்க அஞ்சேனோ தக்கோனே. 14

பல்லா றுருமுகிப் பவஞ்செய் அவுணரெனும்
ஒல்லார் எனைக்காணின் ஓடிவந்து பற்றினர்போய்
அல்லா தனபுரிவ ராலல் அனையபழி
எல்லாமுன் பாலன்றி யார்கண்ணே சென்றிடுமே. 15

மன்னே இதுவோர் துணிவுரைப்பன் மன்னுயிர்கொண்
டின்னே தமியேன் இரேன்உலகில் யாவரையும்
முன்னே படைத்தளிக்கும் முக்கணர்தம் வெற்பினுக்குன்
பின்னே வருவேன் பெயர்வா யெனவுரையா. 16

பின்றாழ் குழலி பெருந்துயரத் தோடெழுந்து
நின்றாள் இறையுன்னி நேயத் தொடுநோக்கி
நன்றால் உனது திறனென்று நாகரிறை
சென்றார்வ மோடவளைப் புல்லியிது செப்புகின்றான். 17

வாராய் சசியே வருந்தேல் அமரருடன்
காரார் களத்தோன் கயிலைக் கியான்போனால்
ஆராய்ந்து நின்னை அளிப்பவர்அற் றாலன்றோ
பேரார்வ மோடெனது பின்நீ வருவதுவே. 18

செய்ய சடைமேற் சிறந்தமதிக் கோடுபுனை
துய்யவனும் வேலைத் துயின்றோனுஞ் சேர்ந்தளித்த
ஐயன் எமக்கோர் அரணாகி யேயிருக்க
நையல் முறையாமோ நங்காய் நவிலுதியால். 19

ஏவென்றி கண்மடவாய் ஈசனருள் அன்னோனை
வாவென் றளியால் வழுத்திமனத் துன்னின்இங்கே
மேவுங் கயிலையில்யான் மீண்டு வருந்துணையுங்
காவென் றனைஅவன்பாற் கையடையா நல்குவனால். 20

ஆற்றல் பெரிதுடைய ஐயனே நின்றன்னைப்
போற்றியருள் செய்யும் பொருந்துதியால் ஈண்டென்று

தேற்றுதலும் அன்னோன் சிறப்பெவன்கொல் செப்புகெனக்
கோற்றொடிகேள் என்று அமரேசன் கூறுகின்றான். 21

ஆகத் திருவிருத்தம் - 1,429.

# 32. மகா சாத்தாப் படலம்

—oo—

முன்னம் பரமன் அருளின்றி முகுந்த னாதி
மன்னுஞ் சுரர்தானவர் வேலை மதித்த வேலைக்
கன்னங் கரிய விடம்வந்துழிக் காரி னங்கள்
துன்னும் பொழுதிற் குயில்போல் துணுக்குற் றிரிந்தார்.

அண்ணாற் கயிலைக் கிரிதன்னில் அடைந்து செந்தீ
வண்ணத் தமலன் அடிபோற்ற வருந்தல் என்றே
உண்ணற் கரிய பெருநஞ்சினை உண்டு காத்துக்
கண்ணற்கும் ஏனை யவர்க்கும்மிவை கட்டு ரைப்பான்.

இன்னுங் கடைமின் அமுதம் மெழுமென்று கூற
அந்நின் றவர்பாற் கடலின்கண் அடைந்து முன்போற்
பின்னுங் கடைந்தார் இபமாமுகப் பிள்ளை தன்னை
முன்னம் வழிபட் டிலர்வந்து முடிவ தோரார்.

என்னோ யகற்கு வழிபா டியற்றாத நீராற்
கொன்னார் கடலின் நடுமத்தங் குலைந்து வீழ்ந்து
பன்னாகர் வைகும் இடஞ்செல்லஅப் பான்மை நோக்கி
அன்னானை அர்ச்சித் தனர்அச்சுத னாதி யானோர்.

ஆரா தனைசெய்துழி மந்தர மாதி மைந்தன்
பேரா அருளால் பிலம்நின்று பெயர்ந்து முன்போல்
வாரா நிலைபெற் றிடலோடு மகிழ்ந்து போற்றிக்
காரார் திருமால் முதலோர் கடலைக் கடைந்தார். 5

கடைகின்றுழிச் செம்மதி யாமெனக் காமர் செம்பொன்
அடைகின்ற கும்பத் தெழுந்திட்ட தமுத மங்கண்
மிடைகின்ற தொல்லைச் சுரர்தானவர் யாரும் வெஃகி
உடைகின்ற வேலையென ஆர்த்தனர் ஒல்லை சூழ்ந்தார். 6

எம்மால் இதுவந் துளதால் எமக்கேயி தென்றே
தம்மா சையினாற் சுரர்தானவர் தம்மின் மாறாய்த்
தெம்மா னமுடன் பொரவுன்னலுந் தீர்வு நோக்கி
அம்மால் விரைவின் ஒருமோகினி ஆயி னானே.

மூலம் பிறந்த விடம்போல் அழன்மூண் டிடாமல்
நீலம் பிறந்து பிறர்அச்சுற நேர்ந்தி டாமல்

ஞாலம் பிறந்தோர் சுரர்தானவர் நச்ச ஆங்கோர்
ஆலம் பிறந்த தெனமோகினி யாகி நின்றான். 8

சேணார் உலகிற் புவிதன்னில் திசையி லெங்கும்
காணாத வப்பெண் ணுருக்கண்டனர் காதல் கைமிக்
கூணார் அமுதந் தனைவிட்டு முன்னென்று கண்டோர்
மாணா கியபல் பொருள்கண்டென வந்து சூழ்ந்தார். 9

மெய்த்தா மரையே முதலாய விசிக நான்கும்
உய்த்தான் மதவேள் அதுகாலை உலப்பில் காமப்
பித்தாய் உணர்வு பிழையாகிப் பெரிது மாலாய்
அத்தா ருகமா முனிவோரினும் ஆர்வ மிக்கார். 10

எண்ணா அவுணர் தொகையல்லதை எந்தை மாயம்
உண்ணாடு வானோர் களும்பெண்மயல் உற்று நின்றார்
மண்ணாசை தன்னிற் பொருளாசையின் மாய வாழ்க்கைப்
பெண்ணாசை நீங்கல் எளிதோ பெரியோர் தமக்கும். 11

பூண்டுற்ற கொங்கைப் பொலன்மோகினி யான புத்தேள்
ஆண்டுற் றவர்தங் களைநோக்கி அமரை நீங்கும்
ஈண்டுற் றனன்யான் அமுதும் முளதேது நீவிர்
வேண்டுற்ற தும்பால் உறக்கொண்மின் விரைவின் என்றான். 12

மாலா னவன்அங் கதுகூற மனந்தி ரிந்து
நோலா மையினால் இறக்கின் றவர் நோக்கி யெங்கள்
பாலா வதுநீ யெனமுன்வரும் பான்மை நாடி
மேலாம் அமுதே எமக்கென் றனர் விண்ணு ளோர்கள். 13

வானா டவர்நல் லமுதங்கொடு மாயை நீங்கிப்
போனார் ஒருசார் அவரோடு பொருத தீயோர்
தேனார் மொழிமோ கினியாகிய செங்கண் மாலை
ஆனா விருப்பிற் கொடுபோயினர் ஆங்கொர் சாரில். 14

கொண்டே கியதா னவர்தங்கள் குழுவை நோக்கித்
தண்டேன் மலர்ப்பா யலின்என்னைத் தழுவ வல்லான்
உண்டே இதனில் ஒருவீரன் உவனை இன்னங்
கண்டேன் இலையென் றனன் பெண்ணுருக் கொண்ட கள்வன். 15

ஈறும் அவுணர் பலரும்மிது கேட்டெ னக்கு
மாறாய் ஒருவர் இலையாரினும் வன்மை பெற்றேன்
வீறா கியவீ ரனும்யானென வீற்று வீற்றுக்
கூறா எனையே புணரென்று குழீஇயி னாரே. 16

கொம்மைத் துணைமென் முலையண்ணலைக் கூட யாரும்
வெம்மைப் படலால் இகல்கொண்டனர் வேறு வேறு
தம்மிற் பொருது முடிந்தார் கிளைதம்மி லுற்ற
செம்மைக் கனலால் முடிவுற்றிடுஞ் செய்கை யேபோல். 17

அன்னார் தொகையில் இருவோர்அரி மாயை யுன்னி
என்னும் இவரோ டிறக்கின்றனம் என்று நீங்கித்
தொன்னாள் உருவந் தனைமாற்றிச் சுரர்கள் போலாய்ப்
பொன்னு டவர்தங் குழுவோடு புகுந்து நின்றார். 18

மாண்டார் அவுணர் அதுநோக்கி வரம்பின் மாயம்
பூண்டாரும் வெஃக மடமாதெனப் போந்த கள்வன்
மீண்டான் அமரர் பலரும் விருப்புற்று மேவ
ஈண்டாழி தன்னில் அமுதந்தனை ஈத லுற்றான். 19

ஈயும் பொழுதின் இமையோர்கள் இனத்தி னூடு
போயங் கிருந்த இருகள்வரும் பொற்பு மிக்க
மாயன் பகிரும் அமிர்தந்தனை மந்தி ரத்தால்
ஆயும் படிகொண் டிலர்வல்லையின் ஆர்த லுற்றார். 20

தண்டா மரைக்குப் பகைநண்பெனச் சாரும் நீரார்
கண்டார் புடையுற் றவரிங்கிவர் கள்வ ரேயாம்
உண்டார் அமுதங் கடிதென் றுளத்துன்னி யங்கண்
விண்டான் அவற்குக் குறிப்பால் விழிகாட்டி னரால். 21

காட்டுற் றிடலும் அரிநோக்கியிக் கள்வ ரேயோ
வீட்டுற்ற வானோ ருடன்உண்குவ ரென்று தன்கை
நீட்டுற் றிடுசட் டுவங்கொண்டு நிருதர் சென்னி
வீட்டிச் சுரருக் கமுதூட்டி விருந்து செய்தான். 22

அண்டத் தவர்முன் னருந்துற்ற அமுத மன்னார்
கண்டத் திடையே வருமுன்னது கண்டு மாயன்
துண்டித்த சென்னி யழிவற்ற துணிந்த யாக்கை
முண்டத் துடனே துணிபட்டு முடிந்த வன்றே. 23

மாளாத சென்னி யுடைத்தானவர் மாண்பு நோக்கி
நீளார் அமுதுண்டவர் விண்ணிடை நிற்ப ரென்னுத்
தாளால் உலகம் அளந்தோன் அவர்தங் களுக்குக்
கோளா நிலையை இறையோன் அருள்கொண்டு நல்க. 24

புன்னாகம் நாக மணிவான் அடிபோற்றி நோற்றுச்
செந்நாக மோடு கருநாகத்தின் செய்கை பெற்றுப்
பின்னாக முன்னந் தமைக்காட்டிய பெற்றி யோரை
அந்நாக மீது மறைப்பார் அமுதுண்ட கள்வர். 25

வேறு

கெழிய ராகுவுங் கேதுவு மேயென
மொழிய நின்ற முதற்பெயர் தாங்கியே
விழுமி தாகிய வெய்யவ னுதியாம்
எழுவர் தம்மொ டிருவரும் ஈண்டினர். 26

ஈது நிற்கமுன் இன்னமு தந்தனை
ஆத ரத்தொ டயின்றவிண் ணோர்தொழ

ஓத வேலை யொருபுடை யாகவே
மாது ருக்கொண்ட மாதவன் வைகவே. 27

நால்வ கைப்பட நண்ணிய சத்தியுள்
மாலும் ஆதலின் மற்றது காட்டுவான்
ஆல கண்டத்தன் அச்சுதன் அச்சுறுங்
கோல மெய்திக் குறுகினன் அவ்விடை. 28

தண்டு மாய்முடி யான்தனி நாயகற்
கண்டு வெஃகக் கறைமிடற் றெம்பிரான்
உண்டெ மக்கு முனைப்புணர் காதல்நீ
கொண்ட வேடம் இனிதென்று கூறினன். 29

ஆணின் நீங்கிய அச்சுதன் ஆற்றவும்
நாணி இவ்வுரு நல்கிய தன்மையாள்
காணி யாயுனைக் காதலித் துற்றனள்
பேணி நிற்பதெ னென்னைப் பெருமநீ. 30

ஆதி காலத் தயன்செயல் முற்றிட
மாதை மேவிட வந்துனை வேண்டினங்
காத லோவன்று காரண னுகையின்
மீது சேர்தரும் வீரியன் அல்லையோ. 31

நெற்றி யங்கண் நிமல உனக்கிகல்
பற்ற தில்லையெப் பான்மையர் கண்ணினும்
அற்ற தாக என்னுகந் தழுவுவான்
உற்ற காதலும் உண்மைய தன்றரோ. 32

என்ன காரணம் எண்ணிக்கொல் ஏகினை
அன்ன பான்மை யறிகிலன் எம்பிரான்
இன்ன தாடலை நீயல்ல தேவரே
பின்னை நாடி யறிவுறும் பெற்றியோர். 33

அன்பில் ஆடவர் ஆடவ ரோடுசேர்ந்
தின்ப மெய்தி யிருந்தனர் இல்லையால்
முன்பு கேட்டது மன்று முதல்வநீ
வன்பொ டென்னைப் புணர்வது மாட்சியோ. 34

என்று மாயன் இசைத்தலும் எம்பிரான்
அன்று நீயும் நமக்கொரு சத்திகாண்
அன்று தாருகத் தந்தணர் பாங்குறச்
சென்ற போழ்தினுஞ் சேயிழை யாயினுய். 35

முன்னை வேதன் முடிந்தனன் போதலும்
உன்னொ டேவந் துவப்பொடு கூடினேம்
பின்னர் இந்தப் பிரமனை யுந்தியால்
அன்னை யாகி அளித்தனை அல்லையோ. 36

ஆகை யாலுன் அணிநலந் துய்த்திட
ஓகை யால்இவண் உற்றனன் செல்கென
மாகை யாரப் பிடிப்ப வருதலும்
போகை யுன்னிப் பொருக்கென ஓடினான். 37

நாணி ஓடிய நாரண னைப்பிறை
வேணி யண்ணல் விரைவுட னேகியே
பாணி யாலவன் பாணியைப் பற்றினான்
சேணி னின்று திசைமுகன் போற்றவே. 38

பற்றி யேகிப் படிமிசை நாவலாற்
பெற்ற தீவிற் பெருங்கடற் சார்பினின்
மற்று நேரில் வடதிசை வைப்பினில்
உற்ற சாலத்தின் ஒண்ணிழல் நண்ணினான். 39

நண்ணி யேதனி நாயகன் அவ்விடைப்
பெண்ணின் நீர்மையைப் பெற்றிடு நாரணன்
உண்ணெ கிழ்ந்து மயக்குற் றுருகியே
எண்ணில் இன்புறக் கூடினன் என்பவே. 40

மூன்று கண்ணன் முகுந்தன் இருவரும்
ஏன்று கூடிய வெல்லையில் அன்னவர்
கான்று மிழ்ந்த புனல்கண்டகி யென
ஆன்ற தோர்நதி யாகிஅ கன்றதே. 41

அந்த நீரின் அகம்புறம் ஆழிகள்
தந்து வச்சிர தந்தி யெனப்படும்
முந்து கீட முறைமுறை யாகவே
வந்து தோன்றின மாழையின் வண்ணமாய். 42

ஆய மண்ணில் அகங்கெழு பஞ்சர
மேயெ னத்தகத் திருந்து சிலபகல்
மாயும் அவ்வுயிர் மாய்ந்தபிற் கூடுகள்
தூய நேமிக் குறிகொடு தோன்றுமால். 43

நீர்த்த ரங்க நிரல்பட வீசியே
ஆர்த்தி ரங்கி அணைவுறு கண்டகித்
தீர்த்தி கைப்புனல் சென்றகக் குடம்பைகள்
ஈர்த்து வந்திடும் இம்பர்கொண் டெய்தவே. 44

அன்ன கீடம் அமர்ந்த குடம்பையை
இந்நி லத்தர்கொண் டேகி அகத்துறை
பொன்னை வாங்கிப் பொறியினை நோக்கியே
இன்ன மூர்த்தம் இஃதென நாடுவார். 45

நாடி யேயவை நாரண னாகவே
கூடும் அன்பிற் குவலயத் தேசிலர்

தேடி அர்ச்சனை செய்வர் அதன்பெயர்
கேடில் **சாலக் கிராமம** தென்பரால். 46

மாலும் எந்தையும் மாண்பொடு கூடியே
**சால மேவு தனிநக ரேயி**தன்
மூல காரணம் ஆகையின் முந்தையோர்
மேலை நாமம் அதற்கு விதித்தனர். 47

இந்த வண்ணம் இருக்க முராரியும்
அந்தி வண்ணத் தமலனு மாகியே
முந்து கூடி முயங்கிய வெல்லையில்
வந்த னன்னெமை வாழ்விக்கும் ஐயனே. 48

**மைக்க ருங்கடல் மேனியும் வானுலாஞ்**
**செக்கர் வேணியுஞ் செண்டுறு கையுமாய்**
**உக்கி ரத்துடன் ஓர்மகன் சேர்தலும்**
முக்கண் எந்தை முயக்கினை நீங்கினன். 49

அத்த குந்திரு மைந்தற் **கரிகர**
**புத்தி ர**னென னும் நாமம் புனைந்துபின்
ஒத்த பான்மை உருத்திரர் தம்மொடும்
வைத்து மிக்க வரம்பல நல்கியே. 50

புவனம் ஈந்து புவனத் திறையென
அவனை நல்கி அமரரும் மாதவர்
எவரும் ஏத்திடும் ஏற்றமும் நல்கினன்
சிவன தின்னருள் செப்புதற் பாலதோ. 51

முச்ச கத்தை முழுதருள் மேனிகொண்
டச்சு தன்றெழ அச்சுதன் போற்றிட
மெச்சி யேயவ ருக்கு விடைகொடுத்
தெச்ச மில்சிவன் ஏகினன் என்பவே. 52

நாய கன்செல நான்முகத் தோனைமுன்
தாயெ னத்தருந் தாமரைக் கண்ணினன்
சேய வைகுண்டஞ் சேர்ந்தனன் ஐயனும்
போயி னன்றன் புவனத் தரசினில். 53

அங்கண் மேவி **அரிகர புத்திரன்**
சங்கை யில்பெருஞ் சாரதர் தம்மொடும்
எங்கு மாகி இருந்தெவ் வுலகையுங்
கங்கு லும்பகல் எல்லையுங் காப்பனால். 54

மண்ண கத்தரும் வானவ ரும்மலர்
அண்ண லுந்தினம் அர்ச்சிக்கும் நீர்மையான்
கண்ண னும்புக ழப்படு காட்சியான்
எண்ணின் அங்கவ னுக்கெதிர் இல்லையே. 55

அன்ன நீர்மையன் காணென தன்பிறல்
உன்னே வந்தினிக் காத்தருள் உத்தமன்
என்ன லோடும் இசைந்துநின் றுளரோ
பொன்னி ஞடு தணந்த புலோமசை. 56

வேறு

இந்திரன் மங்கை இசைந்தது காணு
நந்தமர் கையனும் நம்பனும் நல்கு
மைந்தனை உன்னி வழுத்துத லோடும்
அந்தமி லாவெம தையன் அறிந்தான். 57

காருறழ் வெய்ய களிற்றிடை யாகிப்
பாரிடர் எண்ணிலர் பாங்குற நண்ணப்
பூரணை புட்கலை பூம்புற மேவ
வாரணம் ஊர்பவன் முன்னுற வந்தான். 58

முன்னுற மேவலும் மூவுல கோர்க்கு
மன்னவ ஞகிய வாசவன் ஐயன்
பொன்னடி தாழ்ந்து புகழ்ந்தனன் நிற்ப
என்னிவண் வேண்டும் இயம்புதி யென்ருன். 59

கேட்டலும் இன்ன கிளத்தினன் மாயை
மாட்டுறு சூரன் வருத்துத லாற்பொன்
நாட்டினை விட்டனன் நானிவ ளோடுங்
காட்டுறு வேயென வேகர வுற்றே. 60

நோற்றிவண் மேவினன் நோதகும் வானோர்
ஆற்றரி தாவவு ணன்செயும் இன்னல்
சாற்றினர் வந்து தளர்ந்தனம் எம்மைப்
போற்றுதி யென்று புலம்பின ரன்றே. 61

தள்ளரும் வானவர் தம்மொடு முக்கண்
வள்ளல் தனக்கெம் வருத்த முரைக்க
வெள்ளி மலைக்கு விரைந்துசெல் கின்றேன்
எள்ளரி தாகிய இல்லினை வைத்தே. 62

தஞ்சமி லாது தனித்திவ் வனத்தே
பஞ்சுறழ் செய்ய பதத்திமை வைத்தால்
வஞ்சகர் கண்டிடின் வெளவுவர் என்றே
அஞ்சினள் உன்றன் அடைக்கலம் ஐயா. 63

ஆத்தன் அமர்ந்த அகன்கிரி நண்ணி
வாய்த்திடும் இவ்விடை வந்திடு காறும்
பூத்திடு காமர் புலோமசை தன்னைக்
காத்தருள் என்றிது கட்டுரை செய்ய. 64

மேதகு செண்டுள வீரன் இசைப்பான்
ஏதமு றுதநின் ஏந்திழை தன்னைத்

தீதடை யாது சிறப்பொடு காப்பன்
நீதனி யென்று நினைந்திடல் கண்டாய். 65

இல்லுறு நங்கையை இங்ஙனம் வைத்தே
அல்லுறழ் கண்டன் அருங்கயி லைக்குச்
செல்லுதி யென்றருள் செய்து திரும்பித்
தொல்லையெம் மையனொர் சூழலின் உற்றான். 66

வாளமர் நீந்தி வயந்தனின் மிக்க
காளனெ னப்படு கட்டுரை யோனை
ஆளுடை அண்ணல் அருட்கொடு நோக்கிக்
கேளிவை யென்று கிளத்திடு கின்றான். 67

மூவரின் முந்திய மூர்த்தி வரைக்குப்
போவது முன்னினன் பொன்னகர் மன்னன்
தேவியி ருந்தனள் தீங்கு வராமே
காவல் கொள்நீ யெனக் கற்பனை செய்தான். 68

ஆகத் திருவிருத்தம்–1,497.

# 33. இந்திரன் கயிலை செல் படலம்

—oo—

அத்துணை தன்னில் அருந்துணை இல்லான்
மெய்த்துணை யாகிய மின்னினை நோக்கி
எய்த்திடல் ஐயன் அளிக்குவன் ஈண்டே
சித்தம் வருந்தல் எனத்தெளி வித்தான்.

மாதினை அவ்விடை மன்னுற வைத்தே
பேதுறு வானவர் பேரவை நண்ணிப்
போதுமெ னக்கொடு போந்து விரைந்தே
நாதன் அகன்கிரி நண்ணினன் அன்றே.

அந்தர வைப்பில் அமர்ந்தவர் தம்மோடு
இந்திரன் அக்கயி லைக்கிரி யெய்தி
நந்திபி ரானுறை நன்கடை சேரா
வந்தனை செய்து வழுத்தினன் நின்றான்.

நிற்றலும் வந்ததென் நீபுகல் என்னச்
சொற்றனன் அங்கது தொன்மையின் நாடி
இற்றில கொல்லுன் இருந்துய ரென்னு
நற்றவர் காணுறு நந்தி யுரைப்பான். 4

நால்வர் உணர்ந்திட நாயகன் ஞான
மூல வியோக முதற்பொருள் காட்டி

ஏல இருந்தனன் யாவரும் ஏகக்
கால மிதன்றென வேகழ லுற்றான். 5

தேறுத வஞ்செய்சி லாதனன் மைந்தன்
கூறிய வாய்மை குறிக்கொள ஓர்ந்து
**மாறியி ழிந்திடு வல்விட மற்றும்**
ஏறிய தென்ன இடர்க்கட லுற்றான். 6

இம்பரின் வாசவன் இன்னல் உழப்ப
உம்பர்கள் தாமும் உடல்தளர் வுற்றார்
தம்பம தான தடம்புணை தாழ
அம்புதி தன்னில் அழுந்திடு வார்போல். 7

செல்லல் உழந்து தியங்கிய தேவர்
எல்லவர் தம்மொடும் இந்திர னென்போன்
அல்லருள் செய்திடு நந்திபி ரான்றன்
மெல்லடி போற்றி விளம்புதல் செய்வான். 8

தூய்நெறி நீங்கிய சூரபன் மாவுக்
காயுவொ டாற்றல் அளப்பில செல்வம்
ஏயவை யாவும் இருந்தவ நீரால்
நாயகன் முந்துற நல்கினன் அன்றே, 9

நாங்கள் புரிந்திடு நல்வினை நீங்கித்
தீங்கு குறித்தெழு தீவினை சேர
ஆங்கவன் ஏவலின் அல்லலு ழந்தேம்
ஈங்கிது வும்மிறை வன்செயல் ஐயா. 10

சூனர் இயற்கை சுரர்க்கருள் செய்யும்
மாநிரு தர்க்கிறை வன்புரி துன்பம்
ஆன துணர்த்தி அடைந்தனம் என்னில்
தானது போழ்து தவிர்த்திடல் வேண்டும். 11

நீர்த்திரை போல நெறிப்பட யாங்கொள்
ஆர்த்திய கற்றி அறந்தவிர் சூரன்
மூர்த்திகொள் ஆவியும் மொய்ம்பொடு சீருந்
தீர்த்திடு கின்ற திறஞ்செயல் வேண்டும். 12

அன்னது செய்திடின் அன்பறு சூரன்
முன்னர் அருந்தவ முற்றிய காலைச்
சொன்ன வரந்தொலை யுந்தொலை வானுற்
பின்னர் அவன்சொல் பிழைத்தனன் என்பார். 13

அல்லதெம் மல்லல் அகற்றிலன் என்னில்
நல்லரு ளுக்கொரு நாயகன் என்றே
எல்லவ ரும்புகழ் ஏற்றமும் இன்றாம்
தொல்லை மறைப்படி யுந்தொலை வாமால். 14

ஆகையின் இவ்வகை ஆய்ந்தெமை யாளும்
பாக நினைந்து பரம்பொரு ளானேன்
மோகமி லார்பெற மோனக ஞான
யோகியல் காட்டி யுறைந்துள னேகொல். 15

ஈங்கிவன் அல்லதை இத்திற மாகுந்
தீங்கினை நீக்கவொர் தேவரும் இல்லை
ஓங்கிய மாலவ ரோடமர் செய்தே
ஆங்கவன் நேமியும் அற்றனன் ஐயா. 16

மூவரின் முந்திய மூர்த்தி செயற்கை
யாவதும் ஈதென அண்டரும் யானும்
பூவுல கத்திடை போந்திடின் இன்னே
தீவினை யார்சிறை செய்வது திண்ணம். 17

ஆதலின் ஆயிடை அண்டரும் யானும்
போத விலைப்புனி தன்கழல் காணத்
தீதறு வேலை தனைத்தெரி வுற்றுன்
வாய்தலின் ஓர்புடை வைகுவன் என்றான். 18

பேர்பெறு நந்திபி ரானது கேளா
ஆர்வுறும் இன்னல் அகன்றிவண் நீவிர்
சேர்வுறு மென்றருள் செய்திட ஆங்கே
ஓர்புடை வாசவன் அண்டரொ டுற்றான். 19

வானவர் கோனரன் மால்வரை தன்னிற்
போனதும் உற்றதும் ஈண்டு புகன்றாம்
மானபு லோமசை செய்கையும் அல்லா
ஏனையர் செய்கையும் யாவும் இசைப்பாம். 20

ஆகத் திருவிருத்தம்–1,517

# 34. அசமுகிப் படலம்

நீங்காதுறை தனிநாயகன் நெடுமாலயன் உணரா
ஓங்காரமு தற்பண்ணவன் உறையுங்கிரி செல்லப்
பாங்காயணங் கினர்போற்றிடப் பயில்காழிவ னத்திற்
பூங்காவனந் தனிலேசசி இருந்தேதவம் புரிந்தாள்.

சேணாடுபு ரக்கின்றவன் சிந்தித்திடு கின்ற
மாணாகிய வினைமுற்றுற வருவானறவம் புரிவாள்
காணாளவன் வருகின்றது காலம்பல தொலைய
நாணாடொறுந் தன்மேனியின் நலமாழ்குற மெலிவாள்.

கொளையாரிசை அளிபாடிய குழலிந்திரன் பிரிவால்
உளையாமனம் பதையாத்தவத் துறைநின்றதொ ரளவில்
வளையார்கலி உலகந்தனில் வாழ்சூரபன் மாவுக்
கிளையாள்பலர் இளையார்புணர்ந் தாலுஞ்சிறி திளையாள். 3

கழிகின்றதொர் கடலேபுரை காமந்தெறு நோயால்
அழிகின்றவள் எவர்தம்மையும் வலிதேபிடித் தணையும்
இழிகின்றதொ ரியல்பாள்முகில் இனம்வாய்திறந் தெனவே
மொழிகின்றதொர் கடியாள்அச முகியென்பதொர் கொடியாள். 4

பொறையில்லவள் அருளில்லவள் புகழில்லவள் சிறிதும்
நிறையில்லவள் நாணில்லவள் நிற்கின்றதொ ரறத்தின்
முறையில்லவள் வடிவில்லவள் முடிவில்லதொர் கற்பின்
சிறையில்லவள் உலகோர்க்கொரு சிறையாமெனத் திரிவாள். 5

கீழுற்றிடும் உலகெத்தனை யவையாவையுங் கிளர்ந்தோர்
வாழுற்றிடும் உலகெத்தனை அவையாவையு மாடே
சூழுற்றிடும் உலகெத்தனை அவையாவையுஞ் சுற்றி
ஊழுற்றிடு தன்னூர்தனில் ஒருநாழியில் வருவாள். 6

பொய்யுற்றவள் களவுற்றவள் புரையுற்றிடு சுரையூன்
துய்யுற்றவள் களியுற்றவள் சோர்வுற்றவள் கொலைசெய்
கையுற்றவள் விழியாலழல் காலுற்றவள் பவத்தின்
மொய்யுற்றவள் படிறுற்றவள் முனிவுற்றவள் மனத்தின். 7

பொங்குஞ்சிகை அழல்மைத்தலை புகுந்தாலென ஒளிருஞ்
செங்குஞ்சிய துடையாளெவர் செருச்செய்யினும் இடையாள்
துங்கங்கெழு தூணத்திடை தோன்றிக்கன கனைமுன்
பங்கம்படுத் துயிருண்டெழு பகுவாயரி நிகர்வாள். 8

சீயப்பெரு முகன்தாரகன் நிகராகிய திறலாள்
மாயத்தொழில் பயில்கின்றவள் மணிமால்வரை புரையுங்
காயத்தவள் அடற்கூற்றையுங் கடக்கின்றதொர் வலியாள்
தோயப்புண ரிகளேழுமொர் துணையிற்கடந் திடுவாள். 9

மாலுற்றிட வாழ்சூரபன் மாவின்கிளை முழுதும்
மூலத்தொடு முடிவித்திடு முறையூழ்வினை யென்னச்
சூலத்தினை யேந்தித்தனி தொடர்துன்முகி யுடனே
ஆலத்தின துருவாமென ஆங்குற்றனள் அன்றே. 10

கானின்றுள பொழிலோர்தனைக் காணாநனி சேணுள்
ஆநன்றென வியவாப்புவி அமர்சோலையி தன்றால்
வானின்றுள வனத்தைக்கொடு வந்தேயிவண் மகவான்
தானின்றுவைத் தானிங்கிது தப்பாதென நிற்பாள். 11

ஏலாவிது காணுயென ஈர்ந்தண்பொழில் எழிலை
ஆலாலம தெனவேவரும் அசமாமுகி யென்பாள்

பாலானதுன் முகிதன்னொடு பகராவது காட்டிக்
கோலாலம துடனேயது குறுகும்படி வந்தாள். 12

மட்டுற்றிடு தண்காவினை வருடைத்தனி முகத்தாள்
கிட்டிச்சினை நனைமாமலர் கிளையாவையும் நோக்கித்
தட்டற்றிவண் உறைகின்றவர் தமைநோக்குவ லென்னா
எட்டுத்திசை யினும்நாடுதற் கிடையுற்றனள் கடிதின். 13

அதுகண்டனன் அவண்நின்றதொ ரையன்படைத் தலைவன்
முதுகண்டகி இவளாம்அச முகியென்பதொர் கொடியாள்
எதுகண்டிவண் வருகின்றனள் என்னாகருத் திவள்தன்
கதிகண்டனன் நிற்பேனெனக் காணாநெறி யதனில். 14

மற்றிங்கிவள் செயல்யாவையும் வரலாற்றொடு காணாத்
தெற்றென்றவண் மீள்கின்றுழிச் செவ்வேயெதிர் போந்து
குற்றந்தனக் கிசையுந்திறம் முடிப்பேனெனக் **கோலைசெய்**
**விற்றங்கிய புயவேடரில்** வேறோரிடை நின்றான். 15

நின்றானவன் அதுகண்டிலள் நெஞ்சிற்களி தூங்கக்
குன்றாமுலை அசமாமுகக் கொடியாள்அவ ளுடனே
சென்றாள்மலர்க் காவெங்கணுந் திரிந்தாள்திரிந் தளவில்
பொன்றாழ்முலைச் சசிமாதவம் புரிகின்றது கண்டாள். 16

அந்தாவிவள் அயிராணிநம் மரசன்றனக் கஞ்சி
நந்தாவளந் தனைப்பெற்றபொன் னகரத்தைவிட் டிங்கே
வந்தாளிவள் தன்னைக்கொடு வருவீரென எங்கோன்
முந்தாதர முடனுய்த்தனன் முடிவற்றதன் படையே. 17

இங்குற்றதை உணராமையின் இமையோர்புரம் நாடி
அங்குற்றிலள் அயிராணியென் றரசன்தனக் குரைப்ப
வெங்கட்டழ லெனச்சீறினன் மீண்டுஞ்சிலர் தமையித்
திங்கட்புரை முகத்தாள்தனைத் தேடும்படி விடுத்தான். 18

வானெங்கணும் பிலமெங்கணும் வரையெங்கணும் பரவை
தானெங்கணுந் திசையெங்கணுந் தரையெங்கணுந் தரையிற்
கானெங்கணும் நமர்தேடினர் காணாரிவள் தன்னை
ஊனெங்கணும் வருந்தத்திரிந் துழன்றாரிது வுணரார். 19

தண்டேனமர் குளிர்பூங்குழற் சசியென்பவள் தனைநான்
கண்டேனினி இவள்மையலிற் கவலாதொழி கென்றே
வண்டோலிடு தொடைமன்னவன் மகிழ்வெய்தமுன் னுய்ப்பக்
கொண்டேகுவன் யானேயிவள் தனையென்றுகு றித்தாள். 20

இத்தேமொழி தனைஇந்திரன் ஈண்டேதனி யாக
வைத்தேகினன் இவள்தன்னை வருந்தாதளித் திடவோர்
புத்தேளிரும் இலரிங்கிது பொழுதாமவன் புகுமுன்
கொத்தேமலர்க் குழலாள்தனைக் கொடுபோவனென் றடைவாள். 21

தீனக்குரற் கடுஞ்சொல்லெனும் உருமேறு தெழிப்பக்
கூனற்பிறை எயிருகிய மின்னுப்புடை குலவக்
கானக்கரும் படிவத்தொடு கால்கொண்டெழு விசையால்
**வானப்புயல் வழுவிப்புவி வந்தாலென** வந்தாள். 22

ஊற்றங்கொடு வருதுன்முகி யுடனேயச முகிதான்
தோற்றங்கிளர் மணிவெற்பெனத் துண்ணென்றவண் வரலும்
ஏற்றம்பெற நோற்றேதனி இருந்தாளது காணாக்
கூற்றந்தனைக் கண்டாலெனக் குலைந்தாள்வலி குறைந்தாள். 23

நீரோதமி சைத்தங்கிய நிருதக்குல மகளோ
பாரோர்மயக் குறுபேய்மக ளோபாரிடத் தணங்கோ
சூரோடுறு தனிக்கொற்றவை தொழில்செய்பவள் தானோ
ஆரோவிவள் அறியேனென அஞ்சிக்கடி தெழுந்தாள். 24

எழுகின்றவள் தனைநில்லென இசைத்தேயெதிர் எய்தி
மொழிகின்றனள் அயிராணிநின் முதிராவிள நலனும்
பழியில்லதொர் பெருங்காமரும் பயனற்றிவண் வறிதே
கழிவெய்திடத் தவம்பூண்டிடல் கடனோஇது விடுநீ. 25

ஆரொப்புனக் குலகந்தனில் அருளாழியம் பகவன்
மார்பத்துறை திருமங்கையும் மற்றிங்குனக் கொவ்வாள்
பாரிற்கரந் திருந்தேதவம் பயில்வாயிதென் உன்னைச்
சேரத்தவம் புரிகின்றனன் திறற்சூரபன் மாவே. 26

இந்நாள்வரை உனைநண்ணிய இமையோர்க்கிறை உனது
நன்னாயகன் நாகப்பெரு நலனுற்றவன் அன்றே
தன்னாலுணர் வரிதென்பர்கள் தன்பேரழ கதனாற்
பன்னாள்அவ னுடன்மேவினை **பாகிற்படு கரிபோல்**. 27

தவறுஞ்சுரர் உலகொன்றுளன் சதவேள்வியன் எம்முன்
புவனம்பல அண்டம்பல புரக்குந்திரு வுளனால்
இவனங்கவன் பணியேபுரிந் திளைத்தேகரந் துழல்வான்
அவனிங்கிவன் றனையேவல்கொண் டகிலந்தனி யாள்வான். 28

அழிவில்லவன் அவனிங்கிவன் அழியும்பரி சுடையான்
பழியில்லவன் அவனிங்கிவன் பழிவேலையில் திளைப்பான்
கழியும்படர் உழந்தானிவன் களிப்புற்றுளன் அவனே
தொழுவன்பல ரையுமிங்கிவன் தொழுமோவவன் சிலரை. 29

அந்நேரில னொடுமேவுவ தறிகின்றிலை அனையான்
தன்னேவலின் ஒழுகித்திரி தமியோன்றனைத் துணையென்
றின்னேமெலிந் தனையீதுனக் கியல்போநின தெழிலுங்
கொன்னேகழிந் தனபற்பகல் குறியாயிது குணனோ. 30

எத்தேவரும் முகிலூர்தியும் இகல்மேவரும் அவுணக்
கொத்தேவரும் அணங்கோருமுன் குற்றேவல்செய் திடவே

முத்தேவரும் புகழப்படும் மொய்ம்புற்றிடு சூர்முன்
உய்த்தேயவ னொடுகூட்டுவன் உலகாண்டுடன் இருக்க. 31

பொன்னேடிகல் பங்கேருகப் பூங்கோமளை தனையும்
அன்னேன்வெறுத் திடுவன்பிறர் அனைவோரையும் அஃதே
உன்னேடௌ வறுகாதலின் உறுமிங்கிது சரதம்
என்னேடினி வருவாய்கடி தென்ருள்அறங் கொன்ருள். 32

ஆகத் திருவிருத்தம்–1,549.

# 35. இந்திராணி மறுதலைப் படலம்

—oo—

தக்க வேழகத் தலையள் கூறிய
அக்கொ டுஞ்சொலை அணங்கு கேட்டலுந்
தொக்க தன்செவித் துளையில் அங்கிவேல்
புக்க தேயெனப் பொருமி விம்மினுள். 1

கைம்ம லர்க்கொடே கடிதில் தன்செவி
செம்மி வல்வினைத் தீர்வு நாடியே
விம்மி யங்குறும் வெய்யள் கேட்டிட
இம்மெ னச்சில இசைத்தல் மேயினுள். 2

ஏடி நீயிவண் இசைத்த தீமொழி
நேடி ஓர்ந்துளார் நிரய மாநெறி
யூடு சேர்வரால் உரைத்த நிற்குமேற்
கூடு தீமையார் குறிக்கற் பாலரே. 3

வேதம் யாவையும் விதித்த நான்முகன்
காத லன்தருங் கடவுள் மங்கைநீ
நீதி யில்லதோர் நெறியின் வாய்மையைப்
பேதை யாரெனப் பேச லாகுமோ. 4

தீங்கி யாவர்க்குஞ் செய்தி டாதவர்
தாங்கள் துன்புறர் தமக்கு வேண்டினேர்
ஆங்கெ வர்க்குமுன் அல்லல் செய்வரால்
ஈங்கு நீயிவை எண்ண லாய்கொலோ. 5

தருமம் பார்த்திலை தக்க மாதவக்
கருமம் பார்த்திலை கற்பும் பார்த்திலை
பெருமை பார்த்திலை பிறப்பும் பார்த்திலை
உரிமை பார்த்திலை உறவும் பார்த்திலை. 6

பழியும் பார்த்திலை படியி கழ்ந்திடு
மொழியும் பார்த்திலை முறையும் பார்த்திலை

வழியும் பார்த்திலை வருவ பார்த்திலை
இழியுந் தீயசொல் லியம்பற் பாலையோ. 7

ஆன்ற தொல்வளன் ஆற்றல் ஆயுள்பின்
ஊன்று சீர்த்திகள் ஒருவுற் றோர்க்கிது
தோன்று நீயிவை துணியல் வாழிகேள்
சான்று நின்குலத் தருவர் யாவரும். 8

இந்தி ரற்கலால் ஏவர் பாலினுஞ்
சிந்தை வைத்திடேன் தீதில் கற்பினேன்
வந்தெ னக்கிது வகுத்தி நின்கிளை
உய்ந்தி டத்தகும் உரைய தன்றிதே. 9

நூன்மை யாவையும் நுனித்து நாடிச்செங்
கோன்மை யன்றியே கொடுமை செய்துள
மேன்மை மன்னரும் வேறு ளார்களும்
பான்மை யாற்பிலம் படுவர் திண்ணமே. 10

மீளில் வெந்துயர் வேலை சார்ந்துளான்
நாளும் நாதனென் றறைதி யார்கணுங்
கோளும் நல்லவுங் குறுகும் அல்லலும்
நாளை உங்கள்பால் நணுகு றுதவோ. 11

நீதி யாகிய நெறியி லாதவள்
ஆத லான்மிக அறிவு மாழ்கியே
தீது கூறிணுய் செவ்வி தன்றரோ
மாது நீயிது மறத்தி யுய்யவே. 12

ஏவ ரென்றனை எய்தற் பாலினோர்
தேவர் சூழ்தரக் காப்பர் சிந்தையென்
ஆவி ஐம்புலம் அளிக்கும் எங்கணுங்
காவ லுண்டுநீ கடிதிற் போகென்றாள். 13

என்ற காலையில் எயிறு தீயுகக்
கன்று சேயிதழ் கறித்து வெய்துயிர்த்
தொன்றொ டொன்றுகை உருமிற் றாக்கியே
நன்று நன்றெனு நகைத்துச் சீறினாள். 14

மறுவில் வாசவன் மனைவி கூறிய
உறுதி வெய்யவட் கூற்றஞ் செய்தில
அறிவில் பேதையாய் அலகை தேறலால்
வெறிகொள் பித்தனுக் குரைத்த மெய்ம்மைபோல். 15

ஆன காலையில் அசமு கத்தினாள்
ஊன வெந்துயர் உழக்கும் பெற்றியால்
வான வர்க்கிறை மாதை நோக்கியே
தானு ரைத்தனள் இனைய தன்மையே. 16

கிட்டி நல்லன கிளத்தி னேனெனை
ஒட்டி வந்திலை உரைத்தி மாறுனை
அட்டு நுங்குவன் அண்ணற் காகவே
விட்ட னன்இது மெய்மை யாகுமால். 17

ஆர்த்தி யாவுநீ அகல வென்னுடைச்
சீர்த்தி அண்ணர்பாற் சேறல் சிந்தியாய்
பேர்த்தி டாதுனைப் பிடித்து வன்மையால்
ஈர்த்துப் போகின்றேன் சரத மீதரோ. 18

முடிவில் ஆற்றலார் மூவர் யாவருந்
தடைசெய் கிற்பினுஞ் சமரின் ஏற்பினும்
விடுவன் அல்லன்யான் விரைவி னிற்கொடே
படர்வன் அன்னது பார்த்தி மேலெனு. 19

வெய்யள் அவ்வயி ராணி மென்கரங்
கையிற் பற்றியே கடிதின் ஈர்த்துராய்
மொய்யிற் போயினுள் முரணி லாதவள்
ஐய கோவெனு அரற்றல் மேயினுள். 20

பாவி தீண்டலும் புலம்பிப் பைந்தொடி
ஆவி போந்தென அவச மாகியே
ஓவி லாததொல் லுணர்வு மாய்ந்தனள்
காவி யொண்கணீர் கலுழத் தேம்பினுள். 21

ஐயர் கையில்வந் தவுண ரைச்செறுந்
துய்ய தீம்படை[1] தோகை கண்ணுரு
வெய்ய சூர்கிளை வீட்ட வந்தென
மையு லாயகண் வாரி மிக்கதே. 22

காசி பன்தருங் கலதி கூற்றுவன்
பாச மன்னகைப் பட்டு விம்மினுள்
வாச வன்றனி மனைவி வெங்கோலைப்
பூசை வாய்ப்படும் புள்ளின் பேடைபோல். 23

நாரி லாதவள் நலிந்து கொண்டனள்
பேரும் எல்லையில் பேதுற் றேயுளஞ்
சோரு கின்றவள் சுற்று நோக்கியே
யாருங் காண்கிலள் அரற்றல் மேயினுள். 24

ஆகத் திருவிருத்தம் - 1,573.

1 ஐயர் - அந்தணர்கள். அவுணர் - இங்குச் சந்தியா காலத்தில் இடையூறு புரியும் மாந்தேயர் என்னும் அசுரர்கள். தீம்படை - இங்கு வருணாஸ்திரங்கள்.

# 36. மகாகாளர்வரு படலம்

—oo—

பையரா அமளி யானும் பரம்பொருள் முதலும் நல்கும்
ஐயனே யோலம் விண்ணோர்க் காதியே யோலம் வெண்டார்
கையனே யோலம் எங்கள் கடவுளே யோலம் மெய்யர்
மெய்யனே யோலம் தொல்சீர் வீரனே யோலம் ஓலம். 1

ஆரணச் சுருதி யோர்சார் அடலுருத் திரனென் றேத்துங்
காரணக் கடவுள் ஓலம் கடல்நிறத் தெந்தாய் ஓலம்
பூரணைக் கிறைவா வோலம் புட்கலை கணவா வோலம்
வாரணத் திறைமேற் கொண்டு வரும்பிரான் ஓலம் என்றாள். 2

ஒய்யெனச் சசியிவ் வாற்றால் ஓலிட அதுகேட் டெங்கள்
ஐயனைக் குறித்துக் கூவி அரற்றுவாள் போலு மென்று
மையினைத் தடுத்துச் சிந்து மருத்தென வந்தா னென்ப
வெய்யரிற் பெரிதும் வெய்யோன் வீரமா காளன் என்போன். 3

சாத்தன தருளின் நிற்குந் தானையந் தலைவன் வானோர்
வேத்தவை யான வெல்லாம் வியத்தகு வீரன் உந்தி
பூத்தவன் முதலோர் யாரும் புகழுவெவ் விடத்தை யுண்டு
காத்தவன் நாமம் பெற்றோன் காலற்குங் காலன் போல்வான். 4

இருபிறை செலிந்திட் டன்ன இலங்கெழில் எயிற்றன் ஞாலம்
வருமுகில் தடிந்தா லென்ன வாள்கொடு விதிர்க்குங் கையன்
உருமிடிக் குரல்போல் ஆர்க்கும் ஓதையன் உரப்புஞ் சொல்லன்
கரவிழைத் தெங்ஙன் போதி நில்லெனக் கழறி வந்தான். 5

கொம்மென வந்த வீரன் கூவிய சசியை நோக்கி
அம்மனை அழுங்கல் வாழி அசமுகி யெனும் வெய்யாட்
கிம்மியின் துணையும் அஞ்சேல் ஈண்டுனைத் தீண்டு கின்ற
கைம்முறை தடிந்து வல்லே விடுவிப்பன் காண்டி யென்றான். 6

வீரன துரையைக் கேளா மெல்லியல் அணங்கின் நல்லாள்
பேரிடர் சிறிது நீத்துப் பெயலுறு துவலை தூங்கு
மாரியின் செலவு கண்ட வளவயற் பைங்கூழ் போல
ஆருயிர் பெற்றாள் மற்றை அசமுகி அவனைக் கண்டாள். 7

ஓவரும் புவனம் யாவும் ஒருங்குமுத் தொழிலும் ஆற்றும்
மூவருந் துறக்கம் வைகும் முதல்வனுந் திசைகாப் பாளர்
யாவரும் என்முன் நில்லார் ஈண்டெனை இகழ்ந்து சீறித்
தேவர்தங் குழுவி னுள்ளான் ஒருவனோ செல்வ னென்றாள். 8

வெறித்திடு கண்ணில் நோக்கி வெவ்விதழ் அதுக்கி வல்லே
கறித்தனள் எயிற்றின் மாலை கறகற கலிப்ப ஆர்த்தது
முறித்திவன் தன்னை யுண்டு முரண்வலி தொலைப்ப னென்னுக்
குறித்தசமுகத்தி நிற்பக் குறுகினன் திறல்சேர் வீரன். 9

தட்டறு நோன்மை பூண்ட சசிதனைத் தமிய ளென்றே
பட்டிமை நெறியாற் பற்றிப் படருதி இவளை யின்னே
விட்டனை போதி செய்த வியன்பிழை பொறுப்பன் நின்னை
அட்டிடு கின்ற தில்லை அஞ்சலை அரிவை யென்றான். 10

கேட்டலும் உருத்திவ் வார்த்தை கிளத்தினை நின்னை யாரே
ஈட்டுடன் இவளைப் போற்றென் றிப்பணி தலைதந் துள்ளார்
வேட்டனன் அவரைக் கேட்ப விளம்புதி யென்றாள் முந்தும்
மாட்[  ] கனலி யென்னத் தன்குலம் முடிப்பான் வந்தாள். 11

தாரணி முதல மூன்றுந் தலையளி புரிந்து காப்பான்
காரணி செறிந்துற் றன்ன கரியவன் கடவுள் வெள்ளை
வாரண முடைய ஐயன் மற்றிது பணித்தான் என்பேர்
வீரரில் வீரனை வீரமா காளன் என்றான். 12

என்றலும் அனைய வாய்மை இந்திரன் தனக்கும் ஈசன்
பொன்றிரண் மார்பன் நல்கும் புதல்வற்கும் பொதுமைத் தாகி
நின்றது வாகத் தேவர் நிருதரால் வருந்தும் ஊழாற்
சென்றவன் மகவான் ஏவ லாளெனச் சிந்தை செய்தாள். 13

புந்தியில் இதனை யுன்னிப் பொள்ளெனச் சினமீக் கொள்ள
இந்திரன் தொழுவன் கொல்லாம் எனையிடை தடுக்கு நீரான்
சிந்துவன் இவனை யென்னாச் செங்கையிற் சூலந் தன்னை
உந்தினள் அதுபோய் வீரன் உரனெதிர் குறுகிற் றன்றே. 14

குறுகுமுன் வருத லோடுங் குரூஉச்சுடர் அங்கி மூன்றும்
முறையினே டிடையுற் றன்ன முத்தலைப் படையைக் காணூஉ
அறைகழல் வீரன் தொன்னாள் அங்கியை அட்ட தேபோல்
எறிகதிர் வாளால் மைந்தன் இருதுணி படுத்தி னானே. 15

படுத்தலும் மணிகள் நீலப் பையரா உமிழ்ந்த தென்னக்
கடித்திடும் எயிற்றுப் பேழ்வாய்க் கருங்கணம் அழல்கான் றென்ன
விடுத்திடு கொண்மூ வின்பால் எழுந்தமின் னென்ன அன்னாள்
விடுத்திடு சூல வைவேல் வெவ்வழல் பொழிந்த தன்றே. 16

காலத்தின் உலகம் உண்ணக் கடலுறு வடவை தானே
ஆலத்தை மீது பூசி அசமுகி கரத்திற் கொள்ளச்
சூலத்தின் அமைந்த தம்மா சோதனை கொடுப்ப னென்னாச்
சீலத்தின் மிக்கோன் கூர்வாள் செந்தழல் பொழிவித் தன்றே. 17

சூளினார்த் தெறியும் வீரன் சுடர்கொள்முத் தலைவேல் தன்னை
வாளினால் தடித லோடும் மறிமுகத் தணங்கு சீறிக்
கேளினால் தனது பாங்கிற் கிடைத்ததுன் முகிகைச் சூலங்
கோளினாற் கடிது வாங்கிக் கூற்றனும் உட்க ஆர்த்தாள். 18

வசிகெழு சூலம்பற்றி மருத்துவன் துணைவி யான
சசிதனை [ ]குளை யாகுந் தையல்தன் கரத்திற் சேர்த்தி

நிசியின்மால் பாந்த ளோடு நெடுங்கதிர் நேர்புக் கென்ன
விசையொடு கொடியள் சென்றாள் வீரமா காளன் தன்மேல். 19

ஒற்றைமுத் தலைவேல் தன்னை ஒப்பிலான் மரும மீது
குற்றிய முன்னி நீட்டிக் குறுகினள் அமர்செய் போழ்திற்
கற்றையஞ் சுடர்க்கூர் வாளாற் காவலன் எறித லோடும்
இற்றது சூலங் கண்ட அசமுகி இடைந்து போனாள். 20

இடைந்தனள் ஏகி ஆண்டோர் இருங்கிரி பறித்திட் டின்னே
முடிந்தனை போலு மென்னா மொய்ம்புடன் அவன்மேல் ஓச்சத்
தடிந்தனன் தடித லோடுந் தாரைவாட் படையும் வல்லே
ஒடிந்தது கொடியள் காணா ஒல்லொலிக் கடல்போல் ஆர்த்தாள் 21

வீரமா காள கேண்மோ வேதனே ஆதி விண்ணோர்
ஆரும்வந் தாசி கூற அகிலமும் ஆளு கின்ற
சூரனும் எமது முன்னோன் தோளிடை உய்ப்பக் கொண்டு
பேருவன் இவளை யோராய் விலக்கினை பேதை நீராய். 22

தடுத்திடல் முறைய தன்றால் தாரகன் தானை வீரர்
அடுத்திடிற் படுப்பர் கண்டாய் அன்றியும் யானே நின்னை
எடுத்தனன் மிசைவன் துய்க்கின் இரும்பசி யுலவா தென்னா
விடுத்தனன் உய்ந்து போதி விளிவுறேல் எளியை யென்றாள். 23

பாதகி இனைய மாற்றம் பகர்தலும் வீரன் கேளா
வேதியின் நினது சூலப் படையிற எறிந்தேன் நின்னை
மாதென அடாது நின்றேன் மற்றிதை உணர்ந்து வல்லே
போதியால் இவளை விட்டுப் போக்கலை கரத்தை யென்றான். 24

என்றலுங் கொடியள் கேளா ஈங்கிவன் வாளு மின்றி
நின்றனன் இவனோ டேபோர் நேருதல் நெறிய தன்றால்
அன்றியும் இவனை வெல்லல் அரிதினிச் சசியைக் கொண்டு
சென்றிடல் துணிபா மென்னாத் திரும்பினள் சேடி தன்பால். 25

துன்முகி யாகி நின்ற துணைவிதன் சிறைப்பட் டுள்ள
பொன்மிகும் யாணர் மேனிப் புலோமசை தனைத்தான் பற்றிக்
கொன்மலி அம்பொன் மேருக் குவட்டினைக் கொடுபோங் காலின்
வன்மையி னோடு கொண்டு மறிமுகத் தணங்கு போனாள். 26

போகலும் அதனை ஐயன் பொருநரில் தலைவன் பாரா
ஏகுதி போலும் நில்லென் றெய்தியே உடைவாள் வாங்கிச்
சேகுறு மனத்தாள் கூந்தல் செங்கையாற் பற்றி யீர்த்துத்
தோகையைத் தொட்ட கையைத் துணித்தனன் விண்ணோர் துள்ள.27

இருட்டுறு பிலத்துற் றோரை எடுத்துவெள் ளிடையிட் டென்ன
மருட்டுறு மதிய ளாகி வருந்திய சசியென் பாளை
அருட்டிறத் தோடு வீடு செய்துபின் அவுண மாதை -
உருட்டினன் றனது தாளால் உருமென உதைத்துத் தள்ளி. 28

அயமுகி வீழ்த லோடும் அழுங்கியே அயலின் நின்ற
வயமிகு துன்மு கத்து மங்கைதன் கரத்தி லொன்றைச்
செயிரறு சசியை நீயுந் தீண்டினை போலு மென்னாத்
துயல்வரு தொடையல் வீரன் துணித்தனன் சோரி பொங்க. 29

வேறு

மதர்த்திடு துன்முகி வன்கை வாளினாற்
சிதைத்திடு மொய்ம்புடைச் சேனை காவலன்
உதைத்தனன் அனையளும் ஓவென் றேயுளம்
பதைத்தனள் புலம்பியே படியில் வீழவே. 30

ஆகத் திருவிருத்தம்–1,603.



# 37. அசமுகி சோகப் படலம்

—oo—

அறைபடு கழலினான் அவுண மாதர்கை
எறிதலுங் குருதிநீர் எழுந்த தன்மையால்
திறல்கெழு வெய்யசூர் திருவைச் சுட்டிடுங்
குறைபடு ஞெகிழியின் கோலம் போலுமே. 1

திரைந்தெழு குடிஞைபோல் குருதி சென்றிடக்
கரந்துமி படுதலுங் கவன்று வீழ்ந்தனள்
வருந்தினள் அரற்றினள் மறிமு கத்தினாள்
விரிந்திடு கனலுடை வேலை போன்றுளாள். 2

மருண்டனள் பதைத்தனள் மறித்த கையினள்
வெருண்டனள் நிலனுற வியன்கை எற்றினள்
உருண்டனள் வெரிநுடன் உரமுந் தேய்வுறப்
புரண்டனள் செக்கரிற் புயலிற் றோன்றுவாள். 3

புரந்தரன் தேவியைப் பொம்மெனப்பிடித்
திரந்தரு வாயிலிட் டுண்பன் ஈண்டெனா
விரைந்தெழும் சென்றிடும் மீளும் வீழ்ந்திடும்
இருந்திடும் சாய்ந்திடும் இரங்குஞ் சோருமே. 4

கடித்திடும் இதழினைக் கறைகண் மீச்செலக்
குடித்திடும் உமிழ்ந்திடும் குவல யத்திரீஇத்
துடித்திடும் பெயர்ந்திடும் துளக்குஞ் சென்னியை
இடித்தெனக் கறித்திடும் எயிற்றின் மாலையே. 5

திகைத்திடும் நன்றுநஞ் செய்கை ஈதெனா
நகைத்திடும் அங்குலி நாசி யில்தொடும்
புகைத்தென உயிர்த்திடும் புவியைத் தாள்களால்
உகைத்திடும் புகையழல் உமிழும் வாயினால். 6

உம்மென உரப்பிடும் உருமுக் கான்றென
விம்மெனச் சினத்திடும் எரிவி ழித்திடுந்
தெம்முனைப் படையடுஞ் சேனை வீரனை
விம்மிதப் படுமுடல் வியர்க்கும் வெள்குமே. 7

அற்றிடு கரத்தினை அறுத கையினால்
தெற்றென எடுத்திடும் தெரிந்து நோக்கிடும்
ஒற்றிடும் விழிகளில் உகுக்குஞ் சோரிநீர்
[illegible]றவர் பட்டனர் என்னின் என்னுமே. 8

வீவதே இனியெனும் வினையி னேன்றனக்
காவதோ இஃதெனும் ஐய கோவெனும்
ஏவரும் புகழ்தரும் எங்கள் அண்ணர்பாற்
போவதெவ் வாறெனப் புலம்பு கொள்ளுமே. 9

காசினி தனில்வருங் கணவர் கைதொடக்
கூசுவ ரேயெனுங் குறிய பங்கெனப்
பேசுவ ரேயெனும் பிறரும் வானுளோர்
ஏசுவ ரேயெனும் என்செய் கேனெனும். 10

தேவர்கள் அனைவருஞ் சிந்தித் தென்கரம்
போவது புணர்த்தனர் பொன்று வேன்இனி
ஆவதன் முன்னரே அவரை யட்டுல
கேவையும் முடிப்பனென் றெண்ணிச் சீறுமே. 11

பாருயிர் முழுவதும் படுத்தி டோவெனும்
ஆரழல் வடவையை அவித்தி டோவெனும்
பேருறு மருத்தினைப் பிடித்தி டோவெனும்
மேருவை அலைத்தனன் வீட்டு கோவெனும். 12

பீளுறும் எழிலிகள் பிறவும் பற்றியே
மீளரி தெனும்வகை மிசைந்தி டோவெனும்
நாளினை முழுவதும் நாளு டன்வருங்
கோளினை முழுவதுங் கொறித்தி டோவெனும். 13

சீர்த்தகை இழந்தியான் தெருமந் துற்றது
பார்த்திக ழுங்கொல்இப் பரிதி வானவன்
ஆர்த்திடுந் தேரொடும் அவனைப் பற்றியே
ஈர்த்தனன் வருவதற் கெழுந்தி டோவெனும். 14

கண்டதோர் பரிதியைக் கறித்துச் சூழ்ச்சிசெய்
அண்டர்கள் யாரையும் அடிசி லாகவே
உண்டெழு கடலையும் உறிஞ்சிக் கைபுறத்
தெண்டிரை தனிற்கழீஇத் திரும்பு கோவெனும். 15

செங்கலம் நீடிய தென்னங் காயிடைத்
துன்னிய தீம்பயன் சுவைத்திட் டாலெனப்

பின்னுறு மதியினைப் பிடித்துக் கவ்விமெய்
இன்னமிர் தினை நுகர்ந் தெறிகெ னேவெனும். 16

இந்திரன் களிற்றினை ஏனைத் தந்தியைச்
செந்துவர்க் காயெனச் சேர வாய்க்கொளா
ஐந்தரு இலைகளா அவற்றுள் வெண்மலர்
வெந்துக ளாக்கொடு மிசைகெ னேவெனும். 17

தாக்குகோ பணிகளைத் தலைகி ழக்குற
நீக்குகோ பிலம்படு நிலயத் தோரையுந்
தூக்குகோ புவனியைச் சுழற்றி மேலகீழ்
ஆக்குகோ மாலென அருந்து கோவெனும். 18

வேறு

ஆரும் அச்சுற இனையன அசமுகி வெய்யாள்
சூரன் தங்கைமா லுளத்தினள் இறப்பது துணிவாள்
பேரிடும் பையள் தொலைவுறு மானமே பிடித்தாள்
வீர வன்மையள் ஆதலின் உரைத்தனள் வெகுண்டாள். 19

வெகுளு மெல்லையில் கண்டனள் துன்முகி வெய்ய
தகுவர் தங்குலத் துதித்தனள் ஆயினுந் தகவின்
புகுதி சால்புணர் புந்தியள் ஆதலிற் பொருக்கென்று
இகுளை முந்துற வந்தனள் இனையன இசைத்தாள். 20

வைய மென்செயும் வானக மென்செயும் மற்றைச்
செய்ய வானவர் என்செய்வர் வரைகளென் செய்யும்
ஐய மால்கடல் பிறவுமென் செய்திடும் அவனால்
கையி ழந்திடின் உலகெலாம் முடிப்பது கடனே. 21

பாரும் வானமுந் திசைகளும் பல்லுயிர்த் தொகையுஞ்
சேர வேமுடித் திடுவதை நினைந்தனை செய்யின்
ஆரும் நின்றனை என்செய்வர் அவையெலா முடைய
சூர னேயுனை முனிந்திடும் அவன்வளந் தொலையும். 22

ஆத லான்மனத் தொன்றுநீ எண்ணலை அவுணர்
நாத னாகிய வெய்யசூர் முன்னுற நாம்போய்
ஈதெ லாஞ்சொலின் இமையவர் கிளையெலா முடிக்கும்
போத லேதுணி வென்றனள் பின்னரும் புகல்வாள். 23

வேறு

ஞானமில் சிறுவிதி நடாத்தும் வேள்வியில்
வானவர் தங்களின் மடந்தை மார்களில்
தானவர் தங்களில் தத்தம் மெய்களில்
ஊனமில் லோரையாம் உரைக்க வல்லமோ. 24

நினைவருங் கண்ணுதல் நிமலற் கேயலால்
அனையனை அடைதரும் அறிஞர்க் கேயலால்

ஏனவகை யோர்க்கும்எவ் வுயிர்க்கும் ஏற்பதோர்
வினைபடும் இழிதுயர் விட்டு நீங்குமோ. 25

ஆகையின் மங்கைநீ அரற்றல் வெள்கியே
சோகமுங் கொள்ளலை துயரும் இன்பமும்
மோகமும் உயிர்க்கெலாம் முறையிற் கூடுமால்
ஏகுதும் எழுகென இயம்பித் தேற்றினாள். 26

வேறு

மொழிந்து துன்முகி தெளித்தலும் நன்றென முன்னா
எழுந்து துண்ணென அசமுகி என்பவள் இலதாய்க்
கழிந்த துன்பொடு நின்றதோர் சசியினைக் காணாஉ
அழிந்த மானவெந் தீச்சுட இனையன அறைவாள். 27

துப்பு றுத்திய அண்டங்கள் யாவினுஞ் சூரன்
வைப்பு றுத்திய திகிரியும் ஆணையும் வழங்கும்
இப்பு றத்தினில் ஒளிப்பினும் இதுவன்றி அண்டத்
தப்பு றத்தினில் ஒளிப்பினும் பிழைப்புமக் கரிதே. 28

மறைத லுற்றிடும் இந்திரன்
உறைத லுற்றிடும் உன்றனை ஒழிந்தவா னவரை
இறைத னிற்பற்றி ஈர்த்துப்போய் என்னகர் தன்னில்
சிறைப டுத்துவன் திண்ணமெங் கோமகன் செயலால். 29

உங்கள் தம்மையான் சிறைபடுத் தேன்எனின் உலகம்
எங்கு மாள்கின்ற சூரபன் மாவெனும் இறைவன்
தங்கை யன்றியா னெனதுரந் தனிலெழுந் தனவுங்
கொங்கை யன்றியான் பேடியே குறிக்கொளென் றகன்றாள். 30

ஆகத் திருவிருத்தம் - 1,633.

# 38. ந்திரன் ப்படலம்

அகல நின்றதோர் வீரமா காளனும் அடலோன்
உகவை யோடுறு சசியினை நோக்கிநின் னுள்ளத்தில்
தகுவர் தங்களுக் கஞ்சலை அன்னையுன் தலைவன்
புகுதும் எல்லையும் அளிப்பன்ஈண் டுறைகென்று போனான். 1

போன காலையிற் புலோமசை அடவியம் புறனோர்
மானி னம்பிரிந் துற்றென அவ்வனம் வைகிக்
கோன வன்வினை முற்றிய நோற்றனள் குறிப்பால்
ஆன பான்மையை நாரத முனிவரன் அறிந்தான். 2

மேலை வெள்ளியம் பருப்பதந் தனில்விரைந் தேகிச்
சீல விண்ணவர் தம்முடன் சிவனடி பரவக்
கால மின்றியே இருந்திடும் இந்திரன் கடைபோய்
ஞாலம் வைகிய புலோமசைக் குற்றவா நவின்றான்,

நவின்ற வாசகங் கேட்டலும் மகபதி நனியுட்
கவன்று தேறியே முனிந்துபின் இறையருள் கருதி
அவன்றன் மாமுறை தூக்கியே தன்னைநொந் தழுங்கித்
துவன்ற தேவரோ டெழுந்தனன் அரன்புகழ் துதித்தே. 4

வந்து நந்தியெம் மடிகளின் அடிமுறை வணங்கி
அந்த மில்பகல் வேலைநோக் குற்றனம் அமலன்
சிந்தை செய்தெமை யருள்புரிந் திடுகிலன் தீயேம்
முந்தி யற்றிய தீவினைப் பகுதியை முன்னி.

கைம்மை யாம்பெயர் அணங்கினோர் பெருவகை கறுத்த
செம்மை யார்களத் தெம்பிரான் எமக்கருள் செய்வான்
பொய்ம்மை தீர்தவம் இயற்றிட நிலமிசைப் போதும்
எம்மை யாங்கருள் புரிந்தனை விடுத்தியென் றியம்ப.

நன்று போமென நந்தியெம் பெருந்தகை நவிலத்
துன்று வானவர் தம்மொடுங் கழுமலந் துன்னி
நின்ற வீரமா காளனைக் கண்டனன் நேர்போய்ச்
சென்று புல்லியே முகமன்லூர் அளப்பில செப்பி.

போதி ஐயவென் றனையனை ஐயன்பாற் புகுத்தி
மாது நோற்றுழிக் குறுகியே அவள்துயர் மாற்றிக்
கேதம் எய்திய அசமுகி சூளுரை கேளா
ஏது செய்வதென் றுன்னினன் இமையவர்க் 8

சுடர்ப்பெ ருங்குலி சத்திறை சூழ்ந்தனன் துணியா
அடுத்த மங்கையை யுடன்கொடே விரைந்தவண் அகன்று
புடைக்கண் வந்திடுங் கடவுளர் தம்மொடும் புராரி
எடுத்த வார்சிலைப் பொற்றையிற் கரந்தனன் இருந்தான். 9

ஆகத் திருவிருத்தம்–1,642.

# 39. சூரன் அரசிருக்கைப் படலம்

—oo—

இன்ன பான்மையின் மகபதி இருந்தனன் இப்பால்
முன்ன மேகிய அசமுகி வெய்யதுன் முகத்தாள்
தன்னொ டேகியே மகேந்திரத் தனிநகர் அடைந்தாள்
அன்ன காலையிற் சூரன்வீற் றிருந்தவா றறைவாம்.

வேறு

மீயுயர் கின்ற விண்ணினின் றிழிந்த விழுமிய மேதினி வரைப் பின், ஆயிர கோடி கொண்டவண் டத்தில் ஆடகப் பித்திகை அவற்றுள், தீயன விலக்கி நல்லன எடுத்துத் திசைமுகத் தவர்கள் செய் தென்ன, ஒய்வற விளங்கு தபனியப் பொதுவொன் றோராயிரம் யோசனை யுறுமே. 2

இத்தரை யுளதாந் தொல்லைஅண் டத்தில் இடையிடை எய்தியே இலங்கும், அத்தமால் வரைகள் கைபுனைந் தியற்றி அம்புயா சனர் பலர் கூடி, வைத்தெனச் சூரன் அரசியல் நடாத்தும் மன்றினில் ஆயிர கோடி, பத்தியின் நிறுவும் ஆடகத் தூணம் பரந்ததப் பெருமையார் பகர்வார். 3

தொல்லையண் டத்தின் கண்டொறுங் கெழீஇய சுவணமா தரை யெலாந் தொகைசெய், தல்லன விலக்கி நல்லன தெரிந்தே அமைத்த போல் அணிபெறு நிலத்தில், ஒல்லுறு புடையில் உம்பரில் அங்கண் உலப்பிலாக் குலகிரிக் குழுவிற், பல்லிருந் துணிசெய் தணிபடுத் தென் னப் பன்னிற ஓவியம் பயிலும். 4

பொன்னுலா அண்டத் தும்பர்க டோறும் பொருந்திய செக்கர் வான் புராரி, தன்னதா ணையினால் ஒருங்குசூழ்ந் தென்னத் தண்மலர் விதானமீத் தயங்கப், பன்னிரு கோடி யாகியெங் கணுஞ்சூழ் பகல வர் சிலவரே யன்றி, அன்னவர் பலரும் பணியிலுற் றென்ன அணி மணிக் கண்ணடி ஒளிரும். 5

மண்ணுலா அண்டத் திரவிகள் என்றாழ் வரம்பிலா மதிகளின் உளவாந், தெண்ணிலாக் கற்றை ஐம்பெரு நிறத்த செல்லினம் யாவையுஞ் செறிந்தே, அண்ணலார் மேலைக் கம்பலஞ் சூழ்போய் அமர்ந்தென ஆயிடைக் கவரி, எண்ணிலா தனவும் பஃறுகிற் குழுவும் இடைவிராய் மிடைவன எங்கும். 6

பரக்குறும் அண்டந் தொறுந்தொறும் உளவாம் பகலினைப் பரி முகத் தெரியின், உருக்கியொன் றாக்கித் தவிசென இயற்றி ஒளிறுதா ரகையவட் குயிற்றித், தருக்குறு கின்ற மதிகளை மடங்கல் தகவுசெய் திருத்திய தென்னத், திருக்கிளர் அவையத் தவுணர்கோன் இருப்பச் சிறந்ததோர் அரியணை திகழும். 7

ஆனதோர் மன்றத் தரியணை மிசையே ஆயிர கோடியண் டத் தின், மேனிமிர் வடவை அங்கியும் விடமு மிசைந்தமீ யாநெறி மேவித், தானவர் பரவக் கூற்றெலா மொன்றாய்த் தணப்பில்பேர் அணிகலந் தயங்க, வானிமிர்ந் துற்றூ லென்னவெஞ் சூர மன்னவர் மன்னன்வீற் றிருந்தான். 8

மேலைநாள் அமலன் உதவுபல் லண்டம் மேவர நடாத்துதொல் லாணைக், கோலொடு வெளிய சீர்த்திகள் முழுதுங் குறுகியே ஈருருக் கொண்டு, பாலுற வந்து நின்றதே யென்னப் பாங்கரில் அவுணர்கள்

தாங்கும், வாலிய துணைசேர் தவளவெண் கவிகை மாமதிக் கடவுளை மலைய. 9

காருறழ் படிவத் துவரிகள் அனைத்துங் கண்ணகன் பாற்கடல் முழுதும், ஈருரு வெய்தி யெழுந்துமே லோங்கி இருந்தென வைகலுஞ் செலுமத், தாரக விறலோன் பஃறலைச் சீயத் தலைமையான் சார்ந்தயல் இருப்ப, ஆரழல் உருவப் பண்ணவ ரேபோல் அமைச்சருங் குமரரும் அமர. 10

எவ்வெலா அண்டத் துறைதரு மருத்தும் இரும்புனற் கிறைவரு மாகிச், செவ்விதின் ஒருங்கித் தத்தமில் உலவாச் சீகரம் படுபனி சிதறி, அவ்வயின் வேண்டும் அளவையிற் பலவாய் அவனடி பணிந் தெழுந் திறம்போல், மைவரை யனைய அவுணர்கள் இரட்டும் வாலிய கவரிகள் வயங்க. 11

உரைத்திடும் அண்டந் தொறுந்தொறும் உள்ள உம்பரில் இயக்கர் கோன் உலகில், தரைப்பெரு வரைப்பில் பிறவிலுள் ளதனில் தவறிலா அற்புதத் தனவாத், தெரித்தனர் எடுத்துப் போதிந்தென நறிய திரையன்மெல் லிலைதுவர்ப் பழுக்காய், விரைத்திடு சுண்ணங் கொள் கலம் பரியா வினைமுறை யோர்பலர் விரவ. 12

நின்றதோ ரேனை அருக்கருட் சிலரை நீரமுய்த் துள்ளகோ டிக மேற், பொன்றரை யுமிழின் மணிசொரிந் தென்னப் புகட்டுறு தம்பலக் களாசி, மன்றதொல் லறிவர் திருத்தினர் பொருவ மற்றவை அவுணர்க ளேந்தித், துன்றிருந் துவர்க்கா யடைபிற பரிக்குந் தொழுவர் தங் குழுவொடு துவன்ற. 13

ஆழியங் கிரியிற் கதிர்மணி வெயிலும் அன்னது சூழ்ந்தபேர் இருளும், வாழிய அமுதும் உவரியும் அல்லா வாரிதி யும்பல மணியும், ஊழியி னிறுதி அமையமே லெல்லாம் ஒன்றிய தென்னமுன் னிருபால், கேழுறு பின்னர் அவுணர்மாத் தலைவர் கிளையொடு துவன்றினர் கெழும. 14

மின்னவிர் விசும்பின் அகட்டினை அளவி வெண்மதிக் கடவுண் மெய் யணுகிப், பின்னுறும் அமுத நீர்க்கடல் திளைத்துப் பெரும்புறப் புணரியிற் படியா, இந்நில மருங்கில் வானகத் துள்ள எழின்மலர்க் காவுதோ றுலாவித், தன்னெறி யின்றி மென்மெல அசைந்து தண்ணென வசந்தன்முற் சார. 15

விண்படு நிறைநீர்ப் புதுமதிக் கடவுள் வியன்பனித் துவலையைத் துற்றுக், கண்படு துறக்கத் தண்டலைப் பொதும்பிற் காமரம் போதிடைக் கவிழ்த்தி, எண்படு பன்னாள் கழித்தபின் கவர்ந்தே எழிலிகள் கரந்துநின் றீண்டைத், தண்பனி உறைப்பிற் கண்ணுறுத் துவலை தணப்பறச் சிதறிடத் தம்மில். 16

தேனமர் ஐம்பால் உருப்பசி அரம்பை திலோத்தமை மேனகை முதலாம், வானவர் மகளிர் இயக்கர்தம் மகளிர் வலிகெழும் அரக்கர்

தம் மகளிர், தானவர் மகளிர் விஞ்சையர் மகளிர் சாரணர் சித்தர்தம் மகளிர், ஏனையர் மகளி ரியாவரும் வெவ்வே றியற்படு களிநடம் இயற்ற. 17

துருவங் காலையில் உரைப்பான் அமையமின் றுகியே வேதா, வந்தொரு புடையில் ஒதுங்கினன் இருப்ப மற்றவன் உதவு றுங் குமரர், நந்துறு பெருநீர்க் குடங்கரிற் கன்னல் நாடினர் நாழி கைப் பறையை, முந்துற விரட்டிப் பதந்தொறுஞ் சென்று முறை முறை உரைத்தனர் திரிய. 18

தேர்த்திடும் உழுவைச் சூழலிற் சிலமான் சென்றென அவுணர் தஞ் செறிவில், வேர்த்துடல் பதைப்ப வரும்பல முனிவர் வேறுவே றுசிகள் இசையா, ஆர்த்திடும் ஒலியாற் கேட்டில வாமென் றஞ்சினர் அவருறு புலத்தைப், பார்த்திடுந் தோறும் வாழ்கெனப் புரவிப் பாணியை விரித்தனர் நிற்ப. 19

திருக்கிளர் பொன்னாட் டிந்திரன் அல்லாத் தேவர்கள் யாவரும் அவுணர், நெருக்கினர் உந்த ஏகிநேர் புகுவோர் நெடுங்கடை காறு முன் றள்ள, வெருக்கொடு சென்று மீண்டுமற் றுகி வியன்கடை காவ லர் புடைப்பத், தருக்குறும் அவையங் காணிய பெருது தம்முளங் குலைந்தனர் திரிய. 20

வெற்றவெங் கதத்தர் அவுணர்கஞ் சுகிசேர் மெய்யினர் வெறுக் கையஞ் சூரல், பற்றிடு கரத்தார் செல்லெனுந் தெழிப்பர் பணிப்பிறை எயிற்றர் பல்லிமையோர், பொற்றட மகுடஞ் சிதறிடப் புடைப்போர் புயலுறு சூறையிற் றுரந்துஞ், சுற்றுற நிறுத்தும் இருத்தியும் புகுந் தோர் தொல்பெயர் செப்பிமுன் துதிப்ப. 21

பொன்றிகழ் கமலத் திதழெலாம் விரிந்த போதினிற் பொகுட் டிடை தோறும், மின்றிகழ் நுசுப்பில் திருமகள் பலராய் வீற்றுவீற் றிருத்தலே போலக், குன்றுறழ் கொங்கை மங்கையர் பல்லோர் கொண்டுதன் னுறையுளிற் சென்று, துன்றிய பலவாங் தீபிகைத் தட் டஞ் சொன்முறை யாசியிற் சுற்ற. 22

தென்னுறு **பாலை குறிஞ்சியே மருதஞ்** செவ்வழி யென்னுநா னிலத்திற், பின்னகம் புறமே அருகியல் மற்றைப் பெருகியல் உறழ வெண் ணிரண்டாய், மன்னிய நாதத் திசைகளிற் பிறவில் வரம்பில வாயபாட் டதனுட், கின்னரர் சித்தர் இயக்கர்கந் தருவர் கிளத்துமங் கலத்தன இசைப்ப. 23

மாகநல் வேள்வி ஆற்றிய திறனும் மதிமுடிப் பரனருள் அடைந்தே, ஏகிய திறனுந் தனதனை முதலா யாரையும் நிலையழித் தனவுஞ், சேகுறும் அண்டம் யாவையுங் கண்டு திருவுடன் அரசியற் றியதும், பூகத நிலையத் தவுணர்கள் பல்லோர் புடைதனில் முறை முறை புகழ. 24

கார்த்திடும் அவுணர் திசையுளா ரேனோர் கைதொழூஉத் தனது நோன் கழற்கால், தூர்த்திடு மலருந் தொல்பெருங் கவியுந் தூநெறி

முனிவரர் தொகையுஞ், சார்த்தினர் வரையா மந்திர நெறியால் தலைத்தலை யாசிகள் சாற்றிச், சேர்த்தனர் சிந்துந் துணருமக் கதமுஞ் சிர்த்தகால் வீசினன் திரிய. 25

ஆடியல் முறையை இயற்றினர் தமக்கும் அடைந்துதற் புகழுநர் தமக்கும், பாடியல் முறையில் வல்லுநர் தமக்கும் பரிவுசெய் தலைவர்கள் தமக்கும், பீடுறு மகுடங் கடகநூல் முதலாம் பேரணி மணித் துகில் பிறவும், மாடுறு நிதியும் ஏனவும் நின்று மலர்க்கைநீட் டினதொறும் வழங்க. 26

தேவரும் ஏனை முனிவரும் பிறருஞ் செய்துறுத் தங்கள்பா லன்றி, ஏவர்பா லானும் இறைவனும் ஒருதான் ஏதம்நோக் குற்றனன் வெகுளின், ஆவிய திழப்பார் போல்வெரீஇப் புகழ்ந்தும் அவனுவப் புற்றிடின் உய்ந்தும், ஓவற நிற்பர் அசனிவீழ் தோறும் உரைக்குமந் திரத்திஞேர் என்ன. 27

ஆகத் திருவிருத்தம் - 1,669.



# 40. அசமுகி நகர்காண் படலம்

—oo—

இன்னன பலபல எய்தச் சூரனும்
மன்னவன் இருத்தலும் மற்றவ் வெல்லையில்
தொன்னகர் அணித்துறத் துன்மு கத்தினள்
தன்னெடும் அசமுகி தான்வந் தெய்தினள்.

மோட்டுறு மகேந்திர முதிய மாநகர்
கூட்டுறு திருவெலாங் குலைய முன்னவள்
மாட்டுறு துணையொடு வந்துற் றுலெனக்
கீட்டிசை வாய்தலைக் கிட்டி னளரோ.

கெழுதரும் அசமுகக் கெடல ணங்குதன்
பழிதரு கையினைப் பார்த்து நேர்ந்துளார்
அழிதரு துன்புகொண் டழுவில் சீறினர்
இழிதரும் இச்செயல் யார்செய் தாரென. 3

மானமில் அசமுகி மகேந்தி ரப்புரந்
தானுறு துயர்க்கொரு தாரி காட்டல்போல்
ஊனுறு குருதிகை யுகுப்பச் சென்றுழி
யானது கண்டனர் அவுணர் யாவரும். 4

வட்டுறு பலகையின் வல்ல நாய்நிரைத்
திட்டனர் கவற்றினை இசைத்த சூளொடுங்
கிட்டினர் இடந்தொறுங் கெழுமி யாடினர்
விட்டனர் அத்தொழில் விரைந்துற் றோர்சிலர்.

தெரிதரு கரியபோன் திரித்திட் டாலெனப்
புரிதரு மருப்புடைப் புலியன் செச்சையை
முரிவரு பேரமர் மூட்டிக் கண்டுளார்
பரிவொடு பிரிந்தயல் படர்கின் றார்சிலர்.

கார்ப்பெயல் அன்னதோர் கடாங்கொள் மால்கரி
கூர்ப்புறு மருப்புமெய் குளிப்பச் சோரிநீர்
ஆர்ப்பொடு தத்தமில் ஆடல் செய்வது
பார்ப்பது விட்டனர் படர்கின் றார்சிலர்.

துய்யதோர் கிஞ்சுகச் சூட்டு வாரணம்
மொய்யொடு தன்னுயிர் முடியும் எல்லையுஞ்
செய்யுறு வெஞ்சினச் செருவை நோக்கினூர்
ஒய்யென நீங்கியே யுறுகின் றார்சிலர்.

ஊனமில் பலபணி யுடன்று சீறியே
பானுவை நுகரவிண் படரு மாறென
வானிகள் ஓச்சினர் வானிற் கைவிடா
மேனிகள் வியர்ப்புற வெகுண்டுற் றார்சிலர்.

வாம்பரி தேர்கரி மானம் பாண்டில்கள்
ஏம்பலோ டூர்ந்திட இயற்றுங் கற்பொரீஇ
யாம்பொருள் அல்லதொன் றைடைவ தென்னெனச்
சோம்புதல் இன்றியே தொடர்கின் றார்சிலர். 10

குறிகெழு வெளிலொடு குற்றி நாட்டியும்
அறிகுறி தீட்டியும் அவையி லக்கமா
எறிகுறு படையினை எய்யுங் கோலினை
நெறிதொறும் விட்டவண் நேர்கின் றார்சிலர். 11

நாந்தகம் ஆதியா நவிலுந் தொல்படை
ஆய்ந்திடும் விஞ்சைகள் அடிகள் முன்னமாய்
ஏய்ந்திடுங் கழகமுற் றியற்று மாறொரீஇப்
போந்தனர் ஒருசிலர் பொருமல் மிக்குளார். 12

வாட்படு கனலிகால் வானின் கண்ணவாங்
காட்புறு நரம்பியாழ் காமர் வீணைகள்
வேட்புறும் ஈர்ங்குழல் மிடறு காலிசை
கேட்பது விட்டவண் கிட்டி னார்சிலர். 13

நாடக நூல்முறை நுனித்து நன்றுணர்
கோடியர் கழாயினர் கூத்தர் ஏனையோர்
ஆடுறு கோட்டிகள் அகலுற் றங்ஙனங்
கூடினர் ஒருசிலர் குலையும் மெய்யினூர். 14

புலப்படு மங்கலப் பொருள்முற் றுங்கொடு
நலப்படு வேள்விகள் நடத்திக் கேளொடு

பலப்பல வதுவைசெய் பான்மை நீத்தொராய்க்
குலைப்புறு கையொடுங் குறுகுற் றார்சிலர். 15

மாலொரு மடந்தைபால் வைத்து முன்னுறு
சேல்விழி யொருத்திபாற் செல்ல வூடியே
மேலுறு சினத்திகல் விளைக்க நன்றிது
காலமென் றுன்னியே கழன்றுற் றார்சிலர். 16

தோடுறு வரிவிழித் தோகை மாருடன்
மாடம திடைதொறும் வதிந்த பங்கயக்
காடுறு பூந்தடங் காமர் தண்டலை
ஆடலை வெறுத்தெழீஇ யடைகின் றார்சிலர். 17

சுள்ளினைக் கறித்தனர் துற்று வாகையங்
கள்ளினைக் கொட்பொடு களிக்கும் நெஞ்சினர்
உள்ளுறுத் தியபுலன் ஊசல் போன்றுளார்
தள்ளுறத் தள்ளுறத் தளர்ந்துற் றார்சிலர். 18

அனையபல் வகையினர் அவளைக் கண்டுளார்
பனிவரு கண்ணினர் பதைக்கும் நெஞ்சினர்
கனலொடு தீப்புகை காலு யிர்ப்பினர்
முனிவுறு கின்றனர் மொழிகின் றார்இவை. 19

வேறு

அந்தகன் ஒருத்தற் பேரோன் ஆடல்வல் லியத்தோ னாதி
வந்திடும் அவுணர் தம்மை மதிக்கிலா வலியோர் தம்மை
முந்துறு புரத்தை அட்டு முழுவதும் முடிப்பான் நின்ற
**செந்தழல் உருவத் தண்ணல்** செய்கையோ இனைய தென்பார். 20

மேதியஞ் சென்னி வீரன் வெவ்வலி நிசும்பன் சும்பன்
கோதறு குருதிக் கண்ணன் குருதியங் குரத்தன் முந்தே
பூதலம் புரந்த சீர்த்திப் பொருவில்தா ரகனே பண்டன்
ஆதியர் ஆயுள் கொண்ட **ஐயை**தன் செயலோ என்பார். 21

சிரபத்தி அளவை யில்லாத் திறலரி ஒருநாற் றந்தக்
கரபத்தின் அண்ணல் வானோர் யாரையுங் கலக்கஞ் செய்ய
வரபத்தி புரியா அன்னோர் வணங்கினர் அடைய அந்நாட்
**சரபத்தின் வடிவங் கொண்டான்** தன்செய லாங்கொல் என்பார். 22

வண்டுளர் கமலச் செங்கண் மாயனுந் தூய நீலங்
கண்டம தடைத்த தேவுங் கலந்தனர் தழுவிச் சேரப்
பண்டவர் புணர்ப்புத் தன்னில் உருத்திரர் பரிசா லுற்ற
**செண்டுறு கரத்து வள்ளல்** செய்கையே போலும் என்பார். 23

பிளிற்றுறு குரலின் நால்வாய்ப் பெருந்துணை எயிற்றுப் புன்கண்
வெளிற்றுறு தடக்கை கொண்ட வேழமா முகத்தெம் மேலோன்
ஒளிற்றுறு கலன்மார் பெய்தி உயிர்குடித் துமிழ்ந்த **தந்தக்**
**களிற்றுடை முகத்துப் பிள்ளை** செய்கையோ காணும் என்பார். 24

ஈசனை மதிக்கி லாதே யாமுதற் கடவு ளென்று
பேசிடு தலைவர்க் கேற்ற பெற்றியால் தண்டம் ஆற்றும்
ஆசறு சங்கு கன்னன் அகட்டமுற் குண்டம் போல்வான்
தேசுறு பானு கம்பன் முதலினோர் செயலோ என்பார். 25

நஞ்சுபில் கெயிற்றுப் புத்தேள் நாகணைப் பள்ளி மீது
தஞ்ச மொடிருந்த அண்ணல் தன்செய லாமோ என்பார்
அஞ்சுவன் இனைய செய்கைக் கனையது நினைவன் றென்பார்
நெஞ்சினும் இதனைச் செய்ய நினைக்குமோ மலரோன் என்பார். 26

புரந்தர னென்னும் விண்ணோன் புணர்த்திடு செயலோ என்பார்
கரந்தனன் திரிவான் செய்ய வல்லனோ கருத்தன் றென்பார்
இருந்திடு கடவு ளோர்கள் இழைத்திடு விதியோ என்பார்
நிரந்துநம் பணியின் நிற்போர் நினைப்பரோ இதனை என்பார். 27

கழைத்துணி நறவ மாந்திக் களிப்புறு உணர்ச்சி முற்றும்
பிழைத்தவ ராகும் அன்றேல் பித்தர்செய் தனராம் என்பார்
இழைத்தநா ளெல்லை சென்றோர் இயற்றியார் யாரோ என்பார்
விழுப்பெரு முனிவர் சொல்லால் வீழ்ந்ததோ இவர்கை என்பார். 28

அங்கியின் கிளர்ச்சி யேபோல் அவிர்சுடர்க் கூர்வாள் தன்னைத்
தங்களி லேந்தி இன்னோர் சான்றகுள் உறவு சாற்றித்
துங்கமொ டமரின் ஏற்று முறைமுறை துணித்தார் கொல்லோ
இங்கிவர் இருவர் கையும் இற்றன காண்மின் என்பார். 29

ஆரிவள் கரத்தி லொன்றை அடவல்லார் எவர்கண் ணேயோ
பேருறு காதல் கொண்டு பெண்மதி மயக்கந் தன்னாற்
சீரிய வுறுப்பி லொன்று சின்னமாத் தருவ னென்று
கூருடை வாளால் ஈர்ந்து கொடுத்தனள் போலும் என்பார். 30

கேடுறும் இனையள் தன்னைக் கேட்பதென் இனிநாம் என்பார்
நாடிநாம் வினவி னோமேல் நம்மெலாம் முனியும் என்பார்
மாடுறப் போவ தென்னை மாநில வரைப்பின் காறும்
ஓடியே அறிதும் என்பார் இனையன உரைத்த லோடும். 31

சொல்லியற் சூரன் தங்கை துன்முகி யோடு கைபோய்
வல்லையிற் போதல் கேளா மம்மருற் றவுண மாதர்
சில்லியற் கூந்தல் தாழத் தெருத்தொறுஞ் செறிந்து கஞ்சம்
ஒல்லைமுத் துதிர்ப்ப தென்ன ஒண்கணீர் உகுத்துச் சூழ்ந்தார். 32

அங்கர் மகளிர் யாரும் ஆடவர் யாருஞ் சூழ்ந்து
துன்னினர் இனைய வாற்றல் துயருழந் திரங்கிச் சோரப்
பின்னவர் தொகுதி நீங்கிப் பிறங்குகோ நகரம் போந்து
மன்னவர் மன்னன் வைகும் மன்றினுக் கணிய ளானாள். 33

ஆகத் திருவிருத்தம் - 1,702.



# 41. அசமுகி புலம்புறு படலம்

—oo—

மறிமுக முடைய தீயாள் மன்றினுக் கணிய ளாகிக்
கிறிசெயும் அன்னை தன்னைக் கேளிரை மருகா ளைரைத்
திறலுடை முன்னை யோரைச் சிந்தையில் உன்னி யாண்டைப்
பொறிமகள் இரியல் போகக் கதறியே புலம்ப லுற்றாள். 1

வேறு

வெறியாரும் இதழிமுடிப் பண்ணவர்கோன் அருள்புரிந்த மேனாள் வந்தாய், பிரியாது நுமைப்போற்றித் திரிவனென்றாய் அம் மொழியும் பிழைத்தாய் போலும், அறியாயோ கரம்போன தஞ்ச லென்றாய் இலைதகுமோ அன்னே யன்னே, சிறியேனுன் பெண்பிறந்து பட்டபரி பவமென்று தீரும் ஐயோ. 2

தாதையா னவர்அளித்த மைந்தர்களே விருப்புறுவர் தாயர்பெற்ற, மாதரார் பால்உவகை செய்திடுவர் ஈதுலக வழக்கம் என்பார், ஆதலால் என்துயரம் அகற்றவந்தாய் இலையந்தோ ஆரு மின்றி, ஏதிலார் போல்தமியேன் கரமிழந்தும் இவ்வுயிர்கொண் டிருப்ப தேயோ. 3

வருவீரெங் கணுமென்றே அஞ்சாது புலோமசையை வலிதே வௌவிப், பெருவீர முடன்வந்தேன் எனதுகர தலந்துணித்துப் பின்னே சென்று, பொருவீர மாகாளன் அவளையுமீட் டேகினன்அப் பொதும்பர்க் கானில், ஒருவீருஞ் செல்லீரோ நமரங்காள் நீருமவர்க் கொளித்திட் டீரோ. 4

புரங்குறைத்தும் வலிகுறைத்தும் பொங்கியதொன் னிலைகுறைத் தும் புரையு றாத, வரங்குறைத்தும் புகழ்குறைத்தும் மறையொழுக்கந் தனைக்குறைத்தும் மலிசீர் தொல்லை, உரங்குறைத்தும் வானவரை ஏவல்கொண்டோம் என்றிருப்பீர் ஒருவன் போந்தென், கரங்குறைத்த தறியீர்நுந் நாசிகுறைத் தனன்போலுங் காண்மின் காண்மின். 5

மேயினான் பொன்னுலகின் மீன்சுமந்து பழிக்கஞ்சி வெருவிக் கானான், போயினான் போயினான் வலியிலனென் றுரைத்திடுவீர் போலும் அன்னான், ஏயினான் ஒருவனையே அவன்போந்தென் கரந் துணித்தான் இல்லக் கூரைத், தீயினார் கரந்ததிறன் ஆயிற்றே இந்திரன்றன் செயலு மாதோ. 6

எள்ளுற்ற நுண்டுகளில் துணையாகுஞ் சிறுமைத்தே எனினும் யார்க்கும், உள்ளுற்ற பகையுண்டேல் கேடுளதென் றுரைப்பர்அஃ துண்மை யாமால், தள்ளுற்றுந் தள்ளுற்றும் ஏவல்புரிந் துழல்குலிசத் தடக்கை அண்ணல், கள்ளுற்று மறைந்திருந்தே எனதுகரந் துணிப் பித்தான் காண்மின் காண்மின். 7

சங்கிருந்த புணரிதனில் நடுவிருந்த வடவையெனுந் தழலின் புத் தேள், உங்கிருந்த குவலயமோ டவைமுழுதுங் காலம்பார்த் தொழிப்ப

தேபோல், அங்கிருந்தென் கரந்துணித்த ஒருவோனும் உங்களைமேல் அடுவன் போலும், இங்கிருந்தென் செய்கின்றீர் வானவரைச் சிறிய ரென இகழ்ந்திட் டீரே. 8

முச்சிரமுண் டிரணியனுக் கிருசிரமுண் டந்தவன்னி முகற்கு மற்றை, வச்சிரவா குவுக்கொருபான் சிரமுண்டே அவைவாளா வளர்த்திட் டாரோ, இச்சிரங்கள் என் செய்யும் ஒருசிரத்தோன் என்கரத்தை இறுத்துப் போனான், அச்சுரருக் கஞ்சுவரே பாதலத்தில் அரக்கரிவர்க் களியர் அம்மா. 9

பிறைசெய்த சீருருவக் குழவியுருக் கொண்டுறுநாட் பெயர்ந்து வானின், முறைசெய்த செங்கதிரோன் ஆதபமெய் தீண்டுதலும் முனிந்து பற்றிச், சிறைசெய்த மருகாவோ மருகாவோ ஒருவனெனைச் செங்கை தீண்டிக், குறைசெய்து போவதுவோ வினவுகிலாய் ஈதென்ன கொடுமை தானே. 10

நீண்டாழி சூழுலகை ஓரடியால் அளவைசெய்தோன் நேமி தன்னைப், பூண்டாய்பொன் னாரமென இந்நாளும் ஓர்பழியே பூணு நின்றாய், ஈண்டாருங் குறும்பகைஞர் என்கரம்போந் திறமியற்ற இனிது வையம், ஆண்டாய்நந் தாரகனே குறைமதிநீ ரோநின்பேர் ஆற்றல் அம்மா. 11

வையொன்று வச்சிரக்கைப் புரந்தரனைத் தந்தியொடும் வான்மீச் செல்ல, ஒய்யென்று கரத்தொன்றால் எறிந்தனைவீழ்ந் தனன்கிடப்ப உதைத்தாய் என்பர், மெய்யென்று வியந்திருந்தேன் பட்டிமையோ அவன்தூதன் வெகுண்டு வந்தென், கையொன்று தடிந்தானே சிங்க முக வீரவிது காண்கி லாயோ. 12

சூரனும் பெயர்படைத்த அவுணர்கள்தம் பெருவாழ்வே தொலைய யண்டஞ், சேரவே புரந்தனைநின் பரிதிசெங்கோல் குடையெங்குஞ் செல்லா நிற்கும், ஆரும்வா னவர்அவற்றிற் கச்சுறுவர் பொன்னகரோன் ஆணை போற்றும், வீரமா காளனிடைக் கண்டில னால் வலியர்முனம் மேவு றுவோ. 13

ஒன்னார்தஞ் சூழ்ச்சியினால் ஒருமுனிவன் என்சிறுவர் உயிர் கொண் டேற்றான், இந்நாளில் அஃதன்றி ஒருவனைக்கொண் டெனது கையும் இழப்பித் தாரே, பின்னாள்இவ் வருத்தமுற நன்றரசு புரிந்தனையால் பிழைஈ தன்றோ, மன்னாவோ மன்னாவோ யான்பட்ட இழி வரவை மதிக்கி லாயோ. 14

காவல்புரிந் துலகாளும் அண்ணாவோ அண்ணாவோ கரமற் றேன்காண், ஏவரெனக் குறவாவர் ஊனமுற்றோர் இருப்பதுவும் இழுக்கே அன்றோ, ஆவிதனை விடுவேன்நான் அதற்குமுனம் என்மானம் அடுவதையோ, பாவியொரு பெண்பிறந்த பயனிதுவோ விதிக்கென்பாற் பகைமற் றுண்டோ. 15

ஆகத் திருவிருத்தம்–1,717.



# 42. சூரன் தண்டஞ்செய் படலம்

—oo—

என்று பற்பல உரைத்தனள் ஆவலித் திரங்கிப்
பின்றொ டர்ந்திடு துன்முகி தன்னொடும் பெயரா
மன்றின் மேவரு சூரபன் மாவெனும் வலியோன்
பொன்ற டங்கழல் முன்னரே வீழ்ந்துபோய்ப் புரண்டாள். 1

புரண்டு மற்றவள் சகடையிற் பெயர்ந்திடும் போழ்தின்
மருண்டு பேரவை யகத்துளோர் அஞ்சினர் மறுக
அரண்ட ருங்கழற் சூரபன் மாவெனும் அவுணன்
இரண்டு நோக்கினுந் தீயெழ விழித்திவை இசைப்பான். 2

என்னை யோவிவட் புலம்புதி அசமுகத் திளையோய்
உன்னை யோர்கிலா தென்னையும் நினைகிலா துன்கை
தன்னை யும்மிவள் கரத்தையும் வாளினால் தடிந்து
முன்னை யோரென இருந்துளார் யாரென மொழிந்தான். 3

புரந்த ரன்புணர் புலோமசை புவியிலோர் புறத்தில்
இருந்து நோற்றலும் உன்றனக் கென்றுசென் றெடுத்தோம்
விரைந்து வந்தொரு விண்ணவன் எங்களை வெகுண்டு
கரந்து ணித்துமற் றவளைமீட் டேகினன் கண்டாய். 4

என்னு முன்னரே சொரிந்தன விழிகனல் எரிவாய்
துன்னு தீம்புகைப் படலிகை உமிழ்ந்தது துண்டம்
வன்னி காலுறு காலென உயிர்த்தது மதிபோல்
மின்னல் வாளெயி றிதழினை மறைத்தது விரைவில். 5

வெடிக்க லுற்றதெவ் வண்டமென் றையுற விரைவில்
இடிக்க லுற்றது தீயவாய் நகைவந்த திதழுந்
துடிக்க லுற்றது புருவமேல் நிமிர்ந்தது துள்ளிக்
கடிக்க லுற்றன எயிற்றணி கறகற கலிப்ப. 6

புயற்பு றந்தொறு நித்தில முதிர்ந்தவா போல
வியர்ப்பு மிக்கன முறைமுறை அன்னது விளிய
மயிர்ப்பு றந்தொறும் புலிங்கம்வந் தடைந்தன வல்லே
செயிர்ப்பெ னுங்கனல் கிளர்ந்தது சிந்தையின் நின்றும். 7

நீடு வெஞ்சினம் இத்திறம் அவனிடை நிகழ
ஓடு கின்றனர் திசையுளார் உலைந்தனர் முனிவர்
ஆடு கின்றதோர் தெய்வதக் கணிகையர் அவன்சீர்
பாடு கின்றவர் யாவரும் பதைபதைத் திரிந்தார். 8

தாங்க லுற்றிடு திசைக்கரி ஓடிய தரிக்கும்
ஓங்கல் மேருவுங் குலைந்தன பணியெலாம் உலைந்த
ஏங்கு கின்றனர் வானவர் நடுங்கினர் இரவி
தீங்கு நாடியே போயினன் மீண்டனன் திரிந்தான். 9

பார்ந டுங்கின விண்ணெலாம் நடுங்கின பரவை
நீர்ந டுங்கின அயன்பதம் நடுங்கின நெடியோன்
ஊர்ந டுங்கின அவுணரும் நடுங்கினர் உலகத்து
ஆர்ந டுங்கிலர் அவன்சினஞ் சிறியதோ அன்றே. 10

அண்ண லம்புகழ்ச் சூரபன் மாவென அறையுங்
கண்ணில் புன்மனத் தவுணர்கோன் இத்திறங் கனன்று
துண்ணெ னச்சினத் தமரர்கள் யாரையுந் தொலைப்பான்
எண்ணி யுற்றிடும் இளையரைப் பார்த்திவை இசைப்பான். 11

மீனெ டுத்துநம் மேவலில் திரிந்தவிண் ணவர்கோன்
கானி டத்திருந் தொருவனைக் கொண்டிவர் கரங்கள்
ஊனெ டுத்திடத் தறித்தனன் என்றிடின் ஒழிந்த
மானு டத்தரும் அடுவரே இங்கினி மாதோ. 12

பரம னேயலன் பங்கயத் தவிசினோன் அல்லன்
திருவு லாவரு மார்புடைத் தேவனும் அல்லன்
இரியும் வாசவன் தானலன் அவன்பணி இயற்றும்
ஒருவ னுமிவர் கைதடிந் தாவிகொண் டுறைவான். 13

விண்ம யங்குறு செருவிடைத் தானையால் வீக்கி
எண்மை கொண்டுறும் அமரரைக் கொணர்தலும் எனது
கண்முன் நின்றிடும் அவுணர்தங் கழிபசி யொழிய
உண்மின் நீரெனக் கொடுத்திலேன் அறநினைந் துற்றேன். 14

மறைவைத் தேயமர் கின்றதோர் வாசவன் தனையும்
நறைவைத் தேயமர் பூங்குழற் சசியையும் நான்முன்
சிறைவைத் தேனிலன் சிறியரென் றுன்னினன் தீயின்
குறைவைத் தோர்கள்போல் ஆயினேன் இத்திறங் குறியேன். 15

கைப்ப டுத்திய உயிர்ப்பலி கடிதின்உண் ணுது
தப்ப விட்டதோர் மால்கரி யொத்தனன் தமியேன்
இப்பு விக்கணே இவர்கரங் குறைத்திட்ட தெனது
மெய்ப்ப டுத்திய ஊனமே அலதுவே றுண்டோ. 16

பூத ரந்தனைச் சிறைதடிந் திடுபுரந் தரனை
மாத ரார்புகழ் சசிதனை நாடுவான் வழிக்கொள்
தூதர் இன்னமுங் கண்டிலர் கொல்அவர் துணிவால்
ஏத மின்றிஇப் புடவியிற் குறும்புசெய் திருத்தல். 17

நீரி ருந்தனிர் புதல்வரும் இருந்தனர் நிகரில்
தேரி ருந்தது நேமியும் இருந்தது சிறிதென்
பேரி ருந்தது யானுமிங் கிருந்தனன் பின்னை
யாரி ருந்துமென் இருந்துமா கின்றதென் அந்தோ. 18

வான ளாவுவெண் பஞ்சியின் மால்வரை வறிதே
தீநி லாயதோர் அளவையின் முடிந்திடுஞ் செயல்போல்

தூநி லாவெயிற் றினையர்கைச் சோரியின் துளியால்
போன தேபல அண்டமுங் கொண்டநம் புகழே. 19

இழிவும் இங்கிவர்க் குறுவதே இமையவர் தங்கள்
வழியின் நின்றதோர் அரந்தையும் இவ்விடை வருமே
பழியும் என்னிடத் தெய்துமே என்றும்இப் பழிதான்
ஒழிவ தில்லையே பொறுப்பதே அதனையென் னுயிரே. 20

மல்ல லந்தடந் தேர்கடக் கைம்மலை வயமா
எல்லை யில்லவும் அவுணரும் எங்கணும் இருப்பச்
சில்லை மென்குழல் அசமுகி படுவதித் திறமோ
நல்ல நல்லஎன் னரசியல் முறையென நக்கான். 21

நக்க காலையிற் காலுறும் வார்கழல் நரல
மக்கள் தங்களிற் பானுகோ பப்பெயர் வலியோன்
செக்கர் அங்கியிற் கிளர்ந்துதன் தந்தைமுன் செவ்வே
புக்கு வந்தனை செய்துநின் றினையன புகல்வான். 22

ஐய கேண்மதி நமதுகுற் றேவலால் அழுங்கித்
தொய்ய லுள்ளமோ டிந்திரன் கரந்தனன் சுரரும்
நொய்யர் இத்தொழில் நினைப்பதுஞ் செய்யலர் நுங்கை
கையி ழந்ததென் மாயமோ உணர்கிலேன் கவல்வேன். 23

வந்தி பெற்றிடு கான்முளை எட்டிவான் தவழும்
இந்து வைக்கரங் கொண்டனன் என்பதோர் இயல்பே
அந்த ரத்தரில் ஒருவனே இனையவர் அங்கை
சிந்தி யுற்றனன் என்றுநீ உரைத்திடுந் திறனே. 24

வலியர் ஆகியே புரிந்தனர் எனினுமற் றவர்கள்
மெலியர் ஆற்றநீ வெகுளுறுந் தகைமைமே வினரோ
ஒலித ருங்கடல் மீன்சுமந் துன்பணி யுழந்தார்
அலியர் அல்லதை ஆண்டகை யார்கொலோ அனையோர். 25

நறைம லர்க்கம லத்தனை வெகுளினும் நாரத்
துறையுள் வைகிய முகுந்தனை வெகுளினும் உம்பர்
எறிபு னற்சடை இறைவனை வெகுளினும் இயல்பே
சிறியர் தம்மையும் முனிதியோ பெருமையிற் சிறந்தோய். 26

முத்தி றப்படுந் தேவரே அல்லதுன் முனிவிற்
கெத்தி றத்தினர் இயைந்துளோர் இளையர்க்கும் இனைத்தே
சித்த முற்றிடும் வெகுளியைத் தீருதி இன்னோர்
கைத்த லந்தனை இழந்துழிப் பெயருவன் கடிதின். 27

விசைய வாளினுல் இங்கிவர் கரந்தனை வீட்டும்
அசைவில் ஆடவன் றன்னைநின் னுளத்தின்மால் அளித்த
சசியை இந்திரக் கள்வனைத் தம்முயிர் தமக்குப்
பசையி லாததோர் அமரரைப் பற்றினன் படர்வேன். 28

அங்கண் உற்றிலர் மறைகுவ ரேயெனில் அகிலம்
எங்கும் நாடுவன் அனையர்வாழ் துறக்கநா டேகிச்
செங்க னற்கொள அளிக்குவன் அமரர்தந் திறத்தை
மங்கை மாரொடும் பற்றியோர் கன்னலின் வருவேன். 29

ஈதி யால்விடை தமியனுக் கென்றுநின் றிரப்பத்
தாதை யாகிய அவுணர்கோன் முனிவினைத் தணிந்து
போதி மைந்தநின் படையொடும் ஆங்கெனப் புகல
ஆத வன்பகை அழகிதென் றுவகையை அடைந்தான். 30

ஓகை சேர்தரு விண்ணவர் மணிமுடி உரிஞ்சிச்
சேகை சேர்தரு தாதைதாள் உச்சியிற் சேர்த்தி
வாகை சேர்சிறு தந்தையர் தம்மையும் வணங்கிப்
போகை சேர்விடை கொண்டுதன் னிருக்கையிற் போனான். 31

மைந்தன் ஏகலுஞ் சூரபன் மாவெனும் வலியோன்
உந்து தீவிழி உழையரிற் சிலவரை நோக்கி
அந்த நான்முகன் இங்ஙனம் வருகுவன் அவனை
நந்தம் முன்னுறக் கொடுவரு வீரென நவின்றான். 32

எங்கண் உற்றுளான் அயனெனக் கூவினர் ஏகிப்
பங்க யத்தனைக் கண்டுநிற் கொணர்கெனப் பணித்தான்
நங்கள் கொற்றவன் என்றலும் ஒல்லென நடவா
அங்கம் ஐந்துடன் அவுணர்கள் மன்னன்முன் அணைந்தான். 33

அணைந்த பூமகன் வைகலே பக்கநாள் அவற்றுற்
புணர்ந்த யோகொடு கரணமே லுள்ளன புகல
நுணங்கு சிந்தையால் அகிலமும் படைத்துளாய் நொய்தில்
தணந்த கையிவர்க் குதவுதி என்றனன் தலைவன். 34

என்று தானிவை மொழிதலுந் திசைமுகன் இசைந்து
வன்றி றற்கரங் கூடுக மற்றிவர்க் கெனலும்
ஒன்றொர் மாத்திரைப் பொழுதின்முன் அவைவளர்ந் துறலும்
நன்று நன்றுநின் வல்லபம் என்றுசூர் நவின்றான். 35

அன்ன தற்பின்னர் அசமுகத் தணங்கினை அரசன்
தொன்ன கர்க்குளே இருந்திடச் செய்துதுன் முகத்தி
தன்னை மைந்தனோ டுய்த்தனன் புலோமசைத் தையல்
முன்னி ருந்துழி காட்டியே வருகென மொழிந்து. 36

உழைத்திர் இந்தபல் சிலதரை நோக்கியே உலகில்
தழைத்த செங்கதிர்க் கடவுளைத் தாரகா கணத்தை
எழுச்சி கொண்டுறு கோளினை யாரையும் இன்னே
அழைத்தி ராலெனச் சொற்றனன் அவுணர்கட் கரசன். 37

சேடர் பற்பலர் விடைகொடு சேட்புலஞ் சென்று
நேடி அன்னவர் தமையெலாங் கொணர்ந்துமுன் னிறுவ

மூடு கொண்டலிற் கரந்தமின் பின்னெழு முறைபோல்
கேடு கொண்டதொல் சினவெரி சூரனுட் கிளர்ந்த. 38

வியர்க்கும் நெஞ்சினன் கதிர் முதலோர்தமை விளியா
அயர்க்கை இன்றியே வானிடைத் திரியுநீர் அறியா
இயற்கை ஒன்றிலை எங்கைதன் செங்கையை எறிந்தோன்
செயற்கை காணுதிர் வறிதுநீர் இருந்ததென் சேணில். 39

இளையள் தன்கரங் குறைத்திடும் இமையவன் உயிரைக்
களைதல் செய்திலீர் அல்லதேல் அனையனைக் கட்டித்
தளைசெய் திவ்விடைக் கொணர்ந்திலீர் அல்லதத் தலையில்
விளைவை வந்தெமக் குரைத்திலீர் நன்றுநும் மிகுதி. 40

மறத்தி றத்தினால் எங்கைதன் கையையோர் வலியோன்
குறைத்த தற்குநீர் அகத்தரே அல்லது குறிக்கில்
புறத்தர் அன்றுநம் மாணையால் இத்தொழில் புரிவீர்
முறைத்தி றங்கொலோ நுங்களுக் கிதுவென மொழிந்தான். 41

நீதி இல்லவன் ஈங்கிவை உரைத்தலும் நிருப
ஏதும் எங்களை வெகுளலை இங்கிவள் கரத்தைக்
காது வான்றனைக் கண்டிலம் இன்றுசெல் கதியின்
மீது சென்றவெம் விழியென உரைத்தனர் விண்ணோர். 42

துண்ட மாகியே இவள்கரந் துணிபட்ட செய்கை
கண்டி லார்களாங் கதியிடைச் சென்றவாங் கண்கள்
அண்டர் தஞ்செயல் அழகிதென் றனையரை யெல்லாந்
தண்டல் இல்லதோர் சிறைபுரி வித்தனன் தலைவன். 43

வேறு

தினகரன் முதலினோர் சிறையிற் புக்கபின்
வினைஞரிற் சிலர்தமை விளித்து நீவிர்போய்த்
துணைவரு மருத்துவர் தொகையைத் தம்மென
முனிவொடு தூண்டினன் முடிவி லாற்றலான். 44

ஒற்றரில் ஒருசிலர் ஒல்லை ஏகியே
குற்றமின் மருத்துவர் குழாத்தைக் கூவியே
பற்றிமுன் உய்த்தலும் பதைக்கும் நெஞ்சினான்
தெற்றென ஆங்கவர்க் கிதனைச் செப்புவான். 45

வானிடை மண்ணிடை மாதி ரத்திடை
மேனிகழ் கடலிடை வியன்பி லத்திடை
ஊனிடை யுயிரிடை ஒழிந்து நின்றிடும்
ஏனைய பொருளிடை எங்கும் நிற்றிரால். 46

ஏனுறு கின்றஎன் இளையள் கையையோர்
சேணினன் வாள்கொடு சேதித் திட்டதைக்
காணுதிர் உமக்கெவர் கரக்கற் பாலினோர்
நீணகர் குறுகியிந் நிலைமை சொற்றிலீர். 47

தரியலர் சூழ்ச்சியால் தருவர்க் கிப்பழி
வருவது நன்றெனா மகிழ்ந்து வைகினீர்
பெருமிதம் நன்றெனப் பேச மாறுசொல்
உரையற நின்றனர் உலவைப் பண்ணவர். 48

வன்றிறல் இன்றியே மனத்தில் அச்சமாய்
நின்றிடு கால்களை நீடு கால்களிற்
துன்றிய கனைகழற் சூர னென்பவன்
ஒன்றொரு சிறைதனில் உய்த்திட் டானரோ. 49

ஈற்றினை இழைத்திட இருக்குங் கால்களைச்
சீற்றமொ டவுணர்கோன் சிறையில் வீட்டினன்
சாற்றிடின் உலகமேல் தவத்தி னல்வரும்
பேற்றினும் உளதுகொல் பெருமைத் தானதே. 50

திரிதரு மருத்தரைச் சிறையில் வைத்தபின்
குரைகழல் வினைஞரைக் கூவி இற்றையாண்
டிருதுநன் மதிமுதல் எல்லை யாளரைத்
தருதிரென் றுரைத்தலுந் தாழ்ந்து போயினர். 51

ஏவல ராயினோர் ஏகி யெல்லையின்
காவல ராகியே கடவு ளோர்தமைக்
கூவினர் பற்றியே கொடுவந் துய்த்தலுந்
தேவர்கள் மாற்றலன் சீறிக் கூறுவான். 52

புல்லிய மகபதி புணர்த்த அச்செயல்
ஒல்லுவ தென்றதற் குள்ள மாகிநீர்
எல்லிரு மனமகிழ்ந் திருத்திர் என்னொடுஞ்
சொல்லிய வந்திலீ ரியாண்டுந் துன்னினீர். 53

நிரந்தரம் நம்பணி நெறியின் நின்றுநீர்
இருந்ததிற் பயனெவன் இருக்கலா மையால்
வருந்தவ றென்சுரர் மருங்குற் றீரென
அருந்தளை இட்டனன் அவர்கள் தம்மையும். 54

தூவலி கெழுவிய சூரன் பின்சில
ஏவலர் தங்களை விளித்திட் டிப்புவி
காவலர் தமையெலாங் கடிது வம்மெனக்
கூவுதிர் தம்மெனக் கூறித் தூண்டினன். 55

தூண்டலும் அளவைதீர் தூத ரோடியே
ஈண்டிய காவலர் இனத்தை மாநிலந்
தேண்டினர் பற்றியே சென்று வென்றிகொள்
ஆண்டகை இறைவன தவையின் உய்ப்பவே. 56

ஆக்கையில் வியர்ப்புற அச்சம் நாணுயிர்
தாக்குற நனியுளந் தளரக் கைதொழுங்

காக்குநர் தொகுதியைக் காவல் மன்னவன்
நோக்கினன் வெகுண்டிது நுவறல் மேயினன். 57

எளித்துற லின்றிநம் ஏவல் நீங்கியே
களித்திடு சசியொடுங் கடவுள் வாசவன்
ஒளித்தனன் இம்பரின் உம்பர் இல்லைநீர்
அளித்தது சாலவும் அழகி தாமரோ. 58

குறித்திடு புரைமனக் கொண்ட லூர்பவன்
நெறித்திகழ் ஆணையின் நின்ற தூதுவன்
மறித்திரு முகனுடை மங்கை தன்கரம்
அறுத்தவண் இருந்தனன் அதுவுந் தேர்ந்திலீர். 59

மறங்கிளர் தேறல்வாய் மடுத்து வைகலுங்
கறங்குறு நிலையராய்க் கலங்கி னீர்கொலோ
உறங்கினி ரேகொலோ ஓம்பலீர் கொலோ
பிறங்குதொல் வளமையால் பித்துற் றீர்கொலோ. 60

ஓயுமென் பகைஞரோ டுறவுற் றீர்கொலோ
வாயவர் தங்களுக் கஞ்சி னீர்கொலோ
சேயிழை யாரிடைச் செருக்குற் றீர்கொலோ
நீயிர்கள் இருந்ததென் நிலைமை யென்னவே. 61

எண்டரும் எந்தைநீ இசைத்த தன்மையிற்
கொண்டிலம் ஒன்றுமக் குவல யந்தனைப்
பண்டுதொட் டளிக்குதும் பகைஞர் யாரையுங்
கண்டிலங் கரந்துறை கதையுங் கேட்டிலம். 62

தாயெனும் ஏழகத் தலையன் துன்முக
ஆயிழை யொடும்வரல் அதுவும் அன்னர்கை
போயதுந் தெரிந்திலம் புந்தி கொள்ளுதி
மாயமி தாகுமால் மன்ன என்னவே. 63

மிடைதரு வெறுக்கையை மிசைந்து மால்கொளீஇப்
புடவியை யிடைதொறும் போற்றல் செய்திலீர்
இடையுற என்வயின் இணைய தோர்பழி
அடைவது மாயையாம் அழகிதே என்றான். 64

வேறு

ஒலிகெழும் உவரிப் புத்தேள் உள்ளுறை வடவைச் செந்தீத்
தொலைவுழி எழுவ தேபோல் சூரனுட் சினமீக் கொள்ள
மலிகதிர் இருள்புக் கென்ன வாளுரீஇ மருங்கே தானைத்
தலைவர் நின்றாரை ஏவித் தனித்தனி தண்டஞ் செய்வான். 65

சிற்சிலர் தமது நாவைச் செங்கையைச் சேதித் திட்டான்
சிற்சிலர் துண்டந் தன்னைச் செவிகளைக் களைதல் செய்தான்
சிற்சிலர் மருமந் தன்னைச் சிறுபுறத் தொடுகொய் வித்தான்
சிற்சிலர் தாளைத் தோளைச் சென்னியைச் சேதிப் பித்தான். 66

எறிதரு கழற்காற் சூரன் இத்திறம் பல்தண் டங்கள்
முறையினிற் செய்து சீய முழுமணித் தவிசில் தீர்ந்து
விறல்கெழும் இளையர் செல்ல விடைகொடுத் தயனை நோக்கி
மறைமுனி போதி யென்ன மற்றவன் இனைய சொற்றான். 67

மன்னவர் மன்ன கேண்மோ வான்கதிர் உடுக்கள் ஏனோர்
இந்நில மடந்தை வேலைக் கிறையவர் யாரு மென்றும்
உன்னுடைப் பணியில் நிற்பர் உலகிவர் இன்றி யாகா
அன்னவர் பிழையுட் கொள்ளேல் அருஞ்சிறை விடுத்தி என்றான் 68

குறையிரந் தினைய கூறிக் கோகன தத்தோன் வேண்ட
நறையிருந் துலவு தாரோன் நன்றென இசைவு கொள்ளா
உறையிருந் திலங்கும் வாட்கை ஒற்றரை நோக்கி நந்தஞ்
சிறையிருந் தோரைத் தம்மின் என்றலுஞ் சென்றங் குய்த்தார்.69

வன்றளை உற்றோர் தம்மை மன்னவர் மன்னன் பாரா
என்றுநம் பணியில் நிற்றிர் இந்திர னொடுசேர் கல்லிர்
சென்றிடு நுங்கள் தொன்மை செய்திட வென்ன அன்னோர்
நன்றிது புரிதும் என்று நயமொழி புகன்று போனார். 70

போதலுங் கமலத் தோற்கும் புதல்வர்க்கும் அமைச்சர் யார்க்கும்
மேதகு முனிவர் யார்க்கும் வியன்படைத் தலைமை யோர்க்கும்
போதலை உதவிச் சூரன் உறையுளிற் புகுந்தான் முன்செல்
ஆதவன் பகைஞன் செய்த செயலினை அறைத லுற்றேன். 71

ஆகத் திருவிருத்தம்—1,788.

# 43. அமரர் சிறைபுகு படலம்

—oo—

எழிலிகள் மொய்த்ததன் இருக்கை போகிய
மழவுறு சூர்மகன் மாறி லாதபேர்
அழகினை மெய்கொள அணிந்து தொல்படை
விழுமிய கொண்டனன் மிலைச்சித் தும்பையே.

இருவகைப் பத்துநூ றிவுளி பூண்டிடும்
ஒருதனித் தேர்தனை ஒல்லை ஊர்ந்துராய்த்
திருமுதற் கடைதனிற் செல்லும் எல்லையில்
விரைவினில் சுற்றின அனிக வெள்ளமே.

நிரைத்தெழு தானவர் நீத்தம் ஆயிரம்
பரித்தொகை அன்னதே பாதி தேர்கரி
உரைத்தஅத் தானையோ டொல்லை ஏகினான்
திருத்தகும் இரவியைச் சிறையில் வீட்டினான்.

கிளர்ந்தன தூளிகள் கெழீஇய வீரர்தோள்
வளர்ந்தன அவரணி மாலை யிற்படீஇ
உளர்ந்தன வண்டினம் உம்பர் தம்மனந்
தளர்ந்தன நெளிந்தனன் தரிக்குஞ் சேடனே. 4

பொள்ளென ஆண்டெழு பூழி பாரினுந்
தள்ளரும் விசும்பினும் நிரந்த தானவர்
எள்ளுறும் அமரர்தம் மிருக்கை நாடிய
உள்ளொடு புவத்துகள் ஒருங்கு சென்றபோல். 5

வேறு

ஏறிய பூழி நாப்பண் ஈண்டிய இவுளி வாயில்
வீறுகொள் களிற்றுக் கையின் விலாழியுங் கரிக்க போலத்
தூறிய கடமும் ஒன்றாய் ஒழுகுதன் மழைசூழ் குன்றின்
ஆறுகள் இழிந்து வையத் தடைவது போலு மன்றே. 6

பானிற முதல வாய பல்வகை வண்ணத் துள்ள
கானிமிர் துவசக் காடுங் கவிகையின் கானு மொய்த்த
சேனமுங் கழுகும் ஏனைச் சிறைகெழு புள்ளும் வெம்போர்
ஊனுகர் பொருட்டுத் தாமும் உம்பருற் றிடுவ தேபோல். 7

மண்ணுறு துகளின் மாலை மகேந்திர மூதூர் முற்றுந்
துண்ணென மறைத்த லோடுந் துளங்கியே சூரற் கஞ்சி
விண்ணிடை மதிபல் கோடி மேவல்போல் வெளிய செய்ய
தண்ணிழற் கவிகை ஈட்டந் தலைத்தலை ஈண்டிற் றன்றே. 8

முறையிது நிகழ மைந்தன் முதியமா நகரம் நீங்கி
அறைகடல் அகழி தாவி அவனியின் எல்லை யேகிச்
சிறைவரு துன்மு கத்துத் தெரிவையை நோக்கி நுங்கை
எறிசுடர் வாளால் இற்ற தெவ்விடை இயம்பு கென்றான். 9

என்னலுங் குமர கேண்மோ எங்கரந் துணித்தோர் வீரன்
மன்னினன் சசியும் உற்றாள் மதுமலர்ப் பொதும்ப ரொன்றில்
அன்னதும் இஃதே என்றோர் அணிவிரல் சுட்டிக் காட்டப்
பன்னிரு பெயர்ச்சீ காழி[1]ப் பழுமரக் காவிற் சேர்ந்தான். 10

தேசுறும் இரவி தன்னைச் செயிர்த்திடு சிறுவன் தானைத்
தூசிமுன் சென்று காவைத் தொலைத்துவெள் ளிடைய தாக்க
வாசவன் மனையைக் கூர்வாள் வயவனை நாடிக் காணான்
காசினி யாண்டுந் தேர்ந்து காமர்பொன் னுலகிற் போனான். 11

வேறு

அங்கிலை அவுணர்கள் அனிகம் யாவையும்
முன்னுற ஏகியே மொய்ப்ப ஆங்கவர்

1 பன்னிரு பெயர்ச் சீகாழி—பன்னிரண்டு பெயர்களில் ஒன்றாகிய சீகாழிப்பதி.

மெய்ந்நிறை மணிவெயில் விரிந்து சூழ்தலாற்
பொன்னகர் வேறொர்பொன் னகரம் போன்றதே. 12

எழுந்திடு முனிவினர் இமைக்கும் வெவ்வழல்
வழிந்திடு கண்ணினர் மடித்த வாயினர்
கழிந்திடு திறலினர் ககன வாணர்கள்
அழிந்திடும் ஆர்ப்பினர் அவுணர் எய்தினர். 13

மண்டல மேமுதல் வகுத்த வான்கதி
கொண்டிடு கந்துகக் குழுவின் மாலைகள்
விண்டொடர் செலவினில் விரவு பூழியால்
அண்டமும் புவியென வையம் ஆக்கிய. 14

இலகிய பொன்னகர் எல்லை எங்கணும்
அலைதரு மதநதி யாக்கி யாயிடை
நிலவிய கங்கைமா நீத்தம் யாவுமுண்
டுலவுத லுற்றன ஒருத்தல் யானையே. 15

வெங்கரி சொரிமதம் விரும்பும் வண்டினங்
கொங்கிவர் தருமலர்க் கூந்தல் வாசத்தால்
அங்குள மாதர்மேல் அணுகி வையக
மங்கையர் கொல்லென மால்செய் கின்றவே. 16

அற்றமில் வலியரைச் சிறிய ராயினோர்
பற்றிடின் மேல்நெறிப் பால ராவரால்
வெற்றிகொள் அவுணர் கோன்வேழத் தின்குழாஞ்
சுற்றிய பறவையுந் துறக்கம் புக்கவே. 17

மன்னவன் ஓடினன் மைந்தனேயுளன்
முன்னுறு பகையினை முடித்தும் யாமெனா
இந்நில வரையெலாம் ஏகிச் சூழ்ந்தபோற்
பொன்னகர் வளைந்தன பொலம்பொற் றேர்களே. 18

விடர்நெறி ஒழுகிய வெய்யர் மேலையோர்
இடமுறு மகளிரை எய்திப் பற்றல்போற்
கடிகமழ் தருவினைக் கலந்து சுற்றிய
கொடியினை ஈர்த்தன கொடியின் கானமே. 19

வேறு

செந்தோ டவிழுந் தாரான்இச்
செய்கை நிகழச் சேண்புகலும்
அந்தோ என்று பதைபதையா
அலமந் தேங்கி அறிவழிந்து
வந்தோன் பானுப் பகைவனொடு
மகவான் செம்ம லொடுவானோர்
நொந்தோ டினர்போய் உரைத்திடலும்
அனையோன் இனைய நுவல்கின்றான். 20

எந்தை யாகுஞ் சூரவன்இலை
இமையோர் குழுவிற் பலரில்லை
தந்தை எம்மோ யிங்கில்லை
தமியேன் நும்மோ டிருந்தேனல்
அந்த அசுரன் சென்றமையும்
அல்லல் புரியுந் திறம்போலும்,
முந்தை விதியை அறிவேனோ
என்னோ இன்று முடிந்திடுமே. 21

பாடின் றோங்கு திருநீங்கப்
பயந்தோர் கரக்கப் பழிவேலை
வீடின் றுகத் தமர்பரிய
வெஞ்சூர் முதல்வன் பணிபோற்றி
ஈடின் றுயும் இப்பகல்கா
றிந்த நகரத் திருந்தேனற்
கேடின் றுகும் என்செய்கேன்
கிளத்தீர்புரைதீர் உளத்தீரே. 22

தாயும் பயந்த தொல்லோனுந்
தமரா குற்ற அமரர்களும்
பாயுங் கடல்சூழ் நிலவரைப்பிற்
கரந்தார் அதனைப் பல்லவுணர்
ஆயும் படியே திரிந்தனரால்
அற்றும் எல்லை அளியேமும்
போயெங் குறைவோம் நமையெல்லாம்
போற்றும் படிக்கோர் புகலுண்டோ. 23

போவ தில்லை யாண்டும்இனிப்
புலம்பு மாறும் இல்லையதின்
ஆவ தில்லை வருவதெல்லாம்
அடையும் அன்றி அகலுவதோ
ஈவ தில்லை யவர்க்குவெரிந்
இறைஞ்சிப் புகழ்வ திலையெதிர்ந்து
சாவ தல்லால் உய்ந்திடுதல்
இரண்டே உறுதி தமியேற்கே. 24

அஞ்சேன் மன்னோ அவர்க்கினியான்
ஆவி பொருளாக் கொள்ளாதார்
நஞ்சே பொருவுந் தீங்குறினும்
நடுக்கஞ் செய்யார் இடர்ப்படியார்
தஞ்சே வகத்தின் நெறிபிழையார்
அஃதே போலத் தானவர்கோன்
வெஞ்சே னைகளேற் றெதிர்செல்வேன்
வெல்வேன் பலரைக் கொல்வேனே. 25

செருவீ ரமுடன் அவர்ப்பொருவான்
செல்வன் நீரும் எற்போற்றி
வருவீர் வம்மின் வல்லாதீர்
வல்லே இன்னே வழிக்கொண்மின்
ஒருவீ ரன்றி எல்லீரும்
உள்ளத் தஞ்சி ஒருவிஅழி
தருவீரேனும் நன்றிறையுந்
தளரேன் துணிந்த தமியேனே. 26

என்று சயந்தன் மொழிந்திடலும்
இமையோர் கேளா இடருழவா
உன்றன் உள்ளம் ஈதாயின்
எமக்கு வேருேர் உணர்வுண்டோ
வென்றி அவுணர் பணிபுரிந்து
வீடா விழுமந் துய்ப்பதினும்
பொன்றி விடுதல் இனிதம்மா
எழுதி கடிதே போர்க்கென்றுர். 27

வேறு

சயந்தனது கேட்டமரர் தங்குழுவை நோக்கித்
துயர்ந்தநும சிந்தனை துணிந்ததுகொல் என்னு
வியந்துகன கத்தவிசின் மேவுதல்வி டாத்தன்
கயந்தனை நினைப்பஅது துணர்ந்தது கருத்தில். 28

கல்கெழு நுதற்சிறிய கண்சுளகு கன்னம்
மல்கிய கறைப்பத மருப்பிணை இரட்டை
மெல்கிய புழைக்கரம் வெளிற்றுடலின் வேழம்
பில்கிய மதத்தொடு பெயர்ந்துளதை அன்றே. 29

இந்திர குமாரனை இறைஞ்சி எதிராகி
வந்திட அதன்பிடரில் வல்லைதனில் ஏறி
உந்தினன் நடாத்திஅயல் உம்பர்புறம் மொய்ப்பப்
புந்திகெழு வோவிஞெடு பொள்ளென அகன்றுன். 30

போகிதரு காளைபசும் பொற்புயல் நிறத்தான்
ஆகம்வெளி ருகும்அயி ராவதமி சைக்கண்
வாகுபெற மேவுவது மன்னுநெடு மால்பாற்
சீகரஅளக் கரிடை செவ்விதிருந் தன்ன. 31

பாங்கருறு வானவர்கள் பல்படையும் ஏந்தி
வீங்குதுயர் கொண்டகல வேறெரிடை காணர்
நீங்கல்வசை என்பது நினைந்துதுணி வாகி
ஆங்கவ ஞெடேகினர்கள் அச்சமில ரேபோல். 32

பெருந்தவள மெய்க்கரி பிளிற்றொலியும் உள்ளத்
தரந்தையுறு வானவர்தம் ஆர்ப்பொலியும் ஆற்றப்

பரந்தபகு வாய்முரசு பண்ணொலியும் ஒன்றாய்
வருந்தவறெ னக்ககனம் வாய்விடுதல் போலும். 33

ஊழிவரு கால்அனைய உம்பர்படை செல்லப்
பூழிமிர்ந் தேகின பொலத்துயர் நிலத்த
வாழிகொள் சுவர்க்கமெரி வெளவுநமை என்னக்
கேழிலுயர் மேனிலை கிளர்ந்தெழுதல் போலும். 34

முறையிது நிகழ்ந்திட முரட்களிறு மேலான்
வறியமக வான்மதலை மாநகரம் நீங்கி
எறிகதிர் அருக்கனை இருஞ்சிறையில் வீட்டுஞ்
சிறுவன்அனி கத்தினெதிர் சென்றுபுக லோடும். 35

வற்புறு தயித்தியர் வருஞ்சுரரை நோக்கி
முற்பகலின் எல்லையும் முறைப்பணி புரிந்தார்
தற்பமுடன் நின்றுசமர் உன்னிவரு வாரோ
அற்புதம் இதற்புதம் இதென்றறையல் உற்றார். 36

கிட்டினர்கள் வானவர் கிடைத்ததமர் என்று
முட்டினர் தெழித்தவுணர் முன்பினிரு பாலார்
ஒட்டினர் முனிந்தயில்கள் உய்த்தனர்கை வாளால்
வெட்டினர் குனித்துவில் வடிக்கணை விடுத்தார். 37

எழுப்படை விடுத்தனர் எடுத்தகதை விட்டார்
மழுப்படை எறிந்தனர் வயிர்க்குலிசம் உய்த்தார்
நிழற்பரவு முத்தலை நெடும்படைகள் தொட்டார்
சுழற்றினர் உருட்டினர் சுடர்ப்பரிதி நேமி. 38

மாரியென இப்படை வழங்கியிமை யோருஞ்
சீரவுண ராயினருஞ் சேர்ந்துபொரும் எல்லைச்
சோரியது தோன்றியது தூயவிரும் பெற்றும்
பாரிய உலத்திடை பரந்தெழு கனற்போல். 39

அங்கமெழு செங்குருதி ஆற்றின் நிமிர்ந்தோடி
எங்கணும் நிரந்தன இமைப்பிலவர் வைகுந்
துங்கமிகும் உம்பரிடை சூர்மதலை சீற்ற
வெங்கனல் எழுந்துமுன் மிசைந்திடுவ தேபோல். 40

நீடிரு திறத்தரும் நெடும்படைகள் ஏந்தி
ஆடல்புரி காலையழிந் தாற்றலில ராகி
ஓடினர்கள் வானவர்கள் ஒல்லைதொடர்ந் தேபின்
கூடினர்கள் வெவ்வவுணர் குற்றினர்கள் பற்றி. 41

சேண்கொடு முரிந்துபடர் தேவர்குழு வோரை
ஏண்கொடு வருந்தகுவர் யாத்தனர் புயங்கள்
நாண்கொடு திரும்பினர் நலங்கொள்கலை மானை
மாண்கொடு வரித்தொகுதி வவ்விஅகன் றென்ன. 42

செருவீ ரமுடன் அவர்ப்பொருவான்
செல்வன் நீரும் எற்போற்றி
வருவீர் வம்மின் வல்லாதீர்
வல்லை இன்னே வழிக்கொண்மின்
ஒருவீ ரன்றி எல்லீரும்
உள்ளத் தஞ்சி ஒருவிஅழி
தருவீரேனும் நன்றிறையுந்
தளரேன் துணிந்த தமியேனே. 26

என்று சயந்தன் மொழிந்திடலும்
இமையோர் கேளா இடருழவா
உன்றன் உள்ளம் ஈதாயின்
எமக்கு வேறோர் உணர்வுண்டோ
வென்றி அவுணர் பணிபுரிந்து
வீடா விழுமந் துய்ப்பதினும்
பொன்றி விடுதல் இனிதம்மா
எழுதி கடிதே போர்க்கென்றார். 27

வேறு

சயந்தனது கேட்டமரர் தங்குழுவை நோக்கித்
துயர்ந்தநும சிந்தனை துணிந்ததுகொல் என்னு
வியந்துகன கத்தவிசின் மேவுதல்வி டாத்தன்
கயந்தனை நினைப்பஅது துணர்ந்தது கருத்தில். 28

கல்கெழு நுதற்சிறிய கண்சுளகு கன்னம்
மல்கிய கறைப்பத மருப்பிணை இரட்டை
மெல்கிய புழைக்கரம் வெளிற்றுடலின் வேழம்
பில்கிய மதத்தொடு பெயர்ந்துளதை அன்றே. 29

இந்திர குமாரனை இறைஞ்சி எதிராகி
வந்திட அதன்பிடரில் வல்லைதனில் ஏறி
உந்தினன் நடாத்திஅயல் உம்பர்புறம் மொய்ப்பப்
புந்திகெழு வோவிநெடு பொள்ளென அகன்றான். 30

போகிதரு காளைபசும் பொற்புயல் நிறத்தான்
ஆகம்வெளி றாகும்அயி ராவதமி சைக்கண்
வாகுபெற மேவுவது மன்னுநெடு மால்பாற்
சீகரஅளக் கரிடை செவ்விதிருந் தன்ன. 31

பாங்கருறு வானவர்கள் பல்படையும் ஏந்தி
வீங்குதுயர் கொண்டகல வேறொரிடை காணார்
நீங்கல்வசை என்பது நினைந்துதுணி வாகி
ஆங்கவ னொடேகினர்கள் அச்சமில ரேபோல். 32

பெருந்தவள மெய்க்கரி பிளிற்றொலியும் உள்ளத்
தரந்தையுறு வானவர்தம் ஆர்ப்பொலியும் ஆற்றப்

பரந்தபகு வாய்முரசு பண்ணொலியும் ஒன்றாய்
வருந்தவறெ னக்ககனம் வாய்விடுதல் போலும். 33

ஊழிவரு கால்அனைய உம்பர்படை செல்லப்
பூழிநிமிர்ந் தேகின பொலத்துயர் நிலத்த
வாழிகொள் சுவர்க்கமெரி வெளவுநமை என்னுக்
கேழிலுயர் மேனிலை கிளர்ந்தெழுதல் போலும். 34

முறையிது நிகழ்ந்திட முரட்களிறு மேலான்
வறியமக வான்மதலை மாநகரம் நீங்கி
எறிகதிர் அருக்கனை இருஞ்சிறையில் வீட்டுஞ்
சிறுவன்அனி கத்தினெதிர் சென்றுபுக லோடும். 35

வற்புறு தயித்தியர் வருஞ்சுரரை நோக்கி
முற்பகலின் எல்லையும் முறைப்பணி புரிந்தார்
தற்பமுடன் நின்றுசமர் உன்னிவரு வாரோ
அற்புதம் இதற்புதம் இதென்றறையல் உற்றார். 36

கிட்டினர்கள் வானவர் கிடைத்ததமர் என்று
முட்டினர் தெழித்தவுணர் முன்பினிரு பாலார்
ஒட்டினர் முனிந்தயில்கள் உய்த்தனர்கை வாளால்
வெட்டினர் குனித்துவில் வடிக்கணை விடுத்தார். 37

எழுப்படை விடுத்தனர் எடுத்தகதை விட்டார்
மழுப்படை எறிந்தனர் வயிர்க்குலிசம் உய்த்தார்
நிழற்பரவு முத்தலை நெடும்படைகள் தொட்டார்
சுழற்றினர் உருட்டினர் சுடர்ப்பரிதி நேமி. 38

மாரியென இப்படை வழங்கியிமை யோருஞ்
சீரவுண ராயினருஞ் சேர்ந்துபொரும் எல்லைச்
சோரியது தோன்றியது தூயவிரும் பெற்றும்
பாரிய உலத்திடை பரந்தெழு கனற்போல். 39

அங்கமெழு செங்குருதி ஆற்றின் நிமிர்ந்தோடி
எங்கணும் நிரந்தன இமைப்பிலவர் வைகுந்
துங்கமிகும் உம்பரிடை சூர்மதலை சீற்ற
வெங்கனல் எழுந்துமுன் மிசைந்திடுவ தேபோல். 40

நீடிரு திறத்தரும் நெடும்படைகள் ஏந்தி
ஆடல்புரி காலையழிந் தாற்றலில ராகி
ஓடினர்கள் வானவர்கள் ஒல்லைதொடர்ந் தேபின்
கூடினர்கள் வெவ்வவுணர் குற்றினர்கள் பற்றி. 41

சேண்கொடு முரிந்துபடர் தேவர்குழு வோரை
ஏண்கொடு வருந்தகுவர் யாத்தனர் புயங்கள்
நாண்கொடு திரும்பினர் நலங்கொள்கலை மானை
மாண்கொடு வரித்தொகுதி வவ்விஅகன் றென்ன. 42

இடுக்கணுறு தேவர்தமை ஈர்த்தனர்கொ டேகி
மிடற்கதிர் அருக்கனை வெகுண்டவன்முன் உய்ப்பக்
கடக்கரிய வன்மையொடு காவல்கொளு மென்றான்
தடக்களிறு மேல்வரு சயந்தன்இவை கண்டான். 43

வேறு

கண்டான் வெகுண்டான் புகையாரழல் கல்லென் மேகம்
உண்டான் எனவே உமிழ்ந்தான் ஒருதன் சிலைக்கைக்
கொண்டான் குணத்தின் இசைகாட்டினன் கோட்டி நேர்போய்
அண்டார் வெருவக் கணைமாரிகள் ஆர்ப்பொ டுய்த்தான். 44

பொழியும் பொழுதத் தவுணப்படை போந்த வீரர்
மொழியும் மனமும் நனிதாழ்த்திட முன்ன ரேகி
ஒழியுங் கடைநாள் அரன்வெற்பை உருது சூழ்போஞ்
சுழியுங் கடல்போல் அவனூர்கரி சுற்றி ஆர்த்தார். 45

சயந்தன் மிசையும் பொலங்கிம்புரித் தந்த வெள்ளைக்
கயந்தன் மிசையுஞ் சிலைவாங்கிக் கணைகள் கோடி
பயந்தந் திடத்தூர்த் தனர்சோமனைப் பன்ன கங்கள்
வயந்தன் னெடுபோய் முயலோடு மறைக்கு மாபோல். 46

கல்லென் றரற்றுங் கழல்வீரர் கனைந்து சுற்றிச்
செல்லென் றுவிட்டகணை யாவையுஞ் சிந்தி வல்லே
மல்லொன் றுமொய்ம்பிற் சயந்தன்சர மாரி தூண்டி
வில்லும் மனையோர் தனுவும்புவி வீட்டி னான். 47

வீட்டிக் கணைகள் அவுணப்படை மீது தூர்த்து
மோட்டுக் களிற்றின் தொகைதன்னை முகங்கொள் பாய்மா
வீட்டத் தினைத்தேர் கனைவீரர் இனத்தை யெல்லாம்
வாட்டிப் பின்வெள்ளம் ஒருநூற் றினை மாய்வு செய்தான். 48

வாலிற் புடைக்கும் புழைக்கைகொடு வாரி எற்றுங்
காலிற் படுக்கும் மருப்பாலடுங் கந்த ரம்போல்
ஓலிட் டுயிருண் டிடுமாங்கவன் ஊர்ந்த வேழஞ்
சீலக் கதிரைச் சிறையிட்டவன் சேனை தன்னை. 49

நூறாய்ப் புகுதா னவர்வெள்ளம் நொடிப்பின் மாய
வீறாய்ப் படையும் பல்பூண்களும் மீன மாக
ஆறாய்க் குருதி பெயர்ந்தேயகல் வான நீத்தம்
மாறாய்ப் பொருது மிசையோடி வளைந்து கொண்ட. 50

காய்கொல் இபமேற் சயந்தன்அடு காலை தன்னில்
பேய்கொல் உணைத்தீண் டினமேல்வரும் பெற்றி யோராய்
தீகொல் பறவை புரைவாய்எமர் சேனை தன்னை
நீகொல் லடுதி யெனவந்தனன் நீல கேசன். 51

எண்ணத் தவரை அலைக்கின்ற இருண்ட
தண்ணத் தவரை நிகர்கின்ற சயந்தன் முன்போய்

விண்ணத் தவரை முகில்தாங்குறும் வேட மென்ன
வண்ணத் தவரைக் குனித்தம்பெனும் மாரி தூர்த்தான். 52

தூர்த்தான் அதுகால் சயந்தன்எதிர் தூண்டி வாளி
தீர்த்தான் சரமாரி யையன்றியுஞ் சின்ன மாக்கி
ஆர்த்தான் கவசம் அவனிட்டதை அம்பு நூறால்
வேர்த்தான் உயிர்த்தான் இருட்குஞ்சியன் மேக மொப்பான். 53

பாசம் பிணித்த அரணம் பரிவெய் தநீல
கேசன் விடுத்தோர் பிறையம்பினைக் கேடில் விண்ணோர்
ஈசன் சிறுவன் சிலைநாணை இறுத்தி சைத்தான்
காசோன் றரவந் துணியப்பகை கௌவு மாபோல். 54

சின்னம் படலும் பெருநாண்சிலை வீழ விட்டுத்
தன்னந் தனியாஞ் சயந்தன்சமர் செய்வ தற்கு
முன்னம் பயிற்றும் ஒருமாயையை முன்னி யாற்றித்
துன்னந் தருபல் லுருவங்கொடு தோன்றி யுற்றான். 55

வேறு

ஒன்றேயெனுங் கரிமேல்வரும் ஒருவன்பல வுருவாய்ச்
சென்றேதிறம் பலவால்அடச் செறிபேரிருட் குடுமிக்
குன்றேபுரை அவுணர்க்கிறை குறிப்பால்இது மாயம்
என்றேநினைந் தவைமாற்றிட யாதுஞ்செயல் லலான. 56

மலைவுற்றெதிர் நின்றார்த்திட வாயற்றனன் மயங்கித்
தொலைவுற்றனன் இருட்குஞ்சியன் சூரன்மகன் அனிகம்
மலைவுற்றன விரிகின்றன அலமந்தன வெருவி
உலைவுற்றன இறுதிப்பகல் ஒழிவுற்றிடும் உயிர்போல். 57

சோமாசுரன் மாயாபலி சுரகேசரி பதுமன்
மாமாருத பலிதண்டகன் வாமன்மதி வருணன்
தீமாகதன் முதலாகிய சேனைப்பெருந் தலைவர்
ஆமாயமி தெனவந்தனர் அவ்விஞ்சையை உணரார். 58

தாங்கற்றிடு மாயப்பெருந் தனிவிஞ்சைகண் முன்னி
ஆங்குற்றிடு மரபாற்பொரு தன்னுன்புரி மாயம்
நீங்கற்கரு நிலையாதலும் நெஞ்சகந் தடுமாறி
ஏங்குற்றனர் என்செய்குதும் யாமென்று நினைந்தார். 59

அந்நேருறு காலந்தனில் ஆகின்றதுந் தலைவர்
தன்னேவலின் மெலிவுற்றதும் சயந்தன்பெருந் திறலும்
கொன்னேதன தனிகக்கடல் குறைகின்றதும் கண்டான்
முன்னேயிர வியைஓர்பகற் சிறைவீட்டிய முதல்வன். 60

வேறு

அந்த ரந்தனில் இரவியைச் செயிர்த்திடும் அவுணன்
இந்தி ரன்மகன் மாயைகொல் இதுவென எண்ணா

முந்தை நாட்புகர் உதவிய மூலமா ஞான
மந்தி ரந்தனை உளந்தனில் விதிமுறை மதித்தான். 61

மதித்து வெஞ்சுடர்ப் பகையினன் சேறலும் மாயை
விதித்த பல்லுருப் போயின தமியனும் விடலை
கதக்க ளிற்றின்மேல் தோன்றினன் ஆயிரங் கதிரோன்
உதித்த காலையில் கலையிலாக் குறைமதி யொப்ப. 62

ஆன காலையில் இதுபுகர் விஞ்சையென் றறிந்து
மான முஞ்சின முஞ்சுடச் சயந்தன்உள் மறுகித்
தான வேழமேல் இருந்துழித் தேரொடுஞ் சார்ந்து
பானு கோபனும் பெயரினன் இனையன பகர்வான். 63

வருதி இந்திரன் மதலைநின் மாயையும் வலியும்
கருதி யான்வரு முன்னரே போயின கண்டாய்
பரிதி போலவே நின்னையும் இருஞ்சிறைப் படுப்பன்
பொருதி வல்லையேல் என்றனன் சூர்தரு புதல்வன். 64

வல்ல ராயினோர் வெல்வதும் மற்றஃ தில்லோர்
அல்ல ராகியே தோற்பதும் இல்லையால் அரனே
தொல்லை யூழ்முறை புணர்த்திடும் நின்னைநீ துதிக்கச்
செல்லு மோவென உரைத்தனன் சயந்தனுந் திறலோன். 65

தேற்ற மோடிவை புகறலும் இரவியைச் செயிர்த்தோன்
ஆற்றல் இல்லவர் மொழிதிறம் புகன்றனை அன்றே
ஏற்ற வீரரும் இத்திறம் உரைப்பரோ என்னாக்
கூற்ற மேயென இருந்ததோர் தன்சிலை குனித்தான். 66

சிலைவ ணக்கிய காலையில் சயந்தனுஞ் சினத்து
மலைவ ணக்குதன் புயங்கொடே ஒருசிலை வளைத்தான்
அலைவ ணக்கரும் ஞமலியெம் மடிகளை அடைந்தோர்
தலைவ ணக்கியே தத்தமில் இருவர்தாழ் வதுபோல். 67

பாற்றி ருஞ்சிறைக் கணைபல பரிதியம் பகைஞன்
ஊற்ற மோடுவான் புயலெனச் சொரிதலும் ஒருத்தன்
மேற்றி கழ்ந்திடு சயந்தனும் அனையன விசிகங்
காற்றெ றும்படி தூண்டியே விலக்கினன் கடிதின். 68

அன்ன வன்விடுஞ் சரமெலாஞ் சூர்மகன் அறுத்துத்
துன்னு பல்கணை தூண்டினன் அவனவை தொலைத்தான்
இன்ன தன்மையின் இருவரும் பொருதனர் இருளும்
மின்னு மாகவே முறைமுறை மலைந்திடும் விதிபோல். 69

இனைய வாறமர் புரிவுழி இரவியம் பகைஞன்
வினைய நீரினல் சொரிந்திடு பகழியை விலக்கித்
துனைய இந்திரன் மதலைஆ யிரங்கணை தூண்டி
அனையன் ஏந்திய சிலைப்பெரு நாணினை அறுத்தான். 70

அறுத்த காலையில் ஞாயிறு வெகுண்டுளோன் அழலிற்
செறுத்து வேறொரு சிலைவளை இக் கணைமழை சிதறி
மறுத்தும் ஆங்கவன் விடுஞ்சரம் சிந்திமற் றவன்மெய்
உறுத்தி னென்ப ஓராயிரஞ் சிலீமுகம் உய்த்து. 71

உய்த்த காலையில் சயந்தனும் ஓராயிரங் கணைதூய்ப்
பத்தி யோடவன் தேர்கெழு பாய்பரி படுத்து
மெத்து பல்சரந் தானைமேல் வீசினன் விளிவோர்
வைத்த மாநிதி யாவர்க்கும் வழங்குமா றென்ன. 72

வாய்ந்த தோர்தன திரதமீ றுகமற் றொருதேர்
பாய்ந்து வெய்துயிர்த் தழலென வெகுண்டுபற் கறித்துச்
சேந்த மெல்லிதழ் அதுக்கிவா னுருமெனத் தெழியா
ஏந்து வார்சிலை குனித்தனன் எறிகதிர்ப் பகைஞன். 73

கூனல் வெஞ்சிலை குனித்துநூ றுயிர கோடி
சோனை வெங்கணை தூண்டிவிற் றாணியைத் துணித்துத்
தான வெங்கரி தன்னுடன் முழுவதுஞ் சயந்தன்
மேனி முற்றவும் அழுத்தினன் பகலினை வெகுண்டோன். 74

வேறு

வெய்ய வற்சிறை இட்டவன் விட்டகோல்
சைய மொத்த சயந்தன்மெய்ம் மூழ்கலும்
மைய லுற்றனன் மற்றொரு வெஞ்சமர்
செய்வ தற்குத் தெளிதலின் றுயினன். 75

நீண்ட வாளிக ளான நிறத்திடை
ஆண்ட காலை அரிமகன் தந்திமேல்
வீண்டு விம்மி உணர்ச்சியும் விட்டனன்
மாண்டி லான்அமு தங்கொண்ட வன்மையால். 76

நண்ணு பாசடை நாப்பணி டந்தொறுந்
தண்ணென் மாமலர்த் தாமரை பூத்தென
விண்ண வர்க்கிறை மாமகன் மெய்யிடைத்
துண்ணெ னப்படு சோரி பொலிந்ததே. 77

கற்ற வாசவன் காளைதன் சீற்றம்நாம்
முற்ற ஓத முடியுங்கொல் தன்னுணர்
வற்ற போதும் அவன்சினக் கண்ணழல்
வற்று வித்தமெய் வார்குரு திப்புனல். 78

சயந்தன் அவ்வழி தன்னுணர் வின்றியே
அயர்ந்த போதத் தனையவன் ஊர்தியாம்
கயந்தன் நக்கிறை கண்டு கலங்கியே
துயர்ந்து நின்று சுளித்தெதிர் புக்கதே. 79

காய்ந்த தொன்மைக் கதிரை முனிந்திடும்
ஏந்தல் ஊர்தரும் எந்திரத் தேர்மிசைப்

பாய்ந்த காலைப் பரித்தொகை பாகுடன்
வீய்ந்து போன தெழித்தது வேழமே. 80

பாண்டில் சேர்தரு பண்ணமை செய்யதேர்
மாண்ட காலையில் வல்லெயிற் கீழுறத்
தாண்டி வெள்ளையந் தந்தியைச் சீறினன்
மூண்டு பானுவை முன்சிறை செய்துளான். 81

மற்ற வன்றன் மணியணி மார்பிடைச்
செற்ற மால்கரி சென்றுமுன் தாக்கலும்
பொற்றை யின்கட் புழைத்திடுஞ் சூசியின்
இற்ற வால்அதன் ஈரிரு தந்தமும். 82

தந்தம் நான்குஞ் சடசட ஆர்ப்பொடு
சிந்தல் உற்றன சீர்கெழு சூர்மகன்
உந்து தொண்டலம் பற்றிமற் றோர்கையால்
தந்தி வேந்தன் கவுளிடைத் தாக்கினன். 83

வேறு

காழ்ந்த நெஞ்சினன் கரங்கொடு தாக்கலுங் கயமா
ஆழ்ந்த தெண்டிரைப் பாற்கடல் உடைந்தென அரற்றி
வீழ்ந்த யர்ந்தது சயந்தனும் அறிந்தனன் விரைவில்
சூழ்ந்த தொல்லுணர் வெய்தலும் அவனிவை சொல்லும், 84

மாயை போயது தனித்தனங் குறைந்தது வன்மை
தீயர் பற்றுவர் அழியுமிந் நகரெனச் சிறிது
நீயி ரங்கலை இனிமன னேவிதி நெறிகாண்
ஆயின் இங்கிவை என்றனன் சயந்தனும் அறிஞன், 85

நுனித்து நாடியே இத்திறம் நுவன்றுநூற் றுணிபு
மனத்தில் வைத்திடும் இந்திரன் கான்முளை மயங்கித்
தனித்த நீர்மையுங் களிற்றெருடு வீழ்ந்ததுந் தளர்வும்
அனைத்தும் நோக்கியே தானவத் தலைவர்கள் ஆர்த்தார். 86

ஆர்த்த தானவத் தலைவர்கள் சயந்தனை அயலே
போர்த்த தாமெனச் சுற்றினர் பற்றினர் புவிமேல்
கூர்த்த வாலெயிற் றரவினம் யாவையுங் குழீஇப்போய்ச்
சீர்த்த வெல்லையில் இரவியைக் கரந்திடுந் திறம்போல். 87

தடித்த மொய்ம்புடைச் சயந்தனைத் தானவத் தலைவர்
பிடித்த காலையிற் கைதவன் கைதவன் பெரிதும்
அடித்தி டுங்கள்குற் றிடுங்கள்இங் கிவனுயிர் அதனைக்
குடித்தி டுங்களென் றோர்எலா வவுணரும் குழுமி. 88

மன்னர் மன்னவன் திருமகன் அவ்வழி மற்றோர்
பொன்னெ டும்பெருந் தேர்மிசைப் பொள்ளென ஏகிப்
பன்ன ரும்புகழ் படைத்திடு சயந்தனைப் பற்றித்
துன்னி நின்றிடும் அவுணருக் கொருமொழி சொல்வான். 89

வரிவில் வாங்கியே யான்விடுஞ் சரம்பட மயங்கிப்
பெரிது மெய்தளர் வுற்றனன் பேசவுங் கில்லான்
கருத லானென இவன்றனை வருத்தலிர் கடிதே
சுரர்கு ழாத்தொடு புரிமினோ சிறையெனச் சொற்றான். 90

கொற்ற வன்மொழி வினவியே மந்தரக் குன்றைச்
சுற்று பாந்தள் போல் இந்திரன் திருமகன் துணைத்தோள்
இற்ற கொல்லென நாணினால் யாத்தனர் இமையோர்
உற்று நின்றதோர் குழுவினுள் ஒருங்குற உய்த்தார். 91

வேறு

தொழிலிது புரிந்த காலைச் சூர்மகன் தனது மாடே
தழியகா வலரை நோக்கிச் சயந்தனும் இவரும் அல்லால்
ஒழியநின் றோரை எல்லாம் ஒல்லையில் தருதிர் பின்னர்
அழியஇம் மூதூர் செந்தீ அரசனுக் களித்திர் என்றான். 92

என்றலும் இறைஞ்சி யன்னோர் எழிலுடைத் துறக்கம் யாண்டுஞ்
சென்றனர் நாடி யேனைத் தேவரை மகளிர் தம்மை
ஒன்றொரு வரையும் வீடா துடனுறப் பற்றி நாணால்
பொன்றிரள் தடந்தோள் யாத்துப் புரவலன் முன்னர் உய்த்தார். 93

உய்த்தபின் பதுமச் செல்வி உறைதரும் உறையுள் போலச்
சித்திரங் கெழுவு பொன்னந் திருநகர் எல்லை யெங்கும்
புத்தழல் கொளுவ லோடும் பொள்ளெனப் பொடிபட் டன்றே
முத்திற வரைப்பும் எங்கோன் முறுவலான் முடிந்த வாபோல். 94

ஊழியின் அன்றி என்றும் ஒழிவுறாத் துறக்க மூதூர்
பூழிய தான தன்றே புரந்தரன் வறியன் போனான்
வீழுறு சிறையின் உற்றார் மிக்கவ ரென்றால் யாரும்
வாழிய செல்வந் தன்னை நிலையென மதிக்க லாமோ. 95

அளிபட லின்றி யென்றும் அலர்தரு நிழற்றும் மூதூர்
வெளிபடு சுடலை போலாய் வேற்றுருக் கோட லோடுங்
களிபடு பானு கோபன் கண்டனன் அவுணர் தம்மில்
[illegible]படு காவ லோரை நோக்கியீ துரைக்கல் உற்றான்.

தாதுலாந் தெரிய லாகச் சயந்தனை அவனோ டுற்ற
ஏதிலார் தம்மைப் பின்னோர் யாரையுங் கொடுமுன் நீவிர்
போதிரால் என்ன அற்றே போயினர் உவணை நீங்கி
ஆதவன் பகைஞன் மீளா அனிகமோ டவனி வந்தான். 97

மாநில மதிக்கும் வீர மகேந்திர புரத்துப் புக்குக்
கோனகர் முன்னம் ஏகிக் கொடிஞ்சிமான் தேரின் நீங்கிச்
சேனையை நிறுவி வானச் சிறையினைக் கொண்டு சென்று
தானவர் மன்னன் முன்போய்த் தாள்முறை வணக்கஞ் செய்தான். 98

தண்டுளி நறவ மாலைத் தாதைதாள் வணங்கி எந்தாய்
கண்டிலன் சசியை வானோர் காவலன் தனையுங் காணேன்

அண்டரைச் சயந்தன் தன்னை யாரையுங் கொண்டு சென்றேன்
விண்டொடர் துறக்க முற்றும் வெங்கனல் கொளுவி என்றான். 99

என்றலும் மகிழ்ந்து சூரன் இளஞ்சிறு குமரற் புல்லித்
தன்றிரு முன்னர் இட்ட சயந்தனை முதலி யோரைக்
கன்றினன் உருத்து வாட்கைக் காவலர் சிலரை நோக்கித்
துன்றிய இளையர் அங்கம் யாவையுந் துணித்திர் என்றான். 100

இரலைமான் தொகுதி தன்மேல் இருஞ்சிறை வீடு பெற்ற
உருகெழு புலிபாய்ந் தொப்ப ஒப்பிலா அரசன் சொல்லால்
விரைவுடன் அவுணர் பல்லோர் விண்ணவர் தம்பால் மேவித்
துருவையின் முகத்தி காணத் துண்ணெனத் துணிக்கல் உற்றார். 101

கரத்தினைத் தாளைத் தோளைக் கன்னமூ லத்தைக் கல்லென்
றரற்றுறு கண்டந் தன்னை அணிகெழு துண்டந் தன்னைச்
சிரத்தினைத் துணிப்ப அன்னோர் சிறியரோ செய்த நோன்பின்
உரத்தினில் அவைக ளெல்லாம் உடனுடன் பொருந்த லுற்ற. 102

செல்லரு நெறிக்கண் நின்ற சேணுளார் தம்மை யாருங்
கொல்லரி திறையும் அங்கங் குறைத்தலும் அரிதா மென்றுற்
சொல்லரி திளையர் வன்மை தொலைந்ததெம் வரத்தா லென்று
வல்லரி புரைவெஞ் சூரன் மதித்துமற் றதனைக் கண்டான். 103

கண்டனன் முனிந்தின் னோரைக் காலமொன் றுனும் வீடா
எண்டரு நிரயம் போலும் இருஞ்சிறை இடுதி ரென்றே
திண்டிறல் அசுரர் கேட்பச் செப்பலுஞ் சயந்தன் றன்னை
அண்டரைப் பிடர்தொட் டுந்தி ஆங்ஙனங் கொண்டு போனார். 104

போயினர் சிறையின் எல்லை போற்றினர் தம்மை நோக்கி
ஏயினன் நங்கோன் இன்னோர் யாரையுங் காவல் கொண்மின்
நீயிர்க ளென்று ஒற்றர் நீங்கினர் நின்றோர் தம்மை
ஆயவர் வல்லி பூட்டி அருஞ்சிறைக் களத்தில் உய்த்தார். 105

மன்னவன் அதற்குப் பின்னர் மைந்தனை அன்பால் நோக்கி
நின்னக ரத்திற் போதி நீயென அனையன் போனான்
அன்னதோர் சூர பன்மன் அவையொரீஇ உறையுள் புக்கான்
இன்னலங் கடலில் உற்றார் இருஞ்சிறைப் பட்ட வானோர். 106

வேறு

காடு போந்தனன் இந்திரன் பொன்னகர் கரிந்து
பாடு சேர்ந்தது சயந்தனுஞ் சிறையிடைப் பட்டான்
நாடில் விண்பதச் செய்கையீ தெம்பிரான் நல்கும்
வீட தேயலால் துன்பறும் ஆக்கம்வே றுண்டோ. 107

வேறு

படவர வனையதோர் பருமஅல்குலார்
இடுகிய நுண்ணிடை எழில ணங்கினோர்

கொடுமைசெய் அவுணரூர் குறுகி வேடர்பால்
பிடியுறு மஞ்ஞையிற் பெரிதும் அஞ்சினர். 108

சூரன்வாழ் பெருநகர் துன்னிக் காப்பொடு
சீரிலா ஏவல்கள் செய்து மேவினர்
கூரும்வாய் வெங்குரீ இக் குடம்பை உய்த்திடப்
பேருரு திலகுமின் மினியின் பெற்றிபோல். 109

வாடிய மகபதி மதலை வானுளோர்
ஆடுறு துயர்க்கடல் அழுந்திச் சூரர்கோன்
வீடருஞ் சிறையிடை மேவி னரவர்
பாடுறு திறத்தையார் பகரற் பாலினோர். 110

இன்னலங் கடலினும் எடுத்து வீடுதந்
தன்னவர் பெருஞ்சிறை அகற்றும் வன்மையார்
பின்னெவர் உண்டுயிர் பெற்றுக் காத்திடு
முன்னவர் தமக்கெலா முதல்வ நீயலால். 111

வியந்தரு கதிரைமுன் வெகுண்டு ளானொடு
சயந்தன்விண் ணுலகிடைச் சமர்செய் தெய்த்துழி
வயந்தரு கோடுகண் மாய்ந்து தந்திவீழ்ந்
தயர்ந்தது புவியிடை அணுகிற் றத்துணை. 112

வாலிய ஒளிகெழு வனத்தில் ஏகியே
மூலம தாகிய முக்கண் மூர்த்தியை
மேலுள தாணுவின் மேவச் செய்துபின்
சீலமொ டருச்சனை செய்து வைகிற்றே. 113

அறிவுள மால்கரி அமலன் தந்திர
முறையது நாடியே முதிரும் அன்பினல்
மறையுற வழிபடூஇ வைகும் எல்லையில்
குறைபடு நாற்பெருங் கோடும் வந்தவே. 114

பார்ப்பதி மருங்குறு பகவன் ஆணையால்
மாற்பெருங் களிற்றிடை வல்லை முன்புபோல்
நாற்பெருந் தந்தமும் நண்ண நோக்கியே
ஏற்பரு மகிழ்ச்சியோ டிருந்த தவ்விடை. 115

வேறு

ஆயதோர் அமைதி யின்கண் அணங்கொடு மேரு வெற்பிற்
போயின அமரர் கோமான் பொன்னகர் சூரன் மைந்தன்
காயெரி கொளுவி அங்கட் கடவுளர் குழுவி னோரைச்
சேயொடு பற்றி ஏகிச் சிறைசெய்த தன்மை தேர்ந்தான். 116

தேர்ந்தனன் தளர்ந்து மேருச் சிலம்பினின் மகவான் பன்னாள்
வார்ந்திடு கங்கை வேணி வள்ளலை உன்னி நோற்பச்
சார்ந்துநிற் கென்னை வேண்டுஞ் சாற்றென முதல்வன் நீதி
பேர்ந்தசூர் கிளையைச் செற்றெம் பேதுற வகற்று கென்றான். 117

என்றலும் எந்தை சொல்வான் யாமுமை தன்னை மேவி
ஒன்றொரு குமரன் றன்னை உதவுவம் அவனே போந்து
வென்றிகொள் சூர னாதி அவுணரை விரைவிற் செற்று
மன்றநும் முரிமை ஈவன் வருந்தலென் றுரைத்துப் போனான். 118

சாதலுந் தொலைவும் இல்லாத் தானவர்க் கிறைவன் ஏனோர்
ஏதிலர் தம்மால் வீடான் என்றுதன் உளத்தி லெண்ணிச்
சோதிகொள் பரம மாகித் தோன்றிடு முதல்வன் நீயே
ஆதலின் விமல மூர்த்தி அவரைமே லடுதி யென்றான். 119

அவ்வுரை மகவான் தேறி அரியய னோடு சூழ்ந்து
மைவரு களத்தோன் தன்பால் மதனனை உய்ப்ப அன்னோன்
மெய்விழி எரியின் மாய்ந்து வெறுந்துகள் படலுந் தேவர்
எவ்வெவ ரும்போய் வேண்ட இரங்கியே கருணை செய்தான். 120

அரியயன் மகவான் தேவர் அருங்கணத் தலைவர் யாரும்
பரவுற இமய வெற்பிற் படர்ந்துபின் உமையை வேட்டுப்
பிரிவருங் கயிலை நண்ணிப் பின்னெம திரக்கம் நாடிக்
கருணையால் எந்தை நின்னை நெற்றியங் கண்ணால் தந்தான். 121

எந்தைநீ வந்த பின்றை இந்திரன் அயன்மால் தேவர்
அந்தமில் முனிவர் ஏனோர் அனைவர்க்கும் அகன்ற ஆவி
வந்தது போன்ற தம்மா வலியவெஞ் சூரற் செற்றுத்
தந்தம தரசு பெற்ற தன்மையர் போல வுற்றார். 122

ஆழ்தரு முந்நீர் நேமி அகன்கடல் அழுவம் புக்கு
வீழ்தரு வோர்கள் தம்பால் வியன்கல மொன்று சேர
ஊழ்தரு தொடர்பாற் பற்றி உய்ந்தெனத் துன்ப வேலைக்
கீழ்தரு வோர்கள் நின்னாற் கிளர்ந்துமேல் எழுதல் உற்றார். 123

புரந்தரன் முதலா உள்ள புங்கவர் எம்ம னோர்கள்
அரந்தையை அகற்ற உன்னி ஐயநீ போந்த பின்னுந்
தெரிந்திடு துணிபிற் சேர்ந்துந் தெம்முனைச் சூரற் கஞ்சிக்
கரந்தனர் இருந்தார் காணிற் கடுஞ்சிறைப் பிணிப்ப னென்று.124

எம்பிரான் நின்னை முக்கண் எந்தையை வணங்க நேரில்
தம்பெரு வடிவங் காணச் சாருவர் ஒழிந்த காலை
உம்பர்கோன் முதலோர் தத்தம் உருக்கரந் துழல்வர் வான்மேல்
வெம்பணி சிலைகண் மாறும் வெய்யவர் நிலைமை யேபோல். 125

மறைந்திடு பாங்கர் இன்ன வாசவன் முதலோர் யாரும்
அறந்தவிர் சூர பன்மன் அடுபடைத் தலைவர்க் காணிற்
பறைந்திட மார்பம் உள்ளம் பனித்திட வியர்ப்ப யாக்கை
இறந்தன ராகிப் பின்னர் இன்னுயிர் பெறுவர் அன்றே. 126

வினைப்பவம் உழந்த விண்ணோர் வெந்தொழில் அவுணர் கோனை
நினைப்பினும் அவச மாவர் நெடுந்துயில் பெறுத நீரால்

மனப்படு கனவு நீத்தார் மற்றது வருமேல் அங்கண்
உனப்படு சூரற் காணின் உயிரையும் இழப்பர் அம்மா. 127

பொன்னகர் இறுதி செய்து புதல்வனை அமர ரோடு
துன்னருஞ் சிறையுட் சேர்த்தித் துயர்ப்பெருங் கடலுள் வீட்டி
மன்னிய வெறுக்கை வவ்வி மனையொடு கரப்பச் செய்தும்
இன்னமும் அவுணர் கோமான் இந்திரற் கலக்கண் சூழும். 128

ஒப்பரும் வெறுக்கை தன்னால் ஓங்கிய விறலாற் சீரான்
மெய்ப்படு மிடலால் யார்க்கும் மேன்மையால் அழியா வாற்றால்
இப்பகல் வானோர்க் கெல்லாம் இடர்புரி கொடுமை நீரால்
அப்பெருஞ் சூரற் கென்றும் ஆரும்நேர் அன்று மாதோ. 129

ஏயதோ ரண்ட மொன்றின் இழைத்தன இவ்வா றேனை
ஆயிரத் தோரேழ் அண்டத் தவன்செயல் அறிதல் தேற்றாந்
தூயதோர் பரத்தின் மேலாஞ் சோதியாய் எம்மைக் காப்பான்
மேயின ஒருநீ அன்றி வேறியார் தெரிதற் பாலார். 130

தொடர்ந்திடு சீர்பெற் றுள்ள சூரன தாணை என்னில்
கடந்திடல் புரியார் மாலுங் கமலமேல் அயனும் வானோர்
அடங்கலும் முனிவர் யாரும் ஆயிர விருநா லண்டத்
தொடுங்கிய உயிரும் அன்னோன் பெருமையார் உரைக்கற்பாலார். 131

முடிவிலிவ் வளம்பெற் றுள்ள முரண்கெழு சூர பன்மன்
கெடுகிலன் அன்று மேலோன் கிளத்திய வரத்தின் சீராற்
படியறும் அமல மேனிப் பரஞ்சுடர் குமர நீயே
அடுவதை அன்றிப் பின்னர் அவனையார் முடிக்கற் பாலார். 132

ஐந்தியல் அங்கஞ் சூரற் கயன்புகன் றுழல்வான் நாளும்
இந்திரை கேள்வன் போர்செய் தெஞ்சினன் எவர்க்கும் மேலாய்
முந்திய சிவன்அன் னோற்கு முதல்வரம் அளித்தான் பின்னர்
வந்தடல் புரியான் நீயே மற்றவற் கோறல் வேண்டும். 133

ஆவதோர் சூரன் றன்னை அவன்றுணை வோரை மைந்தர்
ஏவர்கள் தமையும் அட்டே எழில்பெறு சயந்த னோடும்
தேவர்தஞ் சிறையை நீக்கித் திசைமுகன் மகவா னாதிக்
காவலர் பதங்கள் நல்கிக் காத்தருள் எம்மை யென்றான். 134

இவ்வகை முகமா றுள்ள எம்பிரான் உளத்திற் கேற்ப
உய்வுறும் அன்பாற் பொன்னோன் உரைப்பமுன் அறிந்த தோன்றை
மெய்வரு தொடர்பால் ஈன்றோர் விழைவினன் மழலை ஒவாச்
செவ்வியல் மகார்வாய்க் கேட்குந் திறனென வினவிச் சொல்வான். 135

புன்றொழில் அவுணர் தன்மை புறத்தவர் செய்கை யாவும்
ஒன்றிடை விடாது முற்றும் உள்ளவா றுரைத்தாய் நம்மு
னன்றிது பனுவற் கெல்லாம் நாதனை ஒருநீ அன்றோ
வென்றவன் புறத்தை நீவி இனிதருள் புரிந்தான் எங்கோன். 136

அறிவினுள் அறிவாய் வைகும் அறுமுக அமல வெஞ்சூர்
இறுசெயல் நினைக்கி லாகும் ஈண்டையோர் ஆடல் உன்னிக்
குறுகினை யதுபோல் அன்னோன் கொள்கையுந் தேர்ந்தாய் நிற்கோர்
சிறியனேன் உரைத்தேன் என்னுந் தீப்பிழை பொறுத்தியென்றான். 137

பொறுத்தியென் குற்றம் என்று பொன்னடித் துணையைப்பொன்னோன்
மறத்தலில் அன்பிற் பூண்டு வணங்கினன் தொழுது போற்ற
வெறித்தரு கதிர்வேல் அண்ணல் எம்முறை கொண்டு சொற்றாய்
உறத்தகு பிழையில் யாதும் உன்னலை இருத்தி என்றான். 138

## வேறு

பொன்னெனும் பெயரினோன் பொருவில் கந்தவேள்
இன்னருள் நிலைமைபெற் றிருந்த பின்னரே
தன்னயல் நிற்புறு சதம கத்தனை
அந்நிலை நோக்கியே அன்பிற் கூறுவான். 139

ஈண்டிது கேண்மனத் தேதும் எண்ணலை
மூண்டிடு சூர்குல முடிய வானுளோர்
மீண்டிட இருஞ்சிறை விண்ப தத்தைநீ
ஆண்டிட நல்குதும் ஐயுறேல் என்றான். 140

இகபரம் உதவுவான இதனைச் சாற்றலும்
மகபதி பரிவொடு வணங்கி வானவத்
தொகையொடு போற்றியே துன்பெலாம் ஒரீஇப்
புகலரும் மகிழ்ச்சியுட் பொருந்தல் மேயினான். 141

ஆகத் திருவிருத்தம்–1,929.



அசுர காண்டம் முற்றுப் பெற்றது
ஆகக் காண்டம் இரண்டுக்குத் திருவிருத்தம்–3,712.
கச்சியப்பசிவாசாரியர் திருவடிவாழ்க



உ

செந்திலாண்டவன் துணை

திருச்சிற்றம்பலம்

மூன்றாவது

# மகேந்திர காண்டம்



## 1. வீரவாகு கந்தமாதனஞ் செல் படலம்

—oo—

விரிஞ்சன்மால் தேவ ராலும் வெலற்கரும் விறலோ டைப
பெருஞ்சூரர் பதமும் வேத வொழுக்கமும் பிறவு மாற்றி
அருஞ்சிறை அவர்க்குச் செய்த அவுணர்கோன் ஆவி கொள்வான்
பரஞ்சுடர் உருவாய் வந்த குமரனைப் பணிதல் செய்வோம். 1

இந்திர னாதி யான அமரரும் ஏனை யோரும்
புந்தியில் உவகை பூத்துப் புடைதனில் ஒழுகிப் போற்றச்
செந்திமா நகரந் தன்னில் சீயமெல் லணைமேல் வைகுங்
கந்தவேள் அருளின் நீரால் இனையன கருத லுற்றான். 2

நான்முக னாதி யான நாகரும் முனிவ ரும்போல்
மேன்முறை அவுண ராகும் வியன்தொகை யவரும் எங்கோன்
கான்முளை நெறிய ரேனுங் கடியரை முடிவு செய்தல்
நூன்முறை இயற்கை யாகும் நுவலரும் அறனும் அஃதே. 3

இற்றிது துணிபா மேனும் எண்ணெழிற் சூரன் றன்னை
அற்றமில் சிறப்பின் வைகும் அவன்றமர் தம்மை எல்லாஞ்
செற்றிடல் முறைய தன்றால் தேவர்தஞ் சிறைவிட் டுய்ய
மற்றவன் தனக்கோர் ஒற்றை வல்லையில் விடுத்து மன்றே. 4

தூண்டுநம் மொற்றன் மாற்றஞ் சூரனும் அவுணன் கேளா
ஈண்டிடு சிறையின் நீக்கி அமரரை விடுப்பன் என்னின்
மாண்டிட லின்றி இன்னும் வாழிய மறுத்து ளானேல்
ஆண்டுசென் றடுதும் ஈதே அறமென அகத்துட் கொண்டான். 5

வடித்தசெங் கதிர்வேல் அண்ணல் மாலயன் மகவா னாதி
அடுத்தபண் ணவரை நோக்கி அவுணர்தங் கிளையை யெல்லாம்
முடித்திடப் பெயர்தும் நாளை முன்னமோர் தூதன் றன்னை
விடுத்தனம் உணர்தல் வேண்டும் வெய்யசூர் கருத்தை என்றான். 6

கடலுடைக் கடுவை உண்டோன் காதலன் இனைய செப்ப
மடலுடைப் பதுமப் போதில் வைகினோன் மாயன் கேளா

அடலுடைப் பெரும்போர் எந்தை ஆற்றுமுன் சூரன் முன்னோர்
மிடலுடைத் தூதன் றன்னை விடுத்தலே அறத்தா றென்றார். 7

என்றலுங் குமர மூர்த்தி இப்பெருந் திறலோர் தம்முள்
வென்றிகொள் சூரன் றன்பால் வீரமா மகேந்தி ரத்துச்
சென்றிட விடுத்தும் யாரைச் செப்புதி ரென்ன லோடு
நன்றென அதனை நாடி நான்முகன் நவிற லுற்றான். 8

மெல்லென உலவைக் கோனும் விரமா மகேந்தி ரத்திற்
செல்லரி தெனக்கு மற்றே செய்பணி நெறியால் அன்றி
ஒல்லையில் அங்கண் ஏகி ஒன்னலர்க் கடந்து மீள
வல்லவன் இனைய வீர வாகுவே ஆகு மென்றான். 9

சதுர்முகன் இனைய வாற்றால் சண்முகன் உளத்துக் கேற்பக்
கதுமென உரைத்த லோடுங் கருணைசெய் தழகி தென்னு
மதுமலர்த் தொடையல் வீர வாகுவின் வதனம் நோக்கி
முதிர்தரும் உவகை தன்னால் இத்திறம் மொழிய லுற்றான். 10

மயேந்திர மூதூ ரேகி வல்லைநீ அமலன் நல்குஞ்
சயேந்திர ஞாலத் தேரோன் தனையடுத் தொருநாற் றந்தக்
கயேந்திரன் மதலை வானோர் காப்பைவிட் டறத்தா றுன்னி
நயேந்திர வளத்தி னோடும் உறைகென நவிறி யன்றே. 11

அம்மொழி மறுத்து ளானேல் அவுணரின் கிளையை யெல்லாம்
இம்மென முடித்து நின்னை எஃகவேற் கிரையா நல்கத்
தெம்முனை கொண்டு நாளைச் செல்லுதும் யாமே யீது
மெய்ம்மைய தென்று கூறி மீள்கென வீரன் சொல்வான். 12

வெந்திறல் அவுணர் ஈண்டும் வீரமா மகேந்தி ரத்திற்
சுந்தரத் திருவின் வைகுஞ் சூரபன் மாவின் முன்போய்
எந்தைநீ அருளிற் றெல்லாம் இசைத்தவ னுள்ளம் நாடி
வந்திடு கின்றேன் என்னு வணங்கியே தொழுது போனான். 13

கூர்ந்திடு குலிசத் தண்ணல் குமரவேள் ஒற்றன் தன்பின்
பேர்ந்தனன் சென்று வீர பெருந்திறற் சூரன் மூதூர்
சார்ந்தனை சிறையில் வானோர் சயந்தனோ டிருந்தா ரங்கட்
சேர்ந்தனை தேற்றிப் பின்னுன் செயலினை முடித்தி யென்றான். 14

அவ்வழி யமரர் கோமான் அனையன அறைத லோடுஞ்
செவ்விது நிற்றி யற்றே செய்வனென் றவனை நீங்கி
எவ்வமில் துணைவ ராகும் எண்மரும் இலக்கத் தோரும்
மெய்வருந் தொடர்பிற் செல்லக் கண்ணுற் றீ்இ விடலை சொல்வான். 15

நீயிர்கள் யாருங் கேண்மின் நெடுந்திரைப் பரவை வாவித்
தீயதோர் மகேந்தி ரத்திற் சென்றுசூர் முன்போய் நந்தம்
நாயகன் பணித்த மாற்றம் நவிலுவன் மறுத்து ளானேல்
ஆயவன் மூதூர் முற்றும் அட்டபின் மீள்வன் அம்மா. 16

என்றலும் வியந்து பின்னோர் யாவரும் இறைஞ்ச லோடும்
பொன்றிகழ் ஆகத் தூடு பொருந்துறப் புல்லிக் கொண்டு
வன்றிறற் பூதர் தம்முள் மன்னவ ரோடும் அங்கண்
நின்றி . வருளி வல்லே நெடுங்கடல் வேலை போந்தான். 17

அலங்கலந் திரைகொள் நேமி அகன்கரை மருங்கின் மேரு
விலங்கலின் உயர்ந்த கந்த மாதன வெற்புத் தன்னில்
பொலங்குவ டுச்சி மீது பொள்ளென இவர்த லுற்றான்
கலன்கலன் கலனென் றம்பொற் கழலமர் கழல்கள் ஆர்ப்ப. 18

புஞ்சமார் தமாலச் சூழல் பொதுளிய பொதும்பர் சுற்றி
மஞ்சுநின் றுறுத கந்த மாதனப் பிறங்கல் உம்பர்
விஞ்சுநுண் பொடிதோய் மேனி மேலவன் இவரும் பான்மை
அஞ்சன வரைமேல் வெள்ளி யடுக்கல்சென் றனைய தன்றே. 19

கடுங்கலி மான்தேர் வெய்யோன் கையுற நிவந்த செம்பொன்
நெடுங்கிரி மிசைபோய் வீரன் நிற்றலும் பொறையாற் றாது
நடுங்கிய துருமுற் றென்ன நனிபகிர் வுற்ற தங்கள்
ஒடுங்கிய மாவும் புள்ளும் ஒல்லென இரிந்த வன்றே. 20

உண்ணிறை புள்ளும் மாவும் ஒலிட ஒலிமேல் கொண்டு
துண்ணென அருவி தூங்கத் தோன்றிய குடுமிக் குன்றம்
அண்ணலைத் தரிக்கல் ஆற்றேன் அளியனேன் அந்தோ
கண்ணிடை வாரி சிந்தக் கலுழுதல் போலு மாதோ. 21

அடல்கெழு திண்டோள் வீரன் அடிகளின் பொறையாற் றாது
விடர்கெழு குடுமி வெற்பு வெருவலும் ஆண்டை வைகும்
படவர வுமிழ்ந்த செய்ய பருமணி சிதறும் பான்மை
உடல்கெழு குருதி துள்ளி உகுக்குமா றொப்ப தன்றே. 22

அறைகழல் அண்ணல் நிற்ப அவ்வரை அசைய அங்கண்
உறைதரு மாக்கள் அஞ்சி ஒருவில வெருவி விண்மேல்
பறவைகள் போய துன்பம் பட்டுழிப் பெரியர் தாமுஞ்
சிறியரும் நட்டோர்க் காற்றுஞ் செயல்முறை காட்டு கின்ற. 23

மழையுடைக் கடமால் யானை வல்லியம் மடங்கல் எண்கு
புழையுடைத் தடக்கை யாளி பொருப்பசை வுற்ற காலை
முழையிடைத் தவறி வீழ்வ முதியகா லெறியப் பட்ட
தழையுடைப் பொதும்பர் பைங்காய் தலைத்தலை உதிர்க்கு மாபோல். 24

நன்றிகொள் பரிதிப் புத்தேள் நகுசிர மாக என்றூழ்
துன்றிருஞ் சடில மாகச் சுரநதி தோயத் திங்கள்
ஒன்றொரு பாங்கர் செல்ல ஓங்கிரும் பிறங்கல் உச்சி
நின்றதோர் விசயத் தோளான் நெற்றியங் கண்ணன் போன்றான். 25

வலமிகு மொய்ம்பின் மேலோன் மலர்க்கழல் உறைப்ப ஆற்றா
தலமரு குவட்டின் நிற்றல் அன்றுநீ முனிவர் உய்த்த

கொலைகெழு முயல கன்மெய் குலைந்திடப் புறத்துப் பொற்றாள்
நிலவணி சடையோன் ஊன்றி நின்றிடு நிலைமை நேரும். 26

மாசிருள் செறியுந் தெண்ணீர் மறிதிரை அளக்கர் வேலைப்
பாசடைப் பொதும்பர் வெற்பிற் பண்ணவன் தூதன் நிற்றல்
காசியில் அரற்றத் தள்ளிக் களிறுடல் பதைப்பக் கம்மேல்
ஈசன்அன் றடிகள் ஊன்றி இருத்திய இயற்கை போலும். 27

தாரகன் படைஞர் பல்லோர் சமரிடை இரிந்து போனார்
பாரிடை யுறாமே அந்தப் பருவரை முழைக்கண் உற்றார்
வீரமொய்ம் புடையோன் அங்கண் மேவலும் அவற்கண் டேங்கி
ஆருயி ருலந்தார் தீயோர்க் காவதோர் அரணம் உண்டோ. 28

அனையதோர் சிமையக் குன்றம் அசைதலும் அங்கண் உற்ற
வனைகழல் விஞ்சை வேந்தர் மங்கையர் ஊடல் மாற்றி
இனிதுமுன் கலந்தார் அஞ்சி இன்புறா திடைக்கண் நீத்து
வினைவிளை வுன்னி நொந்து விண்மிசை உயிர்த்துச் சென்றார். 29

வரைமிசை நின்ற அண்ணல் வனைகழல் அவுணர் கோமான்
பொருவரு நகர்மேற் செல்லப் புந்திமேற் கொள்ளா எந்தை
திருவுரு வதனை உன்னிச் செங்கையால் தொழுது மாலும்
பிரமனும் வியந்து நோக்கப் பேருருக் கொண்டு நின்றான். 30

பொன்பொலி அலங்கல் தோளான் பொருப்பின்மேற் பொருவி லாத
கொன்பெரு வடிவங் கொண்டு குலாய்நிமிர் கொள்கை செவ்வேள்
முன்பொரு ஞான்று மேரு முடியில்வந் தமரர்க் கெல்லாந்
தன்பெரு வடிவங் காட்டி நின்றதோர் தன்மை யாமால். 31

ஆண்டகை நெடுந்தோள் வீரன் அண்டமேல் மவுலி தாக்க
நீண்டிடும் எல்லை அன்னான் நின்றிடு குன்ற ஞாலங்
கீண்டது பிலத்திற் சேறல் கேடில்சீர் முனிகை யூன்ற
மீண்டுபா தலத்திற் புக்க விந்தமே போலு மாதோ. 32

விண்ணவர் உய்த்த தேர்மேல் மேவலர் புரம்நீ றாக்கும்
பண்ணவன் ஒருதாள் ஊன்றப் பாதலம் புகுந்த வாபோல்
கண்ணகல் வரையும் வீரன் கழல்பட அழுந்திற் றம்மா
அண்ணலந் தாதை வன்மை அருள்புரி மகற்கு றாதோ. 33

கன்றிய வரிவிற் செங்கைக் காளைபொற் றாளும் அந்தண்
குன்றொடு பிலத்துட் செல்லக் குறிப்பொடு விழிக்கு றாமே
சென்றிட முடியுஞ் சேண்போய்த் திசைமுகத் தயனும் மாலும்
அன்றடி முடிகா ணாத அசலமும் போல நின்றான். 34

ஆளரி அன்னோன் தாளும் அடுக்கலும் அழுந்தும் பாரின்
நீளிரு முடிசேர் வானின் நிரந்தமாப் பறவை போதல்
சூளுடை இமையோர் புள்ளும் மாவுமாய்த் தோமில் வீரன்
தாளொடு முடியும் நாடிச் சார்தருந் தகைமைத் தாமால். 35

அந்தமில் வலியோன் நிற்ப ஆயிடைத் துஞ்சும் பாந்தள்
தந்தொகை வீழு ருது தழீஇமருங் காகக் கீழ்போய்
முந்துயர் கமடஞ் சேர்ந்து முழங்குதெண் டிரைக்கண் வைகும்
மந்தர மென்னக் கந்த மாதனந் தோன்றிற் றம்மா. 36

பதுமநேர் கண்ணன் வேதாப் பலவகை முனிவர் தேவர்
கதிபடர் உவணர் சித்தர் கந்தரு வத்தர் ஒண்கோள்
மதியுடுக் கதிர்கள் ஏனோர் வான்பதம் முற்றும் ஓங்கும்
அதிர்கழல் வீரன் பல்வே றுருமாய் ஒளிர நின்றான். 37

எண்டிசை முழுதும் நேமி எழுதிறத் தனவும் மற்றைத்
தெண்டிரைக் கடலும் பாருஞ் சேண்கிளர் ஆழி வெற்பும்
அண்டமும் உலகம் யாவும் அகன்விழி பரப்பி நோக்கிக்
கண்டனன் அமலன் வைப்புங் கைதொழு தையன் நின்றான். 38

ஆணமில் சிந்தை வீரன் அச்சுதன் முதலோர் வைகுஞ்
சேணகர் நோக்கிச் சூழுந் திசைநகர் நோக்கிப் பாரின்
மாணகர் நோக்கி வீர மகேந்திரம் நோக்கிச் சூரன்
நீணகர் இதற்கி யாவும் நிகரிலை போலு மென்றான். 39

விண்ணுலாம் புரிசை வெஞ்சூர் வியனகர் அதனை நோக்கி
உண்ணிலா வெகுளி கொண்டான் ஒருகரம் அங்கண் ஓச்சி
நண்ணலார் யாருந் துஞ்ச நாமறப் பிசைகோ வென்னு
எண்ணினன் சிறையில் உற்றோர்க் கிரங்கிஅவ் வெண்ணம் மீட்டான். 40

விஞ்சையர் இயக்கர் சித்தர் வியன்சிறை உவணர் திங்கள்
செஞ்சுடர்ப் பரிதி நாள்கோள் தெய்வத கணத்தர் யாரும்
வஞ்சினத் தடுதோள் வீரன் மாலுரு நோக்க லாற்றா
தஞ்சினர் வெருவச் செங்கை அமைத்தனன் அஞ்சல் என்றே. 41

கோளியல் கருடர் தாம்வீழ் மாதரை விழைந்து கூடி
வாளுறு நகத்தின் ஊறு மதிக்கிலர் மயங்கித் துஞ்சி
வேளெனும் நெடியோன் ஊன்றும் வெற்பொடும் பிலத்திற் சென்று
கேளுடன் எழுந்து நாகர் கிளைதனக் கணங்கு செய்தார். 42

ஆதியங் குமரன் தூதன் ஆற்றலால் ஊன்றி நிற்பப்
பூதலங் கீண்டு வெற்புப் பொள்ளென ஆழ்ந்து கீழ்போய்ப்
பாதலங் குறுக அங்கட் பயிலராத் தொகையை நாகர்
காதலங் கேண்மை நாடிக் கலந்தனர் விருந்து செய்தார். 43

தேன்றிகழ் தெரியல் வாகைச் சேவகன் கழல்கள் வெற்பின்
ஊன்றலும் அனைய பாங்கர் ஒருசிலர் அரக்கர் நோற்றார்
ஆன்றுயர் பதத்தை வெஃகி ஆங்கவர் பிலத்துள் வீழ்ந்து
மான்றனர் இரங்க லுற்றார் வன்கணர்க் குய்வு முண்டோ. 44

புண்டர நீற்று வள்ளல் புரையுருத் தேவர் நோக்கி
மண்டலம் புகழும் வீர மகேந்திரஞ் சேறற் கன்றால்

கொண்டவிவ் வுருவம் நோக்கிற் குரைகழல் அவுணர் தம்மை
அண்டமும் இடித்துச் சாடும் நினைவுகொல் ஐயற் கென்றார். 45

வீரமா மகேந்தி ரத்தில் அவுணரும் வீற்று வீற்றுச்
சாருறும் அவுணர் தாமுஞ் சயங்கெழு புயத்து வள்ளல்
பேருரு நோக்கி இங்ஙன் பிறந்தசொற் சழக்கே இன்னுந்
தேருவ துண்டு நந்தந் திறல்வரைப் புணர்ப்பி தென்றார். 46

ஒலிகழல் வீர வாகு ஓங்கலை யூன்றி இந்த
நிலைமையின் நிற்ற லோடும் நெடியமால் சுதனும் விண்ணோர்
தலைவனும் பிறரும் அன்னோன் தம்பியர் அளப்பி லோருங்
கலிகெழு பூதர் யாருங் கண்டுவிம் மிதத்தின் ஆர்த்தார். 47

தேவர்கள் முனிவர் ஏனைத் திறத்தவர் யாருந் தத்தம்
ஓவரும் பதத்தின் நின்றே ஓல்வதோர் உறுப்பின் மேவக்
காவரு கடிமென் பூத்தூய்க் கைதொழு தைய வெஞ்சூர்
மேவரு நகர்சென் றெங்கள் வியன்துயர் அகற்று கென்றார். 48

ஆவதோர் காலை எந்தை ஆறிரு தடந்தோள் வாழ்க
மூவிரு வதனம் வாழ்க முழுதருள் [1]விழிகள் வாழ்க
தூவுடை நெடுவேல் வாழ்க தொல்படை பிறவும் வாழ்க
தேவர்கள் தேவன் சேயோன் திருவடி வாழ்க என்றான். 49

ஆண்டகை தொழுத பாணி அணிமுடிக் கொண்டிவ் வாற்றால்
ஈண்டுசீர்க் குமர வேளை ஏத்தலும் அன்பின் கண்ணீர்
வீண்டுதெண் கடலுள் ஏகி வெள்ளமிக் குவரை மாற்றப்
பூண்டகண் டிகையை மானத் தோன்றின பொடிப்பின் பொம்மல். 50

மீதுகொள் பொடிப்பு மூட மெய்ப்புலன் சிந்தை யொன்ற
ஓதுவ தவற என்பும் உருகிய செருக நாட்டங்
கோதில்பே ரருளின் மூழ்கிக் குதூகலித் திடுத லோடு
மூதுல கனைத்தும் ஆவி முழுவதும் மகிழ்ந்த வன்றே. 51

அவ்வகை நிகழச் செவ்வேள் ஆரருள் அதனைப் பெற்று
மொய்வரை மீது நின்றோன் முழுதுல களந்து சேண்போம்
இவ்வுரு வோடு செல்லின் இறந்திடும் உலகம் ஈது
செவ்விதன் றென்று வேண்டுந் திருவடி வமைந்தான் அன்றே. 52

கிரிமிசை நின்ற அண்ணல் கிளர்ந்துவான் எழுந்து சென்னிக்
குருமணி மகுடம் அண்ட கோளகை புடைப்ப வீரன்
உருகெழு சீற்றச் சிம்புள் உருவுகொண் டேகிற் றென்ன
வரைபுரை மாட வீர மகேந்திரம் முன்னிப் போந்தான். 53

ஆகத் திருவிருத்தம்—53.

1 விழிகள் - (பதினெட்டுக்) கண்கள்.

# 2. கடல்பாய் படலம்

—oo—

அழுங்கிய கழற்கால் வீரன் அவ்வழி அவனிக் கீழ்போய்
விழுங்கிரி நிலைமை நோக்கி மீண்டுநீ எழுதி யென்று
வழங்கினன் வழங்கும் எல்லை வல்லையிற் கிளர்ந்து தோன்றி
முழங்கிருங் கடலின் மாடே முந்துபோல் நின்ற தன்றே. 1

வீரனங் கெழலும் அன்னோன் விண்படர் விசைப்பின் காலால்
பாருறு வரைகள் யாவும் படர்ந்தன பராங்க ராகச்
சாரதத் தலைவர் ஏனைத் தம்பியர் இலக்கத் தெண்மர்
ஆருமங் கவன்தன் பாலாய் அணிந்துடன் சேற லென்ன. 2

விரைந்துவான் வழிக்கொள் வீரன் விசைத்தெழு காலின் அண்டந்
திரிந்தன உயிர்கள் முற்றுந் தெருமரல் உற்ற தெண்ணீர்
சுரந்திடு கொண்டல் யாவுஞ் சுழன்றன வடவை உண்ண
இருந்திடும் ஊழிக் காலும் ஆற்றலா திரியல் போன. 3

பெருமிடல் பூண்ட தோன்றல் பெயர்தலும் விசைப்பின் ஊதை
பரவின வெம்மை மாற்றிப் பரிதியைக் கனலைத் திங்கள்
வருணன தியற்கை யாக்கி வடவையின் முகத்துத் தோன்றித்
திரைகட லிருந்த ஊழித் தீயையும் அவித்துச் சென்ற. 4

விரைசெறி நீபத் தாரோன் விரைந்துசெல் விசைக்கால் தள்ளத்
திரைகடல் சுழித்துள் வாங்கித் திறன்மகேந் திரத்திற் சேறல்
அரசியல் புரிவெஞ் சூரன் அனிகங்கள் அவன்மேற் சென்று
பொருமுரண் இன்றித் தம்மூர் புகுவன இரிவ போலாம். 5

விடைத்தனி யாற்றல் சான்ற விடலைகால் வெற்பி னோடும்
படித்தலங் கீண்டு முன்னம் பாதலங் காட்டிற் றன்னோன்
அடற்படு விசையின் காலும் அளியதோ வலிய தன்றோ
கடற்புவி கீண்டு நாகர் உலகினைக் காட்டிற் றன்றே. 6

பாசிழை அலங்கல் தோளான் படர்தலும் விசையின் காலைக்
காய்சின உயிர்ப்புச் செந்தீக் கலந்துடன் தழீஇக்கொண் டேகி
மாசுறு சூரன் வைகும் வளநகர் சுற்றி யன்னோன்
தூசிய தென்ன முன்னங் கொளுவிய தூமஞ் சூழ. 7

பூஞ்சிலம் பரற்றுந் தாளான் போதுமுன் விரைவின் ஓதை
வேய்ஞ்சிலம் படுதோட் சூரன் வீரமா மகேந்தி ரத்தின்
நாஞ்சிலம் புரிசை பொன்செய் நளிர்வரை குளிர்பூங் கிள்ளை
தாஞ்சிலம் புற்ற சோலை அலைத்தன தரையில் தள்ளி. 8

உறைபுகு நெடிய வேலான் உயிர்ப்புறு கனன்முன் னோடிச்
செறுநனூர் கொளுவ அன்னோன் சென்றிடு விரைவின் கால்போய்
எறிபுனற் கடலைத் தாக்க இடைந்துமற் றதுதான் ஏகி
முறைமுறை திரைக்கை நீட்டி மூண்டிடா தவித்துப் போமால். 9

அண்ணலங் காளை ஏக உயிர்த்தகால் அவன்செல் லோதை
கண்ணழல் துண்டம் ஓச்சுங் கடுங்கனல் எதிரா தோடும்
உண்ணிறை புணரி யாவும் ஒன்னலன் பதிமேற் சென்று
விண்ணிலம் ஒழிந்த பூதம் அடுதலின் விளைத்த பூசல். 10

வெள்வரைக் குவவுத் திண்டோள் வெலற்கருந் திறலோன் எண்காற்
புள்விசை கொண்டு செல்லப் புறந்தரப் புணரி அங்கண்
உள்வளைந் துலாய சின்னை ஒண்சுருப் பனைமீன் நூறை
தெள்விளித் திருக்கை தந்தி திமிங்கிலம் இரிந்து பாய்ந்த. 11

நாயகன் தூதன் ஏக நளிர்கடல் எதிர்ந்தி டாது
சாய்வது மீன முற்றுந் தரங்கவெண் கரங்கள் தாங்கித்
தீயசூர் மூதூர் உய்த்துச் சென்றது பொன்று வோர்க்கு
மேயின விச்சை யுண்டி மிகத்தமர் வழங்கு மாபோல். 12

காழ்தரு தடக்கை மொய்ம்பன் கடுமைசொல் செலவின் ஓதை
சூழ்தரு கின்ற காலைத் துண்ணெனத் துளங்கி விண்மீன்
வீழ்தர வேலை தன்னில் வேலையும் மறிந்து செல்ல
வாழ்திரை எறிமீன் முற்றும் அந்தரம் புகுவ மாறாய். 13

காமரு நயக்குங் காளை கதுமெனச் செல்லப் பாங்கில்
தூமலர்க் கரத்தி லிட்ட சுடர்மணிக் கடக வாள்போய்
நேமியங் குவடு சூழ்ந்து நிமிர்தரு திமிர மோட்டி
ஏமநல் லண்ட வில்லோ டெதிர்ந்து போய் இகல்செய் கின்ற. 14

விண்ணவர் யாருந் தேரும் படையுமாய் விரவ மேலோன்
நண்ணலர் புரமே லோச்சு நகையழல் போதல் ஒத்தான்
கண்ணழற் செலவும் போன்றான் கார்முகம் பூட்டி உய்த்த
மண்ணுல கிடந்த கூர்வாய் வாளியும் என்னச் சென்றான். 15

தரைதனை அலைத்து நோற்குந் தாபதர்க் கலக்கண் செய்து
சுரர்திருக் கவர்ந்து வாட்டுஞ் சூரனைக் கிளையி னோடும்
விரைவுடன் முடிப்பான் முன்னி வெகுண்டுசெவ் வேளங் குய்த்த
ஒருதனிச் சுடர்வேல் போன்றும் போயினன் உயர்திண் டோளான். 16

இமிழ்தரு தரங்கப் பாலின் எறிகடன் மதித்து வானோர்க்
கமிர்தினை அளிப்பான் வேண்டி அகிலமும் உண்டு தொன்னாள்
உமிழ்தரு திருமா லுன்ன உணர்ந்துமந் தரமாம் ஓங்கல்
நிமிர்தரு புணரி செல்லும் நிலைமைபோல் வீரன் போந்தான். 17

சேண்டொடர் உலகும் பாருந் தெருமர அனலம் வீசிக்
காண்டகு விடத்தை ஈசன் களத்திடை அடக்கி வைப்ப
ஈண்டெமை விடுத்தி யென்னு ஏத்தலும் அவனங் குய்ப்ப
மீண்டது கடல்போந் தென்ன வீரருள் வீரன் சென்றான். 18

பொலங்கழல் வீர வாகு புணரிமேல் இவ்வா றேகி
அலங்கலந் திண்டோள் வெஞ்சூர் அணிநகர் வடாது பாலின்

விலங்கலில் வீரன் யாளி வியன்முகத் தவுணன் போற்றும்
இலங்கையந் தொல்லை மூதூர் அணித்தெனும் எல்லை சென்றான். 19

ஆகத் திருவிருத்தம்–72.



# 3. வீரசிங்கன் வதைப் படலம்

—oo—

அன்னதோர் வேலை முன்னம் அகன்றலை யாளிப் பேரோன்
துன்னுபல் லணிகத் தோடுஞ் சூரனைக் காண்பான் ஏக
மன்னதி வீரன் என்னும் மதலையா யிரமாம் வெள்ளந்
தன்னொடும் இலங்கை வைகித் தணப்பறப் போற்றி யுற்றான். 1

ஆனதோர் மிக்க வீரத் தாண்டகை அவுணர் போற்ற
மாநகர்க் கோயில் நண்ண வடதிசை வாயில் தன்னில்
மேனிமிர் அவுணர் தானை வெள்ளமைஞ் ஞூறொ டொன்றான்
சேனையந் தலைவன் வீர சிங்கனுந் திறலோன் உற்றான். 2

உற்றதோர் வீர சிங்கன் ஒண்சிறைச் சிம்பு ளேபோல்
வெற்றியந் திண்டோள் ஏந்தல் விரைந்துசென் றிடலுங் காணூஉச்
சற்றுநங் காவல் எண்ணான் தமியன்வந் திடுவான் போலும்
மற்றிவன் யாரை என்னாச் சீறினன் வடவை யேபோல். 3

உண்குவன் இவன்றன் ஆவி ஒல்லையென் றுன்னிக் காலும்
எண்கிளர் மனமும் பின்னர் எய்துமா றெழுந்து நேர்போய்
விண்கிளர் செலவிற் றானை வெள்ளமைஞ் ஞூறுஞ் சுற்ற
மண்கிளர் கடல்போல் வீர வாகுவின் முன்னஞ் சென்றான். 4

சென்றிடு வீர சிங்கன் திறல்கெழு புயனைப் பாரா
இன்றள வெமது காப்புள் ஏகினர் இல்லை யார்நீ
ஒன்றொரு தமியன் போந்தாய் உயிர்க்குநண் பில்லாய் நின்னைக்
கொன்றிடு முன்நீ வந்த செயல்முறை கூறு கென்றான். 5

பொன்னியல் திண்டோள் வீரன் புகலுவான் இலங்கை வாவி
மன்னியல் சூரன் வைகும் மகேந்திரஞ் சென்று மீள்வான்
உன்னினன் போந்தேன் ஈதென் உறுசெயல் வலியை யென்னின்
இன்னினி வேண்டிற் றொன்றை இயற்றுதி காண்ப னென்றான். 6

திறன்மிகு சிங்கன் அன்னோன் செப்பிய மொழியைக் கேளா
இறையுநம் மவுண ரானை எண்ணலன் வலியன் போலும்
அறிகுதும் மீண்டு சேறல் அழகிதன் றென்னா உன்னிக்
குறுகிய படைஞர் தம்மை இவனுயிர் கோடி ரென்றான். 7

என்றலும் அரிய தொன்றை எயினர்கள் வேட்டைக் கானில்
சென்றனர் திரண்டு சுற்றிச் செருவினை இழைப்ப தேபோல்

பொன்றிகழ் விசய வாகுப் புங்கவன் றன்னைச் சீற்றம்
வன்றிறல் அவுணர் யாரும் வளைந்தமர் புரிய லுற்றார். 8

வேலினை விடுப்பர் தண்டம் வீசுவர் முசலந் தூர்ப்பர்
சாலமதெறிவர் ஆலந் தன்னைஓச் சிடுவர் வார்விற்
கோல்வகை தொடுப்பர் நாஞ்சிற் கொடும்படை துரப்பர் வெய்ய
சூலமதுய்ப்பர் கொண்ட தோமரஞ் சொரிவர் அம்மா. 9

கிளர்ந்தெழு பரிதி தன்னைக் கேழ்கிளர் உருமுக் கொண்மூ
வளைந்தென அவுணர் வீரன் மருங்குசூழ்ந் தாடல் செய்யத்
தளர்ந்திலன் எதிர்ந்து தன்கைத் தாரைவாள் உறையின் நீக்கி
உளந்தனின் முனிந்தன் னோரை ஒல்லைசூழ்ந் தடுத லுற்றான். 10

அரக்குருக் கொண்ட வெற்பின் அடுகனற் கடவு ளெய்தி
உருக்கியே யதனை எல்லாம் ஒல்லையின் உடைக்கு மாபோல்
நெருக்கிய அவுணர் தானை நீத்தம துடைய வீரன்
திருக்கிளர் வாளொன் றேந்திச் சென்றுசென் றடுதல் செய்தான். 11

பனிபடர் குழுமல் தன்னைப் பாயிருட் செறிவை அங்கிக்
கனிபடர் பொற்பில் தோன்றுங் காய்கதிர் முடிக்கு மாபோல்
நனிபடர் அவுணர் தானை நைந்திடச் சுடர்வாள் ஒன்றால்
தனிபடர் வீர வாகு தடிந்தனன் திரித லுற்றான். 12

உறைந்தன குருதி வாரி ஒல்லையில் உவரித் தெண்ணீர்
மறைந்தன அவுணர் தானை மால்கரி பரிதேர் முற்றுங்
குறைந்தன கரந்தாள் மொய்ம்பு கொடுமுடி துணிந்து வீழ்ந்த
நிறைந்தன அலகை ஈட்டம் நிரந்தன பரந்த பூதம். 13

வெள்ளநூ றவுணர் தானை விளிந்திட இனைய பாலால்
வள்ளல்சென் றடுதல் செய்ய மற்றுள அவுணர் யாரும்
உள்ளநொந் திரங்கித் தத்தம் உயிரினை ஓம்பல் செய்து
பொள்ளென நிலனும் வானும் புலந்தொறும் இரியல் போனார். 14

போதலும் வீர சிங்கன் பொள்ளெனச் சினமேற் கொண்டு
மாதிரங் கடந்து மேல்போய் வளர்தரும் வாகை மொய்ம்பன்
மீதொரு சூலந் தன்னை விட்டனன் விட்ட காலை
ஏதியங் கதனால் அன்ன திருதுணி படுத்தி ஆர்த்தான். 15

ஆர்த்தலும் மடங்கற் பேரோன் ஆண்டகை வீரன் மேன்மை
பார்த்தனன் தனது பாணி பற்றிய படைகள் தம்மில்
கூர்த்ததோர் குலிசம் வீசக் குறுகிவாள் அதனான் மாற்றிப்
பேர்த்தொரு படையெ டாமுன்பெயர்ந்தவன் முன்னஞ் சென்றான். 16

சென்றுதன் மணிவாள் ஓச்சிச் செங்கைகள் துமித்துத் தீயோன்
ஒன்றொரு முடியுங் கொய்தே உவர்க்கட லிடையே வீட்டி
நன்றுதன் னுறையுட் செல்ல நாந்தகஞ் செறித்து முன்னோர்
வென்றிகொண் டகன்றான் என்ப வேலவன் விடுத்த தூதன். 17

ஆகத் திருவிருத்தம் - 89.



# 4. இலங்கை வீழ் படலம்

—oo—

மலங்கொடு சுறவு தூங்கும் மறிகடல் மீது மேரு
விலங்கல்சென் றிட்ட தென்ன விண்ணிடந் தன்னின் நீங்கி
அலங்கலந் திண்டோள் வள்ளல் அவுணர்தம் மிருக்கை யாகும்
இலங்கையங் குவடு மூன்றில் இடைப்படு சிகரம் பாய்ந்தான். 1

நெடுவரை தன்னை வேலான் ஈறுசெய் திட்ட அண்ணல்
விடவரு தமியோன் தொல்லை இலங்கையின் மீது பாய
அடலதி வீரன் ஏனை அவுணர்கள் கலங்கி யேங்கி
இடியுறு புயங்க மென்ன யாருமெய் பனித்து வீழ்ந்தார். 2

வேறு

வைப்புறு மகேந்திர வடாது புலமாகி
இப்புறம் இருந்திடும் இலங்கைதனில் ஏந்தல்
குப்புறுத லுங்குலை குலைந்தவுண ரோடும்
உப்புறு கடற்படிதல் கண்டுவகை யுற்றான். 3

தந்திமுக மாமதலை தன்னடி வணங்கா
தந்தரவிண் ணோர்கடல் அலைத்திட லும் அன்னோன்
சிந்தைமுனி வெய்தவிடை சேர்த்தகயி றோடு
மந்தர நெடுங்கிரி மறிந்தபடி மானும். 4

ஆடல்கெழு மொய்ம்பினன் அடித்தலம தூன்ற
மூடுந்திரை வேலையிடை மூழ்கிய இலங்கை
கூடுமக வண்ணல்குலி சந்தொடர நேமி
ஊடுபுக லுற்றிடுமை நாகவரை யொக்கும். 5

மாமறைகள் தம்மைமுனம் வஞ்சனை புரிந்தே
சோமுகன் மறைந்ததிரை தூங்குகட லூடே
ஏமமுறு பேருரு எடுத்தவொரு மாண்சேல்
போமதென வாழ்ந்தது பொலங்கெழும் இலங்கை. 6

தொல்லைதனில் ஓர்விதி துயின்றகடை நாளின்
எல்லைய திகந்துகடல் ஏழுமெழ அங்கண்
ஒல்லையில முற்றபுவி உய்ப்பவொரு கேழல்
செல்லுவதின் ஆழ்ந்தது திரைக்கடல் இலங்கை. 7

சிந்துவின் அகன்கரையொர் திண்கிரி யழுந்த
அந்தமி லிலங்கையும் அழுந்தியிடு தன்மை
முந்தொரு மடக்கொடி விருப்பின்முனி மூழ்க
இந்திரனும் நேமியி னிடைப்புகுதல் போலும். 8

உலங்கொள்புய வீரனடி ஊன்றுதலும் முன்னோர்
விலங்கல்பணி தன்னுலக மேவியது கேளா

அலங்கல்பெறு வாகையவன் ஆற்றலது தாங்கி
இலங்கையது காண்பலென ஏகியது போலும். 9

இலங்கையிது பான்மையின் இருங்கடலுள் மூழ்கக்
குலங்களொடு வைகிய கொடுந்தகுவர் யாருங்
கலங்கினர் அழுங்கினர் கவன்றனர் துவன்றி
மலங்கினர் புலம்பினர் மருண்டனர் வெருண்டார். 10

அற்றமுறு தானவர்கள் ஆழஅனை யோரைச்
சுற்றிய அளப்பில சுறவுழுவை மீனம்
பற்றிய வளைந்தன பலப்பல திரண்டே
செற்றிய திமிங்கில திமிங்கில கிலங்கள். 11

கையதனை ஈர்ப்பசில கால்கள்சில ஈர்ப்ப
வெய்யதலை ஈர்ப்பசில மிக்கவுயர் தோள்கள்
மொய்யுடைய மார்பதனை ஈர்ப்பசில மொய்த்தே
சையமுறழ் யாக்கையுள தானவரை மீனம். 12

அத்தனொடு யாயைமனை அன்பின்முதிர் சேயைக்
கொத்தினொடு கொண்டுசிலர் கூவியெழு கின்றார்
எய்த்தனர்கள் செய்வதென் இரும்படையும் விட்டுத்
தத்தமுயிர் கொண்டுசிலர் தாமும்எழ லுற்றார். 13

உற்றசில தானவரை ஒய்யென அளாவித்
திற்றிவிழை வான்நனி திரண்டனர்க ளெல்லாம்
பற்றுழி தனித்தனி பறித்தது பொருட்டாற்
பொற்றைபுரை மீன்கள்பெரும் போர்வினை புரிந்த. 14

தானவர்க ளோர்சிலவர் தம்முணல் குறித்தே
வானிமிரு மோதையென வந்துதமை எற்றப்
பூநுனைய வாள்சுரிகை போரயில்கள் கொண்டே
மீனமொடு வெஞ்சினம் விளைத்தமர் புரிந்தார். 15

[illegible] கொள் இலங்கைகடல் சென்றிடலும் அங்கண்
ஆர்த்திபெறு மங்கையர்கள் அங்கையவை பற்றி
ஈர்த்தபிறர் இல்லுற இசைந்துகரம் பற்றுந்
தூர்த்தரை நிகர்த்தன சுறுமகர மீனம். 16

மீனொருகை பற்றியிட வேறொரு கரத்தைத்
தானவர் வலித்தொரு தடக்கைகொ டிசிப்ப
மானனைய கண்ணியர் வருந்திடுதல் ஓர்ஐந்
தானபுலன் ஈர்ப்பவுள் அழுங்குவது போலும். 17

திண்டிறல் வலம்படு திருக்கைசுற மீனம்
மண்டிய திமிங்கிலம் வருந்தகுவர் சூழல்
கண்டுமிசை யெற்றிடுத லுங்கடிது வாளால்
துண்டமுற வேயவை துணித்தெழுநர் சில்லோர். 18

கட்டமுல் விழிச்சுறவு காரவுணர் தம்மை
அட்டுணல் குறித்துவர அன்னவர்கள் நீவித்
தொட்டனர் பிடித்தகடு தூரும்வகை பேழ்வாய்
இட்டனர் மிசைந்தனர் எழுந்தனர்கள் சில்லோர். 19

ஏற்றபுனல் ஊடுதெரி வின்றியெம ரென்றே
வேற்றொரு மடந்தையர் வியன்கையது பற்றிப்
போற்றியெழ அங்கவர் புறத்தவர்க ளாக
மாற்றினர் இசைந்துசிலர் வாழ்க்கைமனம் வைத்தார். 20

இல்லிவ ரெனப்பிறரை ஏந்தியெழ அன்னோர்
புல்லுதனி அன்பர்புடை போகவொரு சில்லோர்
அல்லலுறு வார்தமை யடைந்ததொரு கன்னி
மெல்லவயல் போந்துழி மெலிந்துழலு வார்போல். 21

தீமைபுரி மால்களிறு திண்புரவி யாவும்
ஏமரு சுறுத்தொகுதி ஈர்த்துவிரைந் தேகித்
தோமறு பிணைமகரந் துய்ப்பவுத வுற்ற
காமர்கெழு பெண்மயல் கடக்கவெளி தன்றே. 22

மாற்றறு சுறுச்சில மடப்பிடிகை பற்றி
ஏற்றபெண் வழிச்செல எதிர்ந்ததனை நோக்கி
வேற்றோர்பெடை ஆயதென வேர்வுறுகை **கையர்க்**
**காற்றுமுப காரவியல் பாகியதை யன்றே.** 23

சிந்துவதன் மீதிலெழு சில்லவுண ராயோர்
கந்தன்முரு கேசன்விடு காளைசெயல் காணா
நந்தமையும் நின்றிடின் நலிந்திடுவன் யாங்கள்
உய்ந்திடுதும் என்றுகடி தோடியயல் போனார். 24

பீடுசெறி தங்கணவ ரைப்பிரிகி லாமே
கூடும்வழி ஆழ்ந்தசில கோற்றொடிமின் னார்கள்
ஆடைபுன லூடுபுக அல்குல்தம கையால்
மூடியெழு வார்முலை முகத்தின்முகம் வைத்தே. 25

சேண்டொடர் இலங்கைகடல் சென்றுழிய தன்பால்
ஆண்டசில மாதர்கள் அரத்தவுடை கொண்டார்
மீண்டெழலும் நீர்பட வெளிப்படுவ தல்குல்
காண்டகைய செம்மதி களங்கமடைந் தென்ன. 26

காரவுணர் மாதர்சிலர் காமர்கடல் வீழ்வார்
நீரமெழ வேயுடை நெகிழ்ந்தொருவி யேக
மூரல்முக மல்லுருவு முற்றுறம றைத்தே
தேரையென ஒண்புனல் செறிந்துதிரி வுற்றார். 27

ஆசுறு மறைத்துகில் அன்றிட எழுந்தே
தேசுறு மடந்தைய ரில்லோர்சிலவர் சேண்போய்

மாசுறு புயற்குழுவை வல்லைகரம் பற்றித்
தூசினியல் பானடுவு சுற்றியுல வுற்ருர். 28

ஆகத் திருவிருத்தம்–117.



# 5. அதிவீரன்வதைப்படலம்

—oo—

அன்னதொர் பான்மைக ளாக இலங்கை
முன்னுறு வார்கடல் ஆழ்ந்தது மூழ்க
இந்நகர் போற்றி இருந்திடு கின்ற
மின்னுனை வேல்அதி வீரன் உணர்ந்தான்.

தனது புரங்கடல் சாருதல் காணு
நனிதுயர் எய்தினன் நாணும் அடைந்தான்
சினவி யுயிர்த்தழல் சிந்த நகைத்தான்
அனையவன் இன்னத கத்திடை கொண்டான்.

சுந்தர மேவரு சூரபன் மாவோ
அந்தமில் தம்பிய ரோவனை யார்தம்
மைந்தர்க ளோமதி யேன்அவ ரல்லால்
இந்த வியற்கையை யார்புரி கிற்பார்.

ஆயவர் என்னினும் ஆங்கது செய்தற்
கேயதொ ரேதுவும் இன்றுதம் மூர்க்குத்
தீயது செய்கலர் சிந்தைய தன்ருல்
மாயையும் ஈது மதிக்கிலள் போலும்.

மூவரும் இச்செயல் முன்னலர் பின்னர்த்
தேவர்கள் யாரிது செய்திட வல்லார்
ஏவரும் நஞ்சிறை எய்தினர் வேள்விக்
காவலன் ஆருயிர் காத்து மறைந்தான்.

மாதிர மேலவர் வானிடை வைப்பின்
மேதகும் விண்ணவர் விஞ்சையர் சித்தர்
ஆதியர் நம்மிறை ஆணையின் நீங்கார்
ஈது புரிந்திட எண்ணுவர் கொல்லோ.

தவ்வற ஈண்டமர் தானவர் ஆற்ற
மெய்வலி மாயைகள் மேவின ரேனுந்
தெவ்வடு சூர்முதல் திண்படை யஞ்சி
இவ்வியல் தன்னை இழைக்கலர் போலும்.

ஆதலின் அன்னவர் ஆற்றலர் என்னின்
ஈதொரு செய்கை இழைத்தவர் யாரோ

தாதை அகன்றுழி தானவ ரோடுங்
காதலின் இந்நகர் காத்தது நன்றால். 8

காய மொடுங்கு கன ற்சிர மூடு
போயது வல்லை புறஞ்செல நோற்று
மாயை பெரும்படை வன்மைகள் வேதன்
ஈயமுன் வாங்கிய என்செயல் நன்றால். 9

தந்தை யுறாது தணந்துழி ஆங்கோர்
மைந்தன் இருந்துதன் மாநக ரோடும்
அந்தி லகன்கடல் ஆழ்ந்தனன் என்றால்
நந்தமர் என்னை நகைப்பர்கள் அன்றே. 10

மன்னவன் ஈது மதித்திடின் மற்றென்
றன்னை அடும்பெறு தாதையும் அற்றே
பின்னுளர் எள்ளுவர் பெற்றியி தாமேல்
என்னியல் நன்றென எண்ணி இனைந்தான். 11

இனைந்ததி வீர னெனுந்திறல் மைந்தன்
கனைந்திடு கின்ற கடற்கிடை யாழ்வோன்
அனந்தர மூழ்வினை ஆற்றலின் அன்னோன்
மனந்தனில் ஈதொரு தன்மை மதித்தான். 12

ஒல்லொலி சேரு வரிக்கடல் மீதாய்ச்
செல்லுவன் யாரிது செய்தனர் என்றே
வல்லையில் ஓர்குவன் மற்றவர் தம்மைக்
கொல்லுவன் மெய்ப்படு சோரி குடிப்பன். 13

என்றதி வீரன் இரும்படை யாவும்
ஒன்றற வாரி உருத்த னிகத்துள்
நின்றுளர் தங்களை நேடுபு கொண்டே
வன்றிரை வேலையின் மீமிசை வந்தான். 14

வேறு

விடலைதிரு முன்னமதி வீரன்அனி கங்கள்
புடையில்வர நீரின்மிசை பொள்ளென எழுந்தான்
அடுதொழில் இயற்றியிடும் ஆதிதனை யெய்தக்
கொடியவிடம் வார்கடல் குலாய்நிமிர்வ தேபோல். 15

விழுந்திடும் இலங்கைதனில் மேவும் அதிவீரன்
எழுந்துதன தானையொ டிருங்கட லுளங்கிக்
கொழுந்துமிசை சென்றனைய கோலமொடு நின்ற
செழுந்திறல்கொள் மொய்ம்புடைய செம்மல்நிலை கண்டான். 16

கண்டனன் வெகுண்டிதழ் கறித்துநகை செய்யா
அண்டர்குழு வானிவனோர் ஆண்டகைநம் மூதூர்
தெண்டிரையில் ஆழும்வகை செய்தும்இவண் நின்றான்
எண்டிசை தொழுந்தகுவர் ஆணையினி தென்றான். 17

என்றுமொழி யாவிரைவில் யாளிமுகன் மைந்தன்
கொன்றிவன தாருயிர் குடிப்பனென உன்னிச்
சென்றிடலும் ஆழ்ந்தவர் செயற்கையது காண்பான்
நின்றதொரு பேரறிஞன் நீர்மையது கண்டான். 18

ஆனபொழு தத்தினில் அவன்புடையில் வந்த
தானவர்கள் சூழ்ந்தனர் சமர்த்தொழி லியற்ற
மானவிற லோன்றனது வாளுறை கழித்தே
ஊனொடுயிர் சிந்தியிட ஒல்லையடல் செய்தான். 19

அற்றன சிரத்தொகுதி அற்றன கரங்கள்
அற்றன புயத்தொகுதி அற்றன பதங்கள்
அற்றன பெரும்புறமும் அற்றவுடன் முற்றும்
அற்றனர்கள் யாருமுயிர் அற்றதவர் பூசல். 20

பங்கிசெறி செந்தலைகள் பாய்குருதி நீர்மேல்
எங்கணும் மிதப்பன இருங்கடலி னூடே
செங்கொடி படர்ந்திடு செழும்பவள வைப்பில்
அங்கமல மானவை அலர்ந்திடுதல் போலும். 21

அற்றமகல் வீரன்அவு ணப்படை துணிப்பச்
செற்றிய பிணத்தொகை திரைப்புணரி தூர்த்து
மற்றுமிசை போந்துமணி யாலுமொரி லங்கைப்
பொற்றைய தியற்றியது போன்றுளது மாதோ. 22

தன்படை விளிந்துசல திக்கடலுள் வீழ
முன்பன்அதி வீரன்முனி யாவதனை நோக்கி
என்புடையி னோரையெறிந் தாய்கடிதின் நின்னைத்
தின்பனது காண்டியென வேசெருமு யன்றான். 23

சொல்லும்அதி வீரன்வரு தோற்றமது காணு
வல்லைவரு கென்றுதிறல் வள்ளலும் அழைப்ப
எல்லையத னிற்செருவின் ஏற்றிவனை இன்னே
கொல்லுகென அங்கணொரு குந்தமதெறிந்தான். 24

உய்த்ததொரு கூரயிலு ரத்திலுறு முன்னர்
மத்தகய நேர்விடலை மற்றது தெரிந்தே
கைத்தல மிருந்திடு கனற்புரையும் வாளால்
அத்துணை இரண்டுதுணி யாய்விழ எறிந்தான். 25

கண்டமுற ஞாங்கரது கண்டுதிறன் மைந்தன்
தண்டம்விரைந் தொன்றொரு தடக்கைகொ டெடுத்தே
மண்டமர்செ யுன்னுயிரை வாங்குமிஃ தென்னு
அண்டர்புகழ் காளைதன தாகமுற விட்டான். 26

வேறு

விட்ட காலையத் தண்டினை வெலற்கருந் திறலோன்
அட்டி டான்தனி வாளினால் ஏற்றனன் அகலம்

பட்டு மற்றது நுண்டுக ளாகஅப் பதகன்
மட்டி லாததோர் விம்மிதம் எய்தினன் மறுகி. 27

வேறொர் முத்தலைப் படையது கொண்டதி வீரன்
மாறி லாவிறல் மொய்ம்பினன் தன்மணி மார்பின்
ஊறு செய்திறம் ஓச்சலுங் கண்டுநம் முரவோன்
சீறி யாங்கது பற்றினன் செங்கையால் இறுத்தான். 28

இறுத்த காலையில் இலங்கையில் யாளிமா முகன்சேய்
செறுத்து மற்றிவன் தனைஅடல் அரிதெனச் சிந்தை
குறித்து மற்றொரு நாந்தகம் ஏந்தினன் குறுகி
வெறித்த கொண்டலுட் கொட்புறு மின்னென விதிர்த்தான். 29

கறங்கி னிற்பெரு வட்டணை புரிந்துதன் கரமேல்
நிறங்கொள் வாளினை இடம்வலந் திரித்தனன் நெறியே
பிறங்கும் ஆர்கலித் தெண்டிரை அலைதரப் பெரிது
மறங்கொள் நாந்தக மீனுகண் டலமரும் வகைபோல். 30

ஏதி யிங்கிது நான்முகன் தந்துள தெவர்க்கும்
பேத கஞ்செயல் அரியதால் அன்னது பிடித்தேன்
சாதி திண்ணநீ வருகென மிகைமொழி சாற்றிக்
கோதில் வீரன்முன் அணுகலும் அனையவன் கூறும். 31

நன்று நன்றுநின் றாற்றலும் ஆண்மையும் நம்மை
வென்றி யேயெனின் யாவரும் மேலுனை வியப்பார்
நின்று நீசில மொழிவதென் கடிது நேருதியால்
வென்றி வீரருந் தமைப்புகழ் கிற்பரோ வென்றான். 32

என்ன ஒன்னலன் கிடைத்தனன் வீரனும் எதிர்ந்தான்
அன்ன பான்மையர் வாளம ராடினர் அகல்வான்
மின்னு மாமுகில் தோன்றியே எதிரெதிர் விரிந்து
பின்ன ருள்புகுந் துடனுடன் செறிந்தபெற் றிமைபோல். 33

சென்னி நாடுவர் களத்தினை நாடுவர் செவிதாள்
கன்ன நாடுவர் புயங்களை நாடுவர் கரங்கள்
உன்னி நாடுவர் உரத்தினை நாடுவர் உகளப்
பொன்னின் வார்கழல் நாடுவர் வாளமர் புரிவார். 34

இணங்கு நீரவர் இருவரும் இனையன உறுப்பில்
அணங்கு செய்திடும் மரபினு லாயிடை உய்ப்பார்
நுணங்கு விஞ்சையின் வன்மையான் நொய்தின்மாற் றிடுவார்
மணங்கொள் செந்நிற வாள்கொடே வட்டணை வருவார். 35

போத மின்னதில் எம்பிரான் தூதுவன் பொருவான்
ஏதி கொண்டுளான் தன்னையான் வலிந்திடல் இயல்போ
ஆத லாலிவன் படைமுறை வெல்வதே அறனென்
[illegible] சேருளங் கொண்டனன் இடைதெரிந் துற்றான். 36

இடை புகுந்ததி வீரன தடிகளோ ரிரண்டும்
முடியும் ஆகமுந் தோள்களும் ஆங்கொரு முறையே
சுடர்பி றங்கிய வாளினுல் ஆண்டகை துணித்துக்
கடிது வீட்டினன் நடுவன்வந் தவனுயிர் கவர்ந்தான். 37

ஆகத் திருவிருத்தம் - 154.



# 6. மகேந்திரஞ் செல் படலம்

—oo—

வீர வாகுவின் றவ்வதி வீரனை வீட்டித்
தாரை வாளுறை செலுத்தியே வெஞ்சமர் தணித்து
நேரில் **வீரமா மகேந்திரம்** போவது நினைந்தே
ஏரு லாவரும் இலங்கையின் எல்லைநீத் தெழுந்தான்,

எழுந்து வான்வழிச் சேறலும் ஆர்கலி யிடையே
விழுந்து கீழுறும் இலங்கைமீண் டெழுந்தது விரைவிற்
கழிந்த தொல்பர நீங்கிய காலையிற் கடலூ
டழுந்து கின்றபொன் தோணிமீச் சென்றிடு மதுபோல்.

வார்த்த யங்கிய கழலவன் வான்வழிக் கொளலும்
ஈர்த்த தெண்கடல் நீத்தமேல் எழுதரும் இலங்கை
சீர்த்த நான்முகன் உறங்குழிச் சிந்துவூ டழுந்திப்
பேர்த்து ஞாலம்விட் டெழுதரு மேருவிற் பிறழும்.

எள்ளு நீரரைப் பற்பகல் ஆற்றலின் இலங்கை
கொள்ளை வெம்பவம் மாசிருள் அடைந்தது குறைதீர்
வள்ளல் தாள்பட நீத்தது பவந்துகள் மாற்றத்
தெள்ளு நீர்க்கடல் படிந்தெழுந் தாலெனத் திகழும்.

கந்த ரந்தவழ் தெண்புனற் கருங்கடல் நடுவட்
சுந்த ரஞ்செறி பொன்சுடர் இலங்கைதோன் றியது
முந்து காலையில் எம்பிரான் அருள்வழி முராரி
உந்தி நின்றெழு பிரமன்மூ தண்டமொத் துளதால்.

ன தாகிய இலங்கைமா
பின்னு மாயிரம் யோசனை வானிடைப் பெயர்ந்து
பொன்னு லாவுறு வாகையம் புயத்தவன் புலவோர்
ஒன்ன லானுறை மகேந்திர வரைப்பின்முன் னுற்றான். 6

நெற்றி நாட்டத்து நந்திதன் கணத்தவன் நேமிப்
பொற்றை யாமெனச் சூழ்ந்துயர் மகேந்திரப் புரிசைச்
சுற்று ஞாயிலும் வாயில்க டொறுந்தொறும் தோன்றுங்
கற்றை மாமணிச் சிகரியும் நுனித்துமுன் கண்டான். 7

சேர லாரமர் மகேந்திர நகர்வட திசையில்
வாரி வாய்தலுட் கோபுரத் தெற்றியின் மாடே
**கோர னேயதி கோரனே** எனப்படுங் கொடிய
வீரர் தானையோ டிருந்தனர் காவல்கொள் வினையால். 8

கரிக ளாயிரம் வெள்ளமே தேருமக் கணிதம்
பரிக ளாங்கதற் கிருதொகை யத்தொகை பதாதி
உரிய வப்பெருந் தானையம் பெருங்கடல் உலவா
விரவி மேவர இருந்தனர் காத்திடும் வீரர்.

பகுதி கொண்டிடு தானையஞ் சூழலாம் பரவைத்
தொகுதி கண்டனன் விம்மிதங் கொண்டனன் துன்னூர்
மிகுதி கொண்டுறை காவலுங் கண்டனன் வியனூர்
புகுதி கொண்டிடும் உணர்வினன் இனையன புகல்வான். 10

ஈண்டு செல்லினித் தானைசூழ்ந் தமர்செயும் யானும்
மூண்டு நேரினும் முடிப்பவோர் பகலெலா முடியும்
மாண்ட தென்னினும் உலவுமோ மாநக ரிடத்து
மீண்டும் வந்திடுங் கரிபரி பதாதிதேர் வெள்ளம். 11

வந்த வந்ததோர் தானவப் படையொடே மலைவுற்
றெந்தை கந்தவேள் அருளினல் யானொரு வேனுஞ்
சிந்தி நிற்பனேல் இந்நகர்த் தானைகள் சிதைய
அந்த மில்பகல் சென்றிடும் அளியரோ அவுணர். 12

எல்லை யில்பகல் செல்லினுஞ் செல்லுக இனைய
மல்லன் மாநகர் அவுணர்மாப் பெருங்கடல் வறப்ப
ஒல்லு நீர்மையால் யான்அடல் செய்வனேல் உருத்துத்
தொல்லை மைந்தரைத் துணைவரை உய்க்குவன் சூரன். 13

உய்த்த மைந்தர்கள் சூழ்ச்சியின் துணைவர்கள் ஒழிந்தோர்
அத்தி றத்துளோர் யாரையும் வெலற்கரி தயில்வேற்
கைத்த லத்தவன் வலிகொடே பற்பகல் காறும்
இத்த லைச்சமர் ஆற்றியே முடிக்குவன் எனினும். 14

ஏவ ரும்வெலற் கரியசூர் பின்னர்வந் தெதிர்க்கும்
ஓவில் வெஞ்சமர் பற்பகல் ஆற்றியான் உறினும்
வீவ தில்லையால் அங்கவன் மேலைநாள் தவத்தால்
தேவ தேவன்முன் அருளிய வரங்களின் சீரால். 15

அன்ன வன்றனை மாலயன் றனக்கும்வெல் லரிதால்
இன்னு மாங்கவன் ஆணைக்கும் வெருவியே இருந்தார்
பின்னை யாரவன் தன்னைவென் றிடுவர்கள் பெருநாள்
துன்னி யான்சமர் ஆற்றினுந் தொலைகிலன் சிறிதும். 16

தொலைந்து போகிலன் சூரமர் இயற்றிடில் துன்னிக்
கலந்த யான்விறல் இன்றிமீண் டேகுதல் கடனே

மலைந்து நிற்கவே வேண்டுமா லாயினும் வறிது
மலைந்த லைப்படுஞ் சுரர்சிறை அகன்றிட வற்றோ. 17

மற்றிந் நீர்மையிற் பற்பக லவனொடு மலைந்து
வெற்றி கொண்டிலன் இன்னுமென் றமரினை வீட்டி
ஒற்றின் நீர்மையை உணர்த்துதல் ஒல்லுமோ உலவா
தெற்றை வைகலும் அமர்செய வேண்டுமால் எனக்கே. 18

போத நாயகன் பரம்பொருள் நாயகன் பொருவில்
வேத நாயகன் சிவனருள் நாயகன் விண்ணோர்க்
காதி நாயகன் அறுமுக நாயகன் அமலச்
சோதி நாயகன் அன்றியார் சூரனைத் தொலைப்பார். 19

இம்பர் சூரொடு பொருதுநின் றிடுவனே என்னின்
நம்பி ரான்அறு மாமுகன் பின்னரே நண்ணி
வெம்பு சூரனை வேலினால் தடிந்துவெஞ் சிறையில்
உம்பர் யாரையும் மீட்டிட வேண்டுமேல் ஒருநாள். 20

ஆத லால்அம ராற்றுதல் முறையதோ அஃதான்
றீது நம்பெரு மான்றன தருளுமன் றினைய
தூதர் செய்கட னுங்கொலோ அமர்பெருந் தொடர்பாற்
போத லேகடன் என்றனன் பொருவில்சீர் அறிஞன். 21

## வேறு

இப்பால் வாய்தலின் எல்லை நீங்கிய
துப்பார் தானைகள் துற்று நின்றவால்
அப்பால் எய்தரி தாம ருங்குபோய்
வைப்பார் கீழ்த்திசை வாயில் நண்ணுவேன். 22

என்னு உன்னி இயன்ற வுத்தரப்
பொன்னார் வேலி புகாது பாங்கர்போய்க்
கொன்னார் கின்ற குணக்கு வாய்தலின்
முன்னு ஏகினன் மொய்ம்பின் வீரனே. 23

மேதிக் கண்ணவன் வீர பானுவென்
றோதிக் கத்தவு ணர்க்கு நாயகர்
ஏதிக் கையர் இரண்டு வீரரும்
ஆதிக் கன்னதன் வாயில் போற்றினார். 24

திருவுந் தும்பை திக்கு வாய்தலின்
விரவுந் தானையின் வெள்ளம் மெய்த்தொகை
பரவுஞ் சூரர் பயிற்று பல்பவத்
துருவஞ் சூழ்ந்தென ஒத்து நின்றவே. 25

வண்டார் செற்றிய வாகை மொய்ம்பினான்
கண்டான் அன்ன கடிக்கொள் காவலும்
தண்டா துற்றிடு தானை நீத்தமும்
அண்டா அற்புத நீரன் ஆயினான். 26

ஆண்டங் குற்றவ ளப்பில் சேனையைக்
காண்டும் மிவ்வழி காவல் போற்றியே
சேண்டுன் றும்புவி செற்றும் ஆதலால்
ஈண்டுஞ் செல்லரி தென்று முன்னினான். 27

நின்றிப் பாற்படல் நீர்மை அன்றரோ
தென்றிக் கின்வழி சென்று நாடுவன்
என்றுட் கொண்டவண் நீங்கி ஏகினான்
குன்றின் தொன்மிடல் கொண்ட தோளினான். 28

ஆகத் திருவிருத்தம்–182.

# 7. கயமுகன் வதைப் படலம்

—oo—

ஏகா நிற்புழி ஏந்தல் கீழ்த்திசை
மாகா வற்கொள் மதங்க மாமுகன்
மீகான் ஒப்ப வியன்க லத்தினுக்
காகா யத்தின் அமர்ந்து போற்றுவான். 1

நூற்றுப் பத்து நுவன்ற தோன்முகன்
மூற்றைக் கையினன் மொய்ம்பி ராயிரன்
சீற்றத் துப்புறு தீய சிந்தையான்
கூற்றத் துக்கொரு கூற்ற மேயனான். 2

பொன்னூர் ஏம புரத்து வைகலும்
மன்னாய் வாழ்பவன் மாறு கொண்டுதன்
முன்னா வெய்தி முனிந்து போர்செய
ஒன்னார் இன்றி உளங்கு றைந்துளான். 3

கருமே கங்கள் கறித்து வாரியுண்
டுருமே றோடு முரற்ற ஓச்சுவான்
பெருமே தக்க பவஞ்செய் பெற்றியான்
செருமேல் கொண்டிடு சிந்தை பெற்றுளான். 4

மஞ்சார் வேழம் வனத்தில் வல்லுளி
எஞ்சா வெவ்வரி யாளி வல்லியம்
அஞ்சா ராயிர மங்கை கொண்டுதைச்
செஞ்சோ ரிப்புனல் சிந்தும் வாயினான். 5

காசைப் போது கடுத்த மெய்யர்தென்
றிசைக் காலரோ ராயிரத் தர்தம்
பாசத் தோடு பயின்று சேர்ந்தென
வீசித் தூங்கும் வியன்று திக்கையான். 6

வாணாள் அஃகினன் மாயும் எல்லையான்
ஏணால் அத்திசை ஏகும் வீரனைக்
காணா நின்று கனன்று சாலவுஞ்
சேணான் இன்னன செப்பி ஏகுவான்.

மிக்கார் காவல் விலங்கி நீயிவட்
புக்காய் மாயை புகன் றுளாய்கொலோ
அக்கால் தானுமெம் மானை நீங்கியே
எக்கா லத்தினும் ஏக வல்லதோ.

வறியா ராகி மயங்கும் வானவச்
சிறியார் வைகிய சீரில் ஊரெனக்
குறியா வந்தனை கோதில் இந்நகர்
அறியா யோநம தானை ஆற்றலே.

மூண்டே குற்றனென் மொய்சி னத்தினேன்
மாண்டே போயினை வல்லை நீயினி
மீண்டே போந்திறம் இல்லை மேலுனக்
கீண்டே மாயவி ழைத்த எல்லையே. 10

சூராள் கின்றதொர் தொல்லை மாநகர்
சேரா நின்றனை சீறு கேசரி
பேரா எல்லையொர் பீடின் மான்பினை
ஆராய் தற்குவ ருங்கொல் ஆற்றலால். 11

தொடுநே மிக்கடல் துண்ணெ னக்கடந்
திடைசேர் கின்ற இலங்கை நீங்கியே
கடிதே இந்நகர் காண உன்னியே
அடைவாய் தேவர்க ணத்து ளாரைநீ. 12

திருத்தங் கண்ணகல் தேவர் தம்முளும்
விருத்தன் போலும் மிகத்து ணிந்துநீ
ஒருத்தன் போந்தனை ஒன்றார் வாளொடே
வரத்தென் இவ்விடை மாயை கற்றுளாய். 13

ஆலா லத்தை அயின்ற நம்பனோ
மாலா னோவன சத்தில் அண்ணலோ
பாலார் தந்தி படைத்த கள்வனோ
மேலார் இங்குனை விட்ட தன்மையார். 14

சுற்றா நின்றனை சூழ இந்நகர்
ஒற்றாய் வந்தனை போலும் உன்றனை
மற்றார் உய்த்தனர் வந்த தென்கொலோ
விற்றாய் நின்னுயிர் எங்கண் உய்திநீ. 15

சிறையிற் பட்டுழல் தேவர் செய்கையை
அறிகுற் றிந்திரன் ஆனை யாகியே

நெறியிற் போக நினைந்து ளாய்கொலாங்
குறுகுற் றுயிது வுங்கு றிப்பதோ. 16

விண்டோ யுங்கனல் மேவும் எல்லையின்
மண்டோய் பூளை மருத்தன் உய்த்தெனப்
பண்டே நொய்மை படுத்தி றத்திவட்
கொண்டே வந்தது கொல்லும் வல்வினை. 17

முன்னந் நம்பணி முற்று மாற்றியே
கின்னங் கொண்டு கரந்த கீழ்த்திசை
மன்னன் பாலுற்று வாருள் அன்றுநீ
இன்னும் மஞ்சலை என்னை யெண்ணலாய். 18

கொல்லா நிற்பதொர் கூற்ற மேயெனச்
செல்லா நின்றிடு திண்ணி யேன்முனம்
நில்லாய் எங்கடா நீங்கு வாயென
ஒல்லான் ஓதி உரப்பி யேகினான். 19

வன்றாள் கொண்ட மதக்க யாசுரன்
சென்றான் இன்னன செப்பி இம்மொழி
நன்றால் என்று நகைத்து நோக்கியே
நின்றான் வாகை நெடும்பு யத்தினான். 20

ஓவா திவ்வகை யோதி முன்வருந்
தீவா யோனெதிர் சென்று வல்லையிற்
சாவா யென்னிடை சார்ந்து ளாய்கொலாம்
வாவா என்றனன் வாகை மொய்ம்பினான். 21

வானோர் அஞ்ச வருங்க யாசுரன்
தானோர் குன்று தனைப்ப றித்திடா
ஊனோ டுன்னுயி ருண்ணு மீதென
வானோன் மைந்தன்முன் னார்த்து வீசினான். 22

விண்டோய் மேனி வியன்க யாசுரன்
கொண்டோர் கையில் விடுத்த குன்றது
வண்டோ லம்புரி மாலை மொய்ம்பினான்
திண்தோண் மீமிசை செவ்வ னுற்றதே. 23

வேழத் தோன்முகன் விட்ட பூதரம்
பாழித் தோள்மிசை பட்ட காலையில்
வாழிப் பூதியின் வட்டு விண்டெனப்
பூழித் தாகி உடைந்து போயதே. 24

பொடியுங் காலெதிர் புக்க தீயவன்
மிடல்கொண் டுற்றிடு வீரன் ஆற்றல்கண்
டுடலுந் திண்சின முற்றொ ராயிரம்
படருங் குன்று பறித்தன் மேயினான்.

பறியா நின்ற பகட்டு மாமுகன்
நெறிவீழ் கின்ற நெடுங்கை சுற்றினன்
இறைசேர் மேரு இருந்த கோடெலாங்
கறைசேர் காலவர் கட்டெ ழுந்தபோல். 26

பத்தாம் நூறு படுத்த வேலையுள்
மத்தா குற்றன வாசு கித்தொகை
மொய்த்தார் வன்றலை முன்பு சூழ்ந்தெனக்
கைத்தா மால்வரைக் காட்சி மிக்கவே. 27

துண்ணென் றேகயா சூரன் நூறுபத்
தெண்ணுந் தொல்கிரி யாவும் எம்பிரான்
கண்ணின் றோன்விடு காமர் காளைமேல்
விண்ணங் கான்றென ஆர்த்து வீசினன். 28

பாடார் பல்கிரி பற்றி வீசலும்
ஈடார் வெம்புலி யாளி கேசரி
கோடார் தந்திகள் கோடி கோடிகள்
வீடா ஆர்ப்பொடு விம்மி வீழ்பவே. 29

கேடாய் மன்னர் கிடப்ப ஆங்கவர்
வீடா ஆக்கமி சைந்து ளாரெனப்
பாடா வண்டு பராரை மால்வரை
ஊடார் தேன்கள் உகுப்ப உண்டவே. 30

வேறா கும்பல வெற்பி டந்தொறும்
ஊறா நின்றுல வுற்ற வான்புனல்
மாறா மல்கவிழ் வுற்று வல்லைபோய்
ஆறா கிக்கட லென்ன ஆர்த்ததே. 31

வரைவீழ் பூம்புனல் மாந திக்கணே
இரையா மாக்க ளியாவும் வீழ்தலாற்
திரைசேர் வாரிகள் சென்று சேணுழீஇ
விரைவால் வெய்யவன் வெப்பம் நீக்குமே. 32

பேசுஞ் சீரிவை பெற்ற வெற்பெலாம்
ஈசன் தூதுவன் முன்ன ரெய்தின
பாசஞ் சுற்றிய பம்ப ரத்தொகை
வீசுங் காலை சுழன்று வீழ்வபோல். 33

வேறு

சுடர்ப்பெ ருங்கதிர் ஆதவன் துண்ணெனக் கரப்ப
அடுக்கல் ஆயிரம் இன்னவா றொருதலை யாகக்
கடற்பு குங்கண முகிலென வருதலுங் கண்டான்
தடக்கைவே லுடை அண்ணல்தாள் முன்னினன் தமியோன். 34

நிற்கு மெல்லையின் வெங்கொலைத் தொழின்முறை நிரம்பக்
கிற்கும் வெய்யவன் விடுத்திடும் ஆயிரங் கிரியும்

பற்கன் மால்வரை காப்பவன் தன்மிசை பழிதீர்
அற்கன் மேல்வரும் எழிலிகள் எனஅடைந் தனவே. 35

வேறு

மறுவரை யாத திங்கள் வார்சடைக் கடவுள் நல்க
அறுவரை அனையாப் பெற்றோன் அருளினால் ஐயன் நிற்ப
உறுவரை பத்து நூறும் ஒருங்குமா யுற்று மற்றோர்
சிறுவரை தன்னில் யாவுஞ் சிதறியே உடைந்த வன்றே- 36

தெளிதரு வீரன் தன்மேற் செறிந்திடும் அடுக்கல் யாவும்
விளிவொடு மாய்ந்த வன்றி விளைத்தில வேறங் கொன்றும்
வளநனி சுருங்கி வானம் வறந்தநாள் வெளிற்றுக் கொண்மூக்
கிளர்வன பயனின் றுகிக் கேடுபட் டுடையு மாபோல். 37

மட்பகை வினைஞ ராஞோர் வனைதரு கலங்கள் முற்றுந்
திட்பமொ டமர்ந்த கற்றூண் சேர்ந்துழிச் சிதறு மாபோல்
கொட்புறு புழைக்கை வெய்யோன் குறித்தெறி பிறங்கல் யாவும்
ஒட்பம தடைந்த வீரன் மிசைபட உடைந்த அன்றே. 38

விறல்கெழு புயத்தி னன்மேல் விடுத்திடு கிரிகள் யாவும்
வறிதுபட் டிடலுங் காணு மால்கரி முகத்தன் நின்றான்
அறநெறி யொருவி மொய்ம்பால் ஆற்றிய வெறுக்கை யாவும்
பிறர்கொள வுகுத்தி யாதும் ஊதியம் பெறுகி லார்போல். 39

கண்டுவிம் மிதத்த னாகிக் கயாசுரன் முனிந்தோர் தண்டந்
திண்டிறன் மொய்ம்பன் தன்மேற் செலுத்தலும் அதனைக் காணு
ஒண்டழல் புரையும் ஒள்வாள் உறைகழித் தொல்லை வீழத்
துண்டம தாக்கி யன்னோன் எதிருறத் துன்ன லுற்றான். 40

மத்தவெங் கயமாந் தீயோன் வாகையந் தடந்தோள் அண்ணல்
மெய்த்தனி ஆற்றல் காணு விழுத்தகு பணைக்கை யோச்சிப்
பத்துநூ றான சாலப் பழுமரம் பறியா ஏந்தி
உய்த்திட ஒருதன் வாளால் ஒய்யெனச் சிந்தி ஆர்த்தான். 41

காயெரி கலுழும் வெங்கட் கயாசுரன் விடுவான் பின்னுஞ்
சேயுயர் வரைபல் வேறு தெரிந்தனன் பறிக்கும் எல்லை
நாயகன் தூதன் காணு நாந்தகங் கொடுபோய் அன்னான்
ஆயிர மாகி யுள்ள புழைக்கையும் அறுத்தான் அன்றே. 42

அறுத்தலுங் கவன்று தீயோன் ஆயிரத் திரட்டி கையுஞ்
செறித்திவன் தன்னைப் பற்றித் திற்றியாக் கொள்வ னென்றே
குறித்தனன் வளைப்ப வாளாற் கொம்மென ஆற்றல் வீரன்
தறித்தனன் ஒருசார் வந்த ஆயிரந் தடக்கை முற்றும். 43

செற்றமால் கரியின் பேரோன் திண்கையா யிரமும் வீட்ட
மற்றையா யிரங்கை யாலும் வாகையஞ் செம்மல் மார்பின்
எற்றினன் எற்றும் எல்லை எல்லையில் வெகுளி யெய்தி
அற்றுவீழ்ந் திடவே வாளால் அவையெலாம் அடுதல் செய்தான். 44

கொலைகெழு தறுகண் நால்வாய்க் குஞ்சர முகத்து வெய்யோன்
நிலைகெழு பாணி முற்றும் நீங்கியீ ரைந்து நூற்றுத்
தலைகெழு நிலைமைத் தாகித் தண்சினை பலவு மல்கி
அலைகெழு வீழ்போய் உற்ற ஆலமே போல நின்றான். 45

பாணிகள் இழந்து நின்ற பகட்டுடை வதனத் தீயோன்
நாணினன் இவனை அட்டு நம்முயிர் துறந்தும் என்னா
மாணுறு மனத்திற் கொண்டு மற்றொழின் முன்னித் தோளால்
தாணுவின் கயிலை காப்போன் தடம்புயந் தாக்கி ஆர்த்தான். 46

ஐயன தொற்றன் காணா ஆற்றலின் றாகி முற்றுங்
கையினை இழந்து நின்றான் கடுங்கதிர் வாளின் வெம்போர்
செய்யலன் இனியான் என்னாச் சிந்தைசெய் துறைவா ளோச்சி
ஒய்யென அவன்றன் மார்பின் உதைத்தனன் ஒருதன் தாளால். 47

உதைத்திடு கின்ற காலை ஒல்லென அரற்றி வீழ்ந்து
மதத்தினை யுறுக போல மால்கரி முகத்து வெய்யோன்
பதைத்தனன் ஆவி சிந்திப் பட்டனன் பகிர்ந்த மார்பிற்
குதித்திடு சோரி நீத்தங் குரைகடற் போய தன்றே. 48

அவ்வியல் கண்டு பல்லோர் அவுணர்கள் நமரே ஈண்டு
தெவ்வியல் முறையின் நின்று செருவினை இழைப்பார் போலும்
இவ்விவர் ஆடற் கேது என்கொலோ அறிதும் என்றே
கவ்வையின் நெறிக டோறுங் காண்பது கருதிப் போந்தார். 49

சென்றிடல் வீரன் காணாத் தியரென் செய்கை நோக்கிற்
கன்றிவெஞ் சினமேற் கொண்டு கடுஞ்சமர் இழைப்பர் யானும்
நின்றமர் புரிதல் வேண்டும் நிலைமையீ தென்றால் அம்மா
இன்றொடு முடியுங் கொல்லோ இயற்றினும் இவர்போரென்றான். 50

ஆரணந் தனக்குங் காணா ஆதியங் கடவுள் சொற்ற
பேரருண் மறந்தே இன்னே பீடிலார் தம்மோ டேற்றுப்
போரினை யிழைத்து நிற்றல் புல்லிது புல்மைத் தன்றால்
சூருறை மூதூர் தன்னில் துன்னுவன் கடிதின் என்றான். 51

எப்பெரு வாயில் சார வேகினும் அங்கண் எல்லாங்
கைப்படை அவுணர் வெள்ளங் காவல்கொண் டுற்ற ஆற்றால்
தப்பினன் சேறல் ஒல்லா தமியன்இப் படிவத் தோடு
மெய்ப்பதி இதற்குச் செல்வன் வேற்றுரு வெய்தி யென்றான். 52

கூற்றினை உறழும் வைவேற் குமரவேள் அருளால் ஈண்டோர்
வேற்றுரு வதனைக் கொண்டு வெய்யராம் அவுண வீரர்
போற்றுமிக் குணபால் வாய்தல் பொள்ளெனக் கடந்து பின்னர்
மாற்றலன் ஊரிற் செல்வன் என்றனன் வாகை மொய்ம்பன். 53

நொய்யதோர் அணுவின் ஆற்ற நுணுகியும் மேன்மை தன்னில்
பொய்யில்சீர் பெருமைத் தாயும் பூரண மாகி வைகுஞ்

செய்யதோர் குமரன் பொற்றாள் சிந்தைசெய் தன்பிற் போற்றி
ஒய்யென அருளின் நீரால் ஓரணு வுருவங் கொண்டான். 54

நுணுகுதன் னுணர்வே போல நோக்கருந் திறத்தால் தானோர்
அணுவுருக் கொண்டு வீரன் அடுகளம் அதனை நீங்கி
இணையறு குமரற் போற்றி எழுந்துவிண் படர்ந்து மூதூர்க்
குணதிசை வாய்தல் நின்ற கோபுர மிசைக்கண் உற்றான். 55

ஆகத் திருவிருத்தம்–237.



# 8. நகர்புகு படலம்

—oo—

அண்டம் யாவையும் எழுவகை யுயிர்த்தொகை யனைத்தும்
பிண்ட மாம்பொருள் முழுவதும் நல்கியெம் பெருமான்
பண்டு பாரித்த திறமென மகேந்திரப் பதியின்
மண்டு தொல்வளம் நோக்கியே இன்னன மதிப்பான். 1

எந்தை முன்னரே சூரபன் மாவினுக் கீந்த
முந்தும் அண்டங்கள் அலமரும் உவரிகள் முழுதும்
வந்து மொய்த்தன போலுமால் வரைபுரை காட்சிக்
கந்து பற்றியே ஆர்த்திடும் எல்லைதீர் கரிகள். 2

இயலும் ஐம்பெரு நிறத்தின்அண் டங்களின் இருந்த
புயலி னம்பல ஓர்வழித் தொக்கன பொருவ
மயிலி ருஞ்சரம் முயலொடு யூகமற் றெழிலைப்
பயில்ப ரித்தொகை அளப்பில வயின்றொறும் பரவும். 3

அண்டம் ஆயிரத் தெட்டினுள் மேதகும் அடல்மாத்
தண்ட மால்கரி யாயின தடம்பெருந் தேர்கள்
எண்ட ரும்பொரு ளியாவுமீண் டிருந்தன இவற்றைக்
கண்டு தேர்ந்தனர் அல்லரோ அகிலமுங் கண்டோர். 4

இணையில் இவ்விடைத் தானையின் வெள்ளமோர் இலக்கம்
நணுகும் என்றனன் அந்தணன் நாற்பெரும் படையுங்
கணித மில்லன இருந்தன வெள்ளிகண் ணிலன்போல்
உணர்வி லன்கொலாங் கனகனுங் கேட்டசொல் லுரைத்தான். 5

உரையின் மிக்கசூர் பெற்றஅண் டந்தொறும் உளவாம்
வரையின் மிக்கதேர் கடல்களின் மிக்கமை மாக்கள்
திரையின் மிக்கவாம் பரித்தொகை ஆயிடைச் செறிந்த
பரவை நுண்மணல் தன்னினும் மிக்கன பதாதி. 6

மண்கொள் ஆயிரத் தெட்டெனும் அண்டத்தின் வளமும்
எண்கொள் எண்பதி னாயிரம் யோசனை யெல்லைக்

கண்கொள் பான்மையில் ஈண்டிய தற்புதங் கறைதோய்
புண்கொள் வேலுடைச் சூர்தவத் தடங்கிய போலாம். 7

உரைசெய் ஆயிரத் தெட்டெனும் அண்டத்தின் உளவாங்
கரையில் சீரெலாந் தொகுத்தனன் ஈண்டவை கண்டாந்
தருமம் மெய்யளி கண்டிலம் அவற்றையுந் தந்து
சுரர்கள் தம்முடன் சிறையிலிட் டான்கொலோ சூரன். 8

அரண்ட ருங்கழற் சூரன்வாழ் மகேந்திரம் அதனில்
திரண்ட பல்லியத் துழனியேழ் கடலினுந் தெழிப்ப
முரண்டி றத்தவை இயம்புவார் அளவையார் மொழிவார்
இரண்டு பத்துநூ றியோசனை யுண்டவர் இடங்கள். 9

கரிகள் சேவகம் ஒருபதி னாயிரங் கடுந்தேர்
விரியும் நீளிடை ஒருபதி னாயிரம் விசயப்
பரியின் எல்லையோர் இருபதி னாயிரம் பையத்
துருவின் இன்னமும் உண்டுகொல் யோசனைத் தொகையே. 10

இவுளி வாயினும் மால்கரிக் கரத்தினும் இழிந்து
திவளும் நீர்மைசால் விலாழியுந் தானமுஞ் செறிந்து
குவளை யுண்கணார் நீத்தசாந் தணிமலர் கொண்டே
உவள கந்தரும் அகழிசென் றகன்கடல் உறுமால். 11

வளமை மேதகும் இப்பெரு மகேந்திரம் வகுத்தன்
முளரி அண்ணலிங் கொருவனுன் முடிந்திட வற்றோ
ஒளிறு வாட்படை அவுணர்கோ னுடையவண் டத்தின்
அளவி னுன்முகர் யாரும்வந் திழைத்தன ராமால். 12

புரந்த ரன்றனை துலகமும் ஒழிந்த புத்தேளிர்
இருந்த வானமும் எண்டிசை நகரமும் யாவும்
வருந்தி இந்நகர் சமைத்திட முன்னரே வண்கை
திருந்த வேகொலாம் படைத்தனர் திசைமுகத் தலைவர். 13

பொன்பு லப்படு துறக்கம்வான் மாதிரம் புவிகீழ்
துன்பில் போகமார் உலகென்பர் தொடுகடற் பெருமை
முன்பு காண்கலர் கோட்டகம் புகழ்தரு முறைபோல்
இன்பம் யாவையும் உளநகர் ஈதுபோ லியாதோ. 14

கறைப டைத்ததாட் கரிபரி அவுணர்தேர்க் கணங்கள்
அறைப டைத்திவண் ஈண்டிய அண்டங்க ளனைத்தும்
முறைக டற்றொகை முழுவதுஞ் சூர்கொணர்ந் தொருங்கே
சிறைப டுத்திய போலும்வே றொன்றிலை செப்ப. 15

ஐய பூழியும் ஆரகில் ஆவியும் ஆற்ற
நொய்ய வாகிய அணுக்களும் நுழைவரி தென்னிற்
செய்ய இந்நகர் ஆவணம் எங்கணுஞ் செறிந்த
வெய்ய தேர்கரி அவுணர்தம் பெருமையார் விரிப்பார். 16

அள்ளல் வேலைசூழ் மகேந்திர புரிக்கிணை யாகத்
தெள்ளி தாவொரு நகருமின் றுளதெனச் செப்ப
எள்ள லின்றிய அண்டமோ ராயிரத் தெட்டின்
உள்ள சீரெலாம் ஈதுபோல் ஒருபுரத் துளதோ. 17

கழிந்த சீர்த்திகொள் இந்நகர் தன்னிடைக் கருல
வழிந்து தொல்லுரு மாழையின் மணிநிழ லாகி
இழிந்து ளான்பெறு திருவெனப் பயன்பெறு தெவர்க்கும்
ஒழிந்த வேலைகள் தம்புகழ் கொள்வதிவ் வுவரி. 18

ஏற்கும் நேமிசூழ் மகேந்திர வெறுக்கை ரா
ஆர்க்கும் ஓர்பயன் பெற்றில துயிர்ப்பலி அருந்துங்
கார்க்கு ழாம்புரை அலகைசூழ் காளிமந் திரத்திற்
சீர்கொள் கற்பகம் பிறர்க்குத வாதமர் செயல்போல் 19

மறக்கொ டுந்தொழில் இரவியம் பகையழல் மடுப்பத்
துறக்க மாண்டது பட்டிமை யாகுமத் தொல்லூர்
சிறக்கும் இந்நகர் நோக்கியே தன்னலந் தேய்ந்து
பொறுக்க ரும்பெரு நாண்சுடக் கரிந்தது போலாம். 20

துங்க மிக்கசூர் படைத்திடும் அண்டமாத் தொகையுட்
செங்க திர்த்தொகை ஆங்கவன் பணியினுற் சென்று
பொங்கு தண்சுடர் நடாத்திநின் றென்னவிப் புரியில்
எங்கு முற்றன செழுமணிச் சிகரம் எண்ணிலவே. 21

மாணி லைப்படும் எழுவகை உலகின் வைப்பென்ன
வேணி லைப்பெருஞ் சிகரிகள் செறிந்தன யாண்டுங்
கோணி லைக்கதிர் உடுப்பிறர் பதங்களிற் குழுமி
நீணி லைத்தலம் பலவுள மாடங்கள் நிரந்த. 22

நூறி யோசனை சேண்படு நீட்சியும் நுவலும்
ஆறி யோசனைப் பரவையும் பெற்றஆ வணங்கள்
ஏறு தேர்பரி களிறுதா னவர்படை ஈண்டிச்
சேற லாயிடை அருமையால் விசும்பினுஞ் செல்லும். 23

அடல்மி குத்திடு தானவர் அகலிரு விசும்பிற்
கடிதி னிற்செல மத்திகை காட்டுமா றெப்பப்
நெடுமு கிற்கணந் தழுவுசூ ளிகைமிசை நிறுவுங்
கொடிகள் எற்றிடப் போவன இரவிகொய் யுளைமா. 24

மேலு லாவிய படிகமா ளிகைசில மின்னுர்
மாலை தாழ்குழற் கிடுமகி லாவியான் மறைவ
சீல நீங்கிய அவுணர்தஞ் சீர்த்திகள் அனைத்தும்
மேல வேயவர் பவத்தினுள் ஒடுங்குமா றென்ன. 25

அணிகு லாயகோ மேதகம் மரகதம் ஆரம்
துணியும் நீலம்வச் சிரம்வயி டூரியந் துப்பு

நணிய பங்கயம் புருடரா கம்மெனும் நவமா
மணிக ளாற்செய்து மிளிர்வன வரம்பில்பொன் மாடம். 26

இயல்ப டைத்தவெண் படிகத்தின் இயன்றமா ளிகைமேற்
புயல்ப டைத்திடு களிமயில் வதிந்திடப் புடையே
கயல்ப டைத்தகண் ணியர்புரி அகிற்புகை கலப்ப
முயல்ப டைத்திடு மதியினைச் சூழ்தரு முகில்போல். 27

வளனி யன்றிடு செம்மணிப் பளிங்குமா ளிகைமேல்
ஒளிறு பொற்றலத் தரிவையர் வடிமிசைந் துறுதல்
வெளிய சேயன பங்கயப் பொகுட்டின்மீ மிசையே
அளியி னங்கள்தேன் மாந்தியே வைகுமா றனைய. 28

துய்ய வாலரி புனற்கிறை மண்ணியே தொகுப்பச்
செய்ய தீயவன் ஊன்களோ டவைபதஞ் செய்ய
மையன் மாதரோ டவுணர்கள் அரம்பையர் வழங்க
நெய்யளா வுண்டி உண்குவர் மறுசிகை நீக்கி. 29

துப்பு றுத்தன குஞ்சியங் காளையர் தொகையுஞ்
செப்பு றுத்துசீ றடிமினார் பண்ணையுஞ் செறிந்து
மெய்ப்பு றத்தியல் காட்சியுங் கலவியும் வெறுப்பும்
எப்பு றத்தினும் நிகழ்வன மதனுல கிதுவே. 30

பூணும் ஆரமுங் கலாபமும் இழைகளும் பொன்செய்
நாணும் ஒற்றராற் பரத்தையர் பாற்பட நல்கிப்
பேணி மற்றவர் விலக்கின நயந்தன பிறவும்
மாணு மைந்தர்கள் தேறுவான் ஆறுபார்த் தயர்வார். 31

துன்று தானவர் தெரியலின் மாதர்பூந் தொடையின்
மன்றல் மாளிகைச் சோலையின் இலஞ்சியின் மலரிற்
குன்ற மால்கரித் தண்டத்தில் யாழ்முரல் குழுவிற்
சென்று சென்றன துணர்வுபோல் அளிகளுந் திரியும். 32

மாறி லாதசூர் ஆணையால் வந்திடும் வசந்தன்
ஊறு தெண்கடல் அளவியே தண்டலை யுலவி
வீறு மாளிகை நூழையின் இடந்தொறும் மெல்லத்
தேறல் வாய்மடுத் தோரென அசைந்துசென் றிடுமால். 33

மாட மீதமர் மடந்தையர் தம்முரு வனப்புக்
கூட வேபுனைந் தணிநிழற் காண்பது குறித்துப்
பாடு சேர்கரம் நீட்டியே பகலவற் பற்றி
ஆடி நீர்மையின் நோக்கியே அந்தரத் தெறிவார். 34

வன்ன மாடமேல் ஆடவர் பரத்தமை மகளிர்
உன்னி யூடியே பங்கியீர்த் தடிகளால் உதைப்பப்
பொன்னின் நாணறத் தமதுகை எழிலியுட் போக்கி
மின்னு வாங்கியே ஆர்த்தனர் குஞ்சியை வீக்கி. 35

முழங்கு வானதி தோய்ந்தசின் மாளிகை முகட்டின்
அழுங்கல் என்பதை உணர்கிலா மாதரார் அகல்வான்
வழங்கு கோளுடன் உருமினைப் பற்றியம் மனையுங்
கழங்கு மாயெறிந் தாடுவர் அலமரக் கண்கள். 36

ஈண்டை மாளிகை மங்கையர் தஞ்சிறுர் இரங்க
ஆண்டு மற்றவர் ஆடுவான் பற்றியா தவன்தேர்
பூண்ட மான்தொகை கொடுத்தலும் ஆங்கவன் போந்து
[illegible] வாங்கியே உதவுவார் மெல்ல. 37

நீடு மாளிகை மிசைவரு மாதர்கை நீட்டி
ஈடு சாலுரும் ஏறுடன் மின்பிடித் திசைத்தே
ஆடு கிங்கிணி மாலையாம் மைந்தருக் கணியா
ஓடு கொண்டலைச் சிறுதுகி லாப்புனைந் துகப்பார். 38

பொங்கு மாமணி மேற்றலத் திரவிபோந் திடலும்
இங்கி தோர்கனி யெனச்சிறுர் அவன்றனை யெட்டி
அங்கை பற்றியே கறித்தழல் உறைப்பவிட் டழுங்கக்
கங்கை வாரிநீர் ஊட்டுவார் கண்ட நற் ருயர். 39

கண்டு வந்தனை வரும்புகழ் தஞ்சிறுர் கலுழ
விண்டு வந்தனை செய்தெனத் தாழ்ந்தமேல் நிலத்தில்
வண்டு வந்தனைப் படுகதிர்க் கைம்மலர் வலிந்து
கொண்டு வந்தனை யார்இரங் காவகை கொடுப்பார். 40

அஞ்சி லோதியர் மாளிகை மிசைச்சிலர் அகல்வான்
விஞ்சு தேவரை விளித்தலும் மெய்யுறன் மறுப்ப
வஞ்சர் வஞ்சரென் றரற்றியவ் வானவர் இசைய
நஞ்சி ருருடன் ஆடுதும் என்பர்நண் ணினர்க்கு. 41

பொருளில் மாளிகைப் படிற்றியர் புணர்வரென் றுன்னி
வரவு மஞ்சுவர் வராமையும் அஞ்சுவர் மடவார்
கரவின் மேவுதல் அவுணர்கள் காண்பர்கொ லென்றும்
வெருவு கின்றனர் என்செய்வார் விண்ணெறிப் படர்வார். 42

மேனி லந்தனின் மங்கையர் சிறுர்விடா திரங்க
ஊன மில்கதிர் தேர்வர அவரையாண் டுய்த்து
வான கந்தனிற் சில்லிடை யேகிநம் மகவைப்
பானு வந்துநீ தருகென விடுக்குநர் பலரால். 43

கலதி யாகிய அவுணர்தம் மாதர்கால் வருடிச்
சிலதி யாரென வணங்கிஞோர் ஏவல்செய் கிற்பார்
சலதி யார்தரும் உலகமேல் தெரிகுறில் தவமே
அலதி யாவுள வேண்டியாங் குதவநின் றனவே. 44

ஐந்த வாகிய தருக்களும் மணியுநல் லாவும்
நந்தும் அம்புய நிதியமும் பிறவும்இந் நகரின்

மைந்தர் மாதர்கள் இருந்துழி யிருந்துழி வந்து
சிந்தை தன்னிடை வேண்டியாங் குதவியே திரியும். 45

மீது போகிய மாளிகைக் காப்பினுள் மேவும்
மாதர் வானெறிச் செல்லுவோர் சிலர்தமை வலித்தே
காத லாற்பிடித் தொருசிலர் முறைமுறை கலந்து
போதி ராலென விடுப்பர்பின் அசமுகி போல்வார். 46

வேறு

மேதாவி கொண்டகதிர் வெய்யவனை வெஞ்சூர்
செய்தான் வலிந்துசிறை செய்திடலின் முன்ன
மேதாமி னங்கொலென எண்ணிஅவன் என்றாழ்
வாதாய னங்கடொறும் வந்துபுக லின்றே. 47

தேசுற்ற மாடமுறை சீப்பவரு காலோன்
வாசப்பு னற்கலவை வார்புணரி கொண்கன்
வீசப்பு லர்த்தியிட விண்படரும் வெய்யோன்
ஆசுற்ற தானவர் அமர்ந்திவண் இருந்தார். 48

பால்கொண்ட தெண்கடல் மிசைப்பதுமை தன்னை
மால்கொண்டு கண்டுயி லும் வண்ணமிது வென்ன
மேல்கொண்ட நுண்பளித மேனிலம தன்கட்
சூல்கொண்ட காரெழிலி மின்னினொடு துஞ்சும். 49

வேறு

குழலின் ஓதையும் எழால்களின் ஓதையுங் குறிக்கும்
வழுவில் கோட்டொடு காகள ஓதையும் மற்றை
முழவின் ஓதையும் பாடுநர் ஓதையும் முடிவில்
விழவின் ஓதையுந் தெண்டிரை ஓதையின் மிகுமால். 50

மதனி மூக்குறு மைந்தரும் மாதரும் வனமா
மதனி மூக்கிய வீதியில் வீசும்வண் கலவை
பதனி மூக்குறச் சேதக மாகுமீன் பலவும்
பதனி மூக்கிய வாந்தினம் புனைந்தெறி பணிகள். 51

அளப்பில் வேட்கையங் கொருவர்கண் வைத்துமற் றதனை
வெளிப்ப டுக்கிலர் மெலிதலுங் குறிகளே விளம்ப
ஒளிப்ப தென்னுளம் பகரென ஆற்றலா துடைந்து
கிளிப்பெ டைக்கிருந் தொருசில மடந்தையர் கிளப்பார். 52

குருளை மான்பிணித் திளஞ்சிறுர் ஊர்ந்திடுங் கொடித்தேர்
உருளை ஒண்பொனை மணித்தலங் கவர்ந்துகொண் டுறுவ
வெருளின் மாக்களை வெறுப்பதென் முனிவரும் விழைவார்
பொருளின் ஆசைவ்ய நீங்கினர் யாவரே புவியில். 53

விழைவு மாற்றிய தவத்தின ரேனுமிவ் வெறுக்கை
மொழியி னோரினும் அவுணரா கத்தவம் முயல்வார்

ஒழியும் ஏனையர் செய்கையை யுரைப்பதென் னுலகிற்
கழிபெ ரும்பகல் நோற்றவ ரேயிது காண்பார். 54

குழவி வான்மதிக் கிம்புரி மருப்புடைக் கொண்மூ
விழுமெ னச்சொரி தானநீ ராறுபோ லேகி
மழலை மென்சிறார் ஆவணத் தாடும்வண் சுண்ணப்
புழுதி ஈண்டலின் வறப்பவான் கங்கையும் புலர. 55

கங்கை யூண்பய னுகவுந் தூயதெண் கடல்நீ
அங்கண் மாநகர்ப் பரிசனம் ஆடவும் அணைந்து
துங்க மேனிலை மாளிகை ஆவணஞ் சோலை
எங்கும் வாவியும் பொய்கையும் பிறவுமாய் ஈண்டும். 56

வில்லி யற்றுவோர் வாட்படை இயற்றுவோர் வேறும்
எல்லை யில்படை உள்ளவும் இயற்றுவோர் இகலான்
மல்லி யற்றுவோர் மாயம தியற்றுவோர் மனுவின்
சொல்லி யற்றுவோர் கண்ணுறு புலந்தொறுந் தொகுமால். 57

நாடி மேலெழத் தசையிலா துலறியே நரையாய்க்
கோடு பற்றிமூத் தசைந்திடு வோரையுங் கூற்றால்
வீடு வோரையும் பிணியுழப் போரையும் மிடியால்
வாடு வோரையுங் கண்டிலம் இதுதவ வலியே. 58

கன்னல் மாண்பயன் வாலளை செய்கடுந் தேறல்
துன்னு தீயபால் அளக்கர்தம் பேருருச் சுருக்கி
மன்னன் ஆணையால் இந்நகர் மனைதொறும் மருவிப்
பன்னெ டுங்குள னுகியே தனித்தனி பயில்வ. 59

அட்ட தேறலும் அடாதமை தேறலும் அருந்திப்
பட்டு வார்துகில் கீறியே தம்மொடு மறைந்து
விட்ட நாணினோர் ஒருசில மடந்தையர் வியன்கை
கொட்டி யாவரும் விழைவுறக் குரவையாட் டயர்வார். 60

திலக வாணுதல் மாதரா டவர்சிறு வரையின்
அலகி லாமுறை புனைதலின் அணிந்தணிந் தகற்றும்
இலகு பூண்டுகின் மாலைகந் தம்பிற ஈண்டி
உலகில் விண்ணக ரெனச்சிறந் தாவண முறுமே. 61

கொய்த லர்ந்தபூ நித்தில மணியுடன் கொழித்துப்
பொய்த லாடுவார் முற்றிலால் எற்றுபொற் பூழி
எய்த லானதிந் நகரள வோகடல் இகந்து
நெய்த லங்கரைக் கானலை அடைந்துமேல் நிமிரும். 62

சுந்த ரங்கெழு செய்யவெண் மலர்களால் தொடுத்த
கந்து கங்களைச் சிறுவர்கள் கரங்களின் ஏந்தி
அந்த ரம்புக எறிதலும் ஆங்கன மேகி
வந்து வீழுமால் இருகதிர் வழுக்கிவீழ் வனபோல். 63

கழக மீதுமுன் போந்திட முதுகணக் காயர்
குழகு மென்சிறார் தனித்தனி வந்தனர் குறுகிப்
பழகு கற்பினூல் பயின்றனர் மாலையிற் பட்ட
அழகு சேர்மதிப் பின்னெழு கணங்கள்மொய்த் தனையார். 64

கள்ளின் ஆற்றலாற் களிப்பவர் தேறலைக் கரத்திற்
கிள்ளை ஆணினுக் கூட்டியே காமநோய் கிளர்த்தி
உள்ள மோடிய சேவலும் இரங்க ஓதிமத்துப்
புள்ளின் மென்பெடை மீமிசை கலந்திடப் புணர்ப்பார். 65

உரத்தின் முன்னரே வௌவிவந் திட்டிய வும்பர்
சிரத்தின் மாமுடித் திருமணி பறித்தொரு சிலவர்
அரத்த மேயதம் பங்கியிற் பஞ்சிகள் அழுத்தும்
பரத்தை மாரடிப் பாதுகைக் கணிபெறப் பதிப்பார். 66

தேவி மார்பலர் வருந்தவும் அனையர்பாற் சேரார்
ஆவி போவது நினைகில ராகியே அயலார்
பாவை மார்தமை வெஃகியே பட்டிமை நெறியான்
மேவு வார்சிலர் காண்பதே இதுவுமென் விழியே. 67

நெருக்கு பூண்முலை இயக்கர்தம் மங்கையர் நெஞ்சம்
உருக்கு மேருடை அமரர்தம் மங்கையர் உளத்தின்
இரக்கம் நீங்கிய அவுணர்தம் மங்கையர் ஏனை
அரக்கர் மங்கையர் கணிகைமங் கையர்களாய் அமர்வார். 68

கந்த மானபல் களபமுஞ் சுண்ணமுங் கமழும்
பந்து மாலையுஞ் சிவிறிநீ ரொடுபரத் தையர்கள்
மைந்த ரோடெறிந் தாடல்யா ருளத்தையும் மயக்கும்
இந்த வீதிகொல் லுருவுகொண் டநங்கன்வீற் றிருத்தல். 69

பொன்னின் அன்னமும் பதுமரா கம்புரை புறவுஞ்
செந்ந லங்கிளர் மஞ்ஞையுஞ் சாரிகைத் திறனும்
பன்னி றங்கெழு புள்ளினம் இனையன பலவும்
இன்ன தொன்னகர் மங்கையர் கரந்தொறும் இருப்ப. 70

பண்டு வேட்டவர் பின்முறைப் பாவையர் பரிவிற்
கண்டு பின்வரை மங்கையர் கானம தியற்றிக்
கொண்ட இல்வழிப் பரத்தையர் கணிகையர் குழாத்துள்
வண்டு பூவுறு தன்மைசென் றுடவர் மணப்பார். 71

தக்க மெல்லடிப் பரிபுரம் முழவுறத் தனமா
மிக்க தாளங்கள் ஒத்தமென் புள்ளிசை விரவ
இக்கு வேளவை காணிய பூந்துகில் எழினி
பக்க நீக்கியே மைந்தரோ டாடுவார் பலரே. 72

பாட்ட மைந்திடு காளையர் அணிநலம் பாரா
வேட்டு மங்கையர் ஒருசிலர் தமதுமெய் விளர்ப்பக்

கூட்ட முன்னியே பன்னிறக் கலவையுங் குழைத்துத்
தீட்டு வாரவர் உருவினை வியன்கிழி திருத்தி. 73

சுற்று விட்டலர் தாருடை வயவர்தொல் லுருவிற்
பற்று விட்டுடன் உளத்தையும் விட்டுமென் பார்ப்பைப்
பெற்று விட்டிலாப் பெடைமயில் தழீஇத்துயர் பேசி
ஒற்று விட்டனர் ஒருசிலர் ஆறுபார்த் துழல்வார். 74

அகன்ற கொண்கரை நனவின்எக் காலமும் அகத்தில்
புகன்று மட்டித்த வெம்முலைச் சாந்தொடும் புலர்வார்
பகன்றை போல்முரல் சிலம்படிப் பாவையர் பல்லோர்
முகந்த னில்கரு மணிகளிற் சொரிதர முத்தம். 75

மங்கை மார்சிலர் ஆடவர் தம்மொடு மாடத்
துங்க மேனிலத் திடைப்படு சேக்கையில் துன்னி
வெங்கண் மெல்லிதழ் வேறுபட் டணிமுகம் வியர்ப்பக்
கங்குல் ஒண்பகல் உணர்கிலர் விழைவொடு கலப்பார். 76

மறிகொள் சோரிநீர் பலியுட ஞெக்கிநாண் மலர்தூய்
இறைகொள் இல்லிடைத் தெய்வதம் வழிபடல் இயற்றிப்
பறைகள் தங்கஅக் கடவுளை ஆற்றுறப் படுத்தி
வெறிய யர்ந்துநின் றுடுவர் அளப்பிலர் மின்னார். 77

அலங்கல் வேல்விழி மாதரும் மைந்தரும் அமர்ந்த
பொலங்கொள் மாடமேல் ஆடுறு பெருங்கொடி பொலிவ
மலங்கு சூழ்தரு தெண்டிரைப் புணரியில் வைகுங்
கலங்கள் மேவிய கூம்பெனக் காட்டிய அன்றே. 78

புரசை வெங்கரி புரவிதேர் பொருபடைத் தலைவர்
பரிச னங்களா தோரணர் வாதுவர் பரவ
முரச மேமுதல் இயமெலாம் முன்னரே முழங்க
அரச வேழமா எண்ணில கோயில்வந் தடைவ. 79

கள்ளு றைத்திடு மாலையம் பங்கியர் கமஞ்சூல்
வள்ளு றைப்புயன் மேனியர் ஒருசிலர் வார்வில்
ஒள்ளு றைப்படை பிறவினிற் கவரிதூங் குறுத்துத்
தள்ளு தற்கரும் வயமுர ரறையமுன் சார்வார், 80

அறுகு வெம்புலி வலியுடை மடங்கல்மான் ஆமாச்
சிறுகு கண்ணுடைக் கரிமரை இரலையித் திறத்திற்
குறுகு மாக்களைப் படுத்தவற் றூன்வகைக் குவால்கள்
மறுகு ளார்பெறப் பண்டிகொண் டளப்பிலோர் வருவார். 81

மஞ்சு லாவரு சிகரியுஞ் சூளிகை வரைப்பும்
விஞ்சு மேனில அடுக்கமுஞ் சோலையும் வெற்புஞ்
சஞ்ச ரீகமார் ஓடையும் வாவியுந் தடமும்
எஞ்சல் இல்லதோர் மாடங்கள் எங்கணு முளவே. 82

ஏற்றி முன்செலும் முரசினர் கம்மியர் எல்லில்
பற்று தீபிகைச் சுடரினர் மாலைதாழ் படையர்
ஒற்றை முக்குடை இருபுடைக் கவரியர் உலப்பில்
கொற்ற வீரர்ஈண் டளப்பிலோர் வந்தனர் குலவி. 83

மண்ப டைத்திடு தவமெனும் மகேந்திர மலிசேர்
எண்ப டைத்தகண் ணிரண்டினர் காணுதல் எளிதோ
விண்ப டைத்தவற் காயினும் அமையுமோ மிகவுங்
கண்ப டைத்தவர்க் கன்றியே கண்டிட லாமோ. 84

வரம்பில் கட்புலங் கொண்டவ ரேனுமற் றிவ்வூர்
விரும்பி இத்திரு நோக்கினும் அளத்தல்மே வருமோ
வரும்பு யற்குழு வைகலும் பருகினு மதனைற்
பெரும்பு னற்கட லானது முடிவுபெற் றிடுமோ. 85

கழியும் இந்நகர் ஆக்கமோ கரையிலா இவற்றுள்
விழிகள் எண்ணில பெற்றுளார் தாங்கண்ட வெறுக்கை
மொழிவர் என்னினும் நாவதொன் றுன்முடிந் திடுமோ
அழிவில் ஆயிர கோடிநாப் பெறுவரேல் அறைவார். 86

வாழ்வின் மேதகு மகேந்திரப் பெருமித வளத்தைத்
தாழ்வி லாநெறி கண்டனர் தாலுஎண் ணிலவால்
சூழ்வின் நாடியே பகரினும் மெய்யெலாந் துதையக்
கேள்வி மூலங்கள் இல்லவர் எங்ஙனங் கேட்பார். 87

ஆயி ரம்பதி னுயிரங் கோடிநா அளவில்
ஆயி ரம்விழி ஆயிரம் ஆயிரஞ் செவிகள்
ஆயி ரம்புந்தி கொண்டுளார்க் கல்லதிவ் வகன்சீர்
ஆயி ரம்யுகங் கண்டுதேர்ந் துரைப்பினும் அடங்கா. 88

பொய்த்தல் இன்றியே இந்நகர்த் திருவைஐம் புலத்துந்
துய்த்தல் முன்னியே விழைந்துகொல் நோற்றிடுந் தொடர்பால்
பத்து நூறுடன் ஆயிரங் கோடியாப் பகரும்
இத்தொ கைச்சிரங் கொண்டனர் ஈண்டுளார் எவரும். 89

முன்ன வர்க்குமுன் னுகிய அறுமுக முதல்வன்[1]
தன்ன ருட்டிறத் தொல்லையில் பேருருச் சமைந்தே
இந்ந கர்த்திரு யாவையுங் காண்குவன் இன்னே
ஒன்ன லர்க்கெனைக் காட்டுதல் தகாதென ஒழிந்தேன். 90

இனைத்த வாகிய பெருவளம் எல்லையின் றிவற்றை
மனத்தில் நாடினும் பற்பகல் செல்லுமால் மனக்கு
நுனித்து நன்றுநன் றுய்ந்திவை முழுவதும் நோக்க
நினைத்து ளேன்எனின் இங்கிது பொழுதினில் நிரம்பா. 91

---

1 வீரவாகு தேவர் சண்முகக் கடவுளின் திருவருட்டிறத்தால் எதுவும் நடத்துபவரே அன்றித் தனக்கென்று ஒரு சுதந்தரமும் இல்லாதவர் என்பார், "முன்னவர்க்கு முன்னுகிய அறுமுக முதல்வன்" என்றூர்.

அம்பு யாசனன் தெளிகிலா அருமறை முதலைக்
கும்ப மாமுனிக் குதவியே மெய்யருள் கொடுத்த
வெம்பி ரான்பணி புரிகிலா திங்கர் இரு
நம்பி நாடியே தெரிந்துபா ணிப்பது நல 92

என்று முன்னியே அறுமுகன் தூதுவன் மயக
குன்றம் அன்னகீழ்த் திசைமுதற் கோபுரக் குடுமி
நின்று மாநகர் வளஞ்சில நோக்கியே நெடுஞ்சீர்
துன்று சூருறை திருநகர் அடைவது துணிந்தான். 93

வனைந்த மாளிகை ஒளியினில் இடைப்படு மறுகில்
கனைந்து செற்றியே பரிசனம் பரவுதல் காணூ
நினைந்த சூழ்ச்சியான் கீழ்த்திசைச் சிகரியை நீங்கி
நனந்த லைப்பட நகரத்து விண்ணிடை நடந்தான். 94

வான மாநெறி நீங்கியே மறைகளின் துணிபாம்
ஞான நாயக அறுமுகன் அருள்கொடு நடந்து
தூநி லாவுமிழ் எயிறுடைச் சூர்முதற் சுதனும்
பானு கோபன துறையுளை எய்தினன் பார்த்தான். 95

பாய்ந்து செஞ்சுடர்ப் பரிதியைப் பற்றினோன் உறையுள்
ஏந்தல் காணுறீஇ விம்மிதப் பட்டவண் இகந்து
காந்து கண்ணுடை அங்கிமா முகன்நகர் கடந்து
சேந்த மெய்யுடை ஆடகன் உறையுளுந் தீர்ந்தான். 96

உச்சி யையிரண் டிருபது கரதல முடைய
வச்சி ரப்பெரு மொய்ம்பினோன் மாளிகை வரைப்பும்
அச்செ னத்தணந் தேகிமூ வாயிரர் ஆகும்
எச்சம் எய்திய மைந்தர்தம் இருக்கையும் இகந்தான். 97

உரிய மந்திரத் துணைவரில் தலைமைபெற் றுறையுந்
தரும கோபன்றன் கடிமனைச் சிகரமேல் தங்கிச்
சுரரும் வாசவன் மதலையும் அவுணர்கள் சுற்றப்
பரிவு கொண்டமர் சிறைக்களம் நாடியே பார்த்தான். 98

கறைய டித்தொகை பிரிதலும் கயமுனி[1] கவர்ந்து
மறையி டத்தினில் வேட்டுவர் உய்ப்பவை குவபோல்
பொறையு டைத்துயர் இந்திரன் போந்தபின் புல்லார்
சிறையி லுற்றவர் செய்கையிற் சிறிதுரை செய்வாம். 99

ஆகத் திருவிருத்தம்—336.



1 கயமுனி - யானைக் கன்று.

# 9. சயந்தன் புலம்புறு படலம்

-oo—

பரஞ்சுடர் நெடுங்கணை படுத்த பாயலில்
வருஞ்சசி அனையதோர் வானு தற்சசி
தருஞ்சிறு குமரனுஞ் சயந்தன் அவ்விடை
அருஞ்சிறை இருந்தனன் அமரர் தம்மொடும். 1

வாலிதாம் அமரர்சூழ் வைப்பில் இந்திரன்
கோலமா கியதனிக் குமரன் வைகுதல்
மேலைநாள் அமுதெழும் வேலை தன்னிடை
நீலமா முகிலுறை நீர்மை போலுமே. 2

மழைபுரை அவுணர்சூழ் வைப்பில் வாலொளி
தழுவிய அமரருட் சயந்தன் மேயினன்
கழிதரு பணிபல கவரச் சோர்தரும்
முழுமதி அதனிடை முயலுற் றென்னவே. 3

வென்றிவில் வியற்றிய விஞ்சை நீர்மையால்
கன்றிய கரமெனக் காவற் சாலையில்
பொன்றிகழ் வல்லிகள் பூண்டு பற்பகல்
தன்றுணைத் தாள்களில் தழும்பு சேர்ந்துளான். 4

இயற்படு மானமும் இகலும் நாணமும்
அயற்பட வெம்பழி அனலஞ் சுற்றிட
உயிர்ப்பெனும் ஓதைநின் றுயிர லைத்திடத்
துயர்ப்பெரும் பரவையுட் டழுந்திச் சோருவான். 5

அண்டருஞ் சிறையினுல் வீடும் அல்லதேல்
எண்டரு முகம்பல இடருண் மூழ்கலின்
மண்டுதொல் பழியற வலிது துஞ்சுமால்
உண்டநல் லமுதினுல் அவையொ ழிந்துளான். 6

தணிப்பரும் வெஞ்சினத் தருவர் மன்னவன்
பணிப்படு சிறைக்களம் பட்டுத் தம்முடல்
துணிப்புறு வோரெனத் துயர்கொண் டோர்கணங்
கணிப்பரு முகங்களாக் கழித்து வைகுவான். 7

தேவியல் மரகதந் தெளித்துத் தீட்டிய
ஓவிய உருவமா சுண்ட தன்மையான்
ஆவியம் புனலுறு தமருங் காவியம்
பூவியல் மென்றொடை புலர்ந்த தேயனுன். 8

வியனுகம் நூறுடன் மிக்க வெட்டினுள்
இயலுறு சிறுவரை எனினுந் துஞ்சுமேல்
மயல்சிறி தகலுமால் மரபின் வைகலுந்
துயில்கிலன் ஆதலால் அருத துன்பினுன். 9

நெஞ்சழி துன்பிடை நீட வைகலில்
துஞ்சலன் வலிதுயிர் துறப்பு மாற்றலன்
எஞ்சுமோ ரிறைவரை இமையுங் கூட்டலன்
விஞ்சிய தவந்துயர் விளைக்கு மாங்கொலோ. 10

நலங்கிளா தனவனப பிழநது நாமடாறுஞ
சலங்கெழும் அவுணர்கள் தமைக்கண் டஞ்சியே
கலங்கினன் உய்வகை யாதுங் காண்கிலான். 11

சுந்தர மரகதத் தனது தொல்லுரு
வெந்துயர் உழத்தலின் வெய்து யிர்ப்பென
வந்தெழு புகைபட மறைந்து கட்புனல்
சிந்திட உடனுடன் நிகழத் தோன்றுமால். 12

முழுதுறு தன்றுயர் முன்னி முன்னியே
இழுதையர் அவுணரும் இரங்க ஏங்குறு
அழுதிடுங் காப்பினோர் அச்சஞ் செய்தலும்
பழுதுகொல் என்றுவாய் பொத்தும் பாணியால். 13

இந்திரன் சசியொடும் இருந்த சூழல்போய்த்
தந்தனர் பற்றினர் தமரெ னச்சிலர்
முந்துறு காவலோர் மொழிந்த பொய்யுரை
அந்தம தடையுமுன் அயர்ந்து வீழுமே. 14

ஐந்தரு நீழலை நினைக்கும் ஆய்மலர்
தந்தமென் பள்ளியை உன்னும் தானெனப்
புந்திகொள் மங்கையர் புணர்ப்பை யுட்கொளும்
இந்திரப் பெருவளம் எண்ணிச் சோருமே. 15

தன்னிணை இல்லதோர் தருவின் நீழலுள்
நன்னலந் துய்த்தியாம் நாளும் இன்புறும்
பொன்னகர் பூழியாய்ப் போங்கொ லோவெனா
உன்னிடுந் தொன்மைபோல் உறுவ தென்றெனும். 16

ஈண்டையில் அவுணர்கோன் ஏவத் தானைகள்
சேண்டொடர் துறக்கமேற் செல்ல நாடியே
காண்டகு தம்முருக் கரந்து போயினோர்
யாண்டைய ரோவெமை ஈன்று ளாரெனும். 17

ஏயின துறக்கநா டிழிந்து தொல்லைநாள்
தாயொடு பயந்துள தந்தை பாரகம்
போயினன் எனச்சிலர் புகலக் கேட்டனன்
ஆயிடைப் புகுந்தன அறிகி லேனெனும். 18

அண்டாகள ஒருசிலா அயாவு கூறவுட்
கொண்டனர் ஏகினர் குறுகி எந்தையைக்

கண்டன ரேகொலோ கரந்துளார் கொலோ
விண்டன ரேகொலோ விளைவெ ேனுவெனும். 19

சீகரம் மிக்கசூர் செயிர்த்துச் செய்திடும்
ஆகுல முழுவதும் அறைய அம்மையோர்
பாகம துடையநம் பரமன் மால்வரைக்
கேகின னேகொலோ எந்தை யென்றிடும். 20

பொருந்தலர் கண்ணுறுப் பொருட்டுத் தம்முருக்
கரந்தன ரோவழீஇக் குரவர் கள்வர்பால்
பொருந்தின ரேகொலோ புவனம் எங்குமாய்த்
திரிந்தன ரேகொலோ தெளிகி லேனெனும். 21

மாண்கிளர் சூரபன் மாவின் ஏவலால்
ஏண்கிளர் அவுணர்கள் யாயைத் தந்தையை
நாண்கொடு பிணித்திவண் நல்கப் போயினூர்
காண்கில ரேகொலோ கரந்த வாறெனும். 22

அன்புடை யம்மனே அத்தன் ஈங்கிவர்
வன்புடை அவுணர்கள் வரவு காண்பரேல்
துன்புடை மனத்தராய் துளங்கி ஏங்கியே
என்படு வார்கொலோ அறிகி லேனெனும். 23

பொன்னகர் கரிந்ததும் புதல்வ னுகுமென்
றன்னையிம் முதுநகர்த் தந்து தானவர்
துன்னருஞ் சிறையிடு துயருங் கேட்டபின்
என்னினைந் திரங்குமோ ஈன்ற தாயெனும், 24

பன்னெடு மாயைகள் பயின்ற தானவர்
அன்னையொ டத்தனை ஆய்ந்து பற்றியென்
முன்னுறக் காண்டகு முறையின் உய்ப்பினும்
என்னுயிர் பின்னரும் இருக்குங் கொல்லெனும். 25

ஆற்றருஞ் செல்லலுள் அழுந்தும் பான்மையான்
மேற்றிகழ் பரஞ்சுடர் விமலற் போற்றியே
நோற்றனர் முத்தியின் நுழைகுற் றூர்கொலோ
பேற்றினர் இருந்தசொற் பிறந்த தில்லெனும். 26

தீங்கதிர்ப் பகையொடு செருமு யன்றநாள்
தாங்கியெற் கொண்டுழித் தந்தம் இற்றிட
ஆங்கனம் வீழ்ந்ததால் அதற்கு மேற்பட
யாங்குசென் றதுகொலோ யானை என்றிடும். 27

பிறப்புறு வைகலைத் தொட்டுப் பின்னரே
இறப்புறு நாள்வரை யாவர்க் காயினும்
உறப்படு துய்ப்பெலாம் ஊழின் ஊற்றமால்
வெறுப்பதென் அவுணரை வினையி னேனெனும். 28

தாவறு தொன்னகர் விளியத் தந்தைதாய்
ஆவியொ டிரிந்திட அளிய ஞோர்மகன்
வீவருஞ் சிறைப்பட மேலை நாட்புரி
தீவினை யாவதோ தெளிகி லேனெனும். 29

துப்புறழ் சடையினுன் சூரற் கீறிலா
அப்பெரு வரத்தினை அளித்த லாலவன்
மெய்ப்பட விளிகிலன் வீடுஞ் செய்கிலன்
எப்பொழு திச்சிறை தீரும் என்றிடும். 30

மட்டறு வெறுக்கையும் நகரும் வாழ்க்கையும்
விட்டனர் கடந்தனர் மேலை யோரென
உட்டெளிந் தகன்றிலன் உவர்பி ணித்திடப்
பட்டன னேகொலோ பாவி யேனெனும். 31

மாற்றலன் இவ்வுயிர் வசையு முவகை
போற்றலன் குரவர்பாற் புகுந்த புன்கணைத்
தேற்றலன் தமியனுந் தெளிகி லன்சிறை
ஆற்றலன் ஆற்ற லனைய கோவெனும். 32

துறந்ததோ பேரறந் தொலையுந் தீம்பவஞ்
சிறந்ததோ மாதவப் பயனுந் தேய்ந்ததோ
குறைந்ததோ நன்னெறி கூடிற் றேகலி
இறந்ததோ மறைசிவன் இல்லை யோவெனும். 33

கூடலர் வருத்தலிற் குரவர் தங்களைத்
தேடினர் விரைவுடன் சென்ற தேவர்போல்
ஓடினர் புகாவகை ஒழிந்து ளோரையும்
வீடருஞ் சிறையிடை வீட்டி னேனெனும். 34

அந்தியின் மறைமொழி அயர்த்து வைகினன்
சந்தியில் வினைகளுந் தழலும் ஓம்பலன்
எந்தையை வழிபடும் இயல்பு நீங்கினன்
முந்தையின் உணர்ச்சியும் முடிந்து ளேனெனும். 35

மெய்யுயிர் அகன்றிட விளிகி லேன்எனின்
எய்யுறும் அலக்கண்நீத் தினிது மேவலன்
வையுறு நெடும்புரி வடிவம் வெந்தெனப்
பொய்யுடல் சுமந்தனன் புலம்புற் றேனெனும். 36

சொல்லுவ தென்பிற தொல்லை வைகலின்
மெல்லென ஆற்றிய வினையின் பான்மையால்
அல்லுறழ் மிடற்றின்எம் மடிக ளேயெமக்
கெல்லையில் இத்துயர் இயற்றி னுனெனும். 37

ஆவியும் உலகமும் அனைத்து மாகியும்
ஓவியுங் கருணையின் உருக்கொண் டாடல்செய்

தேவர்கள் தேவனுஞ் சிவன்மற் றல்லதை
ஏவரென் குறையுணர்ந் திரங்கு வாரெனும். 38

பெறலருந் திருவெலாம் பிழைத்துச் சூருயிர்
அறுவதும் அவுணர்கள் அவிந்து மாய்வதுஞ்
சிறையிது கழிவதுந் தீர்கி லாவசை
இறுவதும் ஒருபகல் எய்து மோவெனும். 39

நூறொடர் கேள்வியோர் நுணங்கு சிந்தைசேர்
கூறுடை மதிமுடிக் குழகன் தன்னருட்
பேறுடை யேனெனிற் பெருந்து யர்க்கடல்
ஏறுவன் வினையினேற் கில்லை கொல்லெனும். 40

இத்திறம் அளப்பில எண்ணி யெண்ணியே
மெய்த்துயர் உழந்துவெய் துயிர்த்து விம்மியே
அத்தலை சுற்றிய அமரர் யாவருந்
தத்தமில் இரங்குறச் **சயந்தன்** வைகினான். 41

கண்டகன் உதாவகன் கராளன் மாபலன்
சண்டகன் இசங்கனே சங்க னாதியா
எண்டகும் அவுணர்கள் எண்ணி லோர்குழீஇக்
கொண்டனர் சிறைக்களங் குறுகி ஓம்பினார். 42

ஆயதோர் காப்பினோர் அறுமு கத்தனி
நாயகன் தூதுவன் நணுகு மப்பகல்
ஏயுறு சயந்தனை இமைப்பி லாரொடு
காயெரி யாமெனக் கனன்று சுற்றினார். 43

வேறு

மன்னா நங்கோன் தன்பணி நில்லா மகவேந்தும்
மின்னா டானும் யாண்டுறு கின்றார் விரைவாகிச்
சொன்னால் உய்வீர் அல்லதும் மாவி தொலைவிப்பேம்
முன்னா ளேபோல் எண்ணலிர் உண்மை மொழிகென்றார். 44

என்னுங் காலைக் கேட்ட சயந்தன் எம்மாயும்
மன்னும் வானின் றோடின கண்டாம் மற்றன்னோர்
பின்னங் குற்ற தன்மையும் ஓராம் பிணிநோயுள்
துன்னுந் தீயேம் யாவ துரைத்துஞ் சூழ்ந்தென்றான். 45

விண்டோய் மன்னன் முன்னொரு நாள்மெல் வியல்தன்னைக்
கொண்டே போனான் இன்னுழி யென்று குறிக்கொள்ளேங்
கண்டோம் அல்லங் கேட்டிலம் உள்ளங் கழிவெய்தப்
புண்டோய் கின்றோம் என்சொல்வ தென்றார் புலவோர்கள். 46

சொற்றார் இவ்வா றன்னது போழ்தில் துணிவெய்தி
உற்றார் போலும் இங்கிவர் எல்லாம் உளமொன்றி
எற்றால் உண்மை ஓதுவர் இன்னோ ரெனவெண்ணாச்
செற்றா ராகுங் காவலர் துன்பஞ் செய்கின்றார். 47

வென்னஞ் சென்னக் காயெரி யென்ன மிகுதீஞ்சொல்
முன்னஞ் சொற்றே றவைவர் தெழிப்பர் முரணோடுங்
கன்னஞ் செல்லத் தோமரம் உய்ப்பர் கடைகிற்பார்
சின்னஞ் செய்வார் போலுடன் முற்றுஞ் சேதிப்பார். 48

கண்டந் துண்டஞ் செய்திடும் அங்கம் கடிதொன்றிப்
பிண்டந் தன்னிற் கூட வெருண்டே பேராற்றல்
கொண்டங் கையால் வாள்கொடு மார்பங் குடைகிற்பார்
தண்டந் தன்னுன் மோதுவர் அன்னோர் தலைகீற. 49

இத்தன் மைத்தாக் காவலர் யாரும் எண்ணில்லா
மெய்த்துன் பத்தைச் செய்திட மைந்தன் விண்ணோர்தங்
கொத்துந் தானும் ஆற்றல னாகிக் குலைவெய்தி
நித்தன் றன்னை உன்னி அரற்றா நிற்கின்றான். 50

சீற்றத் துப்போர் பல்படை கொண்டே செறுபோழ்து
மாற்றத் துன்பம் பட்டத லான்மெய் யழிவாகி
ஈற்றுத் தன்மை சேர்ந்திலன் விண்ணோர் இறைமைந்தன்
கூற்றிற் பட்டுச் செல்லல் உழக்குங் கொடியோர்போல். 51

நெஞ்சினில் வாலறி வெய்தினர் ஐம்புல நெறிநின்றும்
எஞ்சிய மேல்வினை பெற்றில தேயென இறும்வண்ணம்
தஞ்செயல் வெய்யோர் செய்யவும் மைந்தன் தமரோடும்
துஞ்சிலன் ஊறும் பெற்றிலன் உற்றான் துயரொன்றே. 52

மாடே சூழ்வார் தம்மொடு மைந்தன் சிறைபுக்கான்
காடே போனுன் இந்திரன் ஏனோர் கவலுற்றார்
பாடே விண்ணோர் தம்பதம் முக்கட் பரன்நல்கும்
வீடே அல்லால் துன்பறும் ஆக்கம் வேறுண்டோ. 53

அந்தா வாளந் தோமரம் எஃகம் அடுதண்டம்
முந்தா வுற்ற பல்படை யாவும் முரிவெய்தச்
செந்தார் மார்பிற் காவலர் கையுந் திறலெஞ்ச
நொந்தார் இன்னு செய்வது நீத்தார் நுவல்கின்றார். 54

வீவார் பின்னுள் அல்லது வேறார் வினையத்தால்
சாவார் எஞ்சார் பேரமிர் துண்டார் தவமிக்கார்
நோவார் நாமிங் காற்றிய பாலான் நோய்நொந்தும்
ஆவா யாதுஞ் சொற்றிலர் என்றற் புதமுற்றார். 55

இன்னோர் யாரும் மைந்தனை வானோர் இனமோடு
மெய்ந்நோ வாகும் பாங்கின் அலைத்த வினையாலே
கைந்நோ வெய்தி வன்மையும் நீங்கிக் கவலுற்றார்
முன்னோர் தம்பாற் செய்த துடன்சூழ் முறையேபோல். 56

வேறு

அத்தலைய காவல் அவுணர் அவர்க்கணித்தாய்
மொய்த்தெர்ருசார் ஈண்டி முறைநீங் கலர்காப்ப

எய்த்த அமரருடன் இந்திரன்சேய் பண்ணவருள்
உத்தமனுங் கண்ணுதலை உன்னிப் புலம்புறுவான். 57

வந்திப்பவர் பவங்கள் மாற்றுவோய் எத்தேவர்
சிந்தைக்கும் எட்டாச் சிவனே செழுஞ்சுடரே
இந்தப் பிறவி இடருழப்பச் செய்தனையோ
வந்தித்த நின்புணர்ப்பை யாரே கடந்தாரே. 58

கைந்நாகத் துக்குங் கயவாய்க்கும் நாரைக்கும்
பைந்நாகத் துக்கும் படருஞ் சிலந்திக்கும்
பின்னாகிய வுயிர்க்கும் பேரருள்முன் செய்தனையால்
என்னாயகனே எமக்கேன் அருளாயே. 59

கங்கை முடித்தாய் கறைமிடற்றாய் கண்ணுதலாய்
திங்கள் புனைந்தாய் சிவனே சிவனேயென்
றிங்கு நினதடியேம் எல்லேங் களும்அரற்றல்
நங்க ளுயிர்க்குயிராம் நாயகநீ கேட்டிலையோ. 60

பாசங்கொண் டாவி பலவும் பிணிப்போனும்
நேசங்கொண் டாங்கதனை நீக்கியருள் செய்வோனும்
ஈசன் சிவனென் றியம்புமறை நீயிழைத்த
ஆசொன்றும் இத்தீமை ஆர்தவிர்க்க வல்லாரே. 61

நரரா யணனும்அந்த நான்முகனும் நாடரிய
பேராதி யான பெருமான் உயிர்க்கெல்லாம்
ஆராயின் நீயன்றி யாரே துணையாவார்
வாராய் தமியேன் உயிரளிக்க வாராயே. 62

சீற்றம் விளைத்துமுனந் தேவர் தொகைஅலைப்பான்
கூற்ற மெனவே குறுகுற்ற அந்தகனும்
ஆற்றல் இழப்பஅகல் மார்பில் முத்தலைவேல்
ஏற்றியவன் நீயன்றோ எமக்கேன் இரங்கலையே. 63

ஏங்கி அமரர் இரிந்தோட வேதுரந்த
ஓங்கு சூரண்டத் துருக்கொண்ட தானவனைத்
தீங்கு பெறத்தடிந்து சின்னமா ஓர்சிறையை
வாங்கி அணிந்தஅருள் இங்கென்பால் வைத்திலையே. 64

ஞாலத் தினையளித்த நான்முகனும் நின்றவற்றைப்
பாலித் தவனும் பிறரும் பணிந்திரங்க
ஓலக் கடலுள் உலகந் தொலைப்ப வந்த
ஆலத்தை உண்டஅருள் என்பால் அயர்த்தனையோ.

மோடி தரவந்த முக்க ணுடைக்காளி
ஓடி உலகுயிர்கள் உண்ணும் படியெழலும்
நாடி யவள்வெருவி நாணிச் செருக்ககல
ஆடி யருள்செய்த அருளிங் கணுகாதோ. 66

பொற்றைக் கயிலைப் புகல்புக்க தேவர்தமைச்
செற்றத் துடனடவே சென்ற சலந்தரனை
ஒற்றைத் திகிரிப் படையால் உடல்பிளந்தே
அற்றைப் பகல்அவரை அஞ்சலென்றாய் நீயன்றோ. 67

நந்துற்ற கங்கை நதிசெறியுங் காசிதனில்
தந்திக் கொடியோன் தவத்தோர் தமைத்துரந்து
வந்துற் றிடச்சினவி வன்தோ லினையுரித்த
அந்தக் கருணைக் களியரேம் பற்றிலமோ. 68

ஈரஞ்சு சென்னி இருபான் புயங்கொண்டோர்
ஓரஞ் சரக்கர் உலகலைப்ப அன்னவரை
வீரஞ்செய் தட்ட விமல எமைஅவுணர்
கோரஞ்செய் கின்ற கொடுந்தொழிலுட் கொள்ளாயோ. 69

பண்டை மகவான் பரிசுணராத் தக்கனைப்போல்
அண்டர்பிரான் நின்னை அறியாதோர் வேள்விசெயத்
துண்டமது செய்து சுரரையவன் தோள்முரித்தாய்
தண்ட மதனையின்று தானவர்பாற் காட்டாயோ. 70

சிந்தப் புரங்கொடிய தீயவுணர் மூவகைத்தாம்
அந்தப் புரங்கள் அடல்செய்தாய் எம்பெருமான்
சந்தப் புரங்கொண்ட தானவரோ டொன்றாகும்
இந்தப் புரமும் எரிக்குதவ ஒண்ணாதோ. 71

அன்பான் அவருக் கருளுதியாற் பத்திநெறி
என்பால் இலையால் இறையும் எவனளித்தி
நன்பால் மதிமிலைச்சு நாயகனே நல்லருள்கூர்
உன்பால் மிகநொந்தே ஓதியதென் பேதைமையே. 72

ஆனாலுந் தீயேன் அழுங்க அருள்கொடுநீ
தானாக நண்ணித் தலையளிசெய் தாண்டாயேல்
ஆனாத இத்துயரம் ஆறுமே ஆறியக்கால்
மேனாள் எனயான் துறக்கவளன் வேண்டிலனே. 73

வென்றி அரக்கரால் மேதகைய தானவரால்
அன்றி முனிவரால் அண்டரால் ஏனையரால்
ஒன்று செயவொன்றாய் உறுதுயரத் தாழ்ந்ததன்றி
என்று மகிழ்வாய் இடரற் றிருந்தனமே. 74

கீற்று மதியுங் கிளர்வெம் பொறியரவும்
ஆற்றி னெடுமிலைந்த ஆதியே நின்னருளால்
ஏற்ற மிகும்அலக்கண் ஏகின் இழிந்தவளம்
போற்று கிலன்நோற்றல் புரிவேன் புரிவேனே. 75

தண்டேன் துளிக்குந் தருநிழற்கீழ் வாழ்க்கைவெஃகிக்
கொண்டேன் பெருந்துயரம் வான்பதமுங் கோதென்றே

கண்டேன் பிறர்தம் பதத்தொலேவுங் கண்டனுல்
தொண்டேன் சிவனே நின் தொல்பதமே வேண்டுவனே. 76

அல்லற் பிறவி அலமலம்விண் ணுடுறைந்து
தொல்லேத் திருநுகருந் துன்பும் அலமலமால்
தில்லேத் திருநடஞ்செய் தேவே இனித்தமியேற்
கொல்லேத் துயர்தீர்த் துனதுபதந் தந்தருளே. 77

ஒன்ருய் இருதிறமாய் ஒரைந்தாய் ஐயைந்தாய்
அன்ரு தியின்மீட்டும் ஐந்தாய் அளப்பிலவாய்
நின்ருய் சிவனேயிந் நீர்மையெலாந் நீங்ககற்றி
நன்ரு விகட்கு நலம்புரிதற் கேயன்ரே. 78

பொன்பொலியுங் கொன்றைப் புரிசடையாய் இவ்வழிசேர்
துன்ப மகற்றித் துறக்கத்துள் தாழாது
பின்பு நனிநோற்றுப் பெறற்கரிதாம் நின்னடிக்கீழ்
இன்பம் ஒருதலேயா எய்தவரு ளாய்எனக்கே. 79

வேறு

என்று பற்பல இரங்கியே விடஞ்செறிந் தென்னச்
சென்று சென்றிடர் மூடுரு உணர்வெலாஞ் சிதைப்ப
ஒன்றும் ஓர்கிலன் மயங்கினன் உயிர்கரந் துலேயப்
பொன்றி ஞர்களின் மறிந்தனன் இந்திரன் புதல்வன். 80

ஆங்க வன்றனேப் போலவே அமரரும் அழுங்கி
ஏங்கி ஆருயிர் பதைத்திட வீழ்ந்துணர் விழந்தார்
தூங்கு வீழுறு பழுமரஞ் சாய்தலுந் தொடர்ந்து
பாங்கர் சுற்றிய வல்லிகள் தியங்கிவீழ் பரிசின். 81

ஆகத் திருவிருத்தம்–417.

# 10. சயந்தன் கனவுகாண் படலம்

விண்ணு ளார்களுஞ் சயந்தனும் வியன்மகேந் திரத்தின்
உண்ணி லாம்பெருந் துயருடன் மாழ்கிய துணர்ந்தான்
எண்ணி லாவுயிர் தோறுமுற் றின்னருள் புரியும்
அண்ண லார்கும ரேசனும் அறுமுகத் தமலன். 1

வெஞ்சி றைத்தலே மூழ்கியே அவுணரால் மெலிந்து
நெஞ்ச ழிந்திடும் அவர்தமை அருள்வது நினேந்தான்
தஞ்ச மின்றியே தனித்தயர் சிறுவரைத் தழுவி
அஞ்ச லென்றுபோற் றிடவரும் ஈன்றயாய் அனேயான். 2

இனிய சீறடிக் குமரனிற் செந்திவந் திமையோர்
வினைகொள் கம்பலை அகற்றுவான் இருந்திடும் விமலன்
தனது ணர்ச்சியின் றாகியே அவசமாஞ் சயந்தன்
கனவின் முன்னுற வந்தனன் அருள்புரி கருத்தால். 3

**வீறு கேதனம் வச்சிரம் அங்குசம் விசிகம்**
**மாறி லாதவேல் அபயமே வலமிடம் வரதம்**
**ஏறு பங்கயம் மணிமழுத் தண்டுளில் இசைந்த**
**ஆறி ரண்டுகை அறுமுகங் கொண்டுவேள் அடைந்தான்.** 4

தந்தை யில்லதோர் பரமனைத் தாதையா வுடைய
கந்தன் ஏகியே அனையதன் னுருவினைக் காட்ட
இந்தி ரன்மகன் உளப்படும் யாக்கையுள் இருந்த
முந்து கண்களாற் கண்டனன் தொழுதனன் மொழிவான். 5

தொண்ட னேன்படும் இடுக்கணை நாடியே தொலைப்பான்
கொண்ட பேரருள் நீர்மையிற் போந்தனை குறிக்கின்
விண்டும் அல்லைஅப் பிரமனும் அல்லைமே லாகும்
அண்டர் நாதனும் அல்லைநீ ஏவர்மற் றருளே. 6

என்ற காலையில் அறுமுகப் பண்ணவன் யாம்அக்
கொன்றை வேணியின் மிலைச்சிய பரஞ்சிடர் குமரன்
உன்றன் அல்லலும் இரக்கமும் மையலும் உணர்ந்து
சென்ற னம்மெனக் கூறியே பின்னருஞ் செப்பும். 7

நுந்தை தன்குறை நுங்குறை யாவையும் நுவன்று
வந்து நந்தமை வேண்டலும் வரம்பில்சே னையொடும்
இந்த ஞாலத்தின் எய்தியே கிரவுஞ்சம் என்னும்
அந்த வெற்பையுந் தாரகன் தன்னையும் அட்டாம். 8

அனைய வன்றனை அட்டபின் செந்திவந் தமர்ந்தாம்
வனச மீமிசை இருந்திடு பிரமனும் மாலும்
உனது தாதையும் அமரரும் நம்வயின் உறைந்தார்
இனையல் வாழிகேள் நுங்கையும் மேருவின் இருந்தாள். 9

வீர வாகுவாந் தூதனை யாமிவண் விடுத்தேஞ்
சூரன் மைந்தன்அங் கொருவனைப் பலரொடுந் தொலையா
நேரி லாதஇக் கடிநகர் அழித்து நீறுக்கிப்
பாரின் மாலையின் மீண்டிடப் புரிதுமிப் பகலின். 10

செல்லும் இப்பகல் கழிந்தபின் நாளையே செந்தி
மல்ல லம்பதி நீங்கிஇந் நகர்க்கயல் வைகிச்
சொல்லும் ஐந்திரு வைகலின் அவுணர்தந் தொகையும்
அல்லல் ஆற்றிய சூரனும் முடிந்திட அடுதும். 11

அட்ட பின்னரே நின்னைவா னவருடன் அவுணன்
இட்ட வெஞ்சிறை நீக்கிநுந் திருவெலாம் ஈதும்.

விட்டி டிங்குன தாகுலம் என்றனன் வினைதீர்ந்
துட்டெ ளிந்தவர் போதத்தின் உணர்வுமாய் உறைவோன். 12

ஐயன் ஈங்கிவை உரைத்தவை கேட்டலும் அகத்துள்
மையல் மாசிருள் அகன்றன புகுந்தன மகிழ்ச்சி
மெய்யு ரோமங்கள் சிலிர்த்தன உகுத்தன விழிநீர்
சைய மேயென நிமிர்ந்தன சயந்தன தடந்தோள். 13

பற்றி னல்வரும் அமிர்தினை எளிதுறப் படைத்துத்
துற்று ளோரெனத் தண்ணெனத் தனதுமெய் சுருதி
கற்ற கற்றன பாடினன் ஆடினன் களித்தான்
மற்ற வன்பெறும் உவகையின் பெருமையார் வகுப்பார். 14

வேறு

நிகழ்ந்திடு மறவியை நீங்கி இவ்வகை
மகிழ்ந்திடும் இந்திரன் மதலை எம்பிரான்
திகழ்ந்திடு பதமலர் சென்றி றைஞ்சியே
புகழ்ந்தனன் இனையன புகல்வ தாயினன். 15

நொய்யசீர் அடியரேம் நோவு மாற்றியே
ஐயநீ வலிதுவந் தளித்தி யானுரை
செய்வதும் உண்டுகொல் சிறிது நின்கணே
கையடை புகுந்தனங் காத்தி யாலென்றான். 16

சயந்தன்மற் றிவ்வகை சாற்ற யாரினும்
உயர்ந்திடு பரஞ்சுடர் ஒருவன் கேட்குறு
அயர்ந்தநுங் குறையற அளித்துந் திண்ணமென்
றியைந்திட மேலுமொன் றிசைத்தல் மேயினான். 17

இங்கெமர் குறுகயாம் ஏய தூதுவன்
நின்னையுஞ் சுரரையும் நேர்ந்து கண்ணுறீஇ
நன்னயங் கூறியே நடப்ப உய்க்குதும்
அன்னதுங் காண்கென அருளிப் போயினன். 18

படைப்புறு தயர்ந்திடு பங்க யன்கனு
அடுத்துனக் கருள்செய ஆறு டைவரை
விடுத்துமென் றேகிய விமலன் போலவே
இடர்ப்படு சயந்தன்முன் இவைசொற் றேகினன். 19

ஏகிய காலையின் இறந்து முன்னரே
போகிய புலமெலாம் பொறியில் தோன்றலும்
ஆகிய கனவினை அகன்று பைப்பய
நாகர்கோன் திருமகன் நனவின் நண்ணினன். 20

வேறு

தந்தி நஞ்சந் தலைக்கொளச் சாய்ந்தவர்
மந்தி ரத்தவர் வாய்மைவந் துற்றுழிச்

சிந்தை மையலைத் தீர்ந்தெழு மாறுபோல்[1]
இந்தி ரன்தன் மதலை எழுந்தனன். 21

நனவு தன்னிடை நண்ணிய சீர்மகன்
கனவின் எல்லையிற் கண்டன யாவையும்
நினைவு தோன்றினன் நெஞ்சங் குளிர்ந்துநம்
வினையெ லாமிவண் வீடிய வோவென்றான். 22

கவலை தூங்கிக் கடுந்துயர் நீரதாய்
அவல மாகிய ஆழியில் ஆழ்ந்துளான்
சிவகு மாரன் திருவருள் உன்னியே
உவகை யென்னும் ஒலிகடல் மூழ்கினான். 23

அனைய காலை அயர்ந்திடு வானுளோர்
கனவு தோறுங் கடிதுசென் றிந்திரன்
தனய னுக்குமுன் சாற்றிய வாறுசொற்
றினைய வீரென ஏகினன் எம்பிரான். 24

அம்மென் கொன்றை அணிமுடிக் கொண்டவன்
செம்ம லேகலுந் தேவர்க ளுவொரீஇ
விம்மி தத்தின் விழித்தெழுந் தேயிரீஇத்
தம்மி லோர்ந்து தவமகிழ் வெய்தினார். 25

சில்லை வெம்மொழித் தீயவர் கேட்பரேல்
அல்லல் செய்வரென் றஞ்சிக் கரந்திறம்
மல்லன் மைந்தன் மருங்குறு வார்சிலர்
மெல்ல அங்கவன் கேட்க விளம்பினார். 26

வேறு

அண்டர்கள் மொழிதரும் அற்பு தத்தையுட்
கொண்டனன் அங்கவை குமரன் முன்முனங்
கண்டது போன்றிடக் களித்துப் பாரெலாம்
உண்டவ னுமென உடலம் விம்மினான். 27

அறுமுக முடையதோர் ஆதி நாயகன்
இறைதரும் உலகெலாம் நீங்கல் இன்றியே
உறைவதுங் கருணைசெய் திறனும் உன்னியே
மறைமுறை அவனடி வழுத்தி வைகினான். 28

ஆகத் திருவிருத்தம் - 445.

1 மந்திரத்தவர்............தீர்ந்தெழுமாறுபோல் - மந்திரம் அறிந்தவர்களது சத்தியம் வந்து பொருந்திய உடனே விஷ மயக்கம் நீங்கி எழுந்தன்மை போல. வந்துற்றுழி - கேட்டவுடனே எனினுமாம்.

# 11. வீரவாகு சயந்தனைத் தேற்று படலம்

—oo—

இத்திறம் அமரரொ டிந்தி ரன்மகன்
அத்தலை இருத்தலும் அனையர் யாவரும்
மொய்த்திடு சிறையக முன்கண் டானரோ
வித்தக அறிவனும் வீர வாகுவே. 1

வே று

மாகண்டம் ஒன்பான் புகழுந் திறல்வாகு அங்கண்
ஆகண்டலன் மைந்தனை விண்ணவ ராயி னுரைக்
காய்கண்ட கராமவு ணத்தொகை காத்தல் கண்டான்
பேய்கண்ட செல்வந் தனைக்காத் திடும்பெற்றி யேபோல். 2

கண்ணோடு லின்றித் துயர்வேலியிற் காவல் கொண்ட
எண்ணோர் எனைக்கண் டிலராயுணர் வின்றி மாழ்க
விண்ணோர்கள் காணத் தமியேன் செலவேண்டு மென்றான்
மண்ணோர் அடியால் அளக்குந்தனி மாயன் ஒப்பான். 3

ஓங்கார மூலப் பொருளாய் உயிர்தோறு மென்றும்
நீங்கா தமருங் குமரேசனை நெஞ்சில் உன்னி
யாங்காகுவ தோரவன் மந்திரம் அன்பி னோதித்
தீங்கா மவுணர் செறிகாப்பகஞ் சென்று புக்கான். 4

தாமந்தரும் மொய்ம்புடை வீரன் சயந்தன் விண்ணோர்
ஏமந்தரு வன்சிறைச் சூழலுள் ஏக லோடுந்
தூமந்திகழ் மெய்யுடைக் காவலர் துப்பு நீங்கி
மாமந் திரமாம் வலைப்பட்டு மயங்கல் உற்றார். 5

எண்டா னவரிற் புடைகாப்பவர் யாரும் மையல்
கொண்டார் குயிற்றப் படுமோவியக் கொள்கை மேவத்
தண்டார் அயில்வேற் படைநாயகன் தானை வேந்தைக்
கண்டார் சயந்த னொடுதேவர் கருத லுற்றார். 6

ஏமாந் தவுணர் சிறுகாலையின் இன்னல் செய்ய
நாமாண் டனர்போல் அவசத்தின் அணுகு மெல்லை
மாமாண் படைய அருள்செய்தநம் வள்ளல் தூதன்
ஆமாம் இவனென் றகங்கொண்டனர் ஆர்வ முற்றார். 7

அன்னார் அமருங் களஞ்சென் றயிலேந்து நம்பி
நன்னா யகமாந் திருநாமம் நவின்று போற்றிப்
பொன்னா டிறைகூர் திருநீங்கிய புங்க வன்றன்
முன்னா அணுகி இருந்தான்அடல் மொய்ம்பின் மேலோன். 8

செறிகின்ற ஞானத் தனிநாயகச் செம்மல் நாமம்
எறிகின்ற வேலை அமுதிற்செவி ஏக லோடும்

மறிகின்ற துன்பிற் சயந்தன் மகிழ்வெய்தி முன்னர்
அறிகின்றி லன்போல் தொழுதின்ன அறைத லுற்றான். 9

தாவம் பிணித்த தெனுங்குஞ்சித் தகுவ ரானோர்
பாவந் தலைச்சூழ் வதுபோலெமைப் பாடு காப்ப
மாவெம் படரில் இருந்தேங்கண் மருங்கின் ஐய
நீவந்த தென்னை இனிதிங்கு நிகழ்த்து கென்றான். 10

வேறு

முறையுணர் கேள்வி வீரன் மொழிகுவான் முதல்வன் தந்த
அறுமுக ஐயன் தன்பின் அடுத்துளேன் அவன்தூ தானேன்
விறல்கெழு நந்தி பாலேன் வீரவா கென்பேர் நுங்கள்
சிறைவிடும் பொருட்டுச் சூர்முன் செப்புவான் வந்தேன் என்றான் 11

என்னலும் அமர ரோடும் இந்திரன் குமரன் கேளாச்
சென்னியின் அமிர்துள் ளூறல் செய்தவத் தயின்ற மேலோர்
அன்னதற் பின்னர் நேமி அமிர்தமும் பெற்றுண் டாங்கு
முன்னுறு மகிழ்ச்சி மேலும் முடிவிலா மகிழ்ச்சி வைத்தான். 12

அந்தர முதல்வன் மைந்தன் அறைகுவான் ஐய துன்பூர்
புந்தியேங் குறைவி னாதற் பொருட்டினாற் போந்தாய் அற்றால்
இந்தவன் சிறையும் நீங்கிற் றிடரெலாம் அகன்றி யாங்கள்
உய்ந்தனம் பவங்கள் தீரும் ஊதியம் படைத்து மென்றான். 13

பூண்டஞ் தடந்தோள் வீரன் புகலுவான் சூர்மேல் ஒற்றா
ஈண்டெனை விடுத்த வேற்கை எம்பிரான் வலிதே நும்மை
ஆண்டிடு கின்றான் முன்னர் ஆக்கமும் பெறுதிர் பின்னும்
வேண்டிய தெய்து கின்றீர் என்றனன் மேலுஞ் சொல்வான். 14

உலமெலாங் கடந்த தோளீர் உன்னுதிர் உன்னி யாங்கு
நலமெலாம் வழிபட் டோர்க்கு நல்கிய குமரன் தன்னால்
தலமெலாம் படைத்த தொல்லைச் சதுர்முகன் முதலாம் வானோர்
குலமெலாம் உய்ந்த தென்றால் உமக்கொரு குறையுண் டாமோ. 15

தேவர்கள் தேவன் வேண்டச் சிறைவிடுத் தயனைக் காத்த
மூவிரு முகத்து வள்ளல் முழுதருள் செய்தா னும்பால்
பாவமும் பழியுந் தீங்கும் பையுளும் பிறவு மெல்லாம்
போவது பொருளோ தோற்றப் புணரியும் பிழைத்தீர் அன்றே. 16

சீர்செய்த கமலத் தோனைச் சிறைசெய்து விசும்பி னோடும்
பார்செய்த வுயிர்கள்செய்த பரஞ்சுடர் நும்மை யெல்லாஞ்
சூர்செய்த சிறையின் நீக்கத் தொடர்ந்திவண் உற்றான் என்றால்
நீர்செய்த தவத்தை யாரே செய்தனர் நெடிது காலம். 17

சங்கையில் பவங்கள் ஆற்றுந் தானவர் செறிந்த மூதூர்
இங்கிதின் அறிஞர் செல்லார் எம்பிரான் அருளி னால்யான்
அங்கணம் படர்வோர் என்ன அகமெலிந் துற்றேன் ஈண்டே
உங்களை யெதிர்த லாலே உலப்பிலா உவகை பூத்தேன். 18

என்றலும் மகிழ்ச்சி எய்தி இந்திரன் மதலை யாங்கள்
வன்றளைப் படுமுன் போனோர் மற்றெமைப் பயந்தோர் அ(...)ர
அன்றுதொட் டின்று காறும் ஆற்றிய செயலும் ஆற்றல்
ஒன்றிய பயனும் யாவும் உரைமதி பெரியோ யென்றான். 19

வீரனங் கதனைக் கேளா விண்ணவர் கோமான் தோன்றல்
ஆரணங் குடனே காழி யடைந்ததே எழுவா யாகச்
சீரலை வாயில் அந்நாட் சென்றிடு காறு முள்ள
காரிய நிகழ்ச்சி யெல்லாங் கடிதினிற் கழறி (...)னை. 20

மேதகு தடந்தோள் வீரன் விண்ணவர் கோமான் செய்கை
ஓதலுஞ் சயந்தன் கேளா உரைசெய்வான் அன்னை தன்னைத்
தாதையை யடிகள் தன்னைச் சண்முகத் தனிவேற் செங்கை
ஆதியை யெதிர்ந்தால் ஒத்தேன் ஐயநின் மொழிகேட் டென்றான் 21

இறைதரும் அமரர் தம்மோ டிந்திரன் புதல்வன் றன்னை
அறிவரில் அறிவன் கண்ணுற் றறுமுகம் படைத்த அண்ணல்
மறையிடை வதிந்த நுங்கள் வன்சிறை மாற்றும் வைகல்
சிறிதிவண் இருத்தி ரென்று பின்னருஞ் செப்பு கின்றான். 22

தன்னிகர் இன்றி மேலாய்த் தற்பர வொளியா யாரும்
உன்னரும் பரமாய் நின்ற ஒருவனே முகங்க ளாறும்
பன்னிரு புயமுங் கொண்டு பாலகன் போன்று கந்தன்
என்னு மோர்பெயரும் எய்தி யாவருங் காண வந்தான். 23

பங்கய முகங்கள் ஆறும் பன்னிரு புயமுங் கொண்டே
எங்கடம் பெருமான் போந்த ஏதுமற் றென்னை என்னில்
செங்கண்மா லுந்தி பூத்தோன் சிறுமையும் மகவான் துன்பும்
உங்கடஞ் சிறையும் நீக்கி உலகெலாம் அளிப்பக் கண்டாய். 24

சிறுவிதி வேள்வி நண்ணித் தீயவி நுகர்ந்த பாவம்
முறைதனில் வீரன் செற்று முற்றவு முடிந்த தில்லை
குறைசில இருந்த ஆற்றாற் கூடிய துமக்கித் துன்பம்
அறுமுகப் பெருமான் அன்றி யாரிது நீக்கற் பாலார். 25

தாட்கொண்ட கமல மன்ன சண்முகத் தெந்தை வேலாற்
காட்கொண்ட கிரியி னோடு தாரகற் கடந்த பூசல்
தோட்கொண்ட மதுகை சான்ற சூர்முதல் களைய முன்னம்
நாட்கொண்ட தன்மையன்றோ நறைகொண்ட அலங்கல் தோளாய். 26

காலுறக் குனித்துப் பூட்டிக் கார்முகத் துய்ப்ப ஓர்செங்
கோலினுக் குண்டி யாற்றார் குணிப்பிலா அவுணர் யாரும்
மாலினுக் கரிதாம் அண்ணல் மாமகன் கரத்திற் கொண்ட
வேலினுக் கிலக்க தில்லை விடுப்பது மிகைய தன்றே. 27

வாரிதி ஏழும் எண்ணில் வரைகளும் பிறவுங் கொண்ட
பாருடன் உலகி ரேழும் படைத்தபல் லண்டம் யாவும்

ஓரிறை முன்னம் அட்டே உண்டிடும் ஒருவன் செவ்வேல்
சூரனை அவுண ரோடுந் தொலைப்பதோர் விளையாட் டம்மா. 28

சுறமறி அளக்கர் வைகுஞ் சூரபன் மாவின் மார்பில்
எறிசுடர் எஃகம் வீசி இருபிள வாக்கின் அல்லால்
சிறையுளீர் மீள்கி லாமை தேற்றியும் பொருநர் செய்யும்
அறநெறி தூக்கி ஒற்றா அடியனை விடுத்தான் ஐயன். 29

ஆளுடை முதல்வன் மாற்றம் அவுணருக் கிறைவன் முன்போய்க்
கேளிதென் றுரைப்பன் அற்றே கிளத்தினுங் கடனுக் கொள்ளான்
மீளுவன் புகுந்த தெல்லாம் விளம்புவன் வினவி எங்கோன்
நாளைவந் திவரை யெல்லாம் நாமற முடிப்பன் காண்டி. 30

நீண்டவன் தனக்கும் எட்டா நெடியதோர் குமரன் செவ்வேல்
ஆண்டிருந் தேயும் உய்த்தே அவுணர்யா வரையுங் கொல்லும்
பாண்டிலந் தேர்மேற் கொண்டு படைபுறங் காத்துச் சூழ
ஈண்டுவந் தடுதல் அன்னாற் கிதுவுமோ ராடல் அன்றே. 31

டிருமூன் றாகும் இரும்பக லிடையே எங்கோன்
ந் சமர மூட்டி அவுணர்தம் மனிகந் தன்னைச்
சூரொடு முடித்து நும்மைத் துயர்ச்சிறைத் தொடர்ச்சி நீக்கிப்
பேரிருஞ் சிறப்பு நல்கும் பிறவொன்று நினையல் மன்னோ. 32

என்றிவை பலவும் வீரன் இமையவர் குழாத்தி னோடுங்
குன்றெறி பகைஞன் மைந்த னுணர்தரக் கூற லோடு
நன்றென உவகை பூத்து நாமவேல் நம்பி யாற்ற
வென்றிபெற் றிடுக வென்று வீற்றுவீற் றாசி சொற்றார். 33

எண்டகும் ஆசி கூறி இந்திரன் றனது மைந்தன்
அண்டரோ டங்கை கூப்பி அளியரேந் தன்மை யெல்லாங்
கண்டனை தாதை கேட்பக் கழறுதி இவண்நீ யுள்ளங்
கொண்டது முடிக்கப் போதி குரைகழற் குமர வென்றான். 34

வயந்திகழ் விடலை அங்கண் மற்றவர் தம்மை நீங்கிக்
கயந்தரு காவ லோர்தங் கருத்தின்மால் அகற்றி யேக
இயந்திர மன்னோர் தேறி இமையவர் குழாத்தி னோடு
சயந்தனைச் சுற்றி முன்போல் தடைமுறை ஓம்ப லுற்றார். 35

ஆகத் திருவிருத்தம்–480.

# 12. அவைபுகு படலம்

—oo—

மடந்தையொ டிரிந்திடும் வாச வன்முகன்
அடைந்திடு சிறைக்களம் அகன்று வானெறி
நடந்தனன் அவுணர்கோன் நண்ணு கோன்நகர்
இடந்தரு கிடங்கரை இகந்து போயினான்.

அகழியை நீங்கினன் அயுதந் தன்னினும்
மிகுதிகொள் நாற்படை வெள்ளந் தானைகள்
தகுதியின் முறைமுறை தாரச் சுற்றிய
முகில்தவழ் நெடுமதில் முன்ன ரேகினன். 2

கான்கொடி கங்கைநீர் கரப்ப மாந்தியே
மீன்கதிர் உடுபதி விழுங்கி விட்டிடும்
வான்கெழு கடிமதில் வரைப்பின் முன்னரோ
தான்கிளர் கோபுரங் கண்டு சாற்றுவான். 3

குரைகடல் உண்டவன் கொண்ட குன்றுருவ்
வருபுழை மீமிசை வாய்ப்பத் தாரகன்
பெருவரை நிமிர்ந்திடு பெற்றி போலுமால்
திருநிலை பலவுடைச் சிகரி நின்றதே. 4

தூணமை துறழ்புயச் சூரன் என்பவன்
சேணுறும் அண்டமேற் செல்லச் செய்ததோர்
ஏணிகொ லோவிது என்ன நின்றதால்
நீணிலை பலவுடன் நிமிர்ந்த கோபுரம். 5

துங்கமொ டுறைபுரி சூரன் கோயிலில்
பொங்குசெம் மணிசெறி பொன்செய் கோபுரம்
எங்கணு முடியுநாள் இவுளி வாய்ப்படும்
அங்கிவிண் காறெழும் வடிவம் அன்னதே. 6

அண்டமங் கெவற்றினும் அமர்ந்து நிற்புறும்
விண்டொடர் வரைகளும் மேரு வானவும்
பண்டிதன் மிசையுறப் பதித்த தொக்குமாற்
கொண்டியல் சிகரியுட் கூட சாலைகள். 7

மெய்ச்சுடர் கெழுமிய வியன்பொற் கோபுரம்
உச்சியில் தொடுத்திட முழங்கு கேதனம்
அச்சுத னுஞ்சிவன் அளவை தீர்முகத்
துச்சிதொ றிருந்தரா ஒலித்தல் போலுமால். 8

திசைபடு சிகரியிற் செறிந்த வான்கொடி
மிசைபடும் அண்டமேல் விடாமல் ஏற்றுவ
பசைபடும் அதனுடைப் பணைய கத்திலில்
இசைபடப் பலகடிப் பெறிதல் போலுமால். 9

விண்ணவர் தாமுறை வியன்ப தத்தொடுந்
திண்ணிலை இடந்தொறுஞ் சிணை வைகினர்
அண்ணலங் கோபுரம் அதனிற் கைவலோன்
பண்ணுறும் ஓவியப் பாவை என்னவே. 10

என்பன பலபல இயம்பி ஈறிலாப்
பொன்புனை தோணியம் புரிசைச் சூழலின்

முன்புறு கோபுர வனப்பு முற்றவும்
நன்பெரு மகிழ்ச்சியான் நம்பி நோக்கினன். 11

புதவுறு கோபுரப் பொருவில் வாய்தலுள்
மதவலி உக்கிரன் மயூர னாதியோர்
அதிர்தரு நாற்படை அயுதஞ் சுற்றிடக்
கதமொடு காப்பது காலை நோக்கினன். 12

நோக்கிய திறலவன் நொச்சி தாவியே
ஆக்கமொ டமர்தரும் அவுணன் கோயிலுள்
ஊக்கமொ டும்பரான் ஓடி முன்னுறு
மேக்குயர் சூளிகை மிசையிற் போயினன். 13

வேறு

சூளிகை மீமிசை துன்னுபு சூரன்
மாளிகை யுள்ளவ ளந்தனை யெல்லாம்
மீளரி தாவிழி யோடுள மேவ
ஆளரி நேர்தரும் ஆண்டகை கண்டான். 14

கண்டதொ ரண்ணல் கடுந்திறல் வெஞ்சூர்
திண்டிறல் வாளரி சென்னிகொள் பீடத்
தெண்டகும் ஆணை இயற்றிய செம்பொன்
மண்டபம் வைகுறும் வண்மை தெரிந்தான். 15

அருந்தவ வேள்வி அயர்ந்தரன் ஈயும்
பெருந்திரு மிக்கன பெற்றுல கெல்லாந்
திருந்தடி வந்தனை செய்திட வெஞ்சூர்
இருந்திடு கின்ற இயற்கை இசைப்பாம். 16

ஐயிரு நூறெனும் யோசனை யான்றே
மொய்யொளி மாழையின் முற்றவு மாகித்
துய்யபன் மாமணி துஞ்சிவில் வீசி
மையறு காட்சிகொள் மண்டபம் ஒன்றின். 17

மேனகை யோடு திலோத்தமை மெய்யின்
ஊனமில் காமர் உருப்பசி யாதி
வானவர் மங்கையர் வட்டம் அசைத்தே
மேனிமிர் சீகரம் வீசினர் நிற்ப. 18

சித்திர மாமதி செங்கதிர் பாங்காய்
முத்தணி வேய்ந்து முகட்டிள நீலம்
உய்த்து மணித்தொகை உள்ளம் அழுத்துஞ்
சத்திர மாயின தாங்கினர் நிற்ப. 19

வெள்ளடை பாகு வெளிற்றுறு சுண்ணங்
கொள்ளும் அடைப்பைமென் கோடிகம் வட்டில்
வள்ளுடை வாளிவை தாங்கி மருங்காய்த்
தள்ளரு மொய்ம்புள தானவர் நிற்ப. 20

வெம்மைகொள் பானுவை வென்றிறை யிட்ட
செம்மலும் ஏனைய சீர்கெழு மைந்தர்
மும்மைகொள் ஆயிர மூவரு மாகத்
தம்முறை யாற்புடை சார்ந்தனர் வைக. 21

பாவ முயன்று பழித்திறன் ஆற்றுங்
காவிதி யோர்கரு மங்கள் முடிப்போர்
ஆவதொர் சாரண ராய்படை மள்ளர்
ஏவரும் ஞாங்கரின் எங்கணும் நிற்ப. 22

நாடக நூல்முறை நன்று நினைந்தே
ஆட அரம்பைய ராயுள ரெல்லாஞ்
சேடியர் கின்னரர் சித்தர் இயக்கர்
பாடுற வீணைகள் பண்ணினர் பாட. 23

ஏகனை ஈசனை எந்தையை யெண்ணு
றாகிய தொல்லவு ணக்குழு வென்ன
வேகும் உளத்தினர் கஞ்சுகர் வெங்கண்
மாகதர் சூரல் பிடித்து வழுத்த. 24

உள்ளிடும் ஆயிர யோசனை யெல்லை
கொள்ளிட மான குலப்பெரு மன்றந்
தள்ளிட வற்ற சனங்கள் மிகுந்தே
எள்ளிட வெள்ளிடம் இன்றென நண்ட. 25

வச்சிர மெய்வயி டூரியம் ஒண்பல்
உச்சியில் வாலுளை யேயொளிர் முத்தும்
அச்சுறு கண்மணி யாம்அரி மாவின்
மெய்ச்சிர மேந்தும் வியன்தவி சின்கண். 26

மீயுயர் நீல வியன்கிரி உம்பர்
ஞாயிறு காலையின் நண்ணிய வாபோல்
பாயிருள் கீறிய பன்மணி கொண்ட
சேயபொன் மாமுடி சென்னியின் மின்ன. 27

கறுத்தவ ராத்துணை கண்டிரு வெய்யோர்
உறுப்பிடை கவ்வி யொசிந்து தலைப்போய்
முறுக்கிய வாலொடு முன்கலந் தென்ன
மறுத்தவிர் குண்டலம் வார்குழை தூங்க. 28

வீறிய மாமணி வெற்பின் மிசைக்கண்
ஏறிய ஒண்பகல் இந்துவி யற்கை
மாறிய வந்தென மால்வள மாகும்
நீறு செறிந்திடு நெற்றி இலங்க. 29

விண்டுமிழ் கின்ற வியன்புழை தோறுந்
தண்டுளி வந்தமர் தன்மைய தென்னப்

புண்டரி கம்பொறை போற்றி யுயிர்க்கும்
வண்டர ளத்தொடை மார்பின் வயங்க. 30

பங்கமில் சந்தொடு பாளிதம் நானங்
குங்குமம் ஏனைய கந்திகள் கூட்டி
அங்கம தன்கண் அணிந்தன அண்டம்
எங்கும் உலாவி இருங்கடி தூங்க. 31

வான்றிகழ் நீனிற மாமுகி லின்பால்
தோன்றிய மின்புடை சுற்றிய தென்ன
ஏன்றுள அண்டம் எனைத்தையும் ஆற்றும்
ஆன்றுயர் தோளிடை அங்கதம் மல்க. 32

மெய்த்துணை யாமிரு வெம்பணி ஞாலம்
பைத்தலை கொள்வ பரம்பொறை யாற்றா
தெய்த்தன பூண்கொடி யாப்புறு மாபோற்
கைத்தல முன்கட கஞ்செறி வெய்த. 33

நீலம தாய நெடுங்கிரி மேல்பால்
வாலிய கங்கை வளைந்திடு மாபோல்
கோல மிடற்றிடை கோவைகொள் முத்தின்
சால்வுறு கண்ட சரங்கள் இமைப்ப. 34

வீர மடந்தையர் மேதக நாளுஞ்
சீரிய தோளிணை செல்கதி யென்ன
ஏரியல் பன்மணி இட்டணி செய்த
ஆர வடுக்கல்பொன் ஆகம் இலங்க. 35

அந்தியின் வண்ணமும் அத்தொளி யூருஞ்
சுந்தர மாலிடை சுற்றிய வாபோல்
முந்து பராரைகொள் மொய்ம்மணி யாடை
உந்தியின் ஒண்பணி யோடு வயங்க. 36

இருபணி பார்முகம் இட்டிட வீட்டி
உருமொடு மின்னும் உலப்பில சுற்றிக்
கருமிட றூடு கலந்தென நுண்ணூல்
குரைகழல் வார்கழல் கொண்டு குலாவ. 37

மென்மணி மாழையின் வேதன் இயற்றிப்
பன்மணி மீது படுத்திய பல்பூண்
தொன்மணி மெய்புனை சூரபன் மாவோர்
பொன்மணி மாமுகில் போல இருந்தான். 38

இருந்திடு கின்ற இயற்கை விழிக்கோர்
விருந்தமு தாக வியப்பொடு நோக்கிச்
சுரந்திடு மன்பொடு சூளிகை வைகும்
பெருந்திறல் மாமுகில் இங்கிவை பேசும். 39

மூவரின் முந்திய முக்கணன் அம்பொற்
சேவடி பேணிய தேவர்கள் தம்முள்
தூவுடை வேலுள சூரபன் மாப்போல்
ஏவர் படைத்தனர் இத்திரு வெல்லாம். 40

ஓய்ந்து தவம்புரி வோருள் உவன்போல்
மாய்ந்தவர் இல்லை மறத்தொடு நோற்றோர்
ஆய்ந்திடின் முக்கணெம் மையனும் இன்றோர்
ஈந்தது போற்பிறர்க் கீந்ததும் இன்றால். 41

பாடுறு வேள்வி பயின்றநூல் புக்கும்
பீடுறும் இவ்வளம் ஆயின பெற்று
நீடுறு மாறு நினைந்திலன் வெய்யோன்
வீடுறு கின்ற விதித்திறன் அன்றோ. 42

வேறு

மெய்ச்சோதி தங்கு சிறுகொள்ளி தன்னை விரகின்மை கொண்ட குருகார்
கச்சோத மென்று கருதிக் குடம்பை தனினுய்த்து மாண்ட கதைபோல்
அச்சோ வெனப்பல் இமையோரை ஈண்டு சிறைவைத்த பாவம் அதனால்
இச்சூர பன்மன் முடிவெய்து நாளை இதனுக்கொர் ஐய மிலையே. 43

மிகையான வீரம் வளமாற்றல் சால மேவுற்று ளோரும் இறையும்
பகையார்க ணேனும் உளராகி வாழ்தல் பழுதன்றி நன்றி படுமோ
மகவானை மங்கை யுடனே துரந்தும் அவர்மைந்த னோடு சுரரை
அகலாமல் ஈண்டு சிறைசெய்த பாவம் அதனால் இழப்பன் அரசே. 44

மன்னுந் திறத்தின் அமர்சூர பன்மன் மாமக்கள் சுற்றம் நகரம்
முன்னும் படிக்கும் அரிதான செல்வ முடனோடு ஈறு படுமேல்
முன்னென் பவர்க்கு முன்னாகும் ஆறு முகனல்கு முத்தி யலதேல்
என்னுண்டு நாளும் வினைசெய் துழன்ற இவனாருயிர்க்கு நிலையே. 45

என்றித் திறங்கள் அருளோடு பன்னி எழில்கொண்ட வேர மிசையே
துன்றுற்ற வீரன் வளனோ டிருந்த சூரன்முன் ஏகல் துணியாக்
குன்றத்தி னின்று மிவரெல்லை போன்று குமரேசன் எந்தை அடிகள்
ஒன்றக் கருத்தினி டைகொண் டெழுந்து நடைகொண் டவைக்கண் உறுவான்.

வேறு

நலஞ்செய் சூளிகை நீங்கிவிண் ணெறிக்கொடு நடந்து
கலஞ்செய் திண்டிறல் வாகுவாம் பெயருடைக் கடவுள்
வலஞ்செய் வாட்படை அவுணர்கோன் மன்னிவீற் றிருக்கும்
பொலஞ்செய் கின்றஅத் தாணிமண் டபத்திடைப் போனான். 47

எல்லை இல்லதோர் பெருந்திரு நிகழ்வீற் றிருந்த
மல்ல லங்கழல் இறைவனைக் குறுகிமாற் றலரால்
வெல்ல ருந்திறல் வீரவா குப்பெயர் விடலை
தொல்லை நல்லுருக் காட்டினன் அவைக்கெலாந் தோன்ற. 48

ஒற்றை மேருவில் உடையதோர் பரம்பொருள் உதவுங்
கொற்ற வேலுடைப் புங்கவன் தூதெனக் கூறி
இற்றை இப்பகல் அவுணர்கோன் கீழியான் எளிவாய்
நிற்றல் எம்பிரான் பெருமையின் இழிபென நினைந்தான். 49

மாயை தந்திடு திருமகன் மன்னிவீற் றிருக்கும்
மீயு யர்ந்திடும் அரியணைக் கொருபுடை விரைவில்
போயி ருப்பது மேலன்று புன்மையோர் கடனே
ஆய தன்றியும் பாவமென் றுன்னினன் அகத்துள். 50

இனைய துன்னியே அறுமுகப் பண்ணவன் இருதாள்
நினையும் எல்லையில் ஆங்கவன் அருளினால் நிசியில்
தினக ரத்தொகை ஆயிர கோடிசேர்ந் தென்னக்
கனக மாமணித் தவிசொன்று போந்தது கடிதின். 51

சித்தி லப்படு பந்தருஞ் சிவிகையும் நெறியே
முத்த மிழ்க்கொரு தலைவனும் மதலைக்கு முதல்வன்
உய்த்த வாறெனக் குமரவேள் வீரனுக் குதவ
அத்த லைப்பட வந்தது மடங்கலேற் றணையே. 52

பன்னி ரண்டெனுங் கோடிவெய் யவரெலாம் பரவப்
பொன்னின் மால்வரை திரைக்கடல் அடைந்தவா போல
மின்னு லாவிய பொலன்மணிப் பீடிகை விறல்சேர்
மன்னர் மன்னவன் அவைக்களத் தூடுவந் ததுவே. 53

சிவன் மகன்விடு பொலன்மணித் தவிசுசேண் விளங்கிப்
புவன முற்றுறத் தன்சுடர் விடுத்தலிற் பொல்லாப்
பவம னத்தொடு தீமையே வைகலும் பயிற்றும்
அவுணர் மெய்யையுந் தெய்வதப் படிவமாக் கியதால். 54

அயிலெ யிற்றுடை அவுணர்கள் அணிகலந் தன்னில்
குயிலு டைப்பல மணிகளுங் குமரவேள் உய்த்த
இயலு டைப்பெருந் தவிசொளி பரத்தலின் இரவி
வெயிலி டைப்படு மின்மினி போல்விளங் கிலவே. 55

செக்கர் வானிற மதிக்கதிர் உடுக்களின் திரட்சி
தொக்க பாயிருள் பலவகை எழிலியின் துளக்கம்
மிக்கெ லாஞ்செறி மாலையின் உம்பர்மேல் வெய்யோன்
புக்க தேயெனத் தொலைத்ததால் அச்சபைப் பொலிவை. 56

திசைமு கத்தனுஞ் செயற்கருந் தவிசொளி செறிந்தே
அசைவ ருந்திறற் சூரபன் மாவெனும் அவுணன்
இசைமை தன்னையும் ஆணைதன் னையும்அவ னியாக்கை
மிசைகொள் பேரணிக் கதிரையும் விழுங்கின விரைவில். 57

அனைய வான்தவி சவுணன்நேர் இருத்தலும் அதுகண்
டெனது நாயகன் விடுத்தனன் போலுமென் றெண்ணி

மனமகிழ்ச்சியால் அறுமுகப் பிரானடி வழுத்தி
இனைய நாடுவான் இருந்தனன் ஆங்கதன் மிசையே. 58

பெருந்தனிச்சுடர் எறித்திடு பொன்மணிப் பீடத்
திருந்து மேதகு சிறப்பொடு விளங்கிய ஏந்தல்
விரிந்த பல்கதி ருடையதோர் வெய்யவன் நடுவட்
பொருந்தி வைகிய கண்ணுதற் பரமனே போன்றான். 59

மின்னி ருந்தவேல் அவுணர்கோன் எதிருறும் விடலை
முன்னி ருந்தஆ டகன்றனை அடுமுரட் சீயஞ்
செந்நி ணங்கவர்ந் தலமர அணுகிமுன் றெற்றப்
பொன்னி ருந்தவி சிருந்திடும் வீரனே போன்றான். 60

வெம்மைக் காலிருள் வேலைபோல் மூடிவிண் புவியைத்
தம்முட் சித்தரிற் காட்டலுஞ் சதுர்முகத் தொருவன்
நம்மொத் தாரிலை என்றிடச் சிவன்புகழ் நவிலுஞ்
செம்மைத் தொல்குண மாலுநேர்ந் திருந்தனன் திறலோன். 61

இவற்றி யற்கையால் வீரவா குப்பெயர் ஏந்தல்
நிவப்பின் மிக்கதோர் பொன்மணித் தவிசின்மேல் நெஞ்சின்
உவப்பும் வீரமும் மேதக இருத்தலும் உற்ற
அவைக்க ளத்தினர் யாவருங் கண்டனர் அதனை. 62

நோற்றல் முற்றுறும் வினைஞர்பால் நொய்தின்வந் திறுத்த
ஆற்றல் சால்வளம் போலவே அரியணை அதன்கண்
தோற்று மேலவன் நிலைமையைக் காண்டலுந் துளங்கி
ஏற்ற அற்புதம் எய்தினர் அவைக்களத் திருந்தார். 63

வேறு

வாரிலங் கியகழல் மன்னன் முன்னரே
தாரிலங் கியமணித் தவிசின் உற்றுளான்
வீரனும் போலுமால் வினையம் ஓர்கிலேம்
யாரிவன் கொல்லென இயம்பு வார்சிலர். 64

முந்திவட் கண்டிலம் முடிவில் ஆற்றல்சேர்
எந்தைமுன் இதுபொழு திருத்தல் மேயினான்
நந்தமை நீங்கியே நடுவ ணேயிவன்
வந்ததெவ் வாறென வழங்கு வார்சிலர். 65

ஒப்பருஞ் சனங்களோ டொன்றி நம்மெலாந்
தப்பினன் புகுந்தனன் தமிய னென்னினும்
இப்பெருந் தவிசிவண் இருந்த தாற்றவும்
அற்புதம் அற்புத மாமென் பார்சிலர். 66

சீயமெல் லணையொடு செம்மல் முன்னரே
ஏயெனும் அளவையின் ஈண்டு தோன்றினான்
ஆய்பவர் உண்டெனின் அறைவன் நம்மினும்
மாயன்இங் கிவனென வகுக்கின் றார்சிலர். 67

அறைகழல் ஒருவனை அவையத் தென்முனங்
குறுகிய விடுத்ததென் குழாங்கொண் டீரெனு
இறையவன் நங்களை யாது செய்யுமோ
அறிகில மெனப்பதைத் தழுங்கு வார்சிலர். 68

ஓட்டலன் ஒருவனை ஒறுத்தி டாதிவண்
விட்டதெ னென்றிறை வெகுளு முன்னரே
கிட்டினம் அவன்றனைக் கெழுமிச் சுற்றியே
அட்டனம் வருதுமென் றறைகின் றார்சிலர். 69

விளிவிலாத் திறலுடை வேந்தன் றன்னெதிர்
களியுலா மனத்தொடு கடிதின் உற்றுளான்
தெளிவிலா மாயையின் திறலன் போலுமால்
அளியனே நுங்களுக் கவனென் பார்சிலர். 70

மன்னவன் எதிருற வந்து ளான்றனை
அன்னவன் பணியினால் அடுவ தல்லதை
முன்னுற அதனையா முன்னு வோமெனில்
பின்னது பிழையெனப் பேசு வார்சிலர். 71

யாரிதை அறிகுவர் இனையன் இவ்விடைச்
சூருற உன்னியே துன்னி னன்கொலோ
சேரலர் பக்கமாய்ச் சேர்ந்து ளான்கொலோ
ஒருது மேலென உரைசெய் வார்சிலர் 72

கடுந்தகர் முகத்தவள் கையொன் றற்றநாள்
தடிந்தனன் காவலோர் தம்மை மன்னவன்
தொடுங்கழல் இவன்வருஞ் சூழ்ச்சி நோக்கியின்
றடும்பலர் தம்மையென் றச்சுற் றார்சிலர். 73

வாசவன் முதலினோர் மருளத் தொல்லைநாட்
தேசுறும் விஞ்சையர் வடிவிற் சேர்வுறீஇ
ஆசிலோர் புன்னிறுத் தாணை காட்டிய
ஈசனே இங்கிவன் என்கின் றார்சிலர். 74

ஆயதோர் காசிபன் அதிதி தங்கள்பாற்
சேயனாய் வந்தொரு சிந்தன் போன்றுலாய்த்
தூயவான் புவியெலாம் அளப்பச் சூழ்ந்திடு
மாயனே இவனென மதிக்கின் றார்சிலர். 75

விண்டொடு சூளினை விளம்பி விண்புவி
உண்டொரு கணந்தனில் உந்தி காட்டிய
புண்டரி கத்தனே புணர்ப்பின் இவ்வுருக்
கொண்டன னெனக் கூறு வார்சிலர். 76

மூவரு ளாகுமோ முடிவின் மாதிரத்
தேவரு ளாகுமோ சேணில் வைகிய

நாவரு முனிவரர் தம்மு ளாருமோ
ஏவரு ளாருமோ இவனென் பார்சிலர். 77

மாலைதாழ் மார்புடை மன்னற் கின்னமும்
ஆலமார் கண்டனே அருளின் இன்னதோர்
கோலமாய் வரந்தரக் கூறுகி னான்கொலோ
மேலியாம் உணருதும் விளைவென் பார்சிலர். 78

காற்றுடன் அங்கியுங் கடுங்கட் காலனுங்
கூற்றனும் ஒருருக் கொண்டு வைகிய
தோற்றமி தன்றியிச் சூரன் முன்வரும்
ஆற்றலர் யாரென அறைகின் றார்சிலர். 79

குன்றமும் அவுணனுங் குலைந்து பாடுற
ஒன்றொரு வேலினை ஒருவ னுய்த்தவன்
என்றனர் அன்னவன் ஈண்டு மன்னன்முன்
சென்றன னானெனச் செப்பு வார்சிலர். 80

செற்றிய பன்மணிச் செம்பொன் மன்றமும்
முற்றிடும் அவுணரும் ஒளிறு வான்கதிர்
மற்றிவன் அணிகளின் தவிசின் வாள்பட
அற்றது பகற்சுட ராயென் பார்சிலர். 81

இருந்திடும் அவுணர்கள் யாரும் இந்திறம்
வருந்திறம் நினைகிலர் மறந்தும் இவ்விடை
தெரிந்திடின் இங்கிது திறல்கொள் மன்னனே
புரிந்திடு மாயையின் புணர்ப்பென் பார்சிலர். 82

நென்னலின் இறந்துயிர் நீத்த தாரகன்
முன்னுறு தன்னுரு முடிய இப்பகல்
இன்னதோர் பொன்னுரு வெடுத்து முன்னைபால்
துன்னினன் கொல்லெனச் சொல்கின் றார்சிலர் 83

வேறு

சங்க மேவினர் இனையன அளப்பில ராற்ற
அங்கண் ஓரரி மான்றவி சிருக்கையில் அவுணன்
துங்க மெத்துணை அத்துணைச் சிறப்பொடு தோன்றிச்
செங்கை வேலவற் புகழ்ந்துவீற் றிருந்தனன் திறலோன். 84

அறிவர் மேலவன் தவிசில்வீற் றிருத்தலும் அவுணர்க்
கிறைவ னாங்கது நோக்கியே எயிற்றணி கறித்துக்
கறுவி யேநகைத் துரப்பிமெய் வியர்ப்பெழக் கண்கள்
பொறிசொ ரிந்திடப் புகையுமிழ்ந் தினையன புகல்வான். 85

சுற்ற நீங்கியே இலையுண்டு விலங்கெனச் சுழன்று
வற்றன் மாமரக் காட்டகத் திருந்துடல் வருத்துஞ்
சிற்று ணர்ச்சியோர் வல்லசித் தியல்பிது சிறியோய்
கற்று ளாய்கொலாங் காட்டினை நமதுமுன் காண. 86

துன்று வார்சடை யோகினோர் அல்லது தொலைந்து
பின்று தேவரும் வல்லரிச் சிறுதொழில் பெரிதும்
ஒன்று மன்னதை இவ்விடைக் காட்டலர் உன்போல்
நன்று நன்றுநீ நம்முனர்க் காட்டிய நடனம். 87

சித்த ராயினோர் செங்கண்மால் முதலிய தேவர்
இத்தி றத்தன காட்டுதற் கஞ்சுவ ரென்முன்
தத்தம் எல்லையிற் புரிந்திடல் அல்லது தமியோய்
பித்த னேகொலாம் நமக்கிது காட்டுதல் பிடித்தாய். 88

உரைசெய் இந்நகர் மகளிருஞ் செய்வருன் முற்றுக்
கருவி னுள்ளுறு குழவியுஞ் செய்திடுங் கருத்தில்
வரைக ளுஞ்செயும் மாக்களுஞ் செய்யுமற் றதனால்
அரிய தன்றரோ பேதைநீ புரிந்திடும் ஆடல். 89

என்னை எண்ணலை எதிருற இருந்தனை இதனான்
மின்னல் வாட்படை யுறைகழித் தொய்யென வீசிச்
சென்னி வீட்டுவன் நின்செயல் முற்றவுந் தெரிந்து
பின்னர் அத்தொழில் புரிவனென் றேயுளம் பிடித்தேன். 90

ஏனுற் றாரெலாம் வழுத்திய அவுணரும் யாமுங்
காணக் காட்டினை நீயறி விஞ்சையைக் கண்டாம்
பூணித் தாயென வருமுனக் கித்துணைப் பொழுது
பாணித் தாவியை அளித்தனன் அன்னது பரிசே. 91

வாச வன்கரந் தோடினன் பிறரிது மதியார்
கேச வன்னிது நினைகிலன் மறைகளின் கிழவோன்
ஆசி கூறியே திரிந்திடும் அவர்க்கெலாம் முதலாம்
ஈசன் என்னிடை வருகிலன் யாரைநீ யென்றான். 92

தீயன் இத்திறம் உரைத்தன கேட்டலுந் திறலோன்
காய மீனெனக் காயமேல் வியர்ப்புறக் கனன்று
மாயை செய்துழல் வலியிலார் போலெனை மதித்தாய்
ஆய புந்தியை விடுமதி கேளிதென் றறைவான். 93

புரந்த ரன்குறை அயன்முதல் அமரர்தம் புன்மை
வருந்தும் வானவர் சிறையெலாம் நீக்கிமற் றவர்தந்
திருந்து தொல்லிறை உதவுவான் செந்திமா நகர்வந்
திருந்த ஆதியம் பண்ணவன் அடியனேன் யானே. 94

துன்னு தானைகட் கரசராய் அறுமுகத் தொல்லோன்
பின்னர் வந்துளார் ஒன்பதோ டிலக்கமாம் பெயரால்
அன்ன வர்க்குளே ஒருவன்யான் நந்திபாங் கமர்ந்தேன்
ஒன்ன லார்புகழ் வீரவா கெனும்பெய ருள்ளேன். 95

தாரகப் பெயர் இளவலைத் தடவரை தன்னை
ஓரி றைக்குமுன் படுத்தவேல் அறுமுகத் தொருவன்

சூரெ னப்படு நின்னிடைத் தமியனைத் தூதாப்
பேர ருட்டிறத் துய்த்தனன் என்றனன் பெரியோன். 96

கொடுத்தி டாதவென் கொண்டவன் உரைத்தசொற் கொடுங்கோல்
நடத்து மன்னவன் கேட்டலும் ஆங்கவன் நம்மேல்
விடுத்த காரணம் என்னையோ விளம்புதி யென்ன
எடுத்து மற்றிவை எம்பிரான் தூதுவன் இசைப்பான். 97

மருத்து வன்றனைச் சசியொடு தூரந்துசேண் வதிந்து
புரத்தை ஆரழற் கூட்டியே அனையன் முதல்வன்
ஒருத்த னோடுபல் லமரரை உவளகந் தன்னில்
இருத்தி னையென வினவினன் அறுமுகத் திறைவன். 98

இந்தி ராதிபர் அயன்முதற் பண்ணவர் யாரும்
வந்து வந்துவேண் டிடுதலும் அவர்குறை மாற்றப்
புந்தி கொண்டுபன் னிருபுயத் தெம்பிரான் புவிக்கண்
அந்த மின்றுறை பாரிடத் தானையோ டடைந்தான். 99

தரையின் நண்ணியின் இளவலை வரையொடு முடிந்து
நெருந லேவந்து செந்தியின் வைகினன் நினையும்
விரைவின் வந்தட உன்னினன் இன்றுநும் மிசையே
அருள்கொ டேசில புகன்றெனைத் தூண்டினன் அதுகேள். 100

நிறையும் இந்துவைப் படவராக் கவர்ந்தென நிகளச்
சிறைப டுத்தியே அமரரை வருத்தினை செய்யும்
மறையொ ழுக்கமும் நீக்கினை உலகம்ஆள் மன்னர்
அறமும் அன்றிது வீரர்தஞ் செய்கையும் அன்றால். 101

தாதை யாகியோன் காசிபன் ஆங்கவன் தனயன்
ஆத லானுனக் கமரரைச் சிறைசெய்வ தறனோ
வேத மார்க்கமும் பிழைத்தனை சிறுபொருள் விழைந்தாய்
நீதி யாலுல களிப்பதே அரசர்தந் நெறியே. 102

உலத்தின் மாண்டதோட் சலந்தரன் அந்தகன் ஒருங்கே
கலத்தல் இல்லதோர் புரத்தவ ராதியோர் கடவுட்
குலத்தை வாட்டலின் இமைப்பினில் வீந்தனர் கொடியோய்
நிலத்தின் உம்பரை வருத்துதல் அழகிதோ நினக்கே. 103

மெய்ம்மை நீங்கியே கொலைகள வியன்றுமே லுள்ள
செம்மை யாளரைச் சீறியே அணங்குசெய் தீயோர்
தம்மில் ஆற்றரும் பழிசுமந் தொல்லையில் தமரோ
டிம்மை வீடுவர் எழுமையுந் துயரினு டிருப்பார். 104

இங்ங னந்திரு நீங்கியே துயருழந் திறப்பர்
அங்ங னம்பெரி தாரிருள் மூழ்குவர் அதற்பின்
உங்ங னம்பிறந் தயருவ ரென்றுமீ துலவார்
எங்ஙன் உய்வரோ பிறர்தமக் கல்லல்செய் திடுவோர். 105

தீது நல்லன ஆயிரு திறத்தவுந் தெரிந்தே
ஏதி லார்க்கவை செய்வரேல் தமக்குடன் எய்தும்
பேதை நீரையாய் அமரரைச் சிறைசெய்த பிழையால்
மாது யர்ப்படல் அன்றியே இறுதியும் வருமால். 106

அண்டர் ஆற்றலை வவ்விய தாரகன் ஆவி
உண்ட கொற்றவேல் இருந்தது விடுத்திடின் உனையுங்
கண்ட துண்டம தாக்குமால் அறநெறி கருதித்
தண்டம் வல்லையிற் புரிந்திலன் இத்துணை தாழ்த்தான். 107

கெடுதல் இல்லதோர் அமரர்கள் சிறையிடைக் கிடப்ப
விடுதல் செய்தனை பல்லுகம் அவர்தமை இன்னே
விடுதல் உய்வகை யாகுமால் மறுத்தியேல் விரைந்து
படுத லேயினக் குறுதியாம் முறையுமப் பரிசே. 108

ஆண்ட ளப்பில நோற்றனை வேள்வியின் ஞற்றி
மூண்ட தீயிடை மூழ்கிஞேய்க் கெந்தைமுன் னளித்த
மாண்டி டாதபே ராயுளைத் திருவொடும் வாளா
ஈண்டொர் புன்னெறி யாற்றியே இழுக்குவ தியல்போ. 109

சைய மேற்படு வளத்தொடு நீயுநின் தமரும்
உய்ய வேண்டுமேல் அமரர்தஞ் சிறையினை ஒழித்து
வைய மேலறத் தியல்புளி வாழிமற் றிதனைச்
செய்ய லாயெனின் ஈங்குவந் தடுவனுல் திண்ணம். 110

என்று மற்றிவை யாவையும் வரைபக எறிந்தோன்
உன்ற னக்கறை கென்றனன் நீங்குநீ உம்பர்
வுன்ற லைச்சிறை நீக்கியே அறத்தின்இவ் வளத்தை
நன்று துய்த்தனை நெடிதுநீ வாழ்கென நவின்றான். 111

மறமக கன்றிடா வீரனிங் கினையன வகுத்தே
அறையும் வாசகங் கேட்டலும் வெகுளிமூ ளகத்தன்
பொறியு மிழ்ந்திடு கண்ணினன் புகையுமிழ் உயிர்ப்பன்
எறியும் அங்கையன் இறந்திடும் முறுவலன் இசைப்பான். 112

மேலை யாயிரத் தெட்டெனும் அண்டமும் வென்றே
ஏலு கின்றதோர் தனியிறை யாகிய எனக்குக்
கோல வாலெயி றின்னமுந் தோன்றிலாக் குதலைப்
பால னேகொலாம் இனையன புந்திகள் பகர்வான். 113

விறலின் மேதகும் அவுணராம் வலியிலார் மிகவும்
வறிய ராகிய தேவராம் மேலவர் மழலைச்
சிறுவ ராந்தனி முதல்வற்கும் அமைச்சியல் செய்வார்
எறியும் நேமிசூழ் உலகத்து வழக்கம்நன் றிதுவே. 114

நறைகொ டார்முடி அவுணர்தங் குலத்தினை நலித்து
வறுமை செய்தனர் கடவுளர் அவர்திரு மாற்றிக்

கூறிய ஏவலுங் கொண்டனன் ஒழுக்கமுங் கொன்றேன்
சிறையும் வைத்தனன் எங்குடித் தமர்முறை செய்தேன். 115

நெடிய மால்மகன் உறங்குநாள் ஆணையை நீங்கித்
தொடுபெ ருங்கடல் உலகெலாங் கொள்ளினுஞ் சூரரை
விடுவன் அல்லன்யான் வீடருஞ் சிறையினை விண்மேல்
உடைய அண்டத்தின் உச்சியின் ஒருதலை உய்ப்பேன். 116

தப்பல் செய்திடு மகபதி முதலினோர் தமையும்
இப்ப திக்கணே கொணர்ந்தனன் சிறைசெய இருந்தேன்
கைப்பு குஞ்சிறை விடுவனோ விடுகிலன் கண்டாய்
ஒப்ப ருந்திறல் சூரனென் றொருபெய ருடையேன். 117

மின்னு வச்சிரப் படிவமும் வேறுபல் வரமும்
முன்னோர் ஞான்றுதன் தாதைதற் களித்திடு முறையைப்
பின்னர் யாவரே பெயர்ப்பவர் பெருஞ்சமர் இயற்றி
என்னை ஆற்றலால் வென்றிடு நீர்மையோர் யாவரே. 118

தானமாமுகத் தாரக எம்பியைத் தடிந்த
மான வேற்படை யவன்மிசை வருவது வலித்தேன்
பானல் வாய்ச்சிறு சேயொடு நீயமர் பயிறல்
ஊனமேயெனத் தடுத்தனர் ஆதலால் ஒழிந்தேன். 119

தூங்கு கையுடைத் தாரக இளவலைத் தொல்லை
ஓங்கல் தன்னொடும் அட்டது நென்னலே உணர்ந்தேன்
பாங்கி னோரையப் பாலன்மேல் உந்தியென் பழியும்
வாங்கு கின்றனன் நாளையே காண்டியான் மன்னோ. 120

அரிகள் எண்ணிலர் இந்திரர் எண்ணிலர் அல்லாச்
சுரர்கள் எண்ணிலர் அண்டங்க டொறுந்தொறும் இருந்தார்
செருவின் ஆற்றலர் வழுத்தியே போயினர் சிலன்கண்
நெருநல் வந்திடு சிறுவனோ என்னெதிர் நிற்பான். 121

ஓதி என்பல அமரரை விடுகிலன் உணர்ச்சி
ஏது மில்லதோர் மகவுதன் புன்மொழி ஏற்றுப்
பேதை ஆதலின் ஒற்றனாய் வந்தனை பிழைத்துப்
போதி நின்னுயிர் தந்தனன் யானெனப் புகன்றான். 122

அகில மாள்பவன் இங்கிவை மொழிதலும் ஐயன்
வெகுளி வெங்கனல் சிந்திட வுளஞ்சுட வெகுண்டு
புகையும் அங்கியும் உயிர்ப்புற மயிர்ப்புறம் பொடிப்ப
நகையும் வந்திடச் சிவந்திட விழியிவை நவில்வான். 123

உய்ய லாவதோர் பரிசினை உணர்வுறு துழலுங்
கைய கேண்மதி கட்செவி மதியொடு கலந்த
செய்ய வார்சடைப் பரம்பொருள் திருநுதல் விழிசேர்
ஐயன் மேதக உணர்ந்திலை பாலனென் றறைந்தாய். 124

மானு டத்தரைத் தேவென்பர் வானகத் தவரை
ஏனை முத்தொழி லவரென்பர் இருவர்தங் களையும்
நாணி லத்தினிற் பரம்பொருள் இவரென நவில்வார்
ஆன சொற்றிறம் முகமனே சரதமற் றன்றால். 125

ஆய புல்லிய புகழ்ச்சிபோற் கொள்ளலை அறிவோர்
தேய மாவது யார்க்குமெட் டாதது தெளியில்
தூய வீடுபே றருளுவ துபரிடத் துணிவாம்
வாய்மை யாவது புகலுவன் கேளென வகுப்பான். 126

மண்ண ளந்திடு மாயனும் வனசமே லவனும்
எண்ண ரும்பகல் தேடியுங் காண்கிலா திருந்த
பண்ண வன்நுதல் விழியிடைப் பரஞ்சுடர் உருவாய்
உண்ணி றைந்தபே ரருளினுன் மதலையாய் உதித்தான். 127

முன்ன வர்க்குமுன் னுகுவோர் தமக்குமுற் பட்டுத்
தன்னை நேரிலா ஈசனுந் தனிப்பெயர் தாங்கி
இன்னு யிர்க்குயி ராய்அரு வுருவமாய் எவர்க்கும்
அன்னை தாதையாய் இருந்திடும் பரமனே அவன்காண். 128

ஈச னேயவன் ஆடலால் மதலையா யினன்காண்
ஆசி லாவவன் அறுமுகத் துண்மையால் அறிநீ
பேசில் ஆங்கவன் பரனெடு பேதகன் அல்லன்
தேசு லாவகன் மணியிடைக் கதிர்வரு திறம்போல். 129

பூதம் ஐந்தினுட் கீழ்நிலைத் தாகிய புவியுள்
ஓது கின்றபல் லண்டத்தின் ஓராயிரத் தெட்டுங்
கோதில் ஆக்கமும் படைகளும் உனக்குமுன் கொடுத்த
ஆதி ஈசனே அவனெனின் மாற்றுவ தரிதோ. 130

ஏத மில்புவி அண்டங்கள் பெற்றனம் என்றே
பேதை யுன்னினை சிறிதவன் தன்னருள் பெறுவோர்
பூதம் மைந்தனும் ஏனைய திறத்தினும் புறத்து
மீது மாமண்டம் எவற்றிற்கும் வேத்தியல் புரிவார். 131

ஆதி யாகிய குடிலையும் ஐவகைப் பொறியும்
வேதம் யாவையுந் தந்திரப் பன்மையும் வேரு
ஓத நின்றிடு கலைகளும் அவ்வவற் றுணர்வாம்
போதம் யாவையுங் குமரவேள் பொருவிலா வுருவம். 132

எங்க வதனங்கள் எங்கணும் விழிகள்
எங்க க் கேள்விகள் எங்கணுங் கரங்கள்
எங்க க் கழலடி எங்கணும் வடிவம்
எங்க தருள்செயும் அறுமுகத் திறைக்கே. 133

தாம ரைக்கணுன் முதலிய பண்ணவர் தமக்கும்
ஏமு றப்படு மறைக்கெலாம் ஆதிபெற் றியலும்

ஓமெ னப்படுங் குடிலையே ஒப்பிலா முருகன்
மாமு கத்துளொன் றுமவன் தன்மையார் வகுப்பார். 134

முக்கண் மூர்த்தியும் ஆங்கவன் முண்டகா சனனுஞ்
சக்க ரப்படை அண்ணலும் ஆங்கவன் தானே
திக்குப் பாலருங் கதிர்களும் முனிவருஞ் சிறப்பின்
மிக்க தேவரும் ஆங்கவன் யாவர்க்கும் மேலோன். 135

ஈட்டு மன்னுயிர் எவற்றிற்கும் இருவினைப் பயனைக்
கூட்டு வானவன் ஆங்கவை துலையெனக் கூடின்
வேட்ட மேனிலைக் கதிபுரி வானவன் மேலாய்க்
காட்டு வான்முதல் திறமெலாம் ஆங்கவன் கண்டாய். 136

சிறுவன் போலுறும் குரவனே போலுறும் திணையில்
குறியன் போலுறும் நெடியவ னாகியுங் குறுகும்
நெறியின் இன்னணம் வேறுபல் லுருக்கொடு நிலவும்
அறிவர் நாடருங் கந்தவேள் ஆடலார் அறிவார். 137

சிவன தாடலின் வடிவமாய் உற்றிடுஞ் செவ்வேள்
அவன தாணையின் அன்றியே பெயர்கிலா தணுவும்
எவர வன்றனி ஆற்றலைக் கடந்தவர் இவண்நீ
தவம யங்கினை அவன்தனி மாயையிற் சார்வாய். 138

எல்லை இல்லதோர் பொருளெலாம் ஆகுறு மியாவும்
அல்ல னாகியும் இருந்திடும் அருவமு மாகும்
பல்வ கைப்படும் உருக்கொளும் புதியரிற் பயிலுந்
தொல்லை யாதியாம் அநாதியும் ஆகியே தோன்றும். 139

வாரி வீழ்தரும் புன்னுனித் துள்ளிகண் மான
நேரி லாதமர் குமரவேள் நெடியபேர் உருவின்
ஒரு ரோமத்தின் உலப்பிலா அண்டங்கள் உதிக்கும்
ஆர வன்றிரு மேனியின் பெருமையை அறிவார். 140

தொலைவி லாவுயிர்த் தொகுதியுந் தொல்லையம் பூதத்
தலகி லண்டமும் ஏனவும் ஆதியங் குமரன்
நிலைகொள் மேனியின் நிவர்தரும் உரோமத்தின் நின்றே
உலவை யின்றிமுன் னுதித்திடும் இறுதிநாள் ஒடுங்கும். 141

ஆவ தாகிய வடிவத்தின் அகிலமுஞ் செறிந்து
மேவு மந்நிலை அனையனே அல்லது வேறிங்
கேவர் கண்டனர் அவ்வுரு வியற்கையை எங்கோன்
தேவர் யாவர்க்குங் காட்டிடக் கண்டனர் சிறிது. 142

தண்டல் இல்லதோர் ஒன்றொரு மயிர்நுனித் தலையின்
அண்ட மெண்ணில கோடிகள் கோவைபட் டவையப்
பண்டு மேருவிற் கந்தவேள் கொண்டதோர் படிவங்
கண்டி லாய்கொலாங் கணிப்பிலாப் பவம்புரி கடியோய். 143

அன்று கந்தவேள் அமைந்ததோர் பெருவடி வதனுள்
ஒன்று ரோமத்தின் இருந்தநற் காற்றிடா துனதாய்த்
துன்றும் ஆயிரத் தெட்டெனும் அண்டமாந் தொகையும்
இன்று நீயது தெரிகிலை சிறுவனென் றிசைத்தாய். 144

அளப்ப ருங்குணத் தாதியாம் எம்பிரான் அமரர்
தளைப்ப டுஞ்சிறை மாற்றவுஞ் சதுர்முகன் முதலோர்
கொளப்ப டுந்துயர் அகற்றவுங் கொடியரை யறுத்து
வளப்ப டும்பரி சுலகெலாம் போற்றவும் வந்தான். 145

வாழி யானநின் ஆயுளும் வன்மையும் வரமுங்
கேழில் சுற்றமும் படைகளும் வான்றொடக் கிளர்ந்து
பூழி யாலுயர் மால்வரைச் சூழலிற் புகுந்த
ஊழி மாருதம் போலடும் எம்பிரான் ஒருவேல். 146

ஆகை யாலிவை உணர்ந்திலை இணையிலா தமர்ந்த
ஏக நாயக முதல்வனைப் பாலனென் றிகழ்ந்தாய்
சேகு லாவிய மனமுடைக் கற்பிலாச் சிறியோய்
போக போகயாம் இவ்வொரு தவற்றையும் பொறுத்தாம். 147

நொய்ய சொற்களால் எந்தையை இகழ்ந்தனை நொடிப்பின்
வெய்ய நாத்துமித் துன்னுயிர் வாங்குவம் விடுத்த
ஐயன் ஆணையன் றாதலின் அளித்தனம் அதனால்
உய்தி இப்பகல் வேற்படைக் குண்டியாய் உறைவோய். 148

உறுதி இன்னமொன் றுரைக்குவம் நீயுமுன் கிளையும்
இறுதி இன்றியே எஞ்சுதல் வேண்டுமேல் இமையோர்
சிறைவி டுக்குதி இகலினைத் தவிருதி செவ்வேள்
அறைக ழற்றுணை அரணமொன் றுன்னியே அமர்தி. 149

வேறு

என்றிவை பலப்பல இகப்பில்பெரு மாயைக்
குன்றெறி படைக்குரிசில் கொள்கைய தியம்பப்
புன்றொழில் படைத்துடைய பூரியன் உணர்ந்தே
கன்றினன் உயிர்த்தினைய கட்டுரைசெய் கின்றான். 150

கூறெயி றெழாதகுழ விச்சிறுவன் உய்த்த
தூதனென நினைந்துனது நின்னுயிர் விடுத்தேன்
பேரவை அவன்பெருமை பின்னுமொழி கின்றாய்
வீரமும் உரைக்குதியென் வெய்யசின முன்னாய். 151

கொஞ்சுமொழி கொண்டகுழ விச்சிறுவன் மேலாய்
எஞ்சலில தோர்முதல்வ னேயெனினு மாக
அஞ்சிடுவ னோசிறிதும் அண்டநிலை தோறும்
விஞ்சியமர் பண்ணவர்கள் யாவரையும் வென்றேன். 152

சேண்டபுரம தாகியமர் தேவர்சிறை தன்னை
வீண்படு கனவினும் விடுக்கநினை கில்லேன்

ஏண்பல பகர்ந்தனை எனக்கெதிர் இருந்தே
காண்பன தெலாமொரு கணத்திலினி யென்றான். 153

கொற்றமிகு சூரனிவை கூறிஅயல் நின்ற
அற்றமறு மானவருள் ஆயிரரை நோக்கி
ஒற்றுமைசெய் தோனுயிர் ஒறுத்தல்பழி வல்லே
பற்றியிவ னைச்சிறை படுத்திடுதி ரென்றான். 154

என்னலுமவ் வாயிரரும் ஏற்றெரி விழித்துத்
துன்னுகனை லப்புகை சுலாவுவது மானப்
பொன்னின்மிளிர் பீடிகை அமர்ந்தபுகழ் வீரன்
தன்னைவளை குற்றனர் தருக்கினொடு பற்ற. 155

மிடற்றகுவர் சூழ்வரலும் வீரனெழுந் தன்னோர்
முடிச்சிகை ஓராயிரமும் மொய்ம்பினொரு கையால்
பிடித்தவுணர் மன்னன்அமர் பேரவை நிலத்தின்
அடித்தனன் நொடிப்பிலவர் ஆவிமுழு துண்டான். 156

மார்புடைய மொய்ம்பொசிய வார்குருதி சோர
ஓர்புடையின் யாவரையும் ஒல்லைதனின் அட்டே
சூர்புடையின் முன்னரணி துன்னும்வகை வீசிச்
சீர்புடைய நம்பியிவை செப்பல்புரி கின்றான். 157

எந்தைநெடு வேலுனை இனித்தடிதல் திண்ணம்
மந்தமுறு முன்னமுன தைம்புலனும் வெஃக
வந்தபல துப்புரவும் வல்லைபெரி தார்ந்தே
புந்திதெளி வாய்அமர்தி போந்திடுவ னென்றான். 158

சீயவிறல் அண்ணலிவை செப்பியகல் காலை
ஆயவன் இருந்திடும் அரித்தவிசு தானும்
மீயுறவெ ழுந்துவிசும் பிற்றலையின் ஏகி
மாயையென ஒல்லையின் மறைந்துபடர்ந் தன்றே. 159

ஆகத் திருவிருத்தம்—639.

# 13. சதமுகன் வதைப் படலம்

—oo—

ஒண்ணில வெயிற்றினரொ ராயிரரை அட்டே
எண்ணலன் அவைக்களம் இகந்துபடர் காலைக்
கண்ணினமல் காலும்வகை கண்டுபுடை யாக
நண்ணுசத மாமுகனை நோக்கிநவில் கின்றான்.

ஆறுமுகன் ஆளையிவன் ஆயிரரை இங்ஙன்
கோறல்புரிந் தானெனது கொற்றமுழு தெள்ளி

வேறலுடை யோர்களென மேன்மைபல செப்பிச்
சேறல்புரி வான்தவிசும் உம்பரிடை செல்ல. 2

ஒட்டியநம் வீரரை ஒறுத்தகல் வனேனும்
விட்டதொரு தூதனொடு வெஞ்சமர் இயற்றி
அட்டல்பழி யாகுமவன் ஆற்றலை அடக்கிக்
கட்டிவிரை வால்வருகெ னக்கழற லோடும். 3

கூற்றுகுல முகிற்பொருவு சூரனடி தாழா
ஏற்றும்விடை பெற்றிசைவின் ஏகுதல் புரிந்தான்
நாற்கடலும் மேவினும் நதுப்பரிய ஊழிக்
காற்கனலின் ஓதைதொடர் காட்சியது மான. 4

ஏகுசத மாமுகன் இலக்கமற வீரர்
பாகம்வர எண்ணில்படை பாணியிசை பற்றி
வேகமொடு சென்றதனி வேலன்விடு வீர
வாகுவினை எய்தியொரு மாற்றம்அறை கின்றான். 5

காவல்பல நீங்கிவரு கள்வஉல குள்ளோர்
ஏவரும் வியப்பவரும் எங்களிறை முன்னம்
மேவினை இகழ்ந்துசில வீரருயிர் வௌவிப்
போவதெவன் நில்லுனது போர்வலி அழிப்பேன். 6

பட்டிமை உருக்கள்கொடு பாறல்அரி தாசை
எட்டுள பரப்பதனுள் ஆண்டகல்வை யேனும்
விட்டிடுவ னேயென விளம்பிவெரிந் எய்திக்
கிட்டுதலும் வீரனிது கேட்டனன் எதிர்ந்தான். 7

வேறு

கொற்ற வேலுடை அண்ணல்தன் மொழியினைக் கொண்டிலன் இகழ்ந்தென்னைப், பற்ற ஆயிரர் தங்களை விடுத்தலும் படுத்தனன் பெயர்காலை, மற்று மீதொரு வயவனை உய்த்தனன் மன்னவன் இவன் ஆவி, செற்று மாநக ரந்தனை அழித்தனன் செல்லுவன் இனியென்றான். 8

கருதி இன்னணஞ் சதமுகன் எனப்படு காவலன் றனைநோக்கிக், குருதி வேலுடைப் பண்ணவன் அடிமனங் கொண்டுதிண் டிறல்வாகு, பொருதல் உன்னியே ஈண்டறை கூவினை பொள்ளெனப் படையோடு, வருதி யாலெனத் தெள்விளி யெடுத்தனன் மறலிக்கும் இறைபோல்வான். 9

எல்லை யன்னதிற் சதமுகற் சூழ்தரும் இலக்கரும் எதிரூன்றி, வில்லு மிழ்ந்திடு வெஞ்சரந் தொடுத்தனர் வேற்படை விடுக்கின்றார், கல்லெ னும்படி நேமிகள் உருட்டினர் கப்பணஞ் சிதறுற்றார், வல்லை முத்தலைப் படையெழு வோச்சினர் மழுக்கொடே எறிகின்றார். 10

அணிகள் பட்டவர் விட்டஇப் படைவகை அண்ணன்மேற் புக லோடுந், துணிகள் பட்டன நெரிந்தன எரிந்தன துகளுமாய்ப் போயிற் றால், மணிகள் பட்டிடும் இருஞ்சிறைக் கலுழர்க்குள் வலியன்மேற் படுநொய்ய, பணிகள் பட்டன போன்றன வேறிலை படியெடுத் துரைத்தற்கே. 11

இலக்க மாகிமுன் னின்றபேர் ஆண்டகை இவர்செய லினை நோக்கி, இலக்க மாய்முழு துலகமுந் துளக்கியே இராயிரப் பத்தென் னும், இலக்க மாமுடி கொண்டதோர் சூளிகை இம்மெனப் பறித் தேந்தி, இலக்கமாகியே யெதிர்பொரு தானவர் தங்கள்மேல் எறிந் திட்டான். 12

ஏதி லான்விடு சூளிகை சிறகர்பெற் றிறந்துவீழ் மேருப்போல், மீது சென்றமர் இயற்றியே நின்றிடும் வெய்யவர் மிசையெய்தித், தாது முற்றவுஞ் சாந்துபட் டொருங்குறத் தனுவெலாஞ் சிதைத்திட்டே, ஓத நீர்முகி லார்ப்பொடு புவிக்கண்வீழ்ந் துடைந்தன உதிராகி. 13

கொடிசெ றிந்திடு சூளிகை தன்னுடன் அவுணர்தங் குழாங் கொண்ட, முடிசி தைந்தன நாசிநீ டலையெலாம் முடிந்தன முடி வில்லா, வடிவ மைந்திடு கன்னகூ டத்தொகை மாய்ந்தன நிலைகொள் ளும், அடித கர்ந்தன கொடுங்கையும் மாண்டன ஒழிந்தவும் அழி வுற்ற. 14

இலக்கர் தம்மையுஞ் சூளிகை தன்னுடன் இமைப்பொழு தினில் அட்டு, நிலக்கண் வீரனின் றிடுதலுஞ் சதமுகன் நிரைவிழி கொடு நோக்கிக், கலக்க நண்ணியே தமரினைக் காண்கிலன் கவன்றனன் தெளிவெய்தி, உலக்கை சூலம்வேல் சக்கரந் தோமரம் ஓச்சுதல் உறு கின்றான். 15

உற்ற காலையின் ஒண்டிறல் மொய்ம்பினோன் உருகெழு சினஞ் செய்தோர், பொற்றை நேர்தரு சிகரியைப் பறித்தனன் பொள்ளென எறிகாலை, மற்றொர் வார்சிலை வணக்கியே வெய்யதீ வாளியா யிரம் பூட்டி, இற்று வீழ்வகை இடைதனில் அறுத்தனன் எறிதரு கதிர் வேலான். 16

அறுத்து நூறுகோல் பின்னரும் ஆங்கவன் ஆகத்தின் நடுவெய்தச், செறித்த காலையின் வீரவா குப்பெயர்ச் செம்மல்போய் அவன்வில்லைப், பறித்த னன்முறித் தெறிதலுஞ் சதமுகன் பற்றவீ திடையென்னாக், குறித்தொ ரைம்பதிற் றிருகரம் ஓச்சியே குரிசிலைப் பிடித் திட்டான். 17

பிடித்த தானவத் தலைவனை அண்ணலோர் பெரும்புயங் கொடு தாக்கிப், படித்த லைப்படத் தள்ளலும் வீழ்ந்துளான் பதைபதைத் தெழுகாலை. அடித்த லத்தினால் உதைத்தனன் அசனியால் அழுங்குறும் அரவம்போல், துடிப்ப வேயுரத் தொருகழல் உறுத்தினன் சோரிவாய் தொறுஞ்சோர. 18

கந்தெ னப்படு மொய்ம்புடை வெய்யசூர் கட்டுரை முறை போற்றி, வந்தெ திர்த்திடு சதமுகத் தவுணனை மிதித்திடும் அற **மைந்தன், அந்த கப்பெயர் அசுரனை யாற்றல்பெற் றமர்முய லகன்றன்னைத், தந்தி யைப்பதம் ஒன்றுகொண் டூன்றிய தாதைபோல் திகழ்கின்றான்.** 19

வேறு

மின்னல் வாளெயிற் றவுணன் மார்பகம் விடரெ னும்படி விள்ளவே, தன்னொர் பாதமு றுத்தி மற்றொரு தாளி னைக்கொடு தள்ளியே, சென்னி யாவும் உருட்டி னன்திசை முற்றும் நின்று பரித்திடுங், கன்ன மார்மத மால்க ளிற்றினும் வன்மை சான்றிடு கழலினான். 20

நூறு சென்னியும் இடறி யாங்கொரு நொடிவரைப் பின்முன் அவுணனை, ஈறு செய்தனன் அதுமு டித்தபின் எல்லை யில்சின மெய்தியே, ஆறு மாமுக வள்ளல் வாய்மை இகழ்ந்து ளான்அவை யத்தை முன், ஈறு செய்துபின் நடுவன் இந்நக ரத்தை யென்று நினைந்தனன். 21

ஆகத் திருவிருத்தம் - 660.

# 14. காவலாளர் வதைப் படலம்

—oo—

சூடும் வேற்படைத் தொல்குமரேசன
தடிகள் முன்னி அருளுடன் ஆண்டகை
படிய ளந்திடு பண்ணவ னுமென
நெடிய பேருருக் கொண்டுநின் றனரோ.

திசைய ளந்தன திண்புயஞ் சென்றுசேண்
மிசைய ளந்தன மேதகு நீண்முடி
வசுதை யாவும் அளந்தன வார்கழல்
அசைவ ருந்திறல் ஆடவன் நிற்பவே.

திருவு லாங்கழற் சீறடிச் செம்மல்பேர்
உருவு தாங்கி உகந்தனன் நிற்றலும்
அரவின் வேந்தரும் ஆதியங் கூர்மரும்
வெருவி னார்கள் வியன்பொறை ஆற்றலார்.

கதிரெ றித்திடு காமரு பூணினன்
மதுகை பெற்ற வடிவொடு நிற்றலும்
அதுப ரித்தற் கருமையின் ஆற்றவும்
விதலை யுற்றது வீர மகேந்திரம்.

உலங்கொள் வாகுவின் ஒண்பதம் ஊன்றலும்
விலங்கி யேதளர் வீர மகேந்திரம்

இலங்கை நீர்மையெய் தாமல் இருந்ததால்
குலங்கொள் தானவக் கோமகன் ஆணையால். 5

சேணை ளாவிய சென்னியன் எண்டிசை
காண நிற்புறு காட்சியன் கந்தவேள்
ஆணை காட்டிநி றுவிய ஆடலாந்
தாணு வென்னத் தமியன் விளங்கினான். 6

ஏன்ற கேள்வித் தலைமகன் நாட்டுணா
ஊன்று கின்ற வழிதொறும் மாநிலம்
ஆன்று கீண்டிட அவ்வப் புழைதொறுந்
தோன்று கின்றன சூழ்கடல் நீத்தமே. 7

ஆத்தன் ஊன்றும் அடிதொறுந் தோன்றிய
நீத்தம் யாவும் நெடுந்திறல் வெய்யசூர்
வாய்த்த கோயில் வளைந்திறை போற்றிய
வேத்த வைக்களந் தன்னினும் மேவிய. 8

பூழை கொண்டு புறம்படர் நீத்தநீர்
மாழை கொண்டவன் கோயில் வளைந்துபாய்ப்
பேழை கொண்ட பிணிப்பறு பாந்தள்போல்
கூழை கொண்ட மறுகிற் குலாயதே. 9

தூய்ய பூழை தொறுந்தொறுந் தோன்றுநீர்
மையல் வெங்கரி வாம்பரி தேர்படை
கைய றிக்கொடு காசினி யாறுபோல்
செய்ய மாநகர் யாங்கணுஞ் சென்றதே. 10

தோட்ட தன்ன சுழிப்படு வாரியின்
ஈட்ட மாநகர் வீதிதொ றேகியே
பாட்டின் மாளிகை பற்பல சாடியே
மீட்டும் ஒல்லையின் வேலை மடுத்ததே. 11

எம்மை யாளுடை எந்தைதன் தூதுவன்
செம்மை நீடு திருவுரு நோக்கியே
கைம்ம றிக்கொடு கண்டனர் யாவரும்
அம்ம வோவென அச்சமுற் றோடினார். 12

மாவு லாவரும் மன்னவன் கோயிலுட்
காவ லாளர்இக் காளையைக் கண்ணுறீஇ
ஓவி தோர்வஞ்சன் உற்றனன் ஈண்டெனாக்
கூவி ளித்தனர் தத்தமிற் கூடினார். 13

கூடு கின்ற குணிப்பருங் காவலோர்
நீடு மெய்கொடு நின்றவற் கஞ்சியே
ஆடல் பூண்டிலம் என்னின் அரசனே
சாடு நம்மைச் சரதமென் றெண்ணினார். 14

குமரி மாமதிற் கோயிலுட் போற்றியே
அமரி யோர்களோ ரைம்பது வெள்ளத்தர்
திமிர மேனியர் தீயுகு கண்ணினர்
நமரி யற்றத் தலைத்தலை மண்டினார். 15

மண்டி மற்றவர் வல்லெழுத் தோமரம்
பிண்டி பாலம் பெருங்கதை ஆதியாக்
கொண்ட கொண்ட கொடும்படை வீசியே
அண்டம் விண்டிட ஆர்த்தனர் ஆடினார். 16

ஆடும் எல்லை அடுமடைத் தானவர்
பாடு சூழ்ந்த பரிசினை நோக்கினான்
நீடு மான்ற இடித்தொகை ஆயிர
கோடி போற்புயங் கொட்டிநின் றார்ப்பவே. 17

அலைக்க வந்த அவுணப் படையெலாங்
கலக்க மூழ்கிக் கருத்துணர் வழிகியே
உலக்கு றூஉ உருமிடி உண்டிடும்
புலைக்க டுங்தொழிற் புள்ளென லாயவே. 18

வேறு

பன்மறைக் குலங்களிற் படைக்கலங்கள் யாவையும்
வன்மைபெற்ற வீரருய்ப்ப வந்துமேனி படுதலுஞ்
சின்மயத்தன் ஒற்றன்மிக்க செய்யவீழ் விழுத்திய
தொன்மரத் தியற்கைபோன்று சோரிசோர நின்றனன். 19

ஆனகாலை வீரவாகு அறிவனங்கி யிற்சினை இ
மானவீரர் மீதலாது வாளெடுக்க லேனெனாத்
தேனின்மாப் பெருங்கடல் திளைத்தலைக்கு மத்தெனத்
தானவப் பதாதியைத் தடிந்தலைத்தல் மேயினான். 20

மிதித்தனன் கொதித்தனன் விடுத்திலன் படுத்தனன்
மதைத்தனன் புதைத்தனன் தகர்த்தனன் துகைத்தனன்
உதைத்தனன் குதித்தனன் உருட்டினன் புரட்டினன்
சிதைத்தனன் செகுத்தனன் செருக்கினன் தருக்கினன். 21

சிரத்தினை நெரித்தனன் திறற்புயம் இறுத்தனன்
கரத்தினை முரித்தனன் களத்தினைத் திரித்தனன்
உரத்தினைப் பிளத்தனன் உருத்தனன் சிரித்தனன்
புரத்தினை உரித்தனன் பொடித்தனன் படைத்திறம். 22

எடுத்தனன் சுழற்றினன் எறிந்தனன் சிலோர்தமைப்
புடைத்தனன் இடித்தனன் புயத்திறுற் சிலோர்தமைப்
பிடித்தனன் பிசைந்தனன் பிழிந்தனன் சிலோர்தமை
அடித்தலங் கொடித்தலத் தரைத்தனன் சிலோர்தமை. 23

பெருத்தனன் சிறுத்தனன் பெயர்ந்தும்வேறு பல்லுருத்
தரித்தனன் நடந்தனன் தனித்தனி தொடர்ந்தனன்

மருத்தெனக் கறங்கினன் வளைந்தனன் கிளர்ந்தனன்
ஒருத்தன்வெள்ளம் ஐம்பதும் உலக்குறக் கலக்கினான். 24

மஞ்ஞை அன்னம் ஒண்புறா மடக்குயில் கிரட்பயில்
செய்ஞ்ஞலங்கொள் மாடமீது சேணங்கூளி பிள்ளைகள்
பிஞ்ஞகன் குமாரனொடு பேரமர்க் களம்படும்
அஞ்ஞையாளர் குருதியூன் அருந்துமா றிருந்தவே. 25

மானினஞ் செறிந்திரிந்து வந்ததெல்லை தன்னிடைத்
தானொர்சிங்க ஏறுபுக்க தன்மைபோல அவுணர்தங்
கோனிருந்த உறையுளிற் குலாயகாவ லாவராஞ்
சேனைவெள்ளம் ஐம்பதுஞ் சினத்தின்வல்லை சிந்தினான். 26

முறிந்தனர் உறுப்பியாக்கை முற்றும்வேறு வேறவாய்ப்
பிறிந்தனர் தகர்ந்தனர் பிறங்குசென்னி சோரியுட்
செறிந்தனர் புதைந்தனர் சிதைந்தனர் உருண்டனர்
மறிந்தனர் இறந்தனர் மடிந்தனர் கிடந்தனர். 27

இன்னபான்மை வீற்றுவீற்றின் அவுணர்தானை யாவையுஞ்
சின்னபின்ன மாகியே சிதைந்துவீழ்ந் துலந்திட
உன்னுகின்ற முன்னமட் டுலம்பினான் சிலம்பினின்
மன்னன்மங்கை நூபுரத்தின் வந்தவீர வாகுவே. 28

வள்ளல்நின்று சமரிழைப்ப மாண்டவீரர் யாக்கையின்
உள்ளதாது வானமூழும் உருவம்வேறு காண்கிலா
தள்ளலாகி யொன்றுபட்ட தங்கிதன்னின் உருகியே
வெள்ளியாதி உலகம்யாவும் விரவும்வண்ணம் என்னவே. 29

ஆகத் திருவிருத்தம்—689.

# 15. நகரழி படலம்

—oo—

ஆசுறும் அவுணர் வெள்ளம் ஐம்பது முடித்தோன் ஐஞ்ஞூ
றோசனை அளவை யான்றே ஓராயிர மும்ப ரேகித்
தேசுறு மேரு வென்னச் சிகரமோ ரிலக்கஞ் சூடி
வீசுபொன் சுடர நின்ற வேரமொன் றங்கட் கண்டான். 1

புறத்திருள் இரிய வைகும் பொலஞ்சுடர்ப் பொன்செய் வேரந்
திறத்தியல் கோயில் முன்னஞ் சேர்ந்தது தன்னை வீரன்
பறித்தொரு கரத்தின் ஏந்திப் பதுகனுஞ் சூர பன்மன்
அறத்தியல் இழுக்கி வைகும் அவைக்களம் வீசி ஆர்த்தான். 2

பன்மணி செறிந்த பொற்பிற் பாயொளி எரிபொன் வேரம்
மன்னவன் உறையுஞ் செம்பொன் மாயிரு மன்றில் போதல்

மின்னவிர் மேரு வாதி வெற்பெலாம் மிகலின் ஒன்றிப்
பொன்னகர் பொடிப்பச் செல்லுந்தன்மையைப் போலுமம்மா.

வார்த்தரு கழற்கால் வீரன் வானுரும் ஏறும் உட்க
ஆர்த்திடு துழனி யேகி அரசன்மே வியவத் தாணி
சேர்த்தவர் கன்னத் தூடு செறியுமுன் எறித லுற்ற
பேர்த்திடு செம்பொன் வேரம் பேரவை மிசையுற் றன்றே. 4

விற்செறி தூடிச் செம்பொன் வியன்மணி கஞலும் வேரங்
கற்செறி பெருந்தோள் வீரன் எறிதலுங் கடிது நண்ணிப்
பொற்செறி மார்பிற் சூரும் புதல்வருஞ் சிலரும் வைகுஞ்
சிற்சில இடையே அன்றி மன்றெலாஞ் சிந்திற் றுமால். 5

தடத்தனி வேரங் கீண்டு தபனியத் தவைக்கண் ஓச்சி
இடித்தனன் ஒருதான் நிற்கும் எம்பிரா னேவல் தூதன்
படைத்தளித் திறுதி வேலைப் பசும்பொனூர் தசும்பின் அண்டம்
உடைத்துல கழித்து நிற்கும் ஒருபெருங் கடவுள் ஒத்தான். 6

புலவுகொள் அலகு வெவ்வாய்ப் புட்செறி பொதும்பர் தன்னில்
பலமுடை உருமு வீழப் பட்டதோர் பரிசு தென்னத்
தொலைவகன் மைந்தன் விட்ட சூளிகை தகர்ப்பத் தொல்சீர்
மலிவுறு சனங்க ளோடு மன்றமங் குற்ற தம்மா. 7

இடிந்தன மிசையின் எல்லை இற்றபித் திகையின் சூழல்
பொடிந்தன உத்தி ரங்கள் போதிகை பூழி யாகி
முடிந்தன மதலை யாவும் முரிந்தன கபோதம் வீழ்ந்து
மடிந்தன திருவுஞ் சீரும் மன்றழி வுற்ற தன்றே. 8

பீடிகை புரைந்த பொற்பிற் பேரவை தகர்த லோடும்
பாடுற அரசர் சூழ்ந்த பரிசனர் தம்முட் சில்லோர்
ஓடினர் சிலவர் மெய்யூ றுற்றனர் சிலவர் நெக்கு
வீடினர் சிலவர் ஆற்ற மெலிந்தனர் புலம்ப லுற்றார். 9

நெக்கது பொதியி லாக நிரந்தது செம்பொற் பூழி
திக்கொடு புவியும் வானுஞ் செறிந்தன அவுண ராகித்
தொக்கனர் உடைந்து மாய்ந்துதொகைபிரிந் தழிந்தார் தொல்லைத்
தக்கனின் உணர்வு தீர்ந்த தருவர்கோன் இவற்றைக் கண்டான்.

ஆயிர நாமத் தண்ணல் அனையவன் வன்மை காணு
ஆயிரம் வடவை யேபோல் அழன்றுதன் னயலின் நின்ற
ஆயிர நெடுந்தோள் ஐஞ்ஞூ றுனனங் கொண்ட தீயோர்
ஆயிரர் தம்மை நோக்கி அடலுரும் ஏற்றிற் சொல்வான். 11

விழிப்பரு நிவப்பின் ஓங்கும் வேரமொன் றதனைக் கீண்டே
தெழிப்பொடு குமரன் தூதன் செலுத்தினன் செம்பொன் மன்றம்
இழிப்புறத் தகர்ந்து வீழ்ந்த தீண்டுசில் லிடமே அன்றிப்
பழிப்பெனக் கிதன்மேல் உண்டோ பட்டதென் புகழும் மன்னோ. 12

கோறலே கொற்ற மன்றால் ஒற்றனைக் குறுகி நீவிர்
மாறுபோர் இயற்றி யேனும் மற்றவன் வறாத வாற்றால்
ஈறுசெய் திடாது பற்றி எம்முனர்த் தருதிர் மெய்யின்
ஊறுசெய் தவனை வாளோ டுடன்சிறை உய்ப்ப னென்றான். 13

அன்னவர் அதனைக் கேளா அரசவீ தருளிக் கேண்மோ
ஒன்னலன் தூதன் சோரி உயிரொடு குடித்தற் குற்றாம்
நின்னருள் ஆணை நாடி நெஞ்சகம் புழுங்கி யஞ்சி
இன்னதோர் பொழுதுந் தாழ்த்தேம் இனியது புரிது மென்றார். 14

என்றனர் வணக்கஞ் செய்ய இனிதெனா உவகை பூத்துக்
கன்றிய அவுணர் தங்கள் காவலன் விடுப்ப அங்கட்
சென்றனர் பத்து நூற்றுத் திறலுடை மொய்ம்பர் முன்னாம்
நின்றிடு வீர வாகு நிலைமையை உரைக்க லுற்றாம். 15

வேறு

வேரம தெறிந்தவை வீட்டி நின்றுளான்
சூருறை நகர்வளந் தொலைச்சிச் சூழ்நர்
சேருறும் இருக்கையுஞ் சிதைப்பன் இன்றெனா
ஓருறு புந்தியில் உன்னி னானரோ. 16

மறிப்பிணை முதலிய மான்கள் புள்ளினஞ்
சிறப்புறு தண்டலை மணியிற் செம்பொனிற்
குறிப்பினர் குயிற்றுசெய் குன்றம் யாவையும்
பறித்தனன் திசைதொறும் பரவ வீசினான். 17

வரைவயி றுயிர்த்திடு மாசில் பல்பகை
அரதன நிரைகளின் அணிய செம்பொனின்
மரபினில் இயற்றிய வரம்பில் தெற்றிகள்
விரைவொடு தொட்டனன் எடுத்து வீசினான். 18

முடிவகல் பேழையின் மூட்டு நீக்கியே
அடியுறு கொள்கலம் அவற்றைச் சாய்த்தெனப்
படியுறு மண்டபம் பலவுந் தொட்டெடா
இடிபுரை ஓதையான் யாண்டும் வீசினான். 19

மலரயன் மிசையுறு மாயற் புல்லுவான்
நிலமகள் கைகளை நீட்டி யென்னவான்
உலகெலாம் இகந்துமேல் ஓங்கு கோபுரம்
பலபல பறித்தனன் பாங்கர் ஓச்சினான். 20

மூளுறும் எரிசிகை முடித்துத் தானவர்
கேளொடு தமித்தமி கெழுமி யுற்றென
வாளுறு மாமணி வயங்கு தூபிகைச்
சூளிகை பலபல தொட்டு வீசினான். 21

கற்றிடும் விஞ்சையின் கழகம் பல்கடைத்
தெற்றிகள் வேதிகை சிறந்த சாலைகள்

துற்றிடு பழுமரச் சோலை வாவிகள்
மற்றுள பிறவொடும் மட்டித் தானரோ. 22

கந்துக வியனிரை கரிகள் தேர்த்தொகை
பந்தியிற் சாலையிற் பயின்று நின்றன
அந்தமின் றுயின அள்ளி அள்ளியே
உந்தினன் திசைதொறும் உரற்றி வீரனே. 23

நிலவரை சூழ்தரு நேமி வெற்பென
மலிதரு செம்மணி வகையிற் பண்ணிய
பலவகை இயந்திரப் பதண இஞ்சிகள்
ஒலிகழற் காலினுன் உதைத்து வீட்டினன். 24

பூழியம் பொற்புயப் புனிதன் வெய்யசூர்
வாழுறு கோநகர் வளத்தை யின்னணம்
ஊழியின் மருத்தென உலாவி யட்டபின்
சூழுறு கிடங்கருந் தூர்த்திட் டானரோ. 25

அறந்தலை நின்றிடா அரசன் கோயில்நின்
றெறிந்திடு சிகரிகள் இலங்கு சூளிகை
நிறைந்திடு மண்டபம் நெருங்கு காமர்காச்
செறிந்தன பிறவொடு சென்று சேணெலாம். 26

உளர்ந்திடு வரியளி யுலாவு தொங்கலான்
வளர்ந்திடு பாணியான் மன்னன் செல்வமாய்க்
களைந்தெறி கின்றன கணிப்பி லாதவும்
கிளர்ந்திடு நெடுமுகில் கிழித்துச் சென்றவே. 27

சூரெனும் அவுணர்கோன் படைத்த தொல்வளஞ்
சேரிய மிசைவரத் தெரிந்து வானிடைச்
சாருறு கடவுளர் தம்முள் ஏங்கியே
ஏரியல் தொகைபிரிந் திரியல் போயினர். 28

ஊனிவர் குருதிவேல் ஒருவன் ஓச்சிய
தானவர் கோன்வளந் தகைந்து விண்ணவர்
மேனிகழ் பதங்களை வீட்டி ஏகியே
வானதி தன்னையும் வல்லை தூர்த்தவே. 29

வெறித்திடு தார்ப்புய விடலை நொய்திலில்
பறித்தெறி அவுணர்கோன் பலவளங்களும்
எறித்திடு தீங்கதிர் எல்லை வேந்தனை
மறைத்தன பணிபல மயங்கிச் சூழ்ந்தபோல். 30

சோலையின் மண்டபத் தொகையிற் சூளிகைப்
பாலினிற் சிகரியிற் பயின்ற புள்ளெலாம்
மேலுறு செலவினில் விரைவின் ஏகியே
மாலயன் புள்ளொடு மருவி வைகிய. 31

செஞ்சுடர்ச் சூளிகை சிகர மாதிகள்
விஞ்சிய மிசைவர விழித்துத் தாளிலோன்
எஞ்சிய வுடலமும் இறுங்கொல் இன்றெனு
அஞ்சினன் அழுங்கினன் அலரி பாகனே. 32

வள்ளுறு வசிகெழு வயிர மாமுடி
உள்ளபல் சூளிகை உம்பர் செல்வன
பிள்ளைகள் எறிந்திடப் பிறங்கு பம்பரம்
பொள்ளென ஈண்டிவாள் போவ போன்றவே. 33

மீப்படு வியன்முகில் கிழித்து விண்மிசை
மாப்பெருஞ் சிகரிகள் வல்லை செல்வன
நீப்பருங் ககனமான் நெடுங்க துப்பினில்
சீப்பிடு கின்றதோர் செய்கை போலுமால். 34

பயனுறு பழுமரப் பைம்பொற் காமர்கா
வயனெறி தந்திட அகல்விண் செல்வன
நயனறும் அவுணனூர் நணிய கற்பகம்
வியனுல கிருந்திட மீள்வ போன்றவே. 35

ஐயன தொற்றுவன் அள்ளி வீசிய
செய்யபல் பொருள்களுஞ் செறிந்து சேணெலாங்
கொய்யுளை வயப்பரிக் கொடிஞ்சித் தேர்மிசை
வெய்யவன் செலவினை விலக்கு கின்றவே. 36

திருமிகு சூளிகை சிகர மாதிகள்
நிரல்பட ஏகியே நிரந்த பல்வகைப்
பருமணி யெரிசுடர் பரப்பி வான்படர்
இரவிதன் கதிரையும் இகலி வென்றவே. 37

மின்னவிர் சிகரிபொன் வேர மாதிகள்
என்னவும் வான்படர்ந் தெழாலின் விஞ்சையர்
உன்னுறும் ஓங்கலும் உவண வைப்பெனும்
பொன்னெயில் வட்டமும் பூழி செய்தவே. 38

குன்றெடு சூளிகை கோபு ரம்பிற
ஒன்றுடன் ஒன்றுபட் டுரிஞ்சி யாயிடைத்
துன்றிய மணிதிசை தோறுஞ் சிந்துவ
மின்றிகழ் தாரகை விளிந்து வீழ்வபோல். 39

பொற்றைகள் சிகரகோ புரங்கள் தத்தமில்
எற்றுழிப் புகையென எழுந்து பூழிகள்
சுற்றிய புலிங்கமுந் தோன்று கின்றன
வெற்றவெம் புயல்களு மின்னும் போலவே. 40

ஏழுயர் களிறனன் எறிந்த யாவையுஞ்
சூழுற வானிடைத் துவன்ற எற்றலிற்

கேழுறு நுண்டுகள் கெழுமிச் சிந்துவ
பூழியின் நெடுமழை பொழியுந் தன்மைபோல். 41

ஆரியன் ஓச்சிய அணிகொள் மண்டபம்
வேரமொ டகன்பொழில் பிறவும் விண்ணுறீஇத்
தாரகை முதற்சுடர்த் தனுக்கள் சார்ந்திடச்
சோரியும் இடையிடை துளித்த தென்பவே. 42

புந்தியி லான்மகம் புகுந்த தீமையால்
இந்திர னுதியோர் யாருஞ் சூரனால்
நொந்தனர் அவன்நகர் வளமும் நோவுற
அந்தரத் தவரையும் அலக்கண செய்தவே. 43

வெற்புறழ் மொய்ம்பினன் விடுத்த சூளிகை
பற்பல பொருந்தலும் பட்ட வன்னிபோய்
எற்படு கதிருடை இரவி பச்சைமாப்
பொற்புறு கொய்யுளை பூழி செய்ததே. 44

பொன்னவிர் சிகரகோ புரங்க ளாதிய
துன்னிய தாக்கலில் தோன்றித் தீப்பொறி
இன்னுயிர் வழங்கிய வெல்லை எங்கணும்
வன்னிபெய் மழையென மயங்கி வீழ்பவே. 45

வழுவுறும் அவுணர்கோன் வளங்கள் யாவையுங்
கெழுதகு விசும்பினைக் கிழித்துச் சேறலின்
எழிலிகள் வயிறுடைந் திரங்கி ஆற்றலா
தழுதென உலகெலாம் அறல்சிந் துற்றவே. 46

வேறு

ஏசிலா அறிவன் விட்ட இன்னபல் வெறுக்கை யாவும்
மாசகல் விசும்பின் ஏகி மதிமுடி அருள்பெற் றுள்ள
கோசிகன் துறக்க முய்த்த கொற்றவன் தவறி யென்ன
ஆசுற மீண்டு ஞாலத் தகிலமும் வீழ்ந்த அன்றே. 47

படிதனில் திசையின் பாலிற் பௌவத்திற் பழுவந் தன்னில்
தடவரை தன்னில் இன்ன தகையன பிறவிற் சூர
னுடையபல் வளங்க ளெல்லாம் உரற்றியே வீழ ஆண்டும்
இடைதரு முயிரின் பொம்மல் வெருவிவீழ்ந் திரித லுற்ற. 48

அலைந்தது பரிதி ஓங்கல் அதிர்ந்தது மேருச் சையங்
குலைந்தது சூழுங் குன்றங் குலுங்கிய அசலம் ஏழுங்
கலைந்தது நாகர் வைப்புங் கலங்கிய கடலும் பாரும்
உலைந்தன உயிர்கண் முற்றும் ஓடின திசையின் யானை. 49

தண்படு தொடலை மார்பன் தானெறிந் தவற்றிற் பல்வே
றெண்புவி முழுதுஞ் சிந்திற் றெறிந்தன உலப்பி லாத
எண்பதி னுயி ரப்பேர் யோசனை யெல்லைத் தாகிக்
கண்படு சூரன் ஊரில் கல்லெனா வீழ்ந்த மாதோ. 50

முடிந்திடல் அரிய சூரன் மொய்வளம் அவனூர் முற்றுந்
தடிந்தெறி உருமே றென்னத் தணப்பற வீழ்த லோடும்
இடிந்தன மாட வீதி யாவையுங் கடிகா இற்ற
பொடிந்தன சிகரி யாதி புரிசைகள் மறிந்து மாண்ட. 51

மண்டபஞ் சிகரி வேரம் அணிமதில் மாட கூடம்
எண்டகு பொதியின் முற்றும் இடிபட எழுபொற் பூழி
விண்டொடு திசைபார் யாண்டும் வெறுக்கையின் வடிவ மாக்கி
அண்டர்தம் உலகீ தென்றே அறிகுறு வகைசெய் தன்றே. 52

புடையகல் பொன்செய் மூதூர் பொள்ளெனத் தகர்ந்து வீழ
மிடைதரு வீதி முற்று மேயின சனங்கள் யாவும்
கடைவரு நாள தெல்லைக் ககனமூ தண்ட கூடம்
உடைதலும் முடியும் ஆவி அரற்றுமா றொத்த தன்றே. 53

வேறு

நாக முந்து நறுங்குழல் மாதவி
நாக முந்து நறுங்குழற் பொற்கணி
சேக ரம்பல சிந்திடு காழுடைச்
சேக ரம்பல வோடு சிதைந்தவே. 54

கோட ரங்குல வுற்றிட வான்றொடுங்
கோட ரங்குல வுற்றிடு தண்டலைக்
கோட ரங்குலங் கோலஞ்செய் பொன்வரைக்
கோட ரங்குல வுற்றிறை கொண்டவே. 55

ஓடும் வாவியின் மீனினம் ஓங்குபுள்
ளோடும் வாவிவிண் ணுற்றிட வீதியின்
மாட மாலை வரிசையின் மல்கிய
மாட மாலை மறிந்திடி பட்டதே. 56

அண்ட ரண்டரும் அந்தகர் மாண்டன
அண்ட ரண்டம் அளவிடு சூளிகை
மண்ட பம்மதின் மாடந் தரித்தயர்
மண்ட பம்மதின் மாதவம் யாவதே. 57

பூவை யன்ன மணிமயில் பொற்புறு
பூவை யன்ன மணிமயில் பொற்புறு
வாவி யோடைவண் டான மழிந்திட
வாவி யோடைவண் டானம் அழியுமால். 58

மொய்யு டைத்தறி மோதித் தளைபரீஇ
மையு டைப்பெரு மால்கரி சோரிநீர்
மெய்யி டத்துக வின்முகி லச்சுறக்
கையெ டுத்துக் கதறி உடைந்தவே. 59

ஈடு சான்ற வெருத்த முரிந்திட
நீடு பூநுதல் நெக்குறக் கிம்புரிக்

கோடு சிந்தக் குருதியு குத்தரோ
ஓடி வீழ்வ உவாக்கள் அரற்றியே. 60

கார்கொள் சிந்துரங் காயத் திடையிடைச்
சோரி சோர்தரத் தோன்றுவ ஈற்றினின்
மேரு வாதி விலங்கலை மெய்க்கனல்
சாரும் வெம்புகை தன்னொடுஞ் சூழ்ந்தபோல். 61

கொடிகள் இற்ற கொடிஞ்சி முரிந்தன
இடைகொள் பீடிகை எல்லைகள் நெக்கன
அடிகொள் சில்லியும் ஆருஞ் சிதைந்தன
பொடிய தாகிப் புரண்டன தேர்களே. 62

பந்தி தோறும் பராவிய ஐங்கதிக்
கந்து கங்கள் கலங்கி நெரிந்திட
நொந்து மேனி நொறில்வரு செம்புனல்
சிந்தி யோடச் சிதறிய திக்கெலாம். 63

சிதவல் கொண்டிடு செம்மயிர்க் கொய்யுளை
மதுகை வெம்பரி வாய்களின் வீழ்தரு
முதிர வாரி யொலிகடல் புக்கதால்
இதுகொ லோவட வைக்கனல் என்னவே. 64

காள வெங்கரிக் காலின் வயப்பரித்
தாளின் ஊடகப் பட்டுத் தரைபுகா
மூளை சிந்த முழுதுடல் பூழியாய்
மாளு கின்றனர் மாநக ரோர்சிலர். 65

ஆளி மொய்ம்புடை அண்ணல்முன் வீசின
நீளு மாநகர் நொள்ளலின் வீழ்தலுந்
தோளி ழந்து சுவல்முரிந் தொய்யெனத்
தாளி ழந்து தரங்கமுற் றோர்சிலர். 66

பொற்றை யன்ன பொலன்மணி மாளிகை
இற்று வீழ்தலும் என்னிது வென்றெழீஇ
வெற்ற வெள்ளிடை மேவுதல் முன்னியே
முற்றம் வந்திடு முன்மறிந் தார்சிலர். 67

ஊடு மைந்தரும் ஒண்டொடி மாதரும்
மாட மோடு மறிந்தனர் தம்முடல்
வீடி விண்மிசை வேற்றுரு வெய்தியே
கூடி யேவழிக் கொண்டன ரோர்சிலர். 68

உவமன் இல்லவன ஓச்சின எங்கணும்
அவதி யின்றிப் பொழிய வவைதெரீஇத்
தவறி லாதுசெய் தாழ்வரை கீண்டொடாக்
கவிகை யாத்துமைக் காத்துநிற் பார்சிலர். 69

விறற்கொள் வாகு விடுத்தன கல்லக
வுறைப்பின் வீழ ஒதுங்கிடம் இன்மையிற்
சிறக்கு மாநகர்ச் செந்தரைக் கொண்டகீழ்
அறைக்கு ளேபுக் கலமரு வார்சிலர். 70

மாதர் தங்களை மக்களை அன்னையைத்
தாதை மாரைத் தமதுகைப் பற்றியே
ஏதின் மாடம் இகந்துகச் சோரிநீர்
வீதி போந்து வெருவிநிற் பார்சிலர். 71

கருவி வானினுங் கண்ணகன் திக்கினுந்
தரணி தன்னினுந் தாவிலன் வீசிய
திருவ ளங்கள் செறிந்தன வீழ்தலும்
வெருவிப் போய்க்கடல் வீழ்ந்தொளிப் பார்சிலர். 72

கிழிந்த சென்னியிற் கேழ்படு செம்புனல்
கழிந்து தோன்றவுங் கண்டனர் ஐயுறுப்
பொழிந்து மெய்ப்புறம் போர்த்தலுந் தேற்றியே
அழிந்தி ரங்குற ஆகுலிப் பார்சிலர். 73

ஆடல் மொய்ம்பினன் ஆர்த்துமுன் வீசிய
மாட வீதி வளநகர் எங்கணும்
நீட வீழ்தலும் நிற்றலை அஞ்சியே
ஓடி யூறுற் றுயிர்துறப் பார்சிலர். 74

திங்கள் சூடி திருமகன் விட்டன
எங்கும் வீழும் இறப்பினை நோக்கியே
அங்கி வெங்கணை தொட்டறுத் தன்னவை
தங்கள் ஆருயிர் தாங்கிநிற் பார்சிலர். 75

மையல் மாதரும் மைந்தரும் ஆவியும்
பொய்யில் புந்தியும் ஒன்றிப் புணர்தலுஞ்
செய்ய மாடஞ் சிகரமொ டேவிழ
மெய்யும் ஒன்றி விளிந்திடு வார்சிலர். 76

அந்தண் மாடத் தறிவன் விடுத்தன
வந்து வீழ மறிந்துரு மேறெனச்
சிந்த வேயுகு செம்பொறி மெய்ப்பட
வெந்து சின்னம் விரவுறு வார்சிலர். 77

வரங்கொள் வீர மகேந்திரத் தின்னணந்
தரங்க மெய்திச் சனங்களெல் லாமிரீஇ
உரங்கள் சிந்தி அழிந்துழி ஒல்லென
இரங்கும் ஓதை எழுகடல் உண்டதே. 78

மன்றி னிற்கரி பொய்த்து மனுநெறி
கொன்று வாழுங் கொடியர்தம் மில்லெனத்

துன்று மாடத் தொகைவெள் ளிடையதாய்ப்
பொன்றி வீழ்ந்தன புல்லென வாகியே. 79

நீறு பட்ட நெடுநகர் எங்கணும்
ஊறு பட்ட உயிர்கடஞ் சோரிநீர்
ஆறு பட்டிட அங்கவை யோடலாய்ச்
சேறு பட்டன செக்கர்விண் போலவே. 80

மலிந்த சீர்த்தி மகேந்திர மாபுரம்
அலைந்து தொல்லைத் திருமுழு தற்றதால்
மெலிந்தி டும்படி விண்ணவர் தம்மெலாம்
நலிந்த வன்வளம் நன்றுறு மேகொலாம். 81

ஆகத் திருவிருத்தம்–770.

# 16. சகத்திரவாகுகள் வதைப் படலம்

ஏயின பான்மையின் இவன்மூதூர்
மாய்தரும் எல்லையின் வருகின்ற
ஆயிர வாகுள அடல்வீரர்
மேயின தன்மை விளம்புற்றும்.

ஓலம உடைககடல உட
நீல விடத்தினை நிகர்மெய்யார்
மாலை யுடைப்பல வடவைத்தீக்
கோல மெனச்சிகை கொண்டுற்றார்.

தீங்களி றுதிய திறல்மாக்கள்
தாங்குவை யோடு தலைப்பெய்தே
ஆங்குள சோரி அருந்திமப்
பாங்கர்கள் அன்னதொர் பகுவாயார்.

எல்லையில் நேமிகள் யாவுந்தாம்
ஒல்லொலி நீரின் உடைந்தென்னக்
கல்லுறை சிந்து கருங்கொண்மூச்
செல்லென ஆர்த்தனர் செல்கின்றார்.

மைவரு நீல வரைத்தொகை தாங்கும்
மொய்வரு கின்ற முடிக்குழு வென்ன
ஐவகை நூற்றின் அமர்ந்தகல் வானைத்
தைவரு கின்ற தலைத்தொகை கொண்டார்.

மராமர மானவை மாதிர மெங்கும்
பராவ விடுத்திடு பலகவ டென்ன
விராவிய அங்கத மேவி விளங்கும்
ஓராயிர மாகிய ஒண்புய முள்ளார். 6

எழுக்கொடு முத்தலை எஃகம்வில் நாஞ்சில்
கழுக்கடை சங்கொடு கப்பணம் வெவ்வாள்
மழுக்கதை சக்கரம் வச்சிர மாதி
விழுப்படை யாவும் விராவிய கையார். 7

எண்டகு நேமிகள் ஏழும் அளக்கர்
மண்டல மானவு மன்னுயிர் யாவுங்
கொண்டிடி னுங்குறை வின்றி நிரம்பா
தண்டம தென்ன அகன்ற வயிற்றார். 8

விழுமிய பஃறலை வெம்பணி யேனைக்
குழுவொடு போற்றினர் கொண்டுற லாற்றா
தழுதிட நாடிய தற்கயர் வார்போல்
கழல்கள் அரற்று கழற்றுணை கொண்டார். 9

இருபுயம் ஓர்முகம் எய்திய வானோன்
ஒருவனை வெல்ல ஓராயிர ரானேம்
பொருவகை சென்றிடல் புன்மைய தென்று
வருபழி யுன்னி மனந்தளர் கின்றார். 10

மாகர வான்முன மாயையின் வந்தான்
ஆகையி னால்இவன் ஐதென வானிற்
போகுவ னால்இது பொய்யல வல்லே
ஏகுமின் ஏகுமின் என்றுசெல் கின்றார். 11

மீளிகை யாலெறி மேதகு வேர
மாளிகை கோபுர மண்டபம் வீழ்வ
காளிக ரன்னக ரங்கள்கொ டேற்றுத்
தூளிகள் செய்தனர் தூர்த்திடு கின்றார். 12

எய்யென மெய்யிடை எங்கும் வியர்ப்பச்
செய்யன கண்வழி செந்தழல் சிந்த
வெய்ய உயிர்ப்பெழ வேர்வுள மூள
ஒய்யென ஓடினர் உற்றிடு கின்றார். 13

நாகர் தமக்கொர் நமன்றனை யன்னோர்
ஆகிய ஆயிரர் ஆயிர மொய்ம்பர்
வேகம தாகி விழுத்தகு வீர
வாகுவை எய்தி மடங்கலின் ஆர்த்தார். 14

ஆர்த்திடும் ஓதை அகன்செவி செல்லத்
தார்த்தொகை தூங்கு தடம்புய வீரன்

பார்த்தனன் மூவெயில் பண்டெரி செய்த
தீர்த்தனெ னச்சிறி தேநகை செய்தான். 15

மேனிமிர் மந்தர வெற்பென நின்றே
வானள வோங்கு மராமரம் ஒன்றைத்
தேனினம் வான்றிசை சிந்தி யரற்ற
ஊன்முதிர் கைகொ டெடாசித்தனன் மன்னே. 16

அண்டம் இருண்டிட ஆதவ ரானோர்
மிண்டிய பேரொளி வீந்திட வீரன்
வண்டழை துன்று மராமரம் அங்கை
கொண்டது பன்முறை கொட்புறல் செய்தான். 17

வேறு

மாயிர மருப்புள மராமரம் இறுத்தே
தூயன்அம ராடல்முயல் தொன்னிலைமை நோக்கி
ஆயிரம் அடுத்தபுயர் ஆயிரரும் அங்கண்
மூயினர்கள் அண்ணலை முரட்படை சொரிந்தார். 18

தொடுத்தனர்கள் வார்கணைகள் தொட்டனர்கள் வைவேல்
எடுத்தபல தோமரம் எறிந்தனர்கள் ஆலம்
விடுத்தனர்கள் முத்தலை வியன்கழுமுள் உய்த்தார்
அடற்குலிசம் வீசினர்கள் ஆழிகள் துரந்தார். 19

இப்பரிசி னுள்ளபடை யாவுமுறை தூங்கு
மைப்புயல்க ளென்னவரை யின்றிவிரை வாக
ஒப்பரிய வீரன்மிசை உய்த்திடலும் அன்னோன்
துப்பொடு மரந்தனி சுழற்றிஅடல் உற்றான். 20

விட்டபடை யாவையும் வெறுந்துகள வாகப்
பட்டிட மரங்கொடு பராகமவை செய்ய
உட்டெளிவின் மானவர் ஓராயிரரும் வீரற்
கிட்டினர் வளைந்தனர் கிளர்ந்தமர் முயன்றார். 21

ஒட்டியமராடிய ஓராயிரவர் தாமுங்
கெட்டிரிய மேருநிகர் கேழ்கிளர் புயத்தோன்
மட்டுநனை வார்சினை மரங்கொடு புடைத்தே
சட்டக மிறந்துபடு தன்மைபுரி குற்றான். 22

செக்கர்புரை குஞ்சிகெழு சென்னிகள் கிழிந்தார்
நெக்கனர் கபோலவகை நெற்றிபிள வுற்றார்
அக்கநிரை சிந்தினர் அலங்குகுழை யற்றார்
உக்கனர்கள் பல்லெயி றுடைந்தனர்கள் துண்டம். 23

வாய்நிரை பகிர்ந்தனர்கள் மாழைதிகழ் கண்ட
மானவு முரிந்தனர்கள் அற்றனர்கள் பொற்றோள்
ஊனமகல் அங்கைகள் ஒசிந்தனர் நசைந்தே
பீனமுறு மார்பிடை பிளந்தனர் தளர்ந்தார். 24

உந்திகள் குடங்கரின் உடைந்துகுடர் யாவுஞ்
சிந்தினர் மருங்கெழில் சிதைந்தனர் புறங்கண்
முந்துதொடர் என்பொடு முரிந்தனர்கள் வாமஞ்
சந்துபொரு கின்றமுழந் தாளடிகள் அற்றார். 25

வீந்தனர்க ளோர்சிலவர் வீழ்ந்துமிதி பட்டுத்
தேய்ந்தனர்க ளோர்சிலவர் செய்யகுடர் சிந்திச்
சாய்ந்தனர்க ளோர்சிலவர் தங்குருதி ஆற்றுள்
தோய்ந்தனர்க ளோர்சிலர் துடித்தனர்கள் சில்லோர். 26

எறிந்திடு படைத்தொகுதி ஏகுமுனம் வீழ்ந்து
மறிந்தனர்க ளோர்சிலவர் மாய்ந்துகக னம்போய்ச்
செறிந்தனர்க ளோர்சிலர் சிதைந்துதலை போயும்
முறிந்தவுடல் கொண்டமர் முயன்றனர்கள் சில்லோர். 27

ஏரகலும் வீரர்தமி யாக்கையிது வண்ணஞ்
சேரவிறல் உற்றுடைய செவ்வியின் எழுந்த
சோரிநதி மாநகர் தொலைத்துவளன் வாரி
வாரிதி நிறைந்தவனி மீதினும் மடுத்த. 28

வேறு

அறந்தெ ரிந்துணர் ஆண்டகை அகன்மரம் புடைப்பக்
குறைந்த சென்னிவான் திரிவன எயிற்றொடு குலவிச்
செறிந்த தேவரோ டமிர்தொளித் துண்டவர் சென்னி
நிறைந்தி டாமதித் துணைகவர்ந் துலவுதல் நேரும். 29

அடல்கொள் மொய்ம்பினன் மரம்புடைத் தலுஞ்சில அவுணர்
உடல்சி னப்பரி முகத்தவர் தலைதுமிந் துதிர
நெடிதும் வாய்வழி சிந்தவீழ்ந் தனர்நெடுங் கடலுள்
வடவை மாமுக மங்கிகான் றிடுவதே மான. 30

வள்ளல் மாமரத் தண்டுகொண் டடித்தலும் வலியோர்
பிள்ளை மாமதி எயிற்றணி சிந்துவின் பெயர்ந்தே
அள்ளல் வேலையின் முறைமுறை வீழ்வன அதன்கண்
துள்ளு மீன்கணம் உகண்டுவீழ் கின்றதோர் தொடர்பின். 31

வலிந்த ஆழ்முறை யாவரே கடந்தவர் மரத்தாற்
பொலந்த யங்குபூண் மார்பினன் எற்றிடும் பொழுதிற்
கலந்து போர்செய்தார் ஓர்சிலர் வாளொடு கரம்போய்த்
தொலைந்து ளார்செலும் நெறியின்வீழ்ந் தவர்சிரந் துணிப்ப. 32

இனைய பற்பல நிகழ்ந்திட இணையிலா ஒருவன்
தினையின் வேலையில் ஆயிரம் புயமுடைத் திறலோர்
அனைவர் தம்மையும் பஃறுணி படுந்திறன் அட்டுத்
தனிமை தன்னொடு நின்றனன் அமர்க்களந் தன்னில். 33

ஆகத் திருவிருத்தம் - 803

# 17. வச்சிரவாகு வதைப் படலம்.

—oo—

கூடி ஆரமர் இயற்றினுர் தம்வலி குறைந்து
வீடி ஆவிபோய் விளிதலும் அன்னது விரைவின்
நேடி விண்ணிடை நணுகிய தூதுவர் நில்லா
தோடி யாளுடை அவுணர்கோன் முன்புசென் றுரைப்பார். 1

துன்றும் ஆயிர மொய்ம்புடை நின்படைத் தொகைஞர்
சென்று சில்லமர் புரிந்தனர் அவனது தெரியா
ஒன்றெரு் பாதவம் பறித்தனன் புடைத்தலும் ஒருங்கே
பொன்றி வீழ்ந்தனர் புகுந்தவா றீதெனப் புகன்றுர். 2

புகன்ற வேலையின் அவுணர்கோன் புரையிலோன் வன்மை
புகன்ற வேலையின் வடவையார் அழலெனப் பொங்கி
அகன்ற னன்பெரு மிதத்துடன் ஆணையுந் திறலும்
அகன்ற னன்பெருந் துயர்கொளீஇ யினையன அறைவான். 3

உமைய ளித்திடு சிறுமகன் தூதுவன் ஒருவன்
எமது முன்னம்வந் தவமதி செய்தனன் ஏகி
அமரில் யாரையும் அட்டுநின் றின்னமும் அகலான்
நமது கொற்றமும் நன்றுநன் றுலென நகைத்தான். 4

முச்ச கம்புகழ் அவுணர்கோன் முனிவினை முன்னி
யச்செ னக்கிளர்ந் தெழுந்துசென் றவனடி வணங்கி
மெய்ச் சிரங்கள் ஓரையிரு திறலுடை விறல்சேர்
வச்சி ரத்திரு மொய்ம்புடைக் காதலன் வகுப்பான். 5

நொய்ய தூதுவன் பொருட்டினுல் இத்திறம் நுவறல்
ஐய கேட்கநிற் கியலுமே இறையிவண் அமர்தி
மொய்யில் யான்சென்று மற்றவன் பெருமுரண் முருக்கிக்
கைய கப்படுத் துய்ப்பனுல் அன்னது காண்டி. 6

வேறு

என்ன லோடும் இறப்பெதிர் உற்றிடா
மன்னன் மைந்தனை நோக்கி மகிழ்வுறு
அன்ன தன்மையை ஆற்றுதி நீயெனப்
பன்னி யேகும் படிபணித் தான்ரோ. 7

விடைபு ரிந்திட மெய்வழித் தாதைதன்
அடிவ ணங்கி யகன்றுமன் கோயிலிற்
புடையி ருந்தன போர்ப்படைச் சாலையின்
இடைபு குந்தனன் யாரும் வழுத்தவே. 8

அட்டல் இன்றி அமர்தரு சாலிகை
இட்டு மார்பின் இறுக்கிவயத்தகு

பட்டி கைக்கலன் பாலத் துறுத்தியே
புட்டில் அங்குலி பூண்டு பொருக்கென. 9

ஆணி கொண்ட அயிற்கணை பெய்தபொற்
தூணி கொண்டுபின் தும்பை மிலைச்சியே
நாணி கொண்டு நலந்தரு கார்முகம்
பாணி கொண்டு படைபிற ஏந்தியே. 10

கொற்ற மாரமர்க் கோலங்கள் உள்ளன
முற்ற வேய்கொண்டு மூரிவில் வெஞ்சமர்
கற்ற காளை கதுமென நோக்கியே
சுற்று கம்மியர்க் கின்னன சொல்லுவான். 11

மிக்க நம்படை வெள்ளத்தி லோர் சில
தொக்க பூசல் தொழிலினை முற்றிய
இக்க ணந்தரு வீர்இவண் என்றலுந்
தக்க தேயெனத் தாழ்ந்தவர் போயினார். 12

ஆங்கு நின்றிடும் ஏவலர் அப்பணி
தாங்கி யேகத் தகுவர்தங் கோமகன்
நீங்க லின்றுதன் நீழலின் வந்திடும்
பாங்கர் யாரையும் நோக்கிப் பகருவான் 13

குமர வேள்விடு கோற்றொழில் தூதனைச்
சமரில் வென்றொரு தாம்பில் தளைபுரீஇ
இமையொ டுங்குமுன் எந்தைமுன் உய்க்குவன்
அமைதிர் போருக் கணைவிரும் என்றனன். 14

பாலன் மற்றிவை பன்னலும் நன்கென
ஏலு கின்ற இளைஞரும் மள்ளரும்
மேலை வெஞ்சமர் செய்ய விரைந்துபோர்க்
கோல மெய்திக் குழீஇயினர் கொட்புற. 15

தாறு கொண்டவன் தன்குறிப் பிற்செலும்
நூறு நூறு நொறில்பரி மான்பெறீஇ
வீறு பண்ணமை தேரொன்றின் வெய்தென
வேறினான்மொய்ம் பிருபது கொண்டுளான். 16

தந்தி ரத்துத் தலைவர்தம் மைந்தரும்
மந்தி ரத்து மதிஞர்தம் மைந்தருஞ்
சுந்த ரத்துத் தொடர்பினில் சுற்றுறு
எந்தி ரப்பெருந் தேர்களில் ஏறினார். 17

ஆன வேலை அரசன் சுதன்விடப்
போன கம்மியர் போர்வினை கூறியே
யானை மேல்கொண் டிரும்பணை எற்றலுஞ்
சேனை தம்முட் சிலதிரண் டுற்றவே. 18

ஒருங்கு தாம்பல ஓடலின் அன்னவை
பரங்கொ ளற்கரி தாகிப் படிமகள்
புரங்கி ழிந்திடு புண்கொண் டரற்றல்போல்
இரங்கும் ஓதைகொண் டேகுவ தேர்களே. 19

கருவி வானங் கடலுண்டு செல்லுறும்
வரைக ளாமென வந்துதம் மேலுறீஇ
உருமி னத்தை உகுத்தொலி கேட்டலும்
வெருவி வீழ விரைவன வேழமே. 20

கிட்டி நாடு நயனமுங் கேடுசெய்
தொட்ட லார்தம் உளமுஞ் சுழன்றிட
வெட்டு மாதிரத் தெல்லையுஞ் சாரிகை
வட்ட மாகி வருவன வாசியே. 21

ஆடல் வேல்கதை ஆழி அலப்படை
பாடு சேர்ந்த பலகைஒள் வாள்சிலை
நீடு சூலம் நெடுமழு ஆதியாக்
கூடு பல்படை கொண்டிடு கையினர். 22

இடித்த சொல்லர் இமையவர் போர்பல
முடித்த மொய்ம்பர் முரணிய பல்படை
வடித்த கற்பினர் மால்வரை யானவை
படித்த லத்திற் படர்ந்தன்ன காட்சியார். 23

விசும்பின் மாலை மிலைச்சிய குஞ்சியர்
பசும்பொன் வீரமெய்ப் பட்டிகை நெற்றியர்
நிசும்பர் அன்னதொர் நேரலர் சோரியின்
அசும்ப ருந்த அகன்பில வாயினர். 24

தீம டங்கல் திறலினர் தென்புலக்
கோம டங்கலின் கொள்கையர் தங்கிளை
தாம டங்கத் தறிபிளந் தார்த்தெழு
மாம டங்கல் தனைப்பொரும் வன்மையார். 25

ஏகும் வெஞ்சமர்க் கென்றலும் பூண்பரீஇ
மாகம் அஞ்ச வளர்ந்தெழு தோளினர்
மோகம் இல்லவர் மொய்ம்பினின் மேலவ
ராகும் வீரர் அளப்பிலர் எய்தினர். 26

ஐந்து நூறெனும் வெள்ளம் அழுங்குதேர்
தந்தி யின்குழுத் தானும் அனையதே
உந்து மாக்களொ ராயிரம் வெள்ளமாம்
பந்த மிக்க பதாதி இரட்டியே. 27

இத்தொ கைப்படும் ஈரிரு தானையும்
மைத்தி ரைக்கடல் வாரியின் ஆர்ப்புறீஇப்

பத்தி ரட்டி படர்புயத் தண்ணலைத்
தத்த மிற்கலந் தொன்றித் தழீஇயின. 28

துடிவ லம்புரி துந்துபி சச்சரி
கடிகொள் மொந்தை கரடிகை தண்ணுமை
இடிகொள் பேரி இரலைகள் ஆதியாம்
முடிவி லாவிய முற்று முழங்கிய. 29

இற்ற எல்லையின் ஈரிரு தானையும்
நெற்றி யேகடை நீடயு விற்செல
மற்று ளார்களும் வந்திட வச்சிரப்
பொற்ற டம்புயன் பொள்ளென வேகினன். 30

வல்லி யக்கடு மான்பொரு மானவர்
செல்லி யக்கமுஞ் செல்லினை மாறுகொள்
சொல்லி யக்கமுந் துண்ணெனத் தொக்கெழு
பல்லி யக்கடல் ஆர்ப்பும் பரந்தவே. 31

ஊழி மால்படை ஒல்லென வேயெழப்
பூழி ஈண்டிவிண் பொள்ளென மூடிய
வேழ மால்வரை வீழ்தரு தானநீர்
ஆழி யென்ன அகன்புவி கொள்ளவே. 32

திகந்தம் எட்டுந் திருநிழல் ஓச்சியே
உகந்த தேர்களின் ஒண்கொடி ஆடுவ
குகன்வி டுத்திடு கொற்றவன் ஆற்றல்கண்
டகன்சி ரங்கள் அசைப்பன போன்றவே. 33

ஆகும் எல்லை அவுணர்மன் தேர்மிசைப்
பேய்கள் சூழ்ந்து பிணங்கி மலைந்தன
காகம் யாவுங் கழுகும்வெஞ் சேனமுங்
கூகை யோடு குழீஇயிரங் குற்றவே. 34

மடித்த வாயுடை வச்சிர மொய்ம்பினன்
பிடித்த கையிற் பெருஞ்சிலை வீழ்ந்தது
தொடுத்த வெந்நுறு தூணியும் இற்றதால்
துடித்த வால்இடக் கண்களுந் தோள்களும். 35

அண்ணல் மைந்தன தாழியந் தேர்மிசைக்
கண்ண கன்கொடி கையற வீழ்ந்தன
விண்ணின் ஏறு விசும்பின்றி ஆர்ப்பன
எண்ணில் தீக்குறி இவ்வகை யுற்றவே. 36

உற்ற காலவை உள்ளுறக் கொள்கிலன்
செற்ற மேல்கொண்டு சென்னியோர் பத்துளான்
மற்றொர் தூணியும் வார்சிலை யுங்கொளாப்
பொற்ற டங்கை புறந்தனிற் சேர்த்தினன். 37

மொய்கொள் வச்சிர மொய்ம்பன்இத் தன்மையால்
வெய்ய தன்படை வெள்ளமொ டேகியே
செய்ய வேலுடைச் சேவகன் ஏவல்செய்
ஐயன் நின்ற அடுகளம் எய்தினன். 38

வண்டு லாந்தொடை வச்சிர வாகுதன்
தண்ட மோடு சமர்க்களஞ் சேர்தலும்
அண்டர் நாயகன் தூதுவன் அன்னவை
கண்டு நின்று கழறுதல் மேயினன். 39

வேறு

இந்திர ஞால வையத் திறைவனே அல்லன் மற்றை
மைந்தரில் ஒருவ னாகும் வருபவன் வருவான் றன்னை
முந்திய தானை யோடு முரணற முருக்கி வீட்டி
அந்திவான் புகுமுன் எந்தை அடிதொழப் போவன் என்றான். 40

எறிதிரை அளக்கர் என்ன ஈண்டுறும் அனிகம் யாவும்
முறைமுறை சாடி வந்த முதல்வனை முடித்து மாலை
உறுதல்முன் விசய மோடும் ஒய்யென மீளேன் என்னின்
அறுமுக ஐயன் தூதன் ஆவனோ அடிய னென்றான். 41

எண்டிசை புகழும் வீரன் இனையன விளம்பிச் செவ்வேள்
புண்டரீ கத்துப் பொற்றாள் புந்தியால் இறைஞ்சிப் போற்றி
மண்டமர் முயன்று நேமி மறிதர வரைகள் கீற
அண்டமுந் திசையும் வானுங் குலுங்கத்தோள் கொட்டி ஆர்த்தான்.

ஆர்த்திடும் ஓதை கேளா அமர்குறித் தெழுதேர் மேலோர்
கார்த்திடு தந்தி மேலோர் கவனமாப் புரவி மேலோர்
பேர்த்திடு நிலத்தின் மேலோர் பிறங்குசீ ரவுணர் யாரும்
வேர்த்தனர் திரிந்து சிந்தை வெருவினர் விளம்பு கின்றார். 43

வாழிய உலகம் யாவும் மன்னுயிர்த் தொகையு மாய
ஊழியில் தனிநின் றார்க்கும் உருத்திரன் ஆர்ப்போ அன்றேல்
ஆழிகட் கரசன்ஆர்ப்போ அண்டங்கள் நெக்க ஆர்ப்போ
ஏழ்கட லுடைந்த ஆர்ப்போ இத்திறம் ஆர்ப்ப தென்றார். 44

செருவலி கொண்ட சீற்றச் செங்கணான் ஆர்க்கும் ஓதை
மருமலர்த் தொடைய லாக வச்சிர வாகு வென்போன்
இருபது செவியி னூடும் இரவியம் புழைகள் புக்க
உருமெனச் சேற லோடும் உளம்பனித் துரைக்கல் உற்றான். 45

ஈரெழு திறத்த வான உலகினுள் இன்று காறிப்
பேரொலி கேட்ட தின்றால் பிறந்ததித் துழனி யாதோ
தேருதி ரென்று பாங்கர் உழையரில் செப்பத் திண்டேர்ச்
சாரதி விசய னென்பான் தாழ்ந்திவை புகலல் உற்றான். 46

தெற்றென உணர்தி மான்தேர் செலுத்திய வலவ னென்றே
மற்றென துரையை எள்ளல் வல்லைமேற் காண்டி எந்தை

அற்றமில் படையி னோடும் அமர்செய வருதல் நாடி
ஒற்றெனை நின்றோன் போர்வேட் டார்த்திடும் ஒலியீ தென்றான்.47

தூதுவன் ஆர்ப்பி தென்று சொல்லுமுன் உருத்துக் கண்கள்
மீதெரி பொங்க நக்கு வெய்துயிர்த் துமபி யான்போய்
ஈதொரு கணத்தின் அன்னோன் இகல்முரண் அழித்துப் பற்றித்
தாதைமுன் உய்ப்பன் காண்டி ஏரதம்இத் தன்மை யென்றான்.48

என்றிவை உரைத்துப் போதும் எல்லையின் முன்ன மாகச்
சென்றிடும் அவுண வீரர் சேனையை வகுத்துச் சீறித்
தன்றுணைத் தாளுந் தோளுந் தடக்கையும் அனிக மாக
நின்றதோர் வீரன் றன்னை நேமியிற் சுற்றி ஆர்த்தார். 49

கைதனில் இருந்த செம்பொற் கார்முகங் குனித்து வெங்கோல்
எய்தனர் முசலம் நாஞ்சில் எறிந்தனர் தண்டஞ் சூலம்
பெய்தனர் கணிச்சி விட்டார் பிண்டிபா லங்கள் தூர்த்தார்
நெய்தவழ் அயில்வேல் தொட்டார் நேமிகள் உருட்டு கின்றார்.50

வேறு

தஞ்செனக் கொடுமைசெய் தானவப் படைஞர்கள்
வெஞ்சினத் தன்மையால் விடுபடைக் கலமெலாங்
கஞ்சனைச் சிறைசெயுங் காரணன் தூதுவன்
செஞ்சுடர்ப் படிவமேற் செவ்வண்வந் துற்றவே. 51

துய்யன்மேல் வெம்படைத் தொகுதிவந் தடைதலும்
மெய்யெலா முற்றதான் மிக்கசோ ரிப்புனல்
மையல்தீர் காலையின் வந்தெழும் பரிதிபால்
பையவே செய்யதண் கதிர்வரும் பான்மைபோல். 52

ஆனதோர் காலையெம் மையன்வெஞ் சினமுறா
மானினம் பலபல மருவியே செறிவுறி
மேனிவந் தேகியோர் வேங்கைபாய்ந் தடுதல்போல்
தானவப் படையினைத் தாக்குதல் மேயினான். 53

ஆயிரம் ஆயிரம் அவதிசேர் அவுணர்தஞ்
சேயதண் குஞ்சியைச் செங்கையாற் பற்றியே
பாயிருந் தரையினும் பாற்படு கிரியினும்
ஏயெனும் அளவைமுன் எற்றியே எறியுமால். 54

எய்யும்வெம் படைகளும் எறியும்வெம் படைகளுங்
கையினிற் பற்றியே கனலெழப் பிசைதரு
மொய்யெனப் பதைபதைத் தோலமிட் டுயிருகச்
செய்யபொற் றாள்களால் சிலவரைத் தேய்த்திடும். 55

மத்தமால் கரிகளும் வாம்பரித் தொகுதியுஞ்
சித்திரந் திகழ்மணித் தேர்களும் அவுணர்தங்
கொத்தொடே வீழ்தரக் கோலமால் அடிதனக்
கொத்ததன் றாள்களால் உதைபுரிந் துலவுறும். 56

கிடைத்திடுஞ் சிலவரைக் கீண்டனன் நீண்டமெய்
துடித்திடக் கழல்களால் துகைத்தனன் சிலவரை
அடித்தனன் சிலவரை அரைத்தனன் சிலவரைப்
புடைத்தனன் சிலவரைப் புதுமரத் தண்டினால். 57

மத்தவெங் கரிப்பரி வயவர்தேர் ஆயின,
பத்துநூ றொருதலைப் படநெடும் பாணியாற்
குத்திடுஞ் சிகரமேற் கோளரி பாய்ந்தெனத்
தத்தியே திரிதருந் தலைமலைக் குலமிசை. 58

தேரெலாம் இற்றன திண்டிறற் கவனமாப்
பேரெலாம் இற்றன பிளிறுமால் கரிகளின்
தாரெலாம் இற்றன தானவத் தலைவர்செய்
போரெலாம் இற்றன புகழெலாம் இற்றதே. 59

ஆங்கதோர் பொழுதினில் அவுணருக் கிறைமகன்
பாங்கராய் வந்திடும் பல்பெருங் குமரரும்
ஓங்குநாற் படையொடும் ஒருவனைச் சுற்றியே
தாங்குபல் படையினால் சமர்முயன் றுற்றனர். 60

வேறு

அன்ன காலையில் வீரவா குப்பெயர் அறிஞன்
தன்ன தோர்கரத் திருந்திடு பழுமரத் தண்டான்
முன்னர் வந்துசூழ் மைந்தர்கள் முரட்படை யோடுஞ்
சின்ன மாகியே விளிவுறப் புடைத்தனன் திரிந்தான். 61

செய்ய மத்தகம் இற்றன இற்றன செழுந்தாள்
கைகள் இற்றன மருப்பிணை இற்றன கரிகள்
வெய்ய காலுடன் எருத்தமும் இற்றன மிலைச்சுங்
கொய்யு ளைத்தலை இற்றன குரகதக் குழுவே. 62

தட்ட ழிந்தன பாரகம் அழிந்தன சகடு
கெட்ட ழிந்தன கேதனம் அழிந்தன கிளர்ந்த
மொட்ட ழிந்தன பாகினம் அழிந்தன முரண்மாக்
கட்ட ழிந்தன ஒழிந்தன கனைகுரல் பஃறேர். 63

கால்க ளுற்றிடும் வெஞ்சிலை இற்றன கடிய
கோல்க ளிற்றன பரிதிகள் இற்றன கொட்பார்
தோல்க ளிற்றன நாந்தகம் இற்றன தூண்டும்
வேல்கள் இற்றன நாஞ்சில்கள் இற்றன விரைவில். 64

நெரிந்த சென்னிகள் நெரிந்தன மார்பகம் நெடிது
சரிந்த வெங்குடர் சரிந்தன இழுக்குடைத் தசைகள்
சொரிந்த மூளைகள் சொரிந்தன விரிந்தெழு சோரி
திரிந்த கூளிகள் திரிந்துமாய் வுற்றன சேனை. 65

கரந்து ணிந்தனர் புயங்களுந் துணிந்தனர் காமர்
சிரந்து ணிந்தனர் நாசிகள் துணிந்தனர் செழும்பூண்

உரந்து ணிந்தனர் கழலடி துணிந்தனர் உளதோல்
வரந்து ணிந்தனர் வன்மையுந் துணிந்தனர் மைந்தர். 66

வாக்கி னூற்சிலர் தம்முயிர் உண்டிடும் வன்கைத்
தாக்கி னூற்சிலர் தம்முயிர் உண்டிடுஞ் சமர்செய்
ஊக்கி னூற்சிலர் தம்முயிர் உண்டிடும் உலம்பு
நோக்கி னூற்சிலர் தம்முயிர் உண்டிடு நொய்தின். 67

அங்கண் ஓர்சில அவுணரை ஆடல்வெம் பரியை
வெங்கண் யானையை இரதத்தை வாரினன் விரைவின்
மங்குல் வானினுந் தரையினுங் கடலினும் வரைகள்
எங்கு மாகியே வீழ்தர வீரனுர்த் தெறிந்தான். 68

அன்பு லப்புறு கொடுந்தொழில் அவுணர்கள் அமரும்
வன்பு லத்துயிர் கொளவரு மறலிதன் தூதர்
துன்பும் அச்சமும் அணங்குடன் அகன்றுதற் றுதிப்பத்
தென்பு லத்தவன் முன்னுற வீசினன் சிலரை. 69

ஒருத லைப்படுங் கேளிரைத் துன்னுவான் உய்ப்பக்
கருதி னன்கொலோ சிற்சில அவுணர்தங் கணத்தை
நிருதி மாநகர் புகுந்திட வீசினன் நிகரில்
சுருதி நாயகன் ஏவலாற் றியதனித் தூதன். 70

நேர்ந்து போர்புரிந் துயிர்தனை விடாததந் நிலைமை
ஓர்ந்து விண்ணவர் மானங்கள் விடுத்திடா துயர்வான்
சார்ந்த ஞாயிறு பிளந்திடா தாடலின் தன்மை
சேர்ந்து ளார்பெறுந் துறக்கமேல் வீசினன் சிலரை. 71

எண்டி சைப்புறந் தாங்கியே பெயர்கிலா திரக்கங்
கொண்ட வெங்கரிக் கிரையெனச் சிலவரைக் கொடுக்குந்
தெண்டி ரைப்புனல் பருகிய நிரப்பது தீர
உண்டி யாகவே வடவைபால் சிலவரை உய்க்கும். 72

ஏந்தல் இன்னபல் வகையினால் அடுதலும் இமைப்பின்
வீந்த தானைகள் துணைவரும் பொன்றினர் மிக்கோர்
ஓய்ந்து வானினுங் கடலினுந் திசையினும் உலைந்துச்
சாய்ந்து போயினர் மானமும் வன்மையுந் தவறி. 73

மற்றிந் நீர்மையைக் காண்டலும் வச்சிர வாகு
இற்ற தேகொலாம் நம்பெருந் தானையென் றிரங்கிச்
செற்ற மீக்கொண்டு வலவனை நோக்கியித் தேரை
ஒற்றன் முன்னுற விடுத்தியால் கடிதென உரைத்தான். 74

உரைக்கும் வாசகங் கேட்டலுந் தொழுதுமுன் னுற்ற
பரிக்கு லங்களின் மத்திகை வீசியே பாகன்
அருக்கன் ஆழியந் திகிரியூர் வலவனும் அஞ்சி
வெருக்கொ ளும்படி தேரினை வீரன்முன் விடுத்தான். 75

கொடிய வெஞ்சினந் திருகியே சூர்தரு குமரன்
கடிது போர்செய்வான் வருவது மேலையோன் காணு
முடிவி லாமகிழ் வெய்தியே முழுதுல களந்த
நெடிய மாலினும் நெடியன்மற் றிவனென நிமிர்ந்தான். 76

நெடிய தாள்புவி அளந்திடப் புயங்கள்விண் நெருக்க
முடியெ லாங்கடந் தண்டகோ ளகைதனை முட்ட
வடிவ மைந்திடு திறலினேன் பணிபதி மயங்க
அடிபெ யர்ந்துபார் வெடிபட இடிபட ஆர்த்தான். 77

புரம டங்கலுந் தெறுகணை போன்றுளான் பொன்னேன்
வரம டங்கலுஞ் சோரிய தடங்கலும் வாளுள்
உரம டங்கலும் உண்டிடத் தறியின்வந் துதித்த
நரம டங்கலும் வெருவர எரியெழ நகைத்தான். 78

முச்ச கம்புகழ் திறலினேன்முறுவலும் முழக்கும்
வச்சி ரத்தட மொய்ம்பினேன் கேட்டலும் மறுகி
மெய்ச்சி ரத்தொகை துளக்கி ஆரழலெழ விழித்து
நச்செ யிற்றர வாமெனச் செயிர்த்திவை நவில்வான். 79

வீர நன்றுநின் ஆண்மையும் நன்றுமே தக்க
பேரு நன்றுபே ராற்றலும் நன்றுநீ பெற்ற
சீரும் நன்றுநின் விஞ்சையும் நன்றுசெய் கின்ற
போரு நன்றுநிற் கேற்பதிவ் வார்ப்பெனப் புகன்றான். 80

மற்று மோருரை புகலுவான் வந்தெதிர் மலைந்த
கொற்ற வீரரைப் படுத்தனம் என்றுளங் கொண்டாய்
அற்றெ லாமினி விடுமதி நின்மிடல் அலைத்துப்
பற்றி எந்தைமுன் விடுப்பனுல் உனையெனப் பகர்ந்தான். 81

நின்னை வென்றிட முயலுவன் தமியனும் நீயும்
என்னை வென்றிட முயலுதி இருவரும் அதனைப்
பன்னி நிற்பதிற் பயனெவன் கடிதமர் பயிறி
பின்னை வென்றுளார் வெல்லுக என்றனன் பெரியோன். 82

என்னு முன்னரே வச்சிர வாகுவென் றிசைக்கும்
மன்னன் மாமகன் தனதுகைக் கார்முகம் வாங்கிப்
பொன்னின் நாணொலி கொண்டொரா யிரங்கணை பூட்டி
மின்னு லாந்தனி வேலவன் தூதன்மேல் விடுத்தான். 83

விடுத்த ஆயிரம் பகழியும் விடலைதன் மிசையே
அடுத்த எல்லையிற் காணுறா அங்கையொன் றதனை
எடுத்து முன்னுற ஓச்சியே அங்கவை எனைத்தும்
பிடித்து வல்லையின் நுண்டுகள் பட்டிடப் பிசைந்தான். 84

விட்ட வாளிகள் பூழிபட் டிடுதலும் வெகுண்டு
மட்டு வாகைவெஞ் சிலையினைப் பின்னரும் வணக்கி

நெட்டிலைச்சரம் ஒருபதி னாயிரம் நிறத்திற்
பட்டிடும்படி தொட்டனன் அவுணர்கோன் பாலன். 85

அசைவி லானது நோக்கியே முந்துபோர் அகத்தில்
இசைமை நீங்கியே முடிந்திடு தானவர் இட்ட
முசல மாகிய தொன்றினை யெடுத்துமுன் வந்த
விசிகம் யாவையும் புடைத்தனன் திசைதொறும் வீழ. 86

வழுவில் வாளிகள் வறிதுபட் டிடுதலு மற்றும்
விழுமி தாகிய ஒருபதி னாயிரம் விசிகம்
பழுது றுதன தூண்டியே ஆண்டகை பரித்த
எழுவை நுண்டுகள் ஆக்கியே பின்னரும் எய்வான். 87

தலையி லாயிரங் களத்தினில் ஆயிரந் தடந்தோள்
மலையி லாயிரம் உரத்தினி லாயிரம் வயத்தாள்
நிலையில் ஆயிரங் கணைகளாத் தூண்டினன் நீடுங்
கொலையில் ஆயிரங் கூற்றினைப் போலுறுங் கொடியோன். 88

கையில் ஏந்திய பேரெழு முரிந்திடக் காமர்
செய்ய மெய்ம்முழு தீண்டியே பகழிகள் செறிய
ஐயன் நின்றனன் ஓரிறை வருந்தியே அதற்பின்
ஒய்யெனச்சென்று வெய்யவன் தேரினை உதைத்தான். 89

உதைத்த காலையிற் பண்ணுறு பரியெலாம் ஒருங்கே
பதைத்து வீழ்ந்தன பாகனும் உருண்டனன் பட்டான்
கதித்த வையமும் அழிந்தது அன்னது காணு
மதித்து வேறொரு தேரிடைப் பாய்ந்தனன் மறவோன். 90

பாய்ந்து வச்சிர வாகுவாந் தொல்பெயர் படைத்தோன்
தேய்ந்த ஒண்பிறை பணியொடு சேர்ந்தன சிலையின்
ஆய்ந்தொ ராயிரம் அயிற்கணை பூட்டியே அடுபோர்
ஏந்தல் நெற்றியுட் செறித்தனன் அமரர்கள் இரங்க. 91

ஆயி ரங்கணை நுதலிடை அழுந்தலும் அடல்வேல்
தூய வன்மிருத் தூதுவன் சூரருள் புரிந்த
தீய வன்தடந் தேரினைச் செங்கையால் எடுத்து
மீயு யர்ந்திடும் விண்ணிடை எறிந்தனன் விடுத்தான். 92

விண்ண கத்திடை எறிந்தபின் வீரவா குப்பேர்
அண்ணல் வச்சிர வாகுவந் தேறுவான் அமைந்து
பண்ணு றுத்திய ஏமமாய் நின்றதேர் பலவுந்
துண்ணெ னப்புடைத் தெறிந்துதைத் தொலையிற் றொலைத்தான். 93

தொலைக்கும் எல்லையின் அவுணர்கோன் மதலைதொல் புவிக்கோர்
இலக்கம் யோசனை எல்லையின் காறும்விண் ணேகி
அலக்க ணுற்றமீண் டழிதரு தேருடன் அமரில்
வெலற்க ருந்திறல் அறுமுகன் தூதன்முன் வீழ்ந்தான். 94

நிலவ ரைப்புறுஞ் சூர்மகன் எழுந்துதன் நெடிய
சிலைவ ளைத்தமர் செய்திட முன்னலுந் திறலின்
தலைமை பெற்றவன் கண்டுங்கை ஓச்சியத் தனுவை
வலிது பற்றியே முரித்தனன் பேரொலி மயங்க. 95

ஏந்து கார்முகந் தனைமுரித் திடுதலும் எரியிற்
காந்து கண்ணுடை வச்சிர மொய்ம்பனோர் கரத்தின்
வாய்ந்த வாள்கொடே எதிர்தலுந் தன்னுடை மருங்கின்
நாந்த கந்தனை உறைகழித் தறிவன்மேல் நடந்தான். 96

நடந்து வச்சிர வாகுமுன் உய்த்திட நனிதோள்
அடைந்த வாளினை விலக்கியே அறிவரில் அறிவன்
கடந்த போர்வலி கொண்டதன் வாளினுற் கடிது
தடிந்து வீட்டினன் அவுணர்கோன் நாந்தகத் தடக்கை. 97

செய்ய தோர்கரந் துணிபடத் தீயவன் செறுத்தோர்
கையி ருந்திடு தண்டினை எறிதலுங் கண்டு
மையில் கேள்வியன் துணிபடுத் தவுணர்கோன் மதலை
ஐயி ரண்டவாந் தலையையும் வாளினுல் அறுத்தான். 98

வேறு

எந்தைதன் தூதுவன் எறிந்த வாளினுல்
ஐந்திரு சென்னியும் அற்று வீழ்தலும்
மைந்தியல் வச்சிர வாகு வாகிய
வெந்திறல் அவுணர்கோன் வீடி னனரோ. 99

ஆடியல் அவுணர்தம் அண்ணல் தன்மகன்
வீடிய காலையின் வெருவிப் பாங்கரின்
நாடிய அவுணர்கள் நனிபு லம்புறீஇ
ஓடினர் திசைதொறும் உடைந்து போயினர். 100

துஞ்சினன் வச்சிரத் தோளன் கண்டிது
நெஞ்சகம் மகிழ்ந்திவண் நிற்ப னேயெனின்
வெஞ்சின அவுணர்கோன் வினவில் தீமையென்
றஞ்சினன் கரந்தென அருக்கன் போயினன். 101

ஆகத் திருவிருத்தம் - 904.



# 18. யாளிமுகன் வதைப் படலம்

—oo—

திண்டிறல் அவுணர்கோன் சிறுவன் வீந்ததும்
மண்டமர் இயற்றிட வருநர் இன்மையுந்
தண்டம துடைந்ததுந் தபனன் மாய்ந்ததுங்
கண்டனன் இனையன கருதல் மேயினன். 1

எந்தையை எள்ளினன் இருந்த கோநகர்
சிந்தினன் புரத்தையுஞ் சிறிது வீட்டினன்
வந்தவர் யாரையும் மாய்வு செய்தனன்
புந்தியின் வெகுளியிற் சிறிது போக்கினேன்.

ஏலவெம் போர்செய எவரும் வந்திலர்
ஞாலம தவிரொளி நடாத்து ஞாயிறு
மேல்கடல் நீந்தினன் விரையப் போயினன்
மாலையும் இவ்விடை வந்து நேர்ந்ததே.

அறந்தனை நினைகிலா தல்லல் செய்பவர்
உறைந்திடு நகரிதின் ஒற்றிற் போந்தயான்
சிறந்திடும் அறுமுகத் தேவ தேவனை
மறந்திட லாங்கொல்இம் மாலை காறுமே.

ஏவரும் வழுத்திய எந்தை கந்தவேள்
பூவடி தணந்திடு புலம்பும் இவ்விடைத்
தேவர்கள் புன்மையுந் தீர வல்லையிற்
போவது துணிவெனப் புந்தி தேற்றினன்.

தேற்றிய திறலுடைச் செம்மல் இம்மென
மாற்றலர் படுநில வரைப்பு நீங்கியே
காற்றெனக் கனலெனக் காலன் என்னவெங்
கூற்றென மறுகிடைக் குலவி ஏகினன்.

திறல்கெழு மொய்ம்புடைச் செல்வன் செல்வுழி
மறுகிடை அவுணர்கள் மறலி மற்றிவன்
குறுகலிர் நுங்களைக் கொல்வன் கொல்வனென்
றறைகுநர் முறைமுறை அரற்றி ஓடினர்.

எஞ்சிய அவுணர்கள் யாரும் இவ்வகை
அஞ்சினர் இரிந்திட அழிந்து முன்னையாள்
துஞ்சிய ஆவணத் தொகைகள் தந்தொராய்
விஞ்சிய மகேந்திரம் விடுத்து நீங்கினன்.

புடையகல் மகேந்திர புரத்தை நீத்தபின்
விடைபொரு வலியினன் விண்ணின் பாலெழீஇ
முடுகினன் வழிக்கொடு முருகற் போற்றியே
வடதிசை இலங்கையின் வரைப்பு நண்ணினன்.

வேறு

ஆங்கது காலையில் அனைய
பாங்கரின் மேவரு பழையோன்
ஓங்கிய மூவெயி லுள்ளோர்
தாங்கிய வன்மை தரித்தோன்.

முடியும் மகேந்திர மூதூர்
வடதிசை யார்அரண் மன்னி

உடைய இலங்கையின் ஓம்பும்
படியறு காவல் பரித்தோன். 11

ஆயிர மாமுகன் அடுதோள்
ஓய்வில் இராயிர முடையோன்
ஞாயிறு தன்மகன் நகரின்
வாயில்கள் அன்னதோர் வாயான். 12

வடவரை ஆயிரம் வந்தோர்
உடல்கொடு மேவிய தொப்பான்
படைபல பாணி பரித்தான்
கடையழல் கான்றிடு கண்ணன். 13

தண்ணளி யோரிறை தானும்
உண்ணிகழ் வற்ற உளத்தான்
எண்ணரும் வெம்பவம் யாவும்
பண்ணினன் அன்று பயின்றான். 14

மீளில் சினத்ததி வேகக்
கோளரி யைத்தரு கொடியோன்
யாளி முகத்தவன் என்போன்
வாள்வய முற்றிடு வலியோன். 15

வேறு

பெருந்தகை யாங்கவன் பெயர்ந்த காலையின்
அருந்திறற் சூரனை அடைந்து மீண்டுபின்
மருந்துறழ் தன்மகன் மாட்சி தேர்வுறீஇ
இருந்தனன் வருந்தியே இலங்கை தன்னிடை. 16

சண்டவெங் கதிகொடு தமியன் சேறலுங்
கண்டனன் யாரிவன் கள்வன் போலுமால்
விண்டலம் நீந்தியே மேவு வானெனத்
தொண்டுசெய் உழையரில் ஒருவன் சொல்லுவான். 17

நங்குல நாயக நவில்வன் கேட்டிநீ
செங்கதிர் முளைத்துழிச் செல்வற் காணிய
பொங்கொளி மகேந்திர புரத்திற் போந்தனை
இங்குநின் திருமகன் இருந்து காப்பவே. 18

போந்திடு கின்றபின் புணரி தன்னுள்வான்
நீந்தினன் நீங்கிவன் நேர வன்னதை
வாய்ந்திடு பெருந்திறல் மடங்கற் பேரினான்
காந்திய கனலெனக் கண்டு சீறினான். 19

சீறினன் படையொடு சென்று தாக்கலும்
வீறொடு வருமவன் வெகுண்டு வாளுரீஇ
மாறமர் இயற்றியே மற்ற வன்றனைக்
கோறல்செய் தொருவிறல் கொண்டு மேயினான். 20

மின்னவிர் பூணுடை வீர மொய்ம்பினன்
இன்னதோர் இலங்கையின் இடைக்கட் பாய்ந்தனன்
அன்னவன் அடிபொரு தாழி உற்றதாற்
பொன்னகர் வளனொடும் அங்கட் புக்கபோல். 21

புக்கிட அளப்பிலர் பொன்ற ஏனையோர்
அக்கணம் எழுந்தனர் அவற்கண் டஞ்சியே
திக்கொடு வானமுஞ் சிந்த நின்மகன்
மைக்கடல் அகமொரீஇ வல்லை எய்தினன். 22

வெய்தென இவண்வரும் வீர னோடமர்
செய்தனன் வாள்கொடு செவ்வி அன்னதின்
மைதவழ் மேனியின் மதலை மார்புதாள்
கைதலை யொருதலை கண்ட மாக்கினன். 23

பூழியம் புயமுடைப் பொருநன் பின்னுறக்
கேழுறு வானெறி கிளர்ந்து போந்திடா
வாழிய மகேந்திர வரைப்பிற் புக்கனன்
ஆழுறும் இலங்கையும் ஆழி மேலெழ. 24

சூருறை திருநகர் துன்னி யாயிடைச்
சீரினை முழுவதுஞ் சிந்தி நங்குல
வீரரொ டேயமர் விளைத்து வென்றவண்
நேருநர் இன்மையின் நீங்கி னனரோ. 25

என்னலும் உருமினும் இடித்த சொல்லினன்
வன்னிகொள் உயிர்ப்பினன் மடித்த வாயினன்
துன்னிய வியர்ப்பினன் சுழலுங் கண்ணினன்
மெய்ந்நிறை வெகுட்சியன் விளம்பல் மேயினன். 26

காண்டியென் கடிமுறை கடந்து மைந்தனை
ஈண்டுயிர் வவ்வியே இறைவன் ஊர்புகா
மீண்டிடு கள்வன்இவ் வீரந் தன்னொடே
மாண்டிட அடுகுவன் வன்மை யாலென்றான். 27

என்றிவை விளம்பியே யாளி மாமுகன்
குன்றென எழுந்தொரு கொற்ற வாள்கொளீஇ
நின்றசில் படையொடு நேர்ந்து வீரன்முன்
சென்றனன் இனையன செப்பல் மேயினன். 28

நங்கடன் முறையினை நடாத்து மைந்தனை
இங்கடல் செய்தனை இனைய காப்பொரீஇ
அங்கடற் போந்தனை அழிவு செய்தனை
வெங்கடல் கடந்தனை மீடி யேகொலாம். 29

ஒல்லொலி அளக்கரை உகண்டு நிற்கினிச்
செல்லுதல் அரிதியான் செருவின் நேர்ந்தனன்

கொல்லுவன் பெருவயங் கொள்வன் நீயிவண்
வல்லது புரிமதி மதியிலாய் என்றான். 30

சொற்றது கேட்டலுந் துழனிப் பேரொலி
உற்றெறி கனலென உயிர்ப்பு மூரலுஞ்
செற்றமும் எய்தியே துளக்கிச் சென்னியைக்
கொற்றமொய்ம் புடையதோர் குரிசில் கூறுவான். 31

ஒருதலை யுடையவென் னுயர்வும் ஆயிரந்
தருதலை யுடையநின் தாழ்வும் யாமிவட்
பொருதலை இழைத்திடும் போது காண்புறுங்
கருதலை பெருவடி வமைந்த காட்சியே. 32

தீயவ இம்மொழி திண்ணந் திண்ணமுன்
மாயிரும் புழைக்கையின் மாமு கங்களோர்
ஆயிரந் தன்னையும் அறுத்து வீட்டியே
நாயினங் கவரிய நல்கு வேனென்றான். 33

கருணைகொள் நந்தியங் கணத்தன் இவ்வகை
உரைதரும் எல்லையின் உததி மேருமால்
வரையினை விழுங்கிய வளைந்த தேயென
விரைவொடு படைஞர்கள் வீரற் சுற்றினார். 34

சுற்றிய தானையர் தோன்றல் மீதுதாம்
பற்றிய படைக்கலம் பலவுந் தூண்டியே
செற்றமொ டமர்வினை செய்யச் சூறைபோல்
மற்றவர் சூழலுள் வாள்கொண் டெய்தினான். 35

துண்டமும் அகலமுந் தோளுந் தாளுமொண்
கண்டமுஞ் சென்னியுங் கரமு மானவை
விண்டுவிண் டழிவுற வெய்ய தானவர்
தண்டம தனைத்தையுந் தடிந்திட் டானரோ. 36

வேறு

அறுகு மாமுகத் தண்ணல் ஆற்றவுங்
கறுவு பெற்றிடுங் கருத்தின் வீரனைக்
குறுகி ஆயிரங் கொண்ட கைகளால்
இறுதி யூழிநாள் இடியின் எற்றினான். 37

அடித்த கைகளை அங்கை ஒன்றினால்
பிடித்து மேலவன் பெருங்கை வாளினால்
உடைத்த சோரிநீர் உகுத்து வீழ்ந்திறை
துடித்தி டும்படி துண்டம் ஆக்கினான். 38

ஆயி ரங்கரம் அறலும் மற்றுள
ஆயி ரங்கரம் அவைகள் நீட்டியே
ஆயி ரங்கிரி அவைப றித்தனன்
ஆயி ரங்கனோன் ஆடல் கொண்டுளான். 39

பறித்த ஆயிரம் பருப்ப தத்தையுங்
கறுத்து வீரன்மேற் கடிது வீசலும்
இறத்தல் கொண்டுமெய் எங்கும் எய்தியே
புறத்து வீழ்ந்தன உடைந்து பூழியாய். 40

பொற்றை யாவையும் பூழி ஆகியே
அற்ற காலையில் ஐயன் தூதுவன்
மற்றை ஆயிரம் வான்க ரத்தையுங்
கொற்ற வாள்கொடே குறைத்து வீட்டினான். 41

இமைக்கும் எல்லையின் எய்துங் கூற்றினை
அழைக்கு மாறெனா ஆர்த்துத் தானவன்
தழைக்கு மொய்ம்பினான் தன்னைப் பற்றுவான்
புழைக்கை முற்றவும் பொள்ளென் றுய்த்தனன். 42

உய்த்த காலையின் ஒருதன் வாளினால்
எய்த்த வன்மைசேர் யாளி மாமுகன்
பத்து நூறெனப் பட்ட சென்னியுங்
கொத்தொ டேவிழக் குறைத்திட் டானரோ. 43

ஆகத் திருவிருத்தம்—947.

# 19. வீரவாகு மீட்சிப் படலம்

—oo—

இன்ன பான்மையால் யாளி மாமுகன்
தன்னை அட்டபின் தன்கை வாளினைப்
பொன்னு லாவுறை புகுத்திச் சென்றனன்
மின்னு செஞ்சுடர் மேனி வீரனே.

இந்தி ரத்திரு இலங்கை நீங்கியே
அந்தி ரைக்கடல் அழுவம் வாவியே
கந்த மாதனங் கவின்ற வேலைசேர்
செந்தி மாநகர் சென்று புக்கனன்.

புக்க காலையில் பொருவில் ஆற்றலான்
மிக்க சேவகன் மேவல் காணுறுந்
தொக்க பாரிடஞ் சோமற் காணுறு
மைக்கருங் கடல் மான ஆர்த்தவே.

பாரி டத்தொகை பரிக்கும் மன்னவர்
சேர வந்துதஞ் செங்கை கூப்பியே
வீர வாகுவை மெய்யு றத்தழீஇ
ஆர்வம் எய்தினார் அன்பு கூறினார்.

தழுவு வோர்தமைத் தானும் புல்லியே
இழிஞர் தம்பதிக் கேகும் வெம்பவம்
ஒழிவ தாயினன் உமைக்கண் டேயெனா
முழுவ லன்பினான் முகமன் கூறினான். 5

விலக்கில் வன்மைகொள் வீர வாகுவை
இலக்கத் தெண்மரும் எதிர்ந்து மற்றவன்
மலர்க்க ருங்கழல் வணங்கிக் கைத்தொழ
அலக்கண் நீங்குமா றனையர்ப் புல்லினான். 6

அமைவில் பாரிடத் தனிக வேந்தருந்
தமர்க ளாயினோர் தாமுஞ் சூழ்வர
விமல னாகியே வீற்றி ருந்திடுங்
குமர நாயகன் கோயில் மேயினான். 7

விண்டு வானுளோர் விரிஞ்சன் மாதவர்
கொண்டல் ஊர்பவன் குழுமிப் பாங்குற
அண்டர் நாயகன் அமருந் தன்மையைக்
கண்டு முந்துகண் களிப்பின் மேயினான். 8

உள்ளம் என்புடன் உருகத் தூயநீர்
வெள்ளங் கண்ணுற விதிர்ப்பு மேவரப்
பொள்ளெ னப்புரம் பொடிப்பச் சூரடும்
வள்ளல் சேவடி வணங்கி னானரோ. 9

அணங்கு சால்வுறும் அந்தண் சேவடி
வணங்கி மும்முறை மகிழ்ச்சி அன்பினை
இணங்க அஞ்சலித் தேத்தி நிற்றலுங்
குணங்கள் மேற்படுங் குமரன் கூறுவான். 10

சுரரை வாட்டுறுஞ் சூரன் முன்புபோய்
விரைவின் நம்மொழி விளம்ப மற்றவன்
உரைசெய் திட்டதும் ஒல்லை மீண்டதும்
மரபின் இவ்விடை வகுத்தியால் என்றான். 11

வீரன் கூறுவான் விமல நின்மொழி
சூரன் முன்புபோய்ச் சொல்ல விண்ணுளோர்
ஆரி ருஞ்சிறை அதனை வீடலே
காரி யம்மெனக் கருத்திற் கொண்டிலன். 12

கெடல ருஞ்சுரர் கிளையை வெஞ்சிறை
விடுகி லேனென வெகுண்டு கூறினான்
அடிகள் அன்னதால் ஆண்டு நீங்கியே
கடிது வந்தனன் கருமமீ தென்றான். 13

என்ற காலையின் யாண்டு மாகியே
நின்று முற்றொருங் குணர்ந்த நீர்மையான்

உன்றன் செய்கையுள் ஒன்றுஞ் சொற்றிலை
நன்று மற்றது நவிறியால் என்றான். 14

தொடக்க முற்றுவாழ் சூரன் மாநகர்
அடுத்த காலையின் அகன்ற வேலையில்
தடுத்து ளோரைநின் சரண வன்மையால்
படுத்து வந்தனன் பான்மையீ தென்றான். 15

அருந்தி றற்புயன் அனைய செப்பலும்
இருந்த கந்தவேள் இகலி னோர்களால்
வருந்தி னாய்கொலோ மன்ற என்றுதன்
திருந்து பேரருள் செய்தல் மேயினான். 16

அங்கவ் வெல்லையின் ஆயி ரம்பெயர்ச்
செங்கண் மாயவன் திசைமு கத்தவன்
மங்குல் மேலவன் வதன நோக்கியே
எங்கள் நாயகன் இனைய கூறுவான். 17

தேவ ரைச்செயுஞ் சிறைவி டுத்துநீ
மேவு நன்கெனா வெய்ய சூர னுக்
கேவு தூதைவிட் டியம்பு வித்தனம்
பாவி யன்னது பயனென் றுன்னலான். 18

வீத லேயவன் விதிய தாதலின்
தீதில் விண்ணவர் சிறைவி டாமென
ஓதி னான்அவன் உயர்வு நீக்குவான்
போது நாளையா மெனப்பு கன்றனன். 19

ஆறு மாமுகத் தையன் இவ்வகை
கூறக் கேட்டுளோர் கொடிய சூர்மிசைச்
சேறு மென்றசொல் தெளிவின் நந்துயர்
மாறிற் றென்றனர் மகிழ்ச்சி எய்தினார். 20

ஆன வத்துணை ஆடன் மொய்ம்பினான்
தான அப்பதிச் சயந்தன் உற்றதும்
ஏனைச் செய்கையும் எடுத்துக் கூறியே
வான வர்க்கிறை மனத்தைத் தேற்றினான். 21

சீரு லாமகேந் திரபு ரத்தினும்
வீர வாகுமீண் டதுவி ளம்பினும்[1]
ஆர னார்க்கடல் அலைப்ப ஆண்டுறுஞ்
சூர னுற்றதும் பிறவுஞ் சொல்லுவாம். 22

ஆகத் திருவிருத்தம் - 969.

1 விளம்பினும்—கூறினேம் : கவிக்கூற்று.

# 20. சூரன் நகர்புரி படலம்

—oo—

ஊக வான்படை உலப்ப வச்சிர
வாகு மாண்டதும் வாகை மொய்ம்பினன்
ஏகுந் தன்மையும் ஏவல் தூதுவர்
சோக மோடுபோய்ச் சூர்முன் கூறினார்.

ஈரைஞ் சென்னிசேர் இளைய கான்முளை
வீரஞ் சிந்தியே விளிந்த வாற்றினைச்
சூரன் கேட்டலுந் துளங்கித் துன்பெனும்
வாரி யுள்ளுற மயங்கி வீழ்ந்தனன்.

வேறு

கண்ணிடை நெடும்புனல் கால மைந்தன்மேல்
உண்ணிகழ் அன்புசென் றுயிரை ஈர்ந்திடத்
துண்ணென உயிர்ப்பெனும் புகையுஞ் சுற்றிட
எண்ணருஞ் செல்லல்கொண் டிரங்கி ஏங்கினான்.

ஏங்கினன் புலம்பலும் இளைய வெய்யசூர்
பாங்கமர் தமர்களும் பரிச னத்தருந்
தீங்குசெய் அரக்கருந் தெரிவை மார்களும்
நீங்கற அழுதனர் நெடுங்கண் நீருக.

பழிதவிர் கற்புடைப் பதுமை தன்மகன்
ஒழிவுறு தன்மையை ஓர்ந்து மாமலர்க்
குழலவிழ்ந் தலமரக் கொங்கை மேற்புடைத்
தழுதனள் வீழ்ந்தனள் மறிக்கும் அங்கையாள்.

தொல்லியல் இழுக்கிய சூர னென்பவன்
புல்லிய பின்முறைப் புணர்வின் மாதருஞ்
சில்லியற் கூந்தல்தாழ் சேடி மார்களும்
எல்லவ ருந்தழீஇ யிரங்கல் மேயினார்.

களமெழு மிசையொலி கடிநல் யாழொலி
துளையொலி வயிரொலி தூரி யத்தொலி
அளமரு மொழியொலி அடங்கி அப்பெரு
வளநகர் புலம்பொலி மயங்கிற் றென்பவே.

அன்னது போழ்தினில் அறத்தைக் காய்தரு
துன்னெறி மந்திரி சூர பன்மனும்
மன்னவன் முன்னுற வந்து கைதொழு
தின்னன கேண்மென இசைத்தல் மேயினான். 8

மெய்ப்புவி அண்டங்கள் பரித்த மேன்மையை
ஒப்பருந் திருவினை உலப்பி லாயுளை

செப்பருந் திறலினை சிறந்த சீர்த்தியை
இப்பரி சழுங்குதல் இயற்கை யாகுமோ. 9

தெண்டிரை நேமிவான் செறிந்து கொள்ளினும்
அண்டம தழியினும் அனைத்து மாயினும்
விண்டிடல் இன்றிவாழ் வீர நீமனங்
கொண்டிடு திண்மையுங் குன்றற் பாலதோ. 10

ஏவரும் வியந்திடும் இறைவ நீயிவண்
ஓவென அரற்றியே உயங்குற் றுயெனின்
மூவரும் நகைப்பர்கள் முன்னம் ஏவல்செய்
தேவரும் நகைப்பர்கள் புகழுந் தேயுமால். 11

பூதர்தம் படையல புராரி நல்கிய
காதல னேயல கழறு விட்டதோர்
தூதுவன் செய்தபுன் தொழிலுக் காற்றலை
பேதுற லாகுமோ பெருமைக் கீறிலாய். 12

தந்தையர் துஞ்சினுந் தம்முன் பின்னவர்
மைந்தர்கள் துஞ்சினும் மற்றுஞ் சார்ந்தவர்
தந்தொகை துஞ்சினுஞ் சயத்தின் மேலையோர்
சிந்தைகொள் வன்மையிற் சிறிதுந் தேயுமோ. 13

மேதகு பெருந்திறல் வீரர் தம்மையும்
மாதரும் வெல்வரால் மாயும் ஊழ்வரின்
ஆதலின் நின்மகற் காயுள் குன்றலின்
தூதனும் அட்டனனாகித் தோன்றினான். 14

வெவ்விய ஒன்னலர் வினையும் வன்மையுங்
கைவரு நெல்லியங் கனியின் நாடியே
செய்வகை தேற்றினஞ் செய்க லாதிவண்
நைவதும் ஆண்மையின் நலத்திற் காகுமோ. 15

வரங்களும் மதுகையும் வரம்பின் றெய்தியே
உரங்கிளர் சூரனென் றொருபேர் பெற்றநீ
தரங்கம தடைவதுந் தலைமைக் கேற்பதோ
இரங்கலை இரங்கலை யென்று தேற்றினான். 16

மேற்றிகழ் அறத்தினை வெகுளும் நாமத்தான்
தேற்றலும் அவுணர்கோன் தெளிவு பெற்றெழீஇ
ஆற்றருந் துயரினை அடக்கித் தன்பணிக்
கூற்றியல் உழையரை நோக்கிக் கூறுவான். 17

சேயுயிர் வௌவியே சிறந்த இந்நகர்
மாய்வது புணர்த்திடு வலிய தூதுவன்
போயது தெரிந்திரோ புகலக் கேட்டிரோ
நீயிர்கள் வாய்மையை நிகழ்த்து மென்னவே. 18

துப்புடன் இவ்வழி தூதிற் சென்றுளான்
இப்புரம் அகன்றனன் இலங்கை நோக்குறு
அப்புற மேகினன் அதனைக் கண்டனம்
மெய்ப்பரி சிஃதென விளம்பி னாரரோ. 19

வேறு

அம்மொழி வினவ லோடும் அவுணர்கோன் தன்பால் நின்ற
கம்மியர் தம்மை நோக்கிக் கடிதுபோய் அகிலம் நல்கிச்
செம்மலர் மிசையே வைகுந் திசைமுகத் தொருவன் றன்னை
இம்மெனக் கொணர்திர் என்ன அனையவர் இசைக்க லுற்றார்.20

ஈங்கிது கேட்டி மன்ன இனையமூ தண்டம் நல்குந்
தேங்கமழ் பதுமத் தண்ணல் தேவர்கோ னாதி யான
பாங்கின ரோடு மேவிப் படையொடும் புவியில் வந்த
காங்கெயன் றன்கண் உற்றான் என்பராற் கண்டோர் என்றார்.

தொழுவர்கள் இனைய மாற்றஞ் சொற்றலுஞ் சூரன் கேளா
விழுமிது விழுமி தென்னா வெய்துயிர்ப் பெய்திச் சீறி
அழலெழ நகைத்து மற்றை அண்டத்தின் இருந்து நல்குஞ்
செழுமலர் அயனைப் பற்றிச் செல்லுமின் வல்லை என்றான். 22

கொற்றவன் இனைய மாற்றங் கூறலும் உழையர் கேளா
இற்றிது செய்தும் என்னா இசைவுகொண் டேல்லை ஏகி
மற்றையண் டத்திற் சென்று வானவர் முதுவன் றன்னைப்
பற்றினர் கொணர்ந்தார் தங்கோன் பணித்திடு பரிசு கூறி. 23

பரிசனர் பலரும் ஈண்டிப் பார்புகழ் சூர னென்னும்
அரசன்முற் கொணர்ந்து வேறோர் அண்டத்தின் அயனை உய்ப்ப
வரிசையால் அவனை நோக்கி மாணழி வுற்ற மற்றித்
திருநகர் அதனைத் தொன்மை போலவே செய்தி யென்றான். 24

சூரன்மற் றிதனைச் செப்பச் சொற்பணி தலைக்கொண் டைய
ஓரிறை யொடுங்கு முன்னர் உனதுதொன் னகர மாற்ற
ஏருற முன்ன மேபோல் இயற்றுவன் யானே யென்னாப்
பேருல குதவுகின்ற பெற்றியை நினைந்து செய்வான். 25

பொன்மதில் மாட வீதி பொலன்மணிச் சிகரம் வேரம்
மன்மதன் விழையுஞ் சோலை மண்டபம் வாவி பொய்கை
சென்மலி அரங்க மன்றந் தெற்றியே முதல வெல்லாந்
தொன்மைபோல் ஆகத் தன்கைத் தொழில்முறை படைத்தான்மன்னோ.

இவ்வகை நகர முற்றும் எழில்பெறப் படைத்த பின்றை
மைவரை மேனி மன்னன் மாபெருங் கோயில் தன்னைச்
செவ்விதின் முதுமை போலச் சிறப்பினால் திருத்தல் செய்தான்
ஐவகை இருபான் கொண்ட அல்லியங் கமலத் தண்ணல். 27

கொன்பெரு நகரும் அந்தண் கோயிலும் படைத்த லோடும்
மன்பெருந் தகைய சூரன் மற்றவன் செய்கை நோக்கி

அன்புசெய் துவகை யாகி அவுணர்கள் யாரும் போற்ற
முன்புபோல் அரிமா னேற்று முழுமணித் தவிசின் உற்றான். 28

உற்றன னாகிப் பின்னர் ஓதிமத் திறையை நோக்கி
மற்றுநின் னண்டஞ் சென்று வைகுதி நல்கி என்னாச்
சொற்றனர் ஏவ அன்னோன் துண்ணெனா விடைபெற் றேகிப்
பெற்றதன் னண்டஞ் சென்று பிறங்குதன் னுலகம் புக்கான். 29

ஆகத் திருவிருத்தம்—998.



# 21. சூரன் அமைச்சியற் படலம்

—oo—

அந்தநல் லமையந் தன்னின் அவுணர்கோன் ஏவல் போற்றி
முந்துசெல் லொற்ற ரானோர் மூரிநீர்க் கடலை வாவிச்
செந்தியிற் சென்று கந்தன் சேனையும் பிறவுந் தேர்ந்து
வந்தனர் விரைவின் அங்கண் மன்னனை வணங்கிச் சொல்வார். 1

ஏற்றவெம் பூத வெள்ளம் இராயிரம் படையின் வேந்தர்
நூற்றுடன் எண்மர் பின்னும் நுவலருஞ் சிறப்பின் மிக்கோர்
மேற்றிகழ் இலக்கத் தொன்பான் வீரர்மற் றினையரோடுந்
தோற்றமில் பரமன் மைந்தன் தொடுகடல் உலகின் வந்தான். 2

சரதமீ தவுணர் கோவே தாரக வீரன் தன்னைக்
கரையறு மாயை போற்றுங் காமரு பிறங்கல் தன்னை
இருபிள வாக வேலால் எறிந்தனன் ஈறு செய்து
திரைபொரும் அளக்கர் வேலைச் செந்திமா நகரின் உற்றான். 3

விலங்கிய கதிர்வேல் அண்ணல் விரைந்திவண் மேவு மாற்றால்
உலங்கிளர் மொய்ம்பில் தூதன் ஒருவனை விடுத்தான் அன்னோன்
இலங்கையை அழித்து வந்தான் யாளிமா முகவன் றன்னை
வலங்கையின் வாளாற் செற்று வாரிதி கடந்து போனான். 4

செங்கதிர் அயில்வேல் மைந்தன் தெண்டிரைப் புணரி வாவி
பொங்குவெங் கணங்க ளோடும் போர்ப்படை வீர ரோடும்
இங்குவந் தாடல் செய்வான் எண்ணினன் இருந்தான் ஈது
சங்கையென் றுன்னல் வாய்மை தகுவன உணர்தி யென்றார். 5

ஒற்றர்சொல் வினவி மன்னன் ஒருதனி இளவல் தன்னை
அற்றமில் கேள்வி சான்ற அமைச்சரை மைந்தர் தம்மைச்
சுற்றமொ டமைந்த தானைத் தொல்பெருந் தலைமை யோரை
மற்றொரு கணத்தின் முன்னர் மரபொடு கொணரு வித்தான். 6

வேறு

ஆங்கவர் யாவரும் அவுணர் மன்னவன்
பூங்கழல் கைதொழூஉப் புடையின் வைகலுங்

தீங்கனல் சுடுவதோர் சீற்றம் உள்ளெழ
வீங்கிய உயிர்ப்பினன் விளம்பல் மேயினான். 7

போற்றல ராகிய புலவர் யாரையும்
மாற்றருஞ் சிறையில்யான் வைத்த பான்மையைத்
தேற்றிய மகபதி சென்று சென்னிமேல்
ஆற்றினை வைத்திடும் அமலற் கோதினான். 8

கண்ணுத லுடையதோர் கடவுள் வல்லையோர்
அண்ணலங் குமரனை அளித்து மைந்தநீ
விண்ணவர் சிறையினை வீட்டிச் செல்கெனத்
துண்ணென நம்மிசைத் தூண்டி னானரோ. 9

வாய்த்திடு கயிலைமால் வரையை வைகலுங்
காத்திடு நந்திதன் கணத்து வீரரும்
மீத்தகு பூதரும் விரவ மாலயன்
அரன்மகன் இம்பர் எய்தினான். 10

பாரிடை யுற்றுளான் பாணி கொண்டதோர்
கூருடை வேலினாற் கொடிய குன்றொடு
தாரக இளவலைத் தடிந்து பின்னுற
வாரிதி யகன்கரை வந்து வைகினான். 11

அன்னதோர் அறுமுகன் ஆங்கொர் தூதனை
என்னிடை விடுத்தலும் ஏகி மற்றவன்
மைந்நிற நெடுங்கடல் வரைப்பிற் பாய்ந்தொராய்ப்
பொன்னவிர் இலங்கைமா புரத்தை வீட்டினான். 12

இலங்கையங் காவலும் இகப்புற் றின்னதோர்
பொலங்கெழு திருநகர் நடுவட் புக்குலாய்
நலங்கிளர் என்னவைக் களத்தின் நண்ணினான்
கலங்கலன் நிறையது மாயைக் கற்பினான். 13

நண்ணினன் எதிருற நவையில் வீரர்போல்
விண்ணவர் பாங்கராச் சிலவி ளம்பியென்
கண்முனஞ் சிலருயிர் களைந்து வன்மையால்
எண்ணலன் பின்னுற எழுந்து போயினான். 14

போயவன் இந்நகர் பொடித்துச் சிந்தியான்
ஏயின வேயின படைஞர் யாரையும்
மாயுறு வித்தனன் மற்றும் என்னிளஞ்
சேயுயிர் கொண்டனன் செருக்கு நீங்கலான். 15

அழிந்ததித் திருநகர் அளப்பில் தானைகள்
கழிந்தன செறிந்தது களேப ரத்தொகை
கிழிந்தது பாரகங் கெழீஇய சோரியா
றொழிந்ததென் றுணையும் உயர்வுந் தீர்ந்ததால். 16

ஒற்றென வந்தவவ் வொருவன் தன்னையும்
பற்றிவெஞ் சிறையிடைப் படுத்தி னேன்அலேன்
செற்றிலன் ஊறதே எனினுஞ் செய்திலேன்
எற்றினி வசையுரைக் கீறு கூறுகேன். 17

இம்பரின் இவையெலாம் இழைத்த தூதுவன்
நம்பதி இகந்துபோய் இலங்கை நண்ணிய
மொய்ம்புடை யாளிமா முகவற் சாடியே
அம்புதி கடந்தனன் அவனி யெய்தினான். 18

கார்பொரு மிடற்றவன் காதன் மாமகன்
வாரிதி கடந்திவண் வந்து நம்மொடும்
போர்பொர நினைகுவான் போலும் இவ்வெலாஞ்
சாரணர் மொழிந்தனர் சரத மாகுமால். 19

நெற்றியில் அனிகமாய் நின்ற பூதரைச்
செற்றிகல் வீரரைச் செகுத்துச் சேயினை
வெற்றிகொண் டேனையர் தமையும் வீட்டியே
மற்றொரு விகலைமுன் வரவல் லேனியான். 20

சூரனென் றொருபெயர் படைத்த தொல்லையேன்
பாரிடர் தம்மொடும் பாலன் தன்னொடும்
போரினை இழைத்திடல் புரிந்து வெல்லினும்
வீரம தன்றெனா வறிது மேவினேன். 21

துய்த்திடுந் திருவினில் வலியிற் சூழ்ச்சியில்
எத்துணைப் பெரியர்தாம் எனினும் மேலையோர்
கைத்தொரு வினைசெயக் கருதிற் றம்முடை
மெய்த்துணை யோரைமுன் வினவிச் செய்வரால். 22

ஆதலின் வினவினன் யானு மாற்றுதல்
ஈதென வுரைத்திரால் என்று மன்னவன்
ஓதினன் அன்னதை உணர்ந்து கைதொழூஉ
மேதியம் பெயரினான் இவைவி ளம்பினான். 23

மேலுயர் மாயைகள் விளைக்கும் வெற்பினை
மாலினை வென்றநின் வலிய தம்பியை
ஏலவொர் கணத்தின்முன் எறிந்த வீரனைப்
பாலனென் றுரைப்பதும் உணர்வின் பாலதோ. 24

மேதகு தாரக வீரன் தானையை
ஆதிபர் தம்முடன் அட்ட தீரரை
ஏதுமோர் வலியிலா எளிய ரென்பதும்
பூதரென் றிகழ்வதும் புலமைப் பாலவோ. 25

மீதெழு திரைக்கடல் விரைவிற் பாய்ந்துநம்
மூதெயில் வளநகர் முடித்து நின்னுடைக்

காதல னுயிரையுங் கவர்ந்த கள்வனைத்
தூதனென் றுரைப்பதும் அறிஞர் சூழ்ச்சியோ. 26

கற்றையஞ் சிறையுடைக் கலுழன் ஊர்தரு
கொற்றவன் திசைமுகன் அமரர் கோமகன்
மற்றொரு வடிவமாய் வந்த தேயலால்
ஒற்றுவன் நிலைமைவே றுணரற் பாலதோ. 27

உன்றனி இளவலும் ஒருநின் னோங்கலும்
பொன்றிய காலையே புராரி மைந்தன்மேற்
சென்றிலை யல்லதுன் சேனை தூண்டியும்
வென்றிலை தாழ்த்திவண் வறிது மேவினாய். 28

தீயழல் வறியதே எனினுஞ் சீரியோர்
ஏயிது சிறிதென எள்ளற் பாலரோ
வாயத னாற்றலை அடக்க லாரெனின்
மாயிரும் புவியெலாம் இறையின் மாய்க்குமால். 29

மாற்றலர் சூழ்ச்சிய தெனினும் மாறதாய்
வீற்றொரு நிலைமைய தெனினும் மேவுமுன்
ஏற்றெதிர் காப்பரே என்னின் அன்னவர்க்
காற்றரும் இடுக்கண்வந் தடைதற் பாலதோ. 30

துறந்திடா வளந்தனைத் துய்த்துச் செய்வகை
மறந்தன மாகியே வன்மை யாளரை
எறிந்தவர் தமையிகழ்ந் திங்ஙன் வாழ்துமேற்
சிறந்தவர் யாமலால் ஏவர் சீரியோய். 31

முன்னமக் குமரன்மேல் முனிந்து சேறியேல்
உன்னகர்க் கேகுமோ ஒற்று மற்றுநீ
அன்னது புரிந்திலை ஆடல் மைந்தனோ
டிந்நகர் அழிந்ததென் றிரங்கற் பாலையோ. 32

மொய்யுடை நின்முகன் முடிந்த தன்மையும்
ஐயநின் திருநகர் அழிவ தானதுஞ்
செய்யுறு நிலைமைகள் தெரிந்து செய்திடா
மையலின் கீழ்மையால் வந்த வாகுமால். 33

கழிந்திடு பிழையினைக் கருதிச் சாலவுள்
அழிந்திடல் இயற்கையன் றறிஞர்க் காதலால்
ஒழிந்தன போகவொன் றுரைப்பன் கேண்மியா
விழிந்ததென் றுன்னலை இமைப்பிற் செய்திநீ. 34

ஆயது பிறவிலை அவுணர் தம்மொடு
மேயின படையொடும் விரைந்து கண்ணுதற்
சேயினை வளைந்தமர் செய்யப் போதியால்
நீயினித் தாழ்க்கலை நெருநல் போலவே. 35

என்றிவை மேதியன் இசைப்பக் கேட்டலும்
நன்றிது வாமென நவின்று கையெறிந்
தொன்றிய முறுவலும் உதிப்ப நல்லறங்
கொன்றிடு துர்க்குணன் இனைய கூறுவான். 36

வன்றிறல் உவணன்மேல் வந்த மாயன்மேல்
நின்றிடும் அமரர்மேல் நேர்ந்து போர்செயச்
சென்றிலை இளையரால் திறல்கொண் டேகினாய்
இன்றினிப் பாலன்மேல் ஏக லாகுமோ. 37

இறுதியில் ஆயுளும் இலங்கும் ஆரியும்
மறுவிலா வெறுக்கையும் வலியும் வீரமும்
பிறவுள திறங்களுந் தவத்திற் பெற்றனை
சிறுவனோ டேயமர் செய்தற் கேகொலாம். 38

மேதகு பசிப்பிணி அலைப்ப வெம்பலிக்
காதல்கொண் டலமருங் கணங்கள் தம்மையுந்
தூதுவன் தன்னையுந் தொடர்ந்து போர்செயப்
போதியோ அமரரைப் புறங்கண் டுற்றுளாய். 39

இன்றுநின் பெரும்படைக் கிறைவர் யாரையுஞ்
சென்றிட விடுக்குதி சிறிது போழ்தினில்
குன்றெறி பகைஞனைக் கூளி தம்மொடும்
வென்றிவண் மீள்குவர் வினைய மீதென்றான். 40

கருதிடு துர்க்குணக் கயவன் இன்னன
உரைதரு முடிவினில் ஒழிக இங்கெனுக்
கருமணி யாழியங் கைய மைந்தரோ
தருமவெம் பகையுடை யமைச்சன் சாற்றுவான். 41

குலம்படு நவமணி குயின்று பொன்புனை
அலம்படை கொண்டுபுன் முதிரை ஆக்கத்தாற்
புலம்படக் கீறுவ போலும் வீரநீ
சிலம்படி மைந்தனோ டாடல் செய்வதே. 42

மேலுயர் கண்ணுதல் விமலன் அன்றெனின்
ஆலவன் அன்றெனின் அயனும் அன்றெனில்
காலனும் அன்றெனிற் காவல் வீரநீ
பாலனொ டமர்செயிற் பயனுண் டாகுமோ. 43

மன்னிளங் குதலைவாய் மதலை மீதினும்
இன்னினி அமர்செய இறத்தி யென்னினும்
அன்னவன் நினதுபே ராற்றல் காண்பனேல்
வென்னிடும் எதிர்ந்துபோர் விளைக்க வல்லனோ. 44

நேரலர் தங்களை நேர்ந்து ளாரெனப்
பேரிகல் ஆற்றியே பெரிது மாய்வதும்

பூரியர் கடனலாற் புலமைக் கேற்பதோ
சீரியர் கடனவை தெரிந்து செய்வதே. 45

எரிமுகன் இரணியன் எனுமுன் மைந்தரில்
ஒருவனுக் காற்றலர் இலக்கத் தொன்பது
பொருதிறல் வயவரும் பூதர் யாவரும்
அரனருள் புரிதரும் அறுமு கத்தனும். 46

கீள்கொடு நகங்கொடு கிள்ளும் ஒன்றினை
வாள்கொடு தடியுமோ வன்மை சான்றதோர்
ஆள்கொடு முடித்திடும் அவரை வென்றிட
நீள்கொடு மரங்கொடு நீயுஞ் சேறியோ. 47

மாணிமை கூடுறு மகவு தன்னொடு
மேணறு சாரதர் இனங்கள் தம்மொடும்
பூணுதி செருவெனும் புகற்சி கேட்பரேல்
நாணுவர் நமரெலாம் நகுவர் தேவரும். 48

பொற்றையை முடித்தனன் பொருவில் தம்பியைச்
செற்றனன் என்றிளஞ் சிறுவன் தன்னையும்
வெற்றிகொள் புதல்வனை வீட்டி னானென
ஒற்றையும் மதித்தனை தொன்மை உன்னலாய். 49

ஆறணி செஞ்சடை அண்ணல் தந்திடும்
பேறுடை வேலினைப் பிள்ளை உய்த்தலும்
மாறுள படையினான் மாற்ற லாமையால்
ஈறது வாயினன் இளவல் தாரகன். 50

குறுமுனி தொல்லைநாட் கூறும் வாய்மையால்
இறுதியை யடைந்ததாங் கிருந்த மால்வரை
அறிகிலை ஈதெலாம் ஆற்றல் கூடுறுச்
சிறுவன செய்கையே சிந்தை கோடியால். 51

எச்சமொ டறிவுறு இரதஞ் சாலிகை
கைச்சிலை பெற்றிலன் கருதி நீயவை
அச்சொடு புரிந்திலை அதனில் தூதனால்
வச்சிர வாகுவாம் மகனுந் துஞ்சினான். 52

பலவினி மொழிவதென் படியில் தானவத்
தலைவரில் ஒருவனை விளித்துத் தானையோ
டிலையயின் முருகன்மேல் ஏவு வாயெனின்
அலைவுசெய் தொல்லையின் அடல்பெற் றேகுவான். 53

அன்னது செய்கென அறத்தைச் சீறுவான்
சொன்னதோர் இறுதியின் முறுவல் தோன்றிடக்
கன்னிகர் மொய்ம்புடைக் கால சித்தெனுங்
கொன்னவில் வேலினான் இனைய கூறுவான். 54

செந்தியின் இருந்திடுஞ் சிறுவன் சாரதர்
தந்தொகை தன்னொடு மீண்டு சாருமேல்
எந்தையொர் சிலவரை ஏவல் அல்லது
மந்திரம் வேண்டுமோ மற்றி தற்குமே. 55

வயந்தனை தையனை வாசவன் றனைச்
சயந்தனைப் பிறர்தமைச் சமரின் வென்றநாள்
இயைந்தெமை வினவலை இன்றொர் பாலற்கா
வியன்பெரு மந்திரம் வேண்டிற் றுங்கொலோ.

அண்டர்கள் ஒடுங்கினர் அரக்கர் அஞ்சினர்
எண்டிசைக் கிழவரும் ஏவ லாற்றுவர்
மண்டமர் அவுணரின் வலியர் பூதராங்
கண்டனம் இன்றியாங் கலியின் வண்ணமே. 57

பணிக்குதி தமியனைப் பரமன் மைந்தனைக்
கணத்தொகை வீரரைக் கால பாசத்தாற்
பிணித்திவண் வருகுவன் என்று பேசலுந்
துணுக்கெனச் சண்டனென் றொருவன் சொல்லுவான். 58

கழிபசி நோயடக் கவலும் பூதரும்
மழலையம் பிள்ளையும் மற்ற வற்குறு
தொழில்புரி சிலவருஞ் சூழ்ச்சிப் பாலரோ
அழகிது மந்திரம் அவுணர்க் காற்றவே. 59

கொல்லுவன் பூதரைக் குமரன் றன்னையும்
வெல்லுவன் பிறரையும் விளிவு செய்வனுன்
மல்லலந் தோளுடை மன்னர் மன்னவுன்
சொல்லதின் றென்ன இத் துணையுந் தாழ்த்துளேன். 60

லைமைப்பிற் சென்றியான்
மூவர்கள் காப்பினும் முரணிற் றாக்கியே
தூவுறு சாரதத் தொகுதி தன்னொடு
மேவலன் தனை இவண் வென்று மீள்வனால். 61

எனவிவை சண்ட னுங் கிசைத்த வெல்லையின்
அனலியென் றுரைத்திடும் அவுணர் காவலன்
சினமொடு முறுவலுஞ் சிறிது தோன்றிட
வினையமொ டிம்மொழி விளம்பல் செய்குவான். 62

தெம்முனை மரபிலோர் சிறுவன் என்னினும்
வெம்மையொ டேற்குமேல் வெகுண்டு மேற்செலா
தெம்மொடு மந்திரத் திருப்ப ரேயெனின்
அம்மவோ சூரருக் கழகி தாற்றலே. 63

என்றிது மொழிதலும் எரியுங் கண்ணினன்
ஒன்றிய முறுவலன் உயிர்க்கு நாசியன்

கன்றிய மனத்தினன் கறித்து மெல்லிதழ்
தின்றிடும் எயிற்றினன் சிங்கன் கூறுவான். 64

வெங்தொழில் மறவரை விளித்த தன்மையும்
மந்திரம் இருந்தது மனங்கொள் சூழ்ச்சியும்
இந்திரன் உதவிசெய் இளையன் வன்மையைச்
சிந்தி வேகொலாம் நினைந்த செய்கையே. 65

இருநில அண்டமேல் இருந்து ளோரெலாம்
மருவல ராகியே வருக வந்திடின்
ஒருதமி யேன்பொரு துலையச் செய்வனால்
தெரியலை போலுநின் னடியன் திண்மையே. 66

வன்மையை உரைப்பது மரபன் றால்எனைச்
சென்மென விடுக்குதி சேனை யோடுபோய்
உன்முனி வுற்றிடும் ஒன்ன லாரையட்
டின்மைய தாக்கியே வருவன் ஈண்டென்றான். 67

இன்னவை போல்வன இயல்பி னேன்ஐய
துன்னெறி அமைச்சருஞ் சூழ்ச்சித் தொல்படை
மன்னரும் இசைத்தலும் வயங்கு செங்கதிர்
ஒன்னலன் கையமைத் துரைத்தல் மேயினான். 68

சென்றிடு முனிவரர் தியங்க மாயைசெய்
குன்றுடன் இளவலைக் குமரன் கொன்றிடும்
அன்றெனை விடுத்திலை அழைத்தொன் றோர்ந்திலை
இன்றிது வினவுவ தென்னை யெந்தைநீ. 69

உள்ளுறு கரவினன் ஒருவ னும்பரான்
எள்ளரும் ஒற்றுவந் தீண்டு போர்செயின்
முள்ளெயி றின்னமும் முற்றுந் தோன்றிலாப்
பிள்ளையை விடுக்குமோ பெரியை சாலநீ. 70

இழித்தகு தூதனால் இடர்ப்பட் டாயெனும்
பழித்திறம் பூண்டனை பாலன் ஆவியை
ஒழித்தனை நகரமும் ஒருங்கு சீரற
அழித்தனை நீயுன தறிவி லாமையால். 71

பொருளல தொன்றினைப் பொருளெ னக்கொடு
வெருவுதல் செய்வது வினைய மோர்கிலா
தொருசெயல் விரைந்துசெய் துயங்கி வாழ்தலும்
பெரியவர் கடமையோ பேதைத் தன்மையே. 72

பொற்றைபொ டிளவலைப் பொன்ற வீட்டினோன்
கொற்றமும் பூதர்தங் குழாத்தி றற்றலும்
ஒற்றுவன் நிலைமையும் உணரிற் சென்றியான்
பற்றிமுன் னுய்க்குவன் பிணித்துப் பாசத்தால். 73

ஆயிரத் தெட்டெனும் அண்டத் துக்கெலாம்
நாயக முதல்வனீ நம்பன் நல்கிய
சேயமர் குறித்தெழல் சீரி தன்றெனை
ஏயினை வெற்றிகொண் டிருத்தி எம்பிரான். 74

ஆண்டனை விடுத்தியேல் அமர தாற்றிட
மூண்டிடும் அவர்தொகை முருக்கித் தேவராய்
ஈண்டுறு வோரையும் இமைப்பில் வென்றுபின்
மீண்டிடு வேனென விளம்பி னனரோ. 75

இரவியம் பகையவன் இனைய சிற்சில
உரைதரும் இறுதியின் உலைவு றுதந்தோர்
முரணுறு தாதைதன் முகத்தை நோக்கியே
குரைகழல் இரணியன் கூறல் மேயினான். 76

வேறு

வள்ளல் தன்மைசேர் வயப்பெருஞ் சூரனோர் மழலைப்
பிள்ளைப் போர்வலிக் கிரங்கினன் எனுமொழி பிறக்கின்
உள்ளத் தேநினை நினைக்கினும் வெருவும்ஒன் னலரும்
எள்ளற் கேதுவாம் விடுத்தியான் மந்திரம் இனியே. 77

மைதி கழ்ந்திடு மிடற்றவன் மா னை
எய்தி னான்அமர்க் கென்றலும் என்றனை விளித்து
வெய்தெ னப்பொர விடுத்திலை வெறுத்தியோ வினையேன்
செய்தி டுந்தவ றுண்டுகொல் உனக்கொரு சிறிது. 78

பானல் போலொளிர் மிடற்றினன் பாலன்மேற் பசிநோய்க்
கூனை வேட்டுழல் பூதர்மேல் ஒழிந்துளார் தம்மேன்
மான வெஞ்சமர்க் கெம்முனோன் சேறலும் வசையே
சேனை யோடியான் ஏகுவன் செருத்தொழில் புரிய. 79

வெற்றிப் பேரமர் ஆற்றியே மேவலர் தொகையைச்
செற்றுத் தேவர்கள் யாரையுந் தடிந்துசெல் குவனால்
இற்றைக் கங்குலின் என்றனை ஏவுதி யெனலும்
மற்றைத் தம்பியாம் எரிமுகன் இனையன வகுப்பான். 80

இணையி லாவண்டம் ஆயிரத் தெட்டினுக் கிறைநீ
துணைய தாயொரு வீரகே சரியுளன் சுதராய்க்
கணித மில்லவர் யாமுளங் கரிபரி கடுந்தேர்
அணிகொ டானவப் படையுள அலகிலா தனவே. 81

அழிவில் பாகுள தேருள சிலையுள அம்புதான்
ஒழிவி லாதமர் அம்புபெய் தூணியும் உளவால்
இழிவில் தெய்வதப் படைகண்முற் றும்முள இறைமைத்
தொழில் நடாத்துறு பரிதியும் ஒன்றுண்டு தொல்லோய். 82

அண்டம் ஆயிரத் தெட்டையுங் கன்னலொன் றதனில்
கண்டு மீடரும் இந்திர ஞாலமுங் கவனங்

கொண்ட தோர்தனி மடங்கலும் உனக்குள
விண்டு மாலுறு மாயைகள் பலவுள மேலோய். 83

இன்ன பான்மைசேர் வெறுக்கைபெற் றீறிலா துறையும்
மன்னர் மன்னநிற் போன்றுளார் யாவரே மலையக்
கன்னி பாலகன் தூதுவன் சிறுதொழில் கருத்தின்
உன்னி யுன்னியே இரங்கவுந் தகுவதோ உனக்கே. 84

குழந்தை வெண்பிறை மிலைச்சினோன் மதலையைக் குறுத்தாள்
இழிந்த பூதரைப் பிறர்தமை வென்றிட எமரில்
விழைந்த மானவர் ஒருவரை விடுப்பதே யன்றி
அழிந்தி ரங்கியே வினவுமோ இதுகொல்உன் னறிவே. 85

மூளும் வெஞ்சமர் புரிந்தஎன் னிளவல்பன் முடியும்
வாளி னலடும் ஒற்றனை மற்றுளார் தம்மைக்
கேளொ டுந்தடிந் தல்லது கேடில்சீர் நகர்க்கு
மீள்க லேனெனப் பகர்ந்தனன் வெய்யசூ ருரையே. 86

கரந்தை சூடுவான் குமரனைப் பொருதல்கா தலியா
இருந்த வீரர்கள் அளப்பில ராயினும் இப்போர்
விரைந்து நீயெனக் குதவுதி ஏகுவன் மேனாட்
பொருந்து பாதலத் தரக்கர்மேற் சென்றதே போல. 87

வலிய தோர்சிலை ஈறிலாக் கவசம்வான் படைகள்
உலகு தந்தவன் அளித்திட முன்புபெற் றுடையேன்
குலம டங்கவாள் அரக்கரைத் தடிந்திசை கொண்டேன்
மெலியன் அன்றியான் அறுமுகன் மேலெனை விடுத்தி. 88

என்னு மாற்றங்கள் எரிமுக முடையவன் இசைப்ப
அன்ன வன்றனை விலக்கியே கரதலம் அமைத்துச்
சென்னி ஆயிரம் பெற்றுள சிங்கமா முகத்தோன்
மன்னர் மன்னனை நோக்கியே வகுத்துரை செய்வான். 89

மந்தி ரத்தருந் தானையந் தலைவரும் மகாருந்
தந்த மக்கியல் வன்மையே சாற்றிய தல்லால்
இந்தி ரப்பெருந் திருவுறும் உன்றனக் கியன்ற
புந்தி சொற்றிலர் இம்மொழி கேளெனப் புகல்வான். 90

வேறு

பெற்றிடு திருவினில் பிறந்த வெஞ்சினங்
கற்றவர் உணர்வையுங் கடக்கும் அன்னது
முற்றுறு கின்றதன் முன்னம் அன்பினோர்
உற்றன கூறியே உணர்த்தல் வேண்டுமால். 91

மன்னவர் செவியழல் மடுத்த தாமென
நன்னெறி தருவதோர் நடுவு நீதியைச்
சொன்னவர் அமைச்சர்கள் துணைவர் மேலையோர்
ஒன்னலர் விழைந்தவா றுரைக்கின் றூர்களே. 92

முற்றுற வருவது முதலும் அன்னதால்
பெற்றிடு பயன்களும் பிறவுந் தூக்கியே
தெற்றென உணர்ந்துபின் பலவுஞ் செய்வரேல்
குற்றமொன் றவர்வயிற் குறுக வல்லதோ. 93

மால்வரு தொடர்பினால் வனத்துச் செல்லுமீன்
கோல்வரும் உணவினைக் குறித்து வவ்வியே
பால்வரு புணர்ப்பினிற் படுதல் போலநீ
மேல்வரு கின்றதை வினவல் செய்கிலாய். 94

இந்திர னாதியாம் இறைவர் தங்களை
அந்தரத் தமரரை யலைத்த தீயவர்
முந்துறு திருவொடு முடிந்த தல்லதை
உய்ந்துளர் இவரென உரைக்க வல்லமோ. 95

தேவர்கள் யாரையுந் திரைகொள் வேலையின்
மேவரு மீன்றொகை விரைவிற் றந்திடென
ஏவினை இனிதுகொல் இனிய செய்கைதம்
மாவியில் விருப்பிலார் அன்றி யார்செய்வார். 96

அறைகழல் வாசவற் கலக்கண் ஆற்றியே
இறையினை அழித்தனை இருந்த மாநகர்
நிறைதரு வளனெலாம் நீக்கு வித்தனை
சிறையிடை உய்த்தனை தேவர் யாரையும். 97

அத்தகு தேவரால் ஐய நங்களுக்
கித்துணை அலக்கண்வந் தெய்திற் றிங்கிது
மெய்த்திற மாமென விரைந்துட் கொள்ளலை
பித்தரின் மயங்கினை பேதை ஆயினாய். 98

பொன்னகர் அழிந்தநாட் புகுந்த தேவரை
இன்னமும் விட்டிலை இரக்கம் நீங்கினாய்
அன்னதற் கல்லவோ ஆறு மாமுகன்
உன்னுடன் போர்செய வுற்ற தன்மையே. 99

வேறு

பேறு தந்திடு பிஞ்ஞகன் பெருந்திரு வுடனீர்
நூறு தன்னுடன் எட்டுகம் இருமென நுவன்றான்
கூறு கின்றதோர் காலமுங் குறுகிய ததனைத்
தேறு கின்றிலை விதிவலி யாவரே தீர்ந்தார். 100

எத்தி றத்தரும் நுங்களை வெல்கிலர் எமது
சத்தி வென்றிடும் என்றனன் கண்ணுதற் றலைவன்
அத்தி றத்தினால் அல்லவோ அறுமுகக் குமரன்
உய்த்த செய்யவேல் உண்டது தாரகன் உயிரை. 101

பேதை வானவர் தங்களைச் சிறையிடைப் பிணித்தாய்
ஆத லாலுனக் கானதென் றுன்பமே அல்லால்
ஏது மோர்பயன் இல்லதோர் சிறுதொழில் இயற்றி
வேத னைப்படு கின்றது மேலவர் கடனோ. 102

குரவ ரைச்சிறு பாலரை மாதரைக் குறைதீர்
விரத நற்றொழில் பூண்டுளோர் தம்மைமே லவரை
அரும றைத்தொழி லாளரை ஒறுத்தனர் அன்றோ
நிரய முற்றவுஞ் சென்றுசென் றலமரும் நெறியோர். 103

அமரர் தம்பெருஞ் சிறையினை நீக்குதி யாயிற்
குமர நாயகன் ஈண்டுபோ ராற்றிடக் குறியான்
நமது குற்றமுஞ் சிந்தையிற் கொள்ளலன் நாளை
இமையொ டுங்குமுன் கயிலையின் மீண்டிடும் எந்தாய். 104

சிட்ட ராகியே அமர்தரும் இமையவர் சிறையை
விட்டி டாதுநீ யிருத்தியேன் மேவலர் புரங்கள்
சுட்ட கண்ணுதல் குமரனங் குலமெலாந் தொலைய
அட்டு நின்னையும் முடித்திடுஞ் சரதமென் றறைந்தான். 105

தடுத்து மற்றிவை உரைத்தலும் வெய்யசூர் தடக்கை
புடைத்து வெய்துயிர்த் துரப்பியே நகைநிலாப் பொடிப்பக்
கடித்து மெல்லிதழ் அதுக்கிமெய் பொறித்திடக் கனன்று
முடித்த னித்தலை துளக்கியே இன்னன மொழிவான். 106

ஏவற் றெண்டுசெய் தின்னமுங் கரந்தஇந் திரற்குந்
தேவர்க் குஞ்சிறு பாலற்குஞ் சிவனுறை கயிலைக்
காவற் பூதர்க்கும் அஞ்சினை கருத்தழிந் தனையோ
மூவர்க் கும்வெலற் கரியதோர் மொய்ம்புகொண் டுடையோய். 107

எல்லை நாள்வரை இழைத்ததும் எம்பெருஞ் சத்தி
வெல்லு நுங்களை என்றதுங் கண்ணுதல் விமலன்
சொல்ல யான்முன்பு கேட்டிலன் வஞ்சமுஞ் சூழ்வும்
வல்லை வல்லைகொல் எம்பிநீ புதிதொன்று வகுத்தாய். 108

நூற்றின் மேலுமோ ரெட்டுக நுவலருந் திருவின்
வீற்றி ருந்தர சியற்றுதிர் என்னினும் மேனாள்
ஆற்றி னச்சடை வைத்தவன் கொடுத்திடும் அழியாப்
பேற்றை யாவரே விலக்குவார் அதுபிழை படுமோ. 109

ஆதி நாயகன் எம்பெருஞ் சத்தியே அல்லால்
ஏதி லார்வெலார் என்னினுஞ் சத்தியும் இறையும்
பேத மோவரங் கொடுத்தவன் அடுமென்கை பிழையே
ஓத லாவதோர் வழக்கமே உண்மைய தன்றால். 110

பழுது றுதுநம் போலவே வேள்வியைப் பயிலா
தழிவி லாவரம் பெற்றிலன் தாரகன் அதனால்
ஒழிவ தாயினன் வச்சிர வாகுவும் உணர்வில்
குழவி யாதலின் மாய்ந்தனன் ஈதுகொல் குறையே. 111

அண்ட மாயிரத் தெட்டையுந் தனியர சாட்சி
கொண்டு வைகினன் குலத்தொடும் அமரர்தங் குழுவைத்
தொண்டு கொண்டனன் யாவர்வந் தெதிர்க்கினுந் தொலையேன்
உண்டு கொல்லிவண் எனக்குநே ராகவே ஒருவர். 112

தவமு யன்றுழல் அமரரின் அரக்கர்கள் தம்மின்
அவுணர் தங்களின் ஆயிரத் தெட்டெனும் அண்டம்
புவன முற்றவும் ஒருதனி யாழியால் புரந்தே
எவரெ னக்குநே ராகவே அழிவிலா திருந்தார். 113

மால யன்முத லாகிய முதுவர்கள் வரம்பில்
கால மாகயான் அமரரைச் சிறைசெயக் கண்டுஞ்
சால வென்றனக் கஞ்சியே இருந்தனர் தனியோர்
பால னேகொலாம் அழிவிலா என்னுயிர் படுப்பான். 114

வேறு பாடுறு வச்சிரப் படிவமும் மிடலும்
ஈறி லாததோர் ஆயுளும் பெற்றிடும் என்னை
ஊறு தான்செயக் கூடுறா தொருவர்க்கு மென்றான்
மாறு போர்செய்து பாலனோ எனையட வல்லான். 115

**எண்ணி லாததோர் பாலகன் எனைவெல்வன் என்கை**
**விண்ணி லாதவன் றன்னையோர் கனியென வெஃகிக்**
**கண்ணி லாதவன் காட்டிடக் கையிலா தவன்போய்**
**உண்ணி லாதபேர் ஆசையால் பற்றுமா றொக்கும்.** 116

என்று மற்றிவை சூரபன் மாவிசைத் திடலுந்
துன்று பஃறலைச் சீயமா முகமுடைத் துணைவன்
நன்று நன்றென வினவியே இன்னமும் நானிங்
கொன்று கூறுவன் முனியலை கேட்டியென் றுரைப்பான். 117

**வாலி தாமதிச் சடிலமும் பவளமால் வரையே**
**போலும் மேனியும் முக்கணும் நாற்பெரும் புயமும்**
**நீல மாமணிக் கண்டமுங் கொண்டுநின் றனனால்**
**மூல காரணம் இல்லதோர் பராபர முதல்வன்.** 118

நேரிலாப் பரம்பொருள் தனியுருக் கொண்ட
தென்ன காரணம் என்றியேல் ஐந்தொழில் இயற்றி
முன்னை யாருயிர்ப் பாசங்கள் முழுவதும் அகற்றிப்
பின்னை வீடுபே றருளுவான் நினைந்துபே ரருளே. 119

அப்ப ரன்றனை உன்னியே அளவைதீர் காலம்
மெய்ப்பெ ருந்தவம் இயற்றினை அதுகண்டு வெளிப்பட்
டொப்பி லாவர முதவியே ஆங்கதற் கொழிவுஞ்
செப்பி வைத்தனன் தேர்ந்திலை போலுமத் திறனே. 120

பெறல ருந்திரு வுடையநீ அறத்தினைப் பேணி
முறைபு ரிந்திடா தாற்றலால் அமரரை முனிந்து
சிறையில் வைத்தனை அதுகண்டு நின்வலி சிந்தி
இறுதி செய்திட உன்னினன் யாவர்க்கும் ஈசன். 121

வரம ளித்தயாம் அழிப்பது முறையன்று வரத்தால்
பெருமை பெற்றுள் சூரனை அடுவது பிறர்க்கும்
அரிதெ னப்பரன் உன்னியே தன்னுரு வாகும்
ஒருமகற்கொடு முடித்துமென் றுன்னினன் உளத்தில். 122

செந்நி றத்திரு மேனியுந் திருமுக மாறும்
அன்ன தற்கிரு தொகையுடைத் தோள்களு மாக
முன்ன வர்க்குமுன் னாகிய பராபர முதல்வன்
தன்னு தற்கணால் ஒருதனிக் குமரனைத் தந்தான். 123

மானு டத்தரில் விலங்கினில் புட்களில் மற்றும்
ஊன முற்றுழல் யாக்கையில் பிறந்துளார் ஒப்ப
நீநி னைக்கலை பரஞ்சுடர் நெற்றியந் தலத்தே
தானு தித்தனன் மறைகளுங் கடந்ததோர் தலைவன். 124

சீல மில்லவர்க் குணரவொண் ணாதசிற் பரனைப்
பால னென்றனை அவனிடத் திற்பல பொருளும்
மேலை நாள்வந்து தோன்றிய சிறியதோர் வித்தின்
ஆலம் யாவையும் ஒடுங்கியே அவதரித் ததுபோல். 125

அருவு மாகுவன் உருவமு மாகுவன் அருவும்
உருவு மில்லதோர் தன்மையும் ஆகுவன் ஊழின்
கருமம் ஆகுவன் நிமித்தமு மாகுவன் கண்டாய்
பரம னாடலை யாவரே பகர்ந்திடற் பாலார். 126

வேதக் காட்சிக்கும் உபநிடத் துச்சியில் விரித்த
போதக் காட்சிக்குங் காணலன் புதியரில் புதியன்
மூதக் கார்க்குமூ தக்கவன் முடிவிற்கு முடிவாய்
நிக் காதியாய் உயிர்க்குயி ராய்நின்ற அமலன். 127

ஞானந் தானுரு வாகிய நாயகன் இயல்பை
யானும் நீயுமாய் இசைத்துமென் றாலஃ தெளிதோ
மோனந் தீர்கலா முனிவருந் தேற்றிலர் முழுதுந்
தானுங் காண்கிலன் இன்னமுந் தன்பெருந் தலைமை. 128

தத்த மாற்றங்கள் நிறுவிய சமயிகள் பலருங்
கத்து புன்சொலை வினவினர் அவன்செயல் காணார்
சுத்த வாதுள முதலிய தந்திரத் தொகுதி
உய்த்து ணர்ந்திடு நீரரே ஒருசிறி துணர்வார். 129

கருவி மெய்ப்புலன் காட்டுவான் காண்பவன் காட்சிப்
பொருளெ னப்படு நான்மையும் ஐவகைப் பொறியும்
இருதி றத்தியல் வினைகளுங் காலமும் இடனும்
மரபின் முற்றுறு பயனுமாய் நின்றவன் வள்ளல். 130

ஞால முள்ளதோர் பரம்பொருள் நாமெனப் புகலும்
மாலும் வேதனும் மாயையாம் வரம்பினுட் பட்டார்
மூல மாகிய தத்துவ முழுவதும் கடந்து
மேலு யர்ந்திடு தனிமுத லவன்அன்றி வேறார். 131

தூய பார்முத லாகவே குடிலையின் துணையும்
ஏய அண்டமும் உயிர்களும் வியன்பொருள் பலவு
மாயும் நின்றனன் அல்லனு மாயினன் அவன்றன்
மாயை யாவரே கடந்தனர் மறைகளும் மயங்கும். 132

இன்ன தன்மைசேர் முதல்வனைச் சிறுமொனென் றிகழ்ந்து
பன்னு கின்றனை அவுணர்தங் கிளையெலாம் படுத்து
நின்னை யுந்தடிந் திடுவனோர் இமைப்பினின் இரப்புந்
தன்ன ருட்டிறங் காட்டுவான் வந்தனன் சமர்மேல். 133

அற்றம் இல்வகை ஆயிரத் தெட்டெனும் அண்டம்
பெற்ற னம்மென வியந்தனை தத்துவ பேதம்
முற்று ணர்ந்திலை தரணியோ அளப்பில வுளகாண்
மற்றை அண்டங்கள் கேட்டியேல் மருளுதி மன்னோ. 134

குடிலை யீறதா வாரியே முதலதாக் குழுமி
யுடைய அண்டங்கள் அலகில என்பரொன் றென் றின்
அடைத லுற்றிடு புவனத்தின் பெருமையார் அறிந்தார்
முடிவு றுதயோர் பொருளினை முடிவுகூ றவற்றோ. 135

அன்ன வாகிய அண்டங்கள் அனந்தகோ டியையுந்
தன்ன தாணையால் ஓரிமைப் பொழுதினில் தரவும்
பின்னர் மாற்றவும் வல்லதோர் ஆதியம் பிரான்காண்
உன்னொ டேபொரும் ஆடலாற் செந்திவந் துற்றான். 136

வச்சி ரத்தனி யாக்கைபெற் றனமென மதித்தாய்
இச்சி ரத்தையை விடுமதி இருவினைக் கீடா
அச்செ டுத்திடும் உயிர்கண்மாய்ந் திடுமென அறிஞர்
நிச்ச யித்தனர் முடிவுறா திருத்திகொல் நீயே. 137

பெருமை பெற்றிடு வானத்தின் நிலத்திடைப் பிறந்தோர்
இருமை பெற்றிடு காயமும் இறந்திடுந் திண்ணம்
பருமி தத்துநின் வச்சிர யாக்கையும் பாரின்
உரிமை பெற்றுள தாதலான் அழிவின்றி யுறுமோ. 138

அழிவில் மெய்வரம் பெற்றனம் என்றனை அதற்கு
மொழித ரும்பொருள் கேண்மதி முச்சகந் தன்னுட்
கெழிய மன்னுயிர் போற்சில வைகலிற் கெடாது
கழிபெ ரும்பகல் இருந்திடும் பான்மையே கண்டாய். 139

அச்சு தன்அயன் அமரரா கியபெய ரவர்க்கு
நிச்ச யம்படு முகமனே யானபோல் நினது
வச்சி ரத்தனி யாக்கையும் அழிவிலா வரமும்
முச்ச கந்தொழப் பல்லுகம் இருத்தலாய் முடியும். 140

வான்செய் தேவரை நீயலைக் கின்றதை மதியா
ஊன்செய் கின்றபல் லுயிருக்கும் உயிரதாம் ஒருவன்
தான்செய் கின்றதொல் வரத்தினைத் தான்தவிர்த் திடுமேல்
ஏன்செய் தாயென வினவியே நிறுவுவார் எவரே. 141

கெடுத லில்லதோர் வளனொடு நீயுநின் கிளையும்
படுத லின்றியே வாழ்தியென் றின்னன பகர்ந்தேன்
இடுதல் கொண்டிடு சிறையிடைத் தேவரை யின்னே
விடுதல் செய்குதி யென்றனன் அறிஞரின் மிக்கான். 142

இன்ன பான்மையான் மடங்கலம் பெருமுகத் திளவல்
சொன்ன வாசகம் வினவியே மணிமுடி துளக்கிக்
கன்ன மூடுசெங் கனல்செறித் தாலெனக் கனன்று
முன்னை யாகியோன் பின்னருஞ் சிற்சில மொழிவான். 143

காற்றிற் றள்ளுண்டு நெருப்பினிற் சூடுண்டு கங்கை
ஆற்றில் தாக்குண்டு சரவணம் புக்கலை யுண்டு
வேற்றுப் பேர்முலை உண்டமு தேவிளை யாடும்
நேற்றைப் பாலனை யோபரம் பொருளென நினைந்தாய். 144

பிரம மாகிய ஒருபொருள் உயிரெனப் பேர்பெற்
றுருவ மெண்ணில கொண்டுதன் மாயையால் உலப்பில்
கரும பேதங்கள் ஆற்றிடும் பல்புனற் கடத்துள்
இரவி தன்னுருத் தனித்தனி காட்டிய இயல்பின். 145

கடந்த கர்ந்துழி அவற்றிடை வெளிகக னத்தோ
டடைந்த வாறுபோல் யாக்கையின் பேதகம் அனைத்தும்
முடிந்த காலையில் தொன்மைபோல் அபேதமாம் மொழிக்குந்
தொடர்ந்த சிந்தைக்கும் நாடொறு தமர்பெருஞ் சோதி. 146

பிரம மேயிவர் அல்லவர் இவரெனப் பேதித்
திருமை யாகவே கொள்ளலை யாக்கையே வேறு
பரம மாகிய உயிரெலாம் ஒன்றுபல் பணியும்
பொருள தாகியே ஒருமையாய் முடிந்தவா போல. 147

விறலும் வன்மையும் இல்லவர் தாழ்வர்மே தக்க
நெறியர் ஓங்குவர் ஈதுல கத்திடை நிகழ்ச்சி
இறுதி யில்லதோர் பெரியன்யான் அறுமுகன் என்போன்
சிறியன் ஆதலின் அவனையான் வெல்குவன் திண்ணம். 148

தொகைமை சான்றநங் குரவர்பல் லோருயிர் தொலைத்த
பகைஞ ராதலின் அமரரைச் சிறையிடைப் படுத்தேன்
மிகைசெய் தார்களை நாடியே வேர்தொறுத் திடுதல்
தகைமை யேயென மனுமுறை நூல்களுஞ் சாற்றும். 149

மாக ராயுளோர் காப்பினை விடுகிலன் மற்றைப்
பாக சாதனன் தன்னையும் அருஞ்சிறைப் படுப்பன்
ஏக நாயகன் எய்தினும் எதிர்ந்துபோர் புரிவன்
ஆகை யால்இனி இச்சிறு மொழிகளை அயர்த்தி. 150

உரைப்ப தென்னினி ஒருவயிற் றென்னுடன் உதித்துப்
பெருக்க முற்றனை நங்குலப் பகைஞரைப் பெரிது
நெருக்கல் இன்றியே அவர்கள்பாற் பட்டனை நீயே
இருக்க மற்றொரு தெவ்வரும் வேண்டுமோ எனக்கே. 151

பத்துக் கொண்டநூ றுடையதோர் சென்னியும் பலவாங்
கொத்துக் கொண்டமர் தோள்களுங் கரங்களின் குழுவும்
எத்துக் காற்றினை வன்மையும் வீரமும் இழந்தாய்
பித்துக் கொண்டவர் தம்மினும் பேதைமை பிடித்தாய். 152

## வேறு

தானவர் வழிமுறை தன்னை விட்டனை
வானவர் போன்றனை வன்மை சிந்தினை
மேனிகழ் திட்பமும் விறலு மாண்டனை
மோனமொ டருந்தவ முயலப் போதிநீ. 153

மறந்தனை இழந்தனை மான நீங்கினை
சிறந்திடும் அவுணர்தஞ் சீர்த்தி மாற்றிடப்
பிறந்தனை ஈண்டொரு பயனும் பெற்றிலை
இறந்தனை போலுநீ இருந்து ளாய்கொலோ. 154

மந்திரி யாதியான் மற்றி தற்குநீ
சிந்தையில் வெருக்கொளின் திசைமு கத்தர்போல்
ஐந்தியல் அங்கமொன் றங்கை பற்றுதி
வெந்திற லேயெனப் படையும் வீசியே. 155

கிளைத்திடு கள்ளியின் கிளைக ளாமென
வளர்த்தனை பலதலை வரம்பில் கைத்தலம்
நெளித்தனை சுமந்தனை நெடிது காலமா
இளைத்தனை வலியிலாய் யாது செய்திநீ. 156

பண்டுணர் வில்லதோர் பருவம் ஆதலின்
உண்டனை வருணனைத் தளையின் இட்டனை
அண்டரை யலைத்தனை அறிவு கூடலின்
பெண்டிரின் நடுங்கினை பேடி போலுநீ. 157

பன்னெடுந் தலையுடைப் பால னுகுமுன்
வன்மையும் ஆடலும் வந்து பார்த்திட
இன்னமும் வந்திலள் வருந்தி ஈன்றதாய்
அன்னைதன் குறைகொலோ அருவ மானதே. 158

பகையென ஒன்றுறிற் பதைபதைத் தெழீஇச்
சிகையுடை வாலுளைச் சீயஞ் சீறியே
தகுவிறல் கொள்ளுமால் அவற்றின் தன்மையாய்
மிகுதலை பெற்றதும் வீண்கொல் எம்பிநீ. 159

பூதரைத் தலைவரைப் புராரி மைந்தனை
ஏதிலர் யாரையும் யான்வென் றேகுவன்
நீதளர் வெய்திடல் நினது மாநகர்
போதுதி என்றனன் புலனில் புந்தியான். 160

என்றிவை அவுணர்கோன் இசைத்த காலையின்
நன்றிவன் உணர்வென நகைத்துக் கண்டொறுந்
துன்றிய பேரழல் சொரிய வெஞ்சினத்
தொன்றிய தன்னுளத் தினைய உன்னுவான். 161

உறுதியை உரைத்தனன் உணர்வி லாதவன்
வறிதெனை இகழ்ந்தனன் வருவ தோர்கிலன்
இறும்வகை நாடினன் யாதொர் புந்தியை
அறிவிலர்க் குரைப்பவர் அவரிற் பேதையோர். 162

உய்த்தனர் தேன்மழை உதவிப் போற்றினுங்
கைத்திடல் தவிருமோ காஞ்சி ரங்கனி
அத்தக வல்லவோ அறிவி லாதவன்
சித்தம துணர்வகை தெருட்டு கின்றதே. 163

தொலைக்கருந் திருவுடைச் சூரன் புந்தியைக்
கலக்கினும் உய்வகை கருது கின்றிலன்
அலக்கணுற் றிருந்துநாம் இரங்கி ஆவதென்
விலக்கரும் விதியையாம் வெல்ல வல்லமோ. 164

ஆவது விதியெனின் அனைத்து மாயிடும்
போவது விதியெனின் எவையும் போகுமால்
தேவருக் காயினுந் தீர்க்கத் தக்கதோ
ஏவரும் அறியொணா ஈசற் கல்லதே. 165

நீண்டசெஞ் சடைமுடி நிமலன் ஈந்தநாள்
மாண்டது மாய்ந்திடு மெல்லை வந்ததால்
ஈண்டுளார் யாவரும் இறையுந் துஞ்சுமால்
பூண்டிடும் அமரர்கோன் தவமும் பொய்க்குமோ. 166

இறப்பது சரதமேல் இறைவன் என்னுரை
வெறுத்தனன் இகழுமேல் வேண்டி இன்னும்யான்
மறுத்தெதிர் மொழியலன் மன்ன என்பிழை
பொறுத்தியென் றின்னுரை புகல்வ தல்லதே. 167

மன்னவர் மன்னவன் வள்ளல் வேலினால்
இன்னினி இறந்திடும் இதுவும் நோக்கியே
பின்னுமிங் கிருந்திடல் பிழைய தாகுமால்
முன்னுற முடிவதே முறைய தாமெனா. 168

சிந்தனை செய்திடு சிங்க மாமுகன்
தந்தையை நிகர்வரு தம்முன் தாள்தொழா
வந்தனை செய்தனன் மன்ன சீறிடேல்
புந்தியி லேன்பிழை பொறுத்தல் வேண்டுமால். 169

சிறியவர் ஒருபிழை செய்யின் மேலவர்
பொறையொடு பின்னரும் போற்றல் அல்லதை
இறையதும் வெகுள்வரோ யானுஞ் செய்பிழை
அறிவன்நீ அன்றியே ஆர தாற்றுவார். 170

பொறுத்தனை கோடியென் புன்மை யுள்ளமேற்
செறுத்தெனை இகழ்ந்திடல் செருவிற் சென்றியான்
மறுத்தெதிர் மலைந்திடு மாற்ற லார்தமை
ஒறுத்திடு கின்றனன் 171

செருவினுக் கேகுவன் செறுநர் தம்மிசைத்
தருதியால் விடையெனத் தம்பி கேட்டலும்
பெரிதுள மகிழ்ந்தனன் பிறங்கு காதலால்
வருதியென் றனையனை மார்பிற் புல்லினன். 172

பையர வளித்திடும் பாத லத்தினில்
வையக வரைப்பினில் திசையின் வான்களிற்
செய்யஅண் டங்களிற் செய்யும் வென்றியுள்
ஐயநிற் கேதுகொல் அரிய தானதே. 173

நீக்கமில் கேள்வியாய் நீமுன் சொற்றன
தூக்குறின் என்மனத் துணிவுந் திட்பமும்
ஊக்கமு முணரவே ஒன்ன லாரெனும்
மாக்களை அடுவதோர் மடங்கல் அல்லையோ. 174

சென்றனர் மாற்றலர் என்கை தேர்தியேல்
கொன்றபின் அல்லது கும்பிட் டோடிட
வென்றபின் அல்லது வெகுளி தீர்தியோ
உன்றன தாற்றலை உணர்கி லேன்கொலோ. 175

இற்றைநாள் நின்னகர் ஏகி ஆயிடை
உற்றிடு படையெலாம் ஒருங்கு கொண்டுநீ
கொற்றமொ டிருக்குதி குமரன் ஈண்டுறின்
மற்றுனை விளிக்குவன் வருதி யாலென்றான். 176

ஒல்லென முருகவேள் உனது மாநகர்
செல்லினும் ஏகலை செருவுக் கன்னது
சொல்லினை விடுத்தியோர் தூதன் தன்னையான்
வல்லையின் அமர்செய வருகின்றேன் என்றான். 177

என்றலும் அவுணருக் கிறைவன் ஈங்கிது
நன்றென விடையது நல்கத் தாழ்ந்துபோய்த்
தன்றிரு மாநகர் சார்ந்து வைகினான்
வன்றிறல் உடையதோர் மடங்கற் பேரினான். 178

ஆனதோர் பொழுதினில் அரசன் ஆண்டுறை
தானையந் தலைவரைத் தனயர் தங்களை
ஏனையர் யாரையும் ஏகச் செய்துதன்
மாநகர் இந்திர வளத்தின் வைகினான். 179

அந்தமில் வளனுடை அவுணர் காவலன்
மந்திரம் இருந்தது வகுத்துக் கூறினும்
இந்திரன் முதலினோர் யாரும் ஏத்திடச்
செந்தியின் அமர்ந்தவன் செய்கை செப்புவாம். 180

ஆகத் திருவிருத்தம் - 1,178.



**மகேந்திர காண்டம் முற்றுப்பெற்றது**

ஆகக் காண்டம் மூன்றுக்குத் திருவிருத்தம் - 4,890.

கச்சியப்ப சிவாசாரியர் திருவடி வாழ்க



உ
செந்திலாண்டவன் துணை

# கந்த புராணச் சிற்றாராய்ச்சி

## [ முதல் மூன்று காண்டங்கள் ]

[குறிப்பு : முதல் எண்-காண்டத்தின் எண் ; இரண்டாவது எண்-படலத்தின் எண் ; மூன்றாவது எண்-பாட்டின் எண் [iii-8-96 என்பது மூன்றாவது காண்டத்தின் எட்டாவது படலத்தில் 96-ஆம் பாட்டு].

சுருக்க எழுத்துக்களின் விவரம் : பாயி - பாயிரப் படலம் ; ஆற்று - ஆற்றுப் படலம் ; நாட்டு - நாட்டுப் படலம் ; நகர - நகரப் படலம் ; அவை - அவையடக்கம்.]

### 1. அருஞ்சொற்கள்—சொல்லாட்சிகள் முதலியன


அகலம் (விரிவுரை)-பாயி-81
அங்குலம் (ஒரு அளவைச் சொல்) ii-11-6
அச்சுதன் (அழிவில்லாதவன்)-சிவன் iii-12-8
அண்ணர் (அண்ணன் என்பதன் பன்மை)-ii-37-9
அத்தம் (வழி)-ii-24-6
அந்தா (அதிசயச் சொல்)-ii-34-17
அந்தில் (அசைச் சொல்)-பாயி-6 ; iii-5-10
அம்மனை (தாய்)-ii-36-6 ; iii-9-23
அரசன் (பிரகஸ்பதி)-i-26-18
அரம் (பாதலம்)-ii-25-8
அருடல் (அருளுதல்)-i-11-56
அருடி (அருளுதி)-i-3-6
அலமலம் (போதும்போதும்)-iii-9-77
அவ்வை (தாய்)-i-25-37
அவமதி (அவமானம்)-iii-17-4
அவற்றை-i-10-75, 82
அள்ளல் (நரகம்)-ii-25-8
அளகு (பெட்டைக்கோழி)-i-25-26
அற்கன் (அருக்கன்-சூரியன்) iii-7-35
அறுகு (யாளி)-iii-18-37
அன்னர் (அன்னவர்)-i-3-51
அன்னுழி-i-2-1
ஆடே-ii-11-38
ஆணு (நேயம்)-iii-8-31
ஆதகு (அத்தகு)-i-11-66
ஆதம் (அன்பு)-i-10-11
ஆர்த்தி (வேதனை)-ii-33-12 ; 35-18
ஆரையும் (எவற்றையும்)-i-11-50
ஆவலித்து (அழுது)-ii-42-1
ஆனல் (அதனல்)-i-10-53
இயவை (ஒரு அளவைச் சொல்)-ii-11-5
இரவி (மலை)-i-21-2
இலீக்கை (ஒரு அளவைச் சொல்)-ii-11-5
ஈம் (ஈயும்)-பாயி-49
உகண்டு (நழுவி விழும்)-iii-16-31
உணரிய நவின்று (உணர நவின்று) பாயி-48
உரைமதி (மதி அசைச் சொல்)-iii-11-19
உவகை (அன்பு)-ii-5-88
உவண்-ii-43-97
உவர்-i-7-15 ; 10-14 ; iii-9-31
உவள்-ii-2-15
உவன்-i-4-38 ; iii-12-41
எல்லவர் (எல்லாரும்)-i-14-90; 15-5 ii-2-31 ; 33-8
எல்லீரும் (நீங்கள் எல்லாரும்) நகர-133
எல்லேங்களும்-iii-9-60
எழால் (யாழில் எழும் இன்னிசை)-i-10-15
எழுவாய் (முதல்)-iii-11-20

என்றாழ் (வெயில்)-iii-1-25
என்னரும் (யாவரும்)-i-17-17
என்றி (என்று சொன்னாய்)-i-18-27
ஏ (அம்பு)-ii-31-20
ஏட-i-4-42
ஏண் (கர்வப் பேச்சு)-iii-12-153
ஏதி (வாள்)-iii-3-15 ; 5-31
ஏலா (ஏடீ-தோழியை விளித்தல்)
ii-34-12
ஐயகோ-i-5-3
ஐவகை இருபான் கொண்ட கமலம்
(நூற்றிதழ்த் தாமரை) iii-20-27
ஒலியல்(ஈயோட்டுங் கருவி)-i-20-32
ஓதி (ஞானம்)-i-25-24
கசாக்கிரகம் (ஒரு அளவைச் சொல்)
-ii-11-5
கண்டதுண்டமதாக்கும்-iii-12-107
கண்டை (பெருமணி, வீரக்கழல்)-
ii-12-26
கணக்காயர் (நூலோதுவிப்போர்)-
iii-8-64
கணவர் (கணத்தவர்)-i-1-8
கம்மியர் (வேலை ஆட்கள்)-iii-20-20
கயமுனி (யானைக் கன்று)-iii-8-99
கரபம் (யானை) ii-40-22
கரம் (ஒரு அளவைச் சொல்)-ii-11-6
கவலை (நாலா பக்கம் பிரியும் வழி)
ii-20-25
கவித்தம் (கைம் முட்டி-ii-27-40
கழகம் (கல்வி பயிலும் இடம்)-iii
8-64
கழுந்து (முருட்டுத் தனம்)-ii-2-25
களாசி-1-11-110
கறையடி (யானை) -iii-8-99
காணிய (காண)-i-11-28
காம காண்டம் (காமன் தேவர்மேல்
விடுவதற்கு வைத்துள்ள பூ வில்)
i-4-62
காலை (சமயம், தருணம்) i-11-14
கிட்டி (சமீபித்து) i-4-6 ; ii-3-33
கீட்டிசை (கிழக்குத் திசை)-ii-40-2
குக்குட புடம் (கோழியின் உயர அள
வுக்குப் பத்து வரட்டி கொண்டு
இடப்படும் புடம்)-ii-5-134
குரோசம் (ஒரு அளவைச் சொல்)-
ii-11-6
கேண்மதி (மதி-அசைச் சொல்)-
iii-21-139
கேண்மியா (மியா-அசைச் சொல்)-
iii-21-34
கேள்வி (செவி)-iii-12-133
கேள்வி மூலம் (காது)-i.19-16 ;
iii-8-87
கொடி (காகம்)-ii-27-35
கொடுமரம் (வில்)-iii-21-47
கொடுவரி (புலி)-ii-43-42
கோடி (கொள்ளுதி) -i-10-75; ii-18
24-75 ; ii-5-35
கோடிர் (கொள்ளுதிர்)-iii-3-7
கோதை (காற்று)-ii-23-13
சசி (திங்கள்)-iii-9-1
சஞ்சரீகம் (வண்டு)-iii-8-82
சனம் (சவைகள்)-ii-3-34 ; iii-12-
25 ; 15-53-78
சாதி (சாவுதி, சாவாய்)-iii-5-31
சார் (சாரன்-ஒற்றன்)-iii-12-151
சாலம் (ஆச்சாமரம்)-ii-32-39
சிங்கல் (குறைவு, இளைப்பு)-ii-27-9
சிதவல் (வெட்டுகை)-iii-15-64
சிந்தன் (குறளனினும் சற்றுநெடிய
வன்)-iii-12-75
சில்லோர் (சிலர்)-i-20-41
சிலவர் (சிலர்)-i-6-32 ; 14-35 ;
20-40
சிறை (இறகு, சிறகு)-i-20-191
சின்ன பின்னம்-iii-14-28
சுரம் (வழி)-ii-24-6
சுனர் (ஊன்விற்போர்)-ii-33-11
செம்மி, செம்மிற்று (மூடி-மூடிற்று)
i-20-24 ; ii-35-2
செவ்வழி (நெய்தல் நிலம்)-ii-39-23
செறுமதி (மதி-அசை)-ii-10-47
சென்மென(செல்லுகவென)-iii-21-67
சேகு (குற்றம்)-iii-12-147
தட்டைகள் (தட்டுகள்)-i-10-37
தடேல் (தடைசெய்யற்க)i-4-71
தண்டம் (ஒரு அளவைச் சொல்)-
ii-11-6

தப்பல் (குற்றம்)-iii-12-117
தம்மென (தரும் என)-ii-42-44; iii-21-96
தரங்கம் (மனக்கலக்கம்)-iii-20-16
தவ்வு (கெடுதல்)-iii-5-7
தன்னந் தனி-ii-31-14
தனு (ஒரு அளவைச் சொல்)-ii-11-6
தாட்சி(இழிவு)-நகர-22
தாபதநிலை-i-10-85
தாரி (வழி)-ii-40-4
திரிமதி (மதி-அசை)-ii-17-9
தீர்ந்து (நீங்கி)-i-10-92
தீரிய (தீர்க்க)-i-20-113
துங்கதை (உயர்ச்சி, பெருமை)-ii-25-3
துறுமல் (நெருக்கம்)-ii-3-38
தென்றி (தெற்கு)-ii-11-25
தென்றி (தென்றல்)-i-11-11, 16
தேண்டி (தேடி)-ii-5-59
தொண்டலம் (துதிக்கை)-ii-43-83
தொழுநன் (ஏவலாளன்)-ii-36-14
நங்கன்-iii-9-60
நாங்கள்-ii-21-26; 33-10
நாந்தகம் (வாள்)-iii-3-17
நாய் (சூதாடு கருவி)-ii-40-5
நான்மை (நான்கு)-ii-17-19; iii-21-130
நின்மென (நில்லுமின் என)-i-18-18
நீங்கள்-ii-14-10
நீயிர்கள்-ii-6-5; 17-20; 42-61; 43-105-iii-1-16
நீவிர் (கள்)-i-7-8; i-12-36; ii-6-16, 21
நுங்கை (உன் தாய்)-ii-13-10; iii-10-9
நொண்டு (மொண்டு)-i-21-24
நொவ்வுறல் (நோவுறல்)-i-11-39
பங்கயம் (பதுமராகம்-செம்மணி)-iii-8-26
பங்கயம் (தாமரை வடிவினதாகிய படை)-i-18-37; iii-10-4
பங்கு (கை யிலாதவன்-முடம்)-ii-37-10
படர்ச்சி (துன்பம்)-ii-29-10
பற்கன் (பர்க்கன்-சிவன்)-iii-7-35
பார்வல் (பறவைக்குஞ்சு)-i-25-26
பாறல் (பாறுதல்-ஓடுதல்)-iii-13-7
பிணிமுகம் (மயில்)-பாயி-75
பிள்ளை (காகம்)-ii-27-36, 38; 29-1
புகுதி (ஆய்ந்தறியும் நுண்ணுணர்வு) ii-37-20
புரம் (உடல்)-i-5-11-ii-5-4
புரிந்திடு (பெற்ற)-பாயி-57
புரிமதி (மதி-அசை)-ii-15-1
பூகதம் (பூமியை அடைந்தோர்) ii-39-24
பூத கணவர் (பூத கணத்தவர்)-i-1-8
பொத்தி-i-4-7
மகவே-ii-11-38
மங்கை (மனைவி)-ii-32-57
மன்ற (மிகவும்)-iii-19-16
மாட்சி (மரணம்)-iii-18-16
மான்றனர் (மயங்கினர்)-iii-1-44
மானுதல் (மயங்குதல்)-ii-5-73
மீடி (மீளுதி)-i-11-16; iii-18-29
மீமிசை-நகர-10, 32; i-10-3
முதியீர்-i-6-4
முருகா (குழந்தையே)-ii-8-94
முளரி (காடு)-i-24-23
மூயினர் (நெருங்கிச் சூழ்ந்தார்) iii-16-18
மூற்றை (மும்மடங்கு)-iii-7-2
மேக்கு (மேலிடம்)-i-8-8
மேன (மேலான) ii-3-20; 5-46; 12-72
மேன (மேலான-இடைக்குறை)-ii-10-7
மை (மேகம்)-ii-36-3
மோய் (தாய்)-ii-43-21
மோயினர் (மோந்தனர்)-i-14-81
யாங்கள்-ii-4-1
யூகை (ஓர் அளவைச் சொல்)-ii-11-5
யோசனை (ஒரு அளவைச் சொல்)-ii-11-6
வசந்தன் (தென்றல்)-ii-39-15
வசுதை (பூமி)-ii-14-2
வட்டு (சூதாடு கருவி)-ii-40-5
வட்டை (வழி)-ii-24-7

வந்தனை (வந்தது-ஐ-சாரியை) i-21-22
வம்மென (வாருங்கள் என)-i-11-29; ii-42-55
வரத்து (வரவு)-i-20-11
வராகி (வராகபுடம் - 20 அல்லது 50 எரு இட்டுப் போடப்படும் புடம்) -ii-5-134
வல்லி (கால் விலங்கு)-ii-43-105
வாட்கை (வாழ்க்கை)-i-24-26
வாதாயனம் (ஜன்னல், சாளரம்)-iii-8-47
வாரி (செல்வம்)-ii-12-64
வானி (காற்றாடிப் பட்டம்)-ii-40-9
விமெதி (மதி-அசைச்சொல்)-iii-12-93; 17-81; 21-137
வீ (பறவை)-i-24-48
வெளில் (கம்பம்)-ii-40-11
வேரம் (செய்குன்று)-iii-15-1

## 2. உவமைகள்

இடியுறு புயங்கம் என்ன-iii-4-2
இடியுறும் அரவம் என்ன-ii-12-60
இன்மை கொண்டோர் பெருவளம் பெற்றென்ன-ii-9-13
உருக்கு அரக்கென மெய் தளர்ந்து-i-5-13
கடல் மதியப் புத்தேள் வரவு கண்டதென-ii-9-14
கல்லின் மாரிபோல்-i-20-58
கலத்தலை அகன்றிடாக் காகம் போலவே-i-11-54
கற்பொழி எழிலி காசற கனை ஒலி கேட்ட பாம்பின்.........வெருவி வீழ்ந்தான்-i-11-12
கன்றுபிரி தாயிற் ii-5-96
கார்காண் மஞ்ஞையிற் களிப்ப-i-10-87
கான்திரி அரியை நேரும் விலங்கென-i-14-41
கேழ் கிளர் தீயுட் டரக்கே என்ன உருகி-ii-5-95
கை வரு நெல்லியங் கனியின்-iii-20-15
சிம்புள் விறல்கண்டு அரிஉட்கி ஓடிச் சென்றெனவே-i-14-58
சிம்புள் வேந்தன் உறைந்தது கண்ட சீயக் குருளையின்-i-4-77
சுடரோன் றங்கிப் பகவனுக்கு ஒருவன் நல்கப் பராவிய போலும்-i-14-105
குறையுற்ற கார் எனலாய-i-12-79
செங்கேழ்க் காஞ்சிரங் கனிபோல் மேய மை திகழ் மனத்தன்-ii-26-4
செங்கைசேர் நெல்லி என்ன-ii-11-4
செவித் தொளையில் அங்கிவேல் புக்கதே எனப் பொருமி விம்மி னள்-ii-35-1
சோமற் காணுறு மைக் கருங்கடல் மான ஆர்த்தவே-iii-19-3
தூய்மணி யிழந்திடும் அரவிற் றுன் புளான்-ii-21-18
இந்துவைப் பட அராக் கவர்ந்தென-iii-12-101
பாகிற்படு கரிபோல்-ii-34-27
புயல் கண்ட வியன் கோகிலம்போல் வெருவி-ii-9-15
பூசை வாய்ப்படும் புள்ளின் பேடை போல்-ii-35--23
பேய் கண்ட செல்வந்தனைக் காத்திடும் பெற்றியேபோல்-iii-11-2
பொய்கை மலர்ந்த கொட்டிபோலும்-i-4-47
பொற்றையின்கட் புழைத்திடும் சூசியின் இற்றவால்-ii-43-82
மதலை யிற்றுழி நாய்கர்போல் துயர்க் கடல் மறிகின்றார்-i-5-2
மருத்தின் முன் தனித்த தீபம் போக்கிடுதல் நிற்பதுண்டோ-i-4-82
மாரிநாள் மாண்டிடு கதிரென-ii-13-11

மாரியின் செலவுகண்ட வளவயற் பைங்கூழ் போல-ii-36-7
முகில் வரவு பார்த்துறைதரு மயிலே போல்-i-5-29
மையினைத் தடுத்துச் சிந்தும் மருத் தென வந்தான்-ii-36-3
ரர்த்து மானென-i-4-65
வலைத்தலை மானென-i-11-54
வன்னி சூழ்ந்துழித் தலைத்தலை யிரிந் தனோர் தம்மின்-i-11-54
வேடற்பாற் பிடியுறு மஞ்ஞையிற் பெரிதும் அஞ்சினர்-ii-43-108

## 3. அணிகள்- வருணனைகள்

### i. அணிகள்

அதிசய அணி-ii-5-164
இல்பொருள் உவமை-ii-42-24; iii-1-19; 4-1; 15-3; 21-116
உருவக அணி-i-4-78
உவமை அணி : அவை-1, 2, 7, 11 ; ஆற்று-4, 6, 8, 12, 19, 20, 21, 25, 32 ; நாட்டு-31, 36
i-1-2 ; 3-19, 20, 45 ; 4-47, 65, 77, 82 ; 5-2, 29 ; 8-9 ; 11-12, 54 ; 13-26 ; 14-41; 58, 60, 76, 84, 105 ; 19-18 ; 20-21, 57, 58, 61, 138, 191 ; 21-6, 16 ; 24-2, 4, 56, 60 ; 25-1, 10, 13, 18, 21, 22
ii-1-35 ; 2-20, 22, 24, 25, 28, 29; 33, 3-9 ; 5-37, 185, 205 ; 7-4 21-21, 23 ; 25-11; 27-37; 29-1, 2, 7, 8, 12, 15-22, 24-26 ; 31-5, 10 ; 32-9, 17 ; 33-6, 7 ; 35-15 ; 36-7 ; 37-1 ; 41, 6, 42-19, 24 ; 43-6, 7, 8, 19, 31, 42, 45, 46, 62, 67, 72, 77, 82, 87, 94, 109, 123, 125
iii-1-22, 23, 25, 26, 31, 32, 36, 50, 2-16, 17; 3-8, 10, 11, 12; 4-8, 16, 17, 23 ; 5-15 ; 22, 33, 6-2, 3, 4, 5 ; 7-33, 35, 37, 38, 39, 45 ; 8-19, 27, 28, 49, 99, 9-2, 51, 56, 81, 10-19, 21 ; 11-2 ; 12-4, 6, 7, 8, 9, 43, 52; 13-11 ; 14-26, 29 ; 15-7, 19, 33, 34, 35, 79 ; 16-29 ; 19-3 ; 21-94, 125, 156, 163
எடுத்துக் காட்டுவமையணி: ஆற்று-7 ; ii-43-17 ; iii-8-85
எதிர் நிலையணி : 1-24-34
ஐய (அதிசய) அணி-ii-1-48
ஒட்டணி-i-14-74
கருத்துடையடைகொளி யணி-i-24-25, 54
சிலேடை: ஆற்று-20, 21, 22 ; i-11-62 ; 13-6
சொற்பொருட்பின் வருநிலையணி i-24-59; ii-41-5 ; 42-10 ; iii-5-20, 34 ; iii-6-19 ; 8-50, 57, 88; 15-11 ; 17-59, 62, 63, 64, 66, 67
தற்குறிப்பேற்ற அணி: ஆற்று-3-24 ; i-15-3 ; 20-32, 194 ; 21-3, 4, 5, 23-1, 2 ; 24, 1, 54, 58, 25-8, 9, 11, 18
ii-1-48, 2-17, 18, 19, 3-33, 8-6, 7 ; 29-6, 23 ; 35-22 ; 43-18, 33, 34
iii-1-21, 35 ; 2-18 ; 4-9 ; 8-13, 20, 89 ; 12-5 ; 17-33, 101
தன்மேம்பாட்டுரையணி - i-20-73, 132, 133, ii-i-80-83, 5-233, iii-21-112-115
தன்மை நவிற்சியணி-i-22-13, 37 ; 24-59
திரிபு-i-21-1
தொடர்நிலைச் செய்யுட் பொருட் பேறணி-i-24-29
தொடர்புயர்வு நவிற்சியணி-i-24-14
'சன அணி-ii-8-20

பலபொருளுவமையணி-ii-1-7 ;
2-23 ; 36-16 iii-2-15
பலவயிற்போலி உவமையணி-
i-21-7 ; 24-3 ; 25-14 ; ii-2-27
பிரிநிலை நவிற்சியணி-i-22-40
பொருட்பின் வருநிலையணி-ii-8-11 ;
43-38 iii-3-9 ; 16-19
மடக்கணி-iii-15-(54-58)
மயக்க அணி-ii-36-13
மூரணணி-i-25-27; ii-18-21; 26-26;
iii-18-32
விலக்கணி-(ஈற்றுவரி)-ii-41-5
வேற்றுப்பொருள் வைப்பணி :
ஆற்று-28 ; நாட்டு-32 ; i-22-59 ;
24-57 ; 25-7 ; ii-5-255 ; 8-24 ;
(சிலேடை கலந்தது) 10-5; 25-6;
32-11 ; 43-95, 107 ; iii-1-33 ;
4-22; 8-44, 53; 9-53

**ii. வருணனைகள்**

அந்திப் பிறைவருணனை-ii-21-5, 6
காலை வருணனை-i-24-58, 59
கேசாதிபாத வருணனை-ii-1 (39-64)
சந்திர அஸ்தமன வருணனை-i-24-56
சந்திரோதய வருணனை-ii-2-24,
25, 26, 29
சாயங்கால வருணனை-i-21-4 ;
24-2, 3
சூரியாஸ்தமன வருணனை-i-21-3
சூரியோதய வருணனை-i-23-1 ; 24-
54, 55
நக்ஷத்திர வருணனை-i-21-7 ; ii-2-
23, 28
பாலை நிலவருணனை-i-25-1-19
பிறைத்தோற்ற வருணனை-i-24-4

**iii. காமமிக்க கழிபடர் கிளவி**

அன்றில் ஒலிக்கு இரங்குதல்-i-24-51
கடலொலிக்கு இரங்குதல்-i-24-52
குயிலைப் பழித்தல், குயில் கூவுதற்கு
இரங்கல்-i-24-48, 49
கோழி கூவாமைக்கு இரங்குதல்-1-
24-49
சந்திரோபாலம்பனம்-i-24- (38-43) :
ii-2(36-43)
சூரியன் உதியாமைக்கு இரங்குதல்
i-24-50
தென்றலைப் பழித்தல்-i-24-47
மன்மதனைப் பழித்தல் (மன்மதோ
பாலம்பனம்)-i-24 (44-46)

**iv. மெய்ப்பாடு, சுவை**

அச்சம்-ii-5-84 ; 8-11 ; 43-126,
127-iii-14-12
அவலம்-i-22 (2-11) 40 ; ii-5-
(90-94)
இழிப்பு-ii-7-10, 11
காமம்-ii-1-30
சோகம்-i-22-13, 40, 41
நகை ; உவகை-ii-5-78, 130 ; iii-
10-13, 14
ரௌத்ரம்-i-22-37, 38 ; ii-42-(5-7)
வியப்பு-ii-1-17, 18, 63, 64 ; 5-
160 ; iii-12-63.66
வீரம்-ii-1-(80-83)

## 4. ஊர்-நாடு-ஆறு-மலை

**i ஊரும் இடமும் நாடும்**

அண்ணுமலை : மாலும் பிரமனும்
சிவனது அடிமுடி தேடி அயர்ந்த
நெருப்பு மலை-i-23-11 கினைத்தால்
முத்தி தரும் தலம்-i-23-11 அடி
முடி காணமுடியாமலை-iii-i-34
அத்திகிரி-ii-28-12
அநாமயவனம்-ii-5-75, 172
அரிபுரம்-ii-5-114
அழகர்மலை-(முத்தி தரும் தலம்)-ii-
28-12
அளகை-ii-12-15, 35, 37
ஆசுரம் : (சிங்கமுகன் ஊர்) வட கடல்
இடையில்)-1-22-12 ; ii-15-24
(தேவ தச்சன் நிருமித்தது)
ஆரூர்-இலக்குமி பூசித்து மங்கலம்
பெற்றது i-24-81 இந்திரன்
பூசித்துப் பேறு பெற்றது-i-25-1

ஆலங் காடு : காளியைச் சிவபிரான் ஆடலால் வென்ற தலம்-i-23-8
ஆவினன்குடி : கடவுள் வாழ்த்து 14; நகர-106 ;
இடைமருது-i-24-80
இலஞ்சியங்கானம் (திருநீரே?)-i-24-81
ஏமபுரம்-iii-7-3
ஏரகம்-கடவுள்வாழ்த்து15; நகர-106
ஐயாறு-i-4-94 ஐயாற்றில் நந்தி தவம் புரிந்தது-i-4-94 ஐந்து ஆறுகளின் அருகில் உள்ளது-i-4-94 கடகம்-ii-5-1
கந்தகிரி (கந்த வெற்பு) : பாயி : 77 ; நகர - 107-i-17-41 ; 18 - 13 ; தேவர் கம்மியன் முருகவேளுக்குக் கோயில் அமைத்தது-i-14-115, 126 பிரமனைச்சிறையிட்ட இடம்-i-16-16 கயிலை-மலை - என்னும் தலைப்பைப் பார்க்க
காசி : நகர-84 ; ii-5-172, 184, 207 216, 217, 228; ii-25-3; iii-9-68 இறப்பவர்க்கு ஈசன் பிரணவம் உபதேசிப்பது-i-16-11 ; ii-25-2 வியாசர் (திருமால் பெரியரென்று) பொய் சொல்லக் கை தம்பித்த இடம் : i-23-4
மணி கன்றிகை (ஆலயம்)-ii-5-174, 198, 260,
அகிலநாதன்(சாமி பெயர்-விசுவநாதன்)-ii-25-3
காஞ்சி: காப்புத்துதி 2, 3; நகர-1, 7 ; i-3-16 ; ii-15-4 ; 27-37
அழிவிலாத ஊர்-கடவுள் வாழ்த்து 18 உமை அறம் வளர்த்தது-நகர-84. உமை மா அடியிற் பூசித்தது-நகர-77, 84
ஏகம்பம்-நகர-76 ஏழு நகருள் ஒன்று-நகர-75 ; ii-11 - 47; கச்சபாலயம்-திருமால் கமடமாய்ப்பூசித்தது-நகர-110
கச்சபாலயம் பிரமன் பூசித்தது-நகர-110 கலிக்கு அஞ்சி முனிவர்கள் காஞ்சியை அடைந்தது-ii-21-23.
காஞ்சி சிவமயமானது-நகர-44,81 காஞ்சி முத்தி பாலிக்கும் தலம் நகர-86 காஞ்சியில் அரசு புரிந்தோர்-நகர-87 காஞ்சியில் சிவாலயம் 20-நகர - 88, 89 காஞ்சியில் திருமால் ஆலயம் 8-நகர-88, 89, 90
காஞ்சியில் நதிகள்-நகர-95. காஞ்சியில் நூற்றெட்டு ஆலயங்கள்-நகர-88
காஞ்சியில் விசேட இடங்கள்-நகர-91-100
காஞ்சியின் பிற நாமங்கள்-பெயர்க் காரணத்துடன்-நகர-64-74
காஞ்சியின் பெருமை-நகர-1-8
காஞ்சியின் பெருமை வரலாறு-நகர-103 காஞ்சியைக் காக்கும் தெய்வங்கள்-நகர 82
காஞ்சி-வீடருளும்-ஏழு நகரங்களுள் ஒன்று-நகர-75 காமக் கோட்டி-நகர-78-85 காமக்கோட்டம்-நகர-104
குமர கோட்டம்-கடவுள் வாழ்த்து 18 நகர-104, 107, 109
சிவன் படைத்த நகரம்-நகர-80
செந்தமிழ்க்குவரம்பு ஊர்-அவை19
தழுவக் குழைந்தது-i-3-16
திசை மயக்கு அறு நகரம்-நகர-78
தேவி- (ஏலவார் குழலி) பூசித்த தலம் i-23-10 ; ii-21-23
நகரேஷு காஞ்சிஎன்பது-நகர-75
பிரளயத்திலும் அழிவின்றி நிற்கும் தலம்-i-23-9. மா நிழலில் இறைவன் இறைவி வீற்றிருக்குந் தலம்-i-23-9. ii-15-4

சீகாளத்தி

[சீ + காளம் + அத்தி = சீகாளத்தி]
(i) சிலந்தி, பாம்பு, யானை, சிவகோசரியார், கண்ணப்பர், நக்கீரர், கன்னியர் ஆகியோர்-முத்திபெற்ற சிவத் தலம்-i-23-7

(ii) தென்பெருங் கயிலை (தக்ஷிண கயிலை)-i-23-7

தற்றலம் : திருமால் கோயில் கொண்டிருந்ததலம்-ii-28-1, 4 திருமால் கோயிலின் பெயர் தீநுழற்றம்-ii-28 - 2 சிவஸ்தலமானது-ii - 28 -19

குன்றுதோருடல் : கடவுள் வாழ்த்து-16

கூடல்-நகர-106

கேதாரம்-தேவி பூசித்து இடப்பாகம் பெற்றது : i-23-3

சீகாழி-ii-30-2. 38-7; iii-11-20 பன்னிருநாமங்கொண்ட தலம்-ii-21-39; 43-10 சண்பகவனம்-ii-29 -30 செங்குன்றூர்-i-26-1

செந்தூர்-கடவுள் வாழ்த்து 13; நகர-106 ; பாயி : 72 ; 75 i-26-1-iii-1-2, 38 ; 10-3, 9, 11 ; iii-11-20 ; 12-94, 100 ; 19-2 ; 21-1, 3, 55, 136, 180 தேவர் கம்மியன் முருக வேளுக்கு அமைத்த கோயில்-i-26-2 சேய்நலூர்-பாயி-71 ; i-24-80 முருகவேள் ஏவ தேவர் கம்மியன் அமைத்த பெயர்க் காரணம்-i-24-15

சோதிட்கம் (சிவன் ஊர்) ii-11-30

தணிகை-நகர-106, பாயி-77, 78, 80 குன்றுதோருடலுக்கு எடுத்துக் காட்டு-i-24-9 காட்டு-நகர-106தெய்வத்தணிகை பாயி-78

தில்லை (சிதம்பரம்) பதஞ்சலி, வியாக்கிரபாதருக்கு நடனம் பொன்னம்பலத்திற் காட்டிய தலம் i-23-14-15 திருநடம்-iii-9-77

தேவகிரி : பாயி-71 ; i-21-8, 11 31, 32 ; 23-2 ; ii-25-2 தேவர் கம்மியன் முருகவேளுக்குக் கோயில் அமைத்தது-i-21-12

நைமிசாரணியம்: வரலாறு-நகர-111-115

பரங்குன்றம்-கடவுள் வாழ்த்து-12 ; நகர-106; பாயி: 75; i-13-34; 25-24-38

பருப்பதம்-மலை உருவுடன் நந்தி சிவனைத் தாங்கும் தலம்-i-23-5

பழமுதிர் சோலை : கடவுள் வாழ்த்து 17

பறியலூர்-i-24-80

மகேந்திர நகர்(வீரமகேந்திரம்) சூரன் நகர்-பாயி-58, 73 ; i-22-20, 21, 31 ii-15-22 ; 16-1 ; 18-1 ; 21-17 ; ii-39-1, 40, 2, 4 ; 43-8, 98 ; iii-1-8-9, 11. 13, 15 39, 40, 45, 46, 48 ; iii-2,5, 7, 8 ; 3-6 ; 4-3 ; iii-6-1 6, 7. 8 ; 8-1, 9, 12, 84 ; 10-1 ; iii-14-4, 5 ; 15-78, 81 ; 18-8, 9, 11, 18, 24 iii-19-22 மகேந்திரம் தேவர் கம்மியன் நிருமித்தது - ii-15-1, 22 மகேந்திர நகரின் பெருமை வளம்-iii-8 - (1-89) மகேந்திரத்துக்கும் இலங்கைக்கும் இடையில் 1000 யோசனை தூரம்-iii-6-6

மஹேவதி-பிரகஸ்பதியின் ஊர்-i-3-38

பிரமன் ஊர்-i-3-49, 81 ; 4-86 : 14-127 ; 18-10 ; ii-11-30

மாயாபுரி : (தாரகன் ஊர்) : i-20-4, 25 ; 22-30 ; ii-15-27 ; தேவதச்சன் நிருமித்தது; 19-23 ; 24-1 ;

முதுகுன்றம் (விருத்தாசலம்) : காசியின் மேம்பட்ட தலம்-i-23-13 இறக்கும் உயிர்களுக்கு அஞ்செழுத்து ஓதி ஈசன் தனது கோலம் ஈந்திடும் தலம்-i-23-13

வள்ளிமலை (வள்ளியை நாடிய தலம்) பாயி-79

வெண்காடு : i-14-43 வெள்ளையானை (ஐராவதம்)பூசித்துஇழந்த தந்தங்களைப் பெற்றது-ii-43-113, 114

வெண்ணெய்நல்லூர்-சுந்தரரைச் சிவபிரான், வேதியர் கோலத்துடன்

ஓலைகாட்டி ஆட்கொண்ட தலம்-i-23-12-ii-9-1
வேங்கடம்: பார்வதியுடன் கோபித்து முருகவேள் குகை வழியாக வந் தெழுந்த தலம்-i-23-6
வைகுந்தம்: திருமால் ஊர்-i-3-49; ii-21-23, 24; 32-53

## ii நாடுகள்-தீவுகள்

ஆலந் தீவு-ii-6-17
இலங்கை-iii-2-19; 3-1, 6, 4-1, 2, 3, 5; 5-1, 16, 22; 6-10; 7·12-18-11, 16, 21, 24; 19-2; 21-4, 12, 13, 18
பாதலத்திற் புக்கது-iii-4-3, 9, 10
கலிங்கநாடு-ii-5-114
குடகு-ii-20-25; 25-13
குமரிகண்டம்-ii-11-47
கொங்குநாடு-ii-27-1, 6, 18, 19, 32, 35, 66
சொர்க்கநாடு-i-3-70
தண்டகநாடு-நகர-1
தெக்கிண தேயம்-ii-30-2
தொண்டைநாடு- நாட்டு-57; i-18-12
சிறப்பு-ஆற்று 1
நாவலந்தீவு ii-11-33; 15-26; 32-39, (சம்புத் தீபம்) ii-11-28 பாரத கண்டம்-ii-11-33 வர்ணனை-ii-11-(42-47) பூவலகம்-ii-33-17 மலையமானாடு-ii-5-87

## iii ஆறுகள்

கங்கை: ஆற்று: 23; நகர - 76; -ii-7-78, 80, 86; ii-5-173, 189; ii-9-9, 10 16,24; ii-11-46; 25-3; iii-9-68
உமை கரத்தினின்று வந்தது-i-11--57
பகீரதன் வேண்ட வந்தது-ஆற்று-10
வரநதி-i-25-4
கங்கைகள்-i-20-37
கண்டகி நதி: வரலாறு-ii-32-41
கம்பை: ஆற்று 26; நகர-66, 67, 95; 1-23-9; ii-11-46; 15-4
கம்பையை ஒத்தது பாலாறு-26
காஞ்சியில் உள்ள நதி-நகர-95
வரலாறு-ii-27-37
கலிச்சி-காஞ்சியில் ஒரு நதி-நகர-95
கவுதமி-ii-11-46
கவுரி-ii-11-46
காவிரி: i-10-61; 23-16; ii-23-18; ii-11-46; 24-80-27-19, 33, 35, 37, 66; 29-1-12 அகத்தியரது குண்டிகையில் இருந்து பெருகிய வரலாறு -i-23-16 வேறு வேறாய்ப் பெருகியது-i-23-16 காவிரி வெள்ளம் புரண்ட தன்மை-i-23-16; ii-29-(1-9)
காளிந்தி-நகர-76
குசை-ii-11-46
குண்டலை-ii-11-46
கோமதி-ii-11-46
சங்கவாகினி-ii-11-46
சந்திர பாகை-ii-11-46
சரயு-ii-11-46
சார்வரி-ii-11-46
சிகி-ii-11-46
சிகை-ii-11-46
சூரி-ii-11-46
சேயாறு: பிரமன் சேயை அபிஷேகம் செய்ய உதவியது-நகர-76
துங்கபத்திரை: ii-11-46
தூதபாபை-ii-11-46
நருமதை-ii-11-46
பம்பை-காஞ்சியில் ஒரு நதி-நகர-95; ii-11-46
பாஞ்சாலி-ii-11-46
பாபகரை-ii-11-46
பாரத்துவாசி-ii-11-46
பாலியாறு (பாலாறு): ஆற்று: 30, 31; நாட்டு-75; ii-11-46 நந்தி மலையினின்றும் வருவது - ஆற்று -9-11 பாலியாற்றின் வருணனை - ஆற்று-20-23
பாலாறு கம்பையை ஒத்தது: ஆற்று-26

பாலாறு - வரலாறு - காமதேனு
வின்பால்-ஆற்று-11, நகர - 76
சிவன்-திருமால் - பிரம்மா - விசுவா
மித்திரர் - இவர்களுக்கு ஒப்பிட்
டது-ஆற்று-19.21
பொதுமகளிர் மனத்துக்கு ஒப்பிட்
டது-ஆற்று-32
பிங்கலை : ii-11-46
பிச்சி : காஞ்சியில் ஒருநதி-நகர-95
பெண்ணையாறு : 1-23-12; ii-11-46
பொருநை-ii-11-46
பொன் மண்ணி-(காஞ்சியில் ஒரு நதி) நகர-95
பொன்னி-காவிரி பார்க்க
மஞ்சனி காஞ்சியில் ஓர் நதி-நகர-95
மண்ணி (1) காஞ்சியில் ஒரு நதி (பொன் மண்ணி) நகர-95 (2) சோழநாட்டு ஆறு, i-23, 16 ; 24-1, 6, 80
முகரி-ii-11-46
யமுனை : ஆற்று-23, ii-19-46 ;
வாணி ii-11-46
வெஃகா-காஞ்சியில் ஒரு நதி-நகர-95 ; ii-11-46
வேணி-ii-11-46
வைகை ; ஆற்று 27

## iv மலைகள்

இமயம் i-2-(12-18) ; ii-11-34, 35 ; 25-2 ; 31-4 ;
உதயகிரி-ii-3-33
ஏமகூடம் ii-11-34, 35
கந்தமாதனம் : ii-11-31 : (34-36) ; iii-1-18-19; 19-2
பாதலத்திற் புகாது iii-1-32 ; 4-9
கயிலை : பாயி : 5 ; i-1-1 ; i-5-5 ; ii-28-8 ; 33-3 ; 38-3 iii-21-104, 107 கயிலையின் வெண்மை-i-1-2
கயிலையின் அழியாச் சிறப்பு i-1-11
இமயத்தின் வடபால்-ii-11-41
கிரவுஞ்சகிரி: 20-1, 3, 88; iii-1-46, 10, 12-80
மாயைக் குன்று i-10-61, iii-12-150. 21-3
சத்தி-ii-11-47
சிருங்கம்-ii-11-34: 36
சுவேதம்-ii-11-34, 36
சையம்-ii-11-57
தேவகிரி—' ஊர் ' என்னும் தலைப்பிற் பார்க்க

நந்திவரை : ஆற்று 4, 6, 10
,, சிட்டல் இருக்கை-ஆற்று-9
நிஷதம்-ii-11-34. 35
நீலம்-ii-11-34
பாரியாத்திரம் ii-11-47
பொதியமலை-i-10-53 ; 59, 62, 64 ; ii.11-47, ii-23-16, 25-4, 10, 12 ; 27-17 ; ii-28-7, 19, 20
மகேந்திரம்-ii-11-47
மந்தரமலை-கடலில் ஆழ்ந்தது iii-4-4
மலயம் (பொதியம் பார்க்க)
மாகிருடம் ii-11-47
மாலியவான்-ii.18-(34-36)
மேரு-i-20-191 ; ii-11-36 ; ii-22-3; 23-6: 9, 15 சிறகிழந்தது-i-20-191 மேருவின் சிறப்பையும் தருக்கையும் நாரதர் விந்த மலைக்குக் கூறுவது-ii-21. (3.7) மேருவின் குறைபாடுகளை விந்த மலை கூறுவது ii-22-10-23) வில்லாக வளைவுபட்டது-ii-22-10 மூன்று சிகரங்கள் வாயு பறித் தெரிந்தது-ii-22-18 வீரபத்தி ரனின் பேருருவில் மேரு மணிப்பரல் பொலிந்தது ii-22-19 சரப உருவின் சிறைக் காற்றில் மின்மினி போல் திரிந்தது-ii-22-20பாரதம் பொறிக்கப்பட்டது -ii-22-21.
மைந்நாகமலை-(கடலில் ஒளித்தது) iii-4-5

விந்தமலை : i-10-61 ; ii-11-47 ; ii-22-1, 24, 25: 26 ; ii-23-6, 7, 10, 15-16 ; 24-5 ; 25-3, 4. 7 9, 10, 11 ; 27-17

பாதலத்திற் புக்கது-iii-i-32
மேருவுடன் இகலி வளர்ந்து-ii-22-24
வெள்ளி மலை (கயிலை பார்க்க) i-1-1, i-2-12 ; ii-30-19 ; 32-62 ;

## 5. கணபதி

கணபதி : நகர 82 ; i-10-94 ; ii-27-20, 22, 23, 26, 27, 31, 43, 45, 46, 47, 63, 65, 66
கணபதி அகத்தியர் குண்டிகையில் நீர் நிரப்பியது-ii-27-59-60
கணபதி தன்மருப்பினுல் கஜமுகாசுரனை அட்டது : i-10-4 ; ii-22-21 ii-27-28, 36 ; 40-24
கணபதிக்கு உரிய நைவேத்தியம்-ii-27-25
கணபதி காஞ்சி நகரைக்காப்பது-நகர-82
கணபதியை வழிபடாது கடலைக் கடைந்தமையால் மந்திரமலையாம் மத்து கடலில் ஆழ்ந்தது-ii-32-3, 4. iii-4-4 காகமாகச் சென்று அகத்தியர் கமண்டலத்தைக் கணபதி கவிழ்த்தது-ii-27-34, 36
திருநாமங்களும், கணபதியைக் குறிக்கும் சொற்றொடர்களும் : தாரகப் பிரமம்-ii-27-45, பங்கயத் தயனுமாலும் பரவுறு பழையோன் ii-27-31, முன்னோன்-ii-27-47 மூலமொழிப் பொருள்-ii-27-62 துதி-கடவுள் வாழ்த்து-8
நெற்றியிற் குட்டிக் கொண்டு வணங்குவோருக்கு அருள்புரிக என அகத்தியர் கேட்ட வரத்தைக் கணபதி தந்தது-ii-27-53,54
மேருவில் பாரதத்தைக் கஜமுகாசுரனைக் கொன்ற மருப்பினுல் எழுதியது-ii-22-21
வயிற்றிற் கச்சு அரவு-விநா-காப்பு-1
விகட சக்ர விநாயகர்-விநா. காப்பு-1, 2

## 6. சிவபிரான்

சிவபிரான் :
அந்தகா சுரனை அட்டது-ii-40-20; iii-9-63
அரி, அயற்கு அரியவன்-கடவுள் வாழ்த்து 5 ; i-3-12. ii-1-21 ; 21-46 ; iii-12-127
இந்திரனது யாகத்தில் அவன் தோளை முறித்தது-iii-9-70
எரிபட்ட காமனை எழுப்பியது-i-10-87
ஓங்கார முதற் பண்ணவன்-ii-34-1
ஓங்கார மேலைப் பொருள்-i-14-55
கங்கையை அடக்கிச் சூடியது-i-4-31
கம்பா நதியை வரவழைத்தது-ஆற்று-26
கயமுக அவுணனை அட்டது ; தோலைப் போர்த்தது-ii-40-20 ; iii-9-68
கரிக் குருவிக்கு அருளியது-iii-9-59
காஞ்சியில் மா நிழலில் வீற்றிருத்தல் -நகர-7
காமனை எரித்தது-i-4-89,
காளியை அடக்கியது-iii-9-66
குரண்டா சுரனை அட்டது-இறகு அணிந்தது-iii-9-64
கூற்றை உதைத்தது-i-4-27
சலந்தராசுரனை அட்டது i-4-29 iii-9-67.
சிங்க உரி-உடுத்தது i-4-32
சிலந்திக்கு அருளியது-iii-9-59
சூரனுக்குத் தந்த வரங்கள் :
இந்திரஜாலத் தேர்-ii-9-21
சக்கரம்-ii-9-22
சிங்க ஊர்தி-ii-9-23,
பாசுபதம் முதலிய படைகள் : ii-9-23 தொலையாத வஜ்ர மேனி-ii-9-23

பதினாயிரங்கோடி வெள்ளம் சேனை ii-9-24
நம் சத்தி ஒன்றே வெல்லும் என்றது ii-9-27
தக்கன் யாகத்தை அழித்தது-i-4, 30, 110, i-5-12 ; 6-20
தன்னை இழித்துப் பேசுதல்-i-6-(15-17)
திரிபுரம் எரித்தது-i-4-26, ii-40-20 iii-9-71
திருமணச் சடங்கு—பிரமன் இயற்றுவித்தல்-i-10-78
திருமணத்தில் பாம்புகளே அணிகலமானது-i-9-28
திருமணப் பந்தல் தேவதச்சன் அமைத்தது i-8(16-26)
திருமாலாம் மோகினியுடன் கூடி ஐயனாரைத் தோற்றுவித்தது-ii-32-48
துரும்பை (புல்லை) நட்டுத் தன் ஆற்றலைக் காட்டியது-i-4-41, iii-12-74
தேவி தழுவக் குழைந்தது-நகர-66 ; i-3-16.
தேவியின் முலைத் தழும்பு, வளைத் தழும்பு-நகர-84 ; i-13-5
நஞ்சுண்டது-i-4-31,49 ; ii-28-1 ; iii-9-65
நரசிங்கத்தைச் சரபமாய் அட்டது-ii-40-22
நாரைக்கு அருளியது-iii-9-59
நால்வர்க்கு ஞானோபதேசம் செய்தது-i-3-12, 13, 64-66
பகீரதன் வேண்டக் கங்கையை அளித்தது-ஆற்று-10
பஞ்ச தசக்ரீவரை அட்டது-iii-9-69
படைப்புத்தொழில் வராத பிரமன் கனவில் தோன்றி அருளியது-ii-14-5
பாம்புக்கு அருளியது-iii-9-59
பார்வதி திருமணம்-பங்குனி உத்திரம்-i-8-35
பிரமனது சிரத்தைக்கொய்தது-i-4-28
புலி உரி உடுத்தது-i-4-32; 5-12
புலிமுக அவுணனை அட்டது-ii-40-20
பூண்பன : ஆமை ஓடு-i-3-12 எனத்தின் எயிறு-i-3-12
மண் சுமந்தது-ஆற்று 27
முனிவர்கள் ஏவின முயலகனை மிதித்து நின்றது-iii-1-26
யானை உரி போர்த்தது-i-4-32
யானைக்கு அருளியது-iii-9-59
யோக நிலையில் இருந்த பொழுது உயிர்களின் நிலை-i-3-17-29, 67, 69
அழுகைக் கண்டு பெண்கள் மயல் பூண்டது-i-10-(12-29)
கையில், நகையில், விழியில், மெய்யில்-தீ-i-4-22
சத்தியின் பெருமை-i-4-19
செய்கை-i-7-13
தன்மை- பெருமை-கடவுள் வாழ்த்து-2-6; i-3- (75-77) -i-4 - (20-36), 40, 42 ; 11-3, 32-38,-iii-9.78 ; 21-118
திருவடியைத் திருமால் பன்றி உருவெடுத்துத் தேடியது-ii-8-76
புயம்-கரம் : நான்கு புயம்-i-10-1; i-11-55
பத்துத் திருக்கரங்கள் - விநாயகர் காப்பு-1
முகம்-ஐம்முகத்தர்-விநாயகர்காப்பு-1
தொல்லைத் திருமுகம் ஆறு-i-11-43, 63, 64
புதிதின் வந்திடு ... முகம் ஐந்து-i-11-63
முதன்மை-ஆற்று-25
திரிபுரம் எரித்தபோது - தேரைத் தன் விரலால் ஈசன் அழுத்தியது i-10-63-iii-1-33
திருமால் அம்பானது-iii-2-15
திருமால் விடையானது-ii-10-51
மூவரைக் காத்தது-i-4-95
சிவனே பதியாவார் (பஞ்சகிருத்தியம் செய்பவர்) ii-4-4

## 7. பார்வதி


பார்வதி : ii-43-118,

அண்ட மன்னுயிர் ஈன்றவள்-i-23-6,

இமய மன்னன் மகளாகி சோற்றது-பாயி-57, i-2-35

ஏழுலகும் முன்னுதவு சுந்தரி-i-14-81

சிவபிரானது இடப்பாகம் பெறப் பூசித்த தலம். கேதாரம்-i-23-3

சிவபிரானது திருக்கண்ணைப் புதைத்தது-i-3-16

தக்கனது குமரியான தீமையை அகற்ற எண்ணியது-பாயி-57 ; i-2-3.

துதி-கடவுள் வாழ்த்து-7

தேவர்களுக்குப் புத்திரப் பேறில்லா வகை சாபம் இட்டது-i-12-3

நிறம்-நீலுறு மணிதோய் மேனி நிமலை-i-2-35,

பார்வதி திருமணம்-பங்குனி உத்திரம்-i-8-35

பார்வதியின் இரு கண்கள்—திருமகளும், கலைமகளும்-i-14-46

பார்வதி சிவபிரானைப் பூசித்த தலம்-காஞ்சி-i-23-10,

மாயையின் முதல்வி-i-5-23,

மூவிரு சமயத்தின் முதல்வி-i-18-43


## 8. முருகவேள்


முருகவேள் :

அகத்தியர்க்கு உபதேசித்தது-பாயி-68 ; i-17-42 (ஓம் என்னும் பொருளை, சிவநூலை) iii-8-92

அறுமுக வேளானது (உமை எடுக்க) i-13-20, 21

அறுவர் தாய்மார்-iii-7-36

ஆட்டு வாகனம்-' ஊர்தி ' பார்க்க

ஆறெழுத்து (பஞ்சாக்ஷரமும் பிரணவமும் கூடியது)-i-14-18

இந்திரனை முருகவேள் தேற்றியது ii-43-140

இந்திராதி தேவர்கள் முருகவேளுடன் போரிட்டது-i-14-55

உறுநர்கள் தமக்கு வேண்டிற்று உதவுவோன்-i-11-116

ஊர்தி : ஆடு-பாயி-67, i-15-(23-25) உயவல் ஊர்தி (பிணிப்பு ஊர்தி) i-14-128

கடப்ப நிழலில் அமர்ந்தது-i-11-118

கந்தன்-பெயர்க் காரணம்-i-13-21 ; i-14-17

காங்கேயன்-பெயர்க் காரணம்-i-14-16

கார்த்திகேயன்-பெயர்க் காரணம்-i-13-30 ; 14-17

கார்த்திகை மாதர் அறுவரின் பால் உண்டது-i-11-114-117

குளகன்-i-24-1

சயந்தனது கனவில் தோன்றி அவனைத் தேற்றியது : iii-10 (3-12 ; 18)

சரவணபவன்-பெயர்க்காரணம்-i-14-16

சரவணம் (இமயச் சாரலில்)-i-11-67 75, 87, 90

சிவபிரானுக்கு ஓம் என்னும் பொருள் உரைத்தது-i-17-39

சிவபூஜை (சேய்நலூரில்) செய்தது-i-24-67-70

சிவனது நெற்றிக் கண்ணில் தோன்றியது-ii-43-121

சிவனிடம் படைக்கலம் பெற்றது-பாயி-72; i-24-75

சூர சம்மாரம்-பாயி-74 ; i-14-21 பத்து நாளில் முடியும் என்றது-iii-10-11 ; 11-32.

சூரன் முருகவேளை இழித்துப் பேசுதல்-iii-21-144

செந்தமிழ்-வடமொழி சேரும் இடத்தில் விளையாடுவர்-i-14-5

செந்தூரில் வீற்றிருந்த கோலம்-i-26-(3-9)

சேய்நலூர்-முருகவேள்-ஏவ விசுவகன்
மன் நிருமித்த நகரம் } i-24-10
,, நிருமித்த கோயில் } i-24-67

தலங்கள் :

காஞ்சி மாவடி-முருகர் துதி-முதற்பாயிரம்.
திருப்பரங்குன்றம்-கடவுள் வாழ்த்து -12
சீரலைவாய் ,, 13
ஆவினன்குடி ,, 14
ஏகரம் ,, 15
குன்றுதோறாடல் ,, 16
பழமுதிர் சோலை ,, 17
காஞ்சி-குமரகோட்டம் ,, 18

தாரகனுடன் போர்-i-20-(124-88)
திருக்கோலம்-i-20-126
திருமாலுக்கு எட்டாதவன்-iii-11-31
திருமுகங்கள்—சிவபிரானது மூவிரு குணமும் முருகன் திருமுகங்கள்—i-11-94
திருமுகங்களில் "ஓம்"–i-16-10 ; iii-12-134
திருவிளையாடல்-i-14 (4–12), (23–30)
துதி-i-14-82 ; iii-1-1, 49 ;
தேர்ப்பாகன்-வாயு-i-19-1, 2; 24-78
தேவசேனாபதி-i-14-106
தேவசேனையை மணந்தது-பாயி-76
தேவர்கள் பூசித்தது : (தேவகிரியில்) i-21-(9-31)
தேவர்கள் கனவில் முருகவேள் தோன்றி அவர்களைத் தேற்றியது-iii-10-24
தேவர்கள் போரிட்டது-i-14-55
படைக்கலம் (சேய்நலூரில் சிவனிடமிருந்து பெற்றது)-i-24-75
படைக்கலத்தின் பெருமை-i-24-76
படைப்புத் தொழிலை மேற்கொண்டது (ஒரு முகம்-நான்கு கையுடன் -நான்கு திருக்கரத்தில்-கண்டிகை-குண்டிகை-வரதம்—அபயம்) i-16-17
படை விவரம் : 2000 பூத வெள்ளத்தினர்-i-18 (36-41)
பதினொரு ருத்திரரும் படையாதிய ஆனது (அங்குசம், குலிசம், கொடி, தண்டம், தாமரை, தோமரம், பகழி, மணி, மழு, வாள், வில்) i-18, 36, 37
பன்னிரு திருக்கங்களில் உள்ளன இவை என்பது-iii-10-4
பாலை நிலம்-முருகன் வரலால்-பூங்குறிஞ்சி ஆயது i-25-(20-23)
பிரமனைக் குட்டியது, சிறையிட்டது.
சிறை விட்டது : பாயி-68 ; i-14-20, i-16-14, 15 ; 17-32, iii-11-16, 19 ; 17-51
முருகவேளின் :
அவதார காரணம்-iii-11-24
ஆறுமுகங்களுள் ஒன்று "ஓம்" என்னும் குடிலை-i-16-10,-iii-12-134
திருவுருவம்-iii-12-132. 133
நிறம் (அக்கினியின் வனப்பு)-i-14-79
பரம்பொருள் என்பது-i-11-125 : iii-11-23 ; 12 128, 129
பூத கணங்களில் வர்ணனை-i-19-(7-10)
பெருமை தேவி கேட்கச் சிவபிரான் கூறுவது i-14-(14-21); i-14-70 ; 16-18. வீரவாகு தேவர் உரைப்பது-iii-12-127-149
சிங்கமுகன் உரைப்பது : iii-21-(122-133)
மாலைகள்-கோடல், மராம் (கடம்பு) குரவு செச்சை (வெட்சி) i-14-69
விசுவ ரூபம்-தேவர் காண எடுத்தது-i-14-88
வீரமும் பெருமையும் i-20-172
'மூவிரு முகமுடை முதல்வன் வன்மையை நாவினில் ஒருவரால் நவிறற் பாலதோ, iii-6-19 ; 12-133. 134, 135 ; 21-127
முருகவேளுக்குத் தேர்ப்பாகன் வாயு-i-19-1
வள்ளியை மணக்கக் கணபதியை வரவழைத்தது-கடவுள் வாழ்த்து 17

வாத்தியங்கள் வாசித்தல்-(மணி, குழல், கோடு, வீணை, சிறுபல்லியம், பாடுதல், ஆடுதல்) i-14-12
வாயு-தேர்ப்பாகன்-i-19-1
வேல்-தலைப்பு 31-பார்க்க
வேல் பெற்றது-i-18-38

## 9. தேவசேனை-வள்ளி

அமுதவல்லி (தேவசேனை) இந்திரன் மகளாக வளர்ந்து-i-18-5
அமுதவல்லி உபேந்திரன் மகள் நான் என இந்திரனை அடுத்தது i-18-7
அமுதவல்லி-சுந்தரவல்லி (வள்ளி)-திருமால் அருளிய கன்னியர் i-18-1
அமுதவல்லி-சுந்தரி-முருகனை மணக்கச் சரவணத்தே தவஞ்செய்தது-i-18-1, 3
அமுதவல்லியை ஐராவதம் வளர்த்தது i-18-8, 9, 11
சுந்தரி-வள்ளிமலையிற் சிவமுனி மகளானது-i-18-5, 12
தெய்வயானை-பெயர்க்காரணம்-i-18-10
தெய்வயானையின் திருமணம் (பரங்குன்றில்)-பாயி-76
வள்ளியை-வள்ளிமலையில்-கவர்ந்து மணந்ததும் தணிகையில் வந்தமர்ந்ததும்-பாயி-79
வள்ளி-வானயின் (தேவசேனை) இருவருடனும் கந்தகிரியில் வீற்றிருத்தல் : பாயி-80

## 10. வேல்

அண்ணல் : சூலம் இரண்டு ஒரு படையாய் வந்ததென்ன ... ஏகிற்றவ் வேல்-i-20-182
ஏற்புறு படைக்கெலாம் இறைவனுகும் நம் வேற்படை-i-20-137
கடலை வற்றக் குடித்திடுகின்ற செவ்வேற் கூற்றம்-i-20-183
கிரவுஞ்ச மாயையிற் கிடந்த வீரவாகு முதலானோரை எழுப்புவது-i-20-186
தாரகனையும், கிரௌஞ்சத்தையும் அட்டது-i-20-185, 188
வேலின் பெருமை-தூய்மை-ii-35-22; iii-11-28, 31; 12-136

## 11. முனிவர்

அகத்தியர் :
அவை-6 ; i-4-17 ; 10-63, 65 ; 17-3 ; 20-3 ; 23-16; ii-20-13 ; 22-29 ; 24-1, 5, 7, 9, 10; 25-5, 7, 12, 13 ; 26-23, 30 ; 27-1, 4, 17, 20, 32, 35, 41, 45, 66, 28-4, 9, 17, 20 ; 41-14
அகத்தியரும் தமிழும் :
அரிய தீந்தமிழ் முனிவரன்-ii-27-10
இயலிசைத் தமிழ் முனிவரன்-i-20-92
சந்தநூற்றமிழ்த் தாபதன் ii-23-15
தமிழ்தேர் வள்ளல்-ii-27-45
தமிழ்நர் கோமான்-ii-28-6
தமிழ் முனிவன்-ii-24-5
தமிழ் வல்லமுனி-ii-26-31
தொன்னூல் அறைமுனி-24-7
பைந்தமிழ் முனிவன் ii-25-2
முத்தண்டமிழ் தேர்முனி-ii-27-54
மூதுரைத்தமிழ் முற்றுணர் மாமுனி-மெய்த்தமிழ் முனிவன் ii-24-5
வண்டமிழ் மாமுனி-ii-23-9
வண்டமிழ் முனிவன்-ii-24-13 ; 26-4

அகத்தியர் :—

கடல்நீரை உண்டது-(கடலில் ஒளித்திருந்த அவுணனைக் காட்டியது) i-10-49, 50. ii-22-29; 23-5, 10; 25-6; 26-1, 6, 30; ii-27-57 29-5. iii-12-4

காவிரி நதியைப் பெற்றது-ii-23-26

கிரவுஞ்சத்தைச் சபித்து அடக்கியது i-10-61; ii-24-12; iii-12-4; 21-51

குண்டிகையில் காவிரி அடங்கியது-ii-23-26

குற்றாலத்தில் திருமாலைச் சிவலிங்க வடிவம் ஆக்கியது-ii-28-15

குற்றாலத்து வைணவர்களால் வெருட்டுண்டது-ii-28-5

கோபித்த கோபத்தீ அந்தணர்களைச் சுற்றியது ii-28-18

சிவனது நேசன்-ii-27-50

சிவனைத் தியானித்து விந்தமலையை அடக்கும் ஆற்றல் பெற்றது ii-23-(11-16)

தென்பால் உயர்ந்ததைச் சமன்செய்ய சிவபிரான் அனுப்பினது—பாயி 63; i-10-46, 60, 64; ii-23-16

பெருமை-சிவபிரான் காவிரிக்குக் கூறுவது-ii-23-22

பொதியமலை-இருக்கை ii-23-16

மகன்-சித்தன்-ii-23-28

மிகக் குறியதாமுனி-i-4-17

முருகவேளிடம் உபதேசம் பெற்றது-பாயி-68, iii-8-92

லிங்க பூஜைசெய்து பிரமகத்தியை நீக்கியது-ii-27-(5-9)

லோபா முத்திரையை மணந்தது-ii-23-28

விந்தமலையைச் சிவனருள் பெற்று அடக்கியது-i-10-61; ii-25-7 iii-1-32. ii-23-10 (i-11-16)

வில்வலன் வாதாவியை அட்டது-i-10-61; ii-26-(30-32); ii-41-14

வில்வலன் வாதாவியை அட்டது கொண்டு அவரைப் தொடர்ந்தது-ii-27-2, 3

வைணவ பாகவதரின் வேடம் பூண்டது-ii-28-9, 10

## 12. திருவிளையாடற் சரிதங்கள்

கரிக்குருவிக்கு உபதேசஞ் செய்தது: iii-9-59

கழுவேற்றியது - (வைகை) ஓடு நீரில் எதிரேறினது : ஆற்று—27

நாரைக்கு முத்தி யளித்தது-iii-9-59

யானைக்கு அருளியது—iii-9-59

மண் சுமந்தது : ஆற்று 27

## 13. நால்வகை-பாட்டுவகை

தொன்னூல் (அகத்தியம்) – 'தொன்னூல் அறைமுனி-ii-24-7

நாடக நூல்-ii-40-14

மதன நூல்-

அனங்கன் நூல்-ii-3-15

காம நூல்-நாட்டு-53

காமரு மதனநூல்-ii-3-13

மனுமுறை நூல்கள்-iii-21-149

வடதொன்னூற் சந்தப்பா-ii-5-256

வள்ளைப்பாட்டு-(கடைசியர் பாடுவது) கடைசியர் வள்ளைப் பாட்டொலி-நாட்டு-29

வாதுளம் (சிவாகமம்)-வாதுளம் முதலிய தந்திரத் தொகுதி-iii-21-129

வாமதந்திரம்-நாட்டு-10

வெள்ளையாதி வியன்கவி :—

வெள்ளையாதி வியன்கவி யாவையும் தெள்ளிதின் மொழி தேன்கலை-நகர-49

## 14. நூலாசிரியரும், நூலும்


...லை எல்லாக்
களும உ ள என்பது–அவை–13
கந்தபுராணநூல் – வடமொழியினின்
றும் தமிழிலாக்கப்பட்டது-அவை
3, 16
காஞ்சியில் இருந்த முற்றுணர்ந்த
பெரியோர்கள் விரும்பிக் கேட்கக்
காஞ்சியிலே தமிழ்ப் பாடலாற்
பாடப்பட்ட புராணம் – அவை –
19, 20
நூலாசிரியர் உள்ளத்தில் முகவேள்
உலவுதல்–" *என் ...ன் உல ..."
–j–14–4
நூலாசிரியரின் சைவப்பற்று–" மேன்
மைகொள் சைவநீதி விளங்குக
உலகமெல்லாம் "–முதற்பாயிரம் 4
நூலின் பெயர்–" கந்தபுராணம் என்
பது–அவை–17
...வனும் உமையும உல...
எனக் கூறவும் இடம தருகின்


## 15. விஷய ஆராய்ச்சி


அசுரர்கள் பொழுது போக்கு வகை-
ii-40-(5-18); iii-8-27-89
அண்டங்களின் விவரங்கள் (சுக்கிரன்
சூரனுக்கு உறைத்தல், அண்டத்
தின் அளவை, இலக்கணம்
முதலிய ii-11-(2-66
அந்தணர்–நான்குநிலை - பிரமம் – இல்
லறம்–வானப்ரஸ்தம்–துறவு – ii–5
–13
அன்பு–தலை அன்புக்கு உதாரணம்-
i–13–22
ஆகமங்களின் வரலாறு–பாயி–35
இடி இடிக்கும்போது மந்திரம்
ஓதுதல்–ii–39–27
இல்லறத்தை (பெண்களை) இழித்து
மிருக கண்டேயர் பேசுதல்-ii–5–
(19–32)
இல்லறத்தின் சிறப்பைக் குச்சகர்
கூறுதல்-ii–5–(34–51)
இலங்கை கடலில் மூழ்கியது–iii–4–
(3–5)
உதவி–(தலை, இடை, கடை) i–4–45
உதவி செய்தோர் இவர் இவர் எனல்
i–4–(48–50)
உதவியின் சிறப்பு–i–4–46, 47. 51
ஊழி முடிவில் குதிரை வாயில்
நின்று நெருப்பு எழுதல்-iii–12–6
கடல் கடைந்ததும் கடல்
பிறந்ததும்-ii–32–1
கந்தபுராணத்தின் மேன்மை–அவை–
13
கந்த புராண வரலாறு–அவை–8,
12–15, 17, 19; பாயி 56
கள்ளின் கொடுமை-நாட்டு–11
கற்புடைப் பெண்டிரின் சிறப்பு–ii–5-
47
காமஞ் சிறந்தவர்–போகமார் பூமி
யினோர்–ii–3–13
காமத்தின் தீமை–ii–7–(10–13)
கிருத்திகை விரதத்தின் விசேடம்–
i–13–30
குயில் மேகத்துக்கு அஞ்சுதல்–ii–32
–1
குருகு கொள்ளியை மின்மினி என
நினைத்துத் தனது குடம்பையுள்
வைத்து மாளுதல்–iii–12–43
கொடை–தலை–இடை–கடை–முப்
பழங்கள் உவமை–நாட்டு–36
கொடையிற் சிறந்தன–ஐந்துதரு,
சிந்தாமணி, காமதேனு, சங்கநிதி,
பதுமநிதி–iii–8–45
சகுனம்–கெட்ட சகுனங்கள்–தீக்
தீக்குறிகள்-iii–17–34, 35, 36
சண்பக மரத்தில் வண்டு பயிலாமை–
ii–29–16
சமயம்–பிற சமயக் கோட்பாடுகளின்

விளக்கம்—பாயி—21—28
சாளக்கிராமம்-(கண்டகிநதியில்) வச்சிர தந்தி என்னும் கீடத்தில் தோன்றுவது - நாரணனே எனப் பூசிக்கப்படுவது-ii-32-(41-46)
சிவபுராண மேன்மை-அவை-10
சிவயோகிகள் வர்ணனை—நகர-35
சிவனடியார் பெருமை-ii-5 - (240—248)
சூர சம்மாரம் பத்து நாளில்—iii-10-11 ; 11-32 ;
சைவமே வீடு தரும்—நகர-83
ஞான போதகம் இன்ன தென்பது—i-5-32
தந்தையின் சொல்லுக்குக் கீழ்ப்படிதல் புத்திரர் கடமை—ii-5-53
தமிழ்க்கு வரம்பு காஞ்சி-அவை-19
தருமத்தின் சிறப்பு—ii-4-12,13
தவத்தின் சிறப்பு—ii-4-(15, 23)
தவத்தின் வலிமை—ii-4-25
தாமரை மின் கண்டு மலர்தல்—ii-1-7 ; 3-1 ;
துறவு—எது என்பது-ii—5—51
நரகம் புகுவோர்—எவரெவரென்பது—ii-5-54 ; 35-10
நாதம்—அகம், புறம், அருகியல் பெருகியல் எனப் பதினாறு வகை—ii-39—23
நானிலம்-(பாலை, குறிஞ்சி, மருதம், செவ்வழி)-ii-39-23
நூல் எவரெவர்க்கு ஓதுவிக்கலாம்—என்பது நகர—123
நூற்பயன்—முதற் பாயிரம்—4
பஞ்ச கிருத்தியம்—ii—4—4
பத்திநிலை மெய்ப்பாடு—i—4—4 ; iii—1-50, 51
பத்தியால் வரும் கண்ணீர் உவர்ப்பை மாற்றும்—iii—1—50
பதி இலக்கணம்—ii—4—4, 5
பதி பசு பாசம் (காசிபர் கூறுவது)-ii-4
பாலை நிலத்திலிருப்பன (பருந்து, பாம்பு, புறு, மான், செந்நாய், யானை i-25—7
பிறருக்கு அல்லல் விளைவிப்போருக்கு வரும் கதி-iii—12—104, 105
பிறவியின் பயன் கொள்ளும் வகை-ii—5—49
பதினெண்புராணவகை -பாயி-56-56
வரலாறு—பாயி 36—50
பூசைக்குப் பூக் கொய்யும் வகை-ii—29—29
பூசைமுறை (மஞ்சனம், அர்ச்சனை முதலிய) i—14—(121—123) i—21-(22—30)
பூதங்கள் கண்ணனுக்கு ஒப்பிடப்பட்டது—i—20—41
பூதங்களின் முக வகைகள்—i—13—13
பெண்ணாசையால் வரும் துயர்—ii—5-22, 24
பேய்கள் நீரும்நிழலும் பெற்றாலும் அணுக ஒண்ணாது (வடுகன் ஆணையால்) i—3-21
பொதுமகளிர் மனத்துக்கு உவமை-பாலியாற்றின் பிரிவுகளின் நீத்தம். ஆற்று 32
போர்ப் படைகளின் பெயர்—i—20—157 ; iii—3—9, 16—7 ; 17—22, 50
போருக்கு எழுமுன் செய்ய வேண்டிய யோசனைகள்—i—22—(48—54) 57
மங்கல ஆசி கூறி வீசப்படுவன—பூ, பன்னீர்—அக்ஷதை—ii—39—25
மரங்கள் தளிர்த்த வர்ணனை—ii—29—(14-27)
மரம், செடி பலவற்றின் பெயர்-ஆற்று—16, 17, 19 ii-21-41-42
மலை நிலத்து மிருகங்கள்—iii—1—24
மறையவர் பெற்ற சாபம்—i—6—21
மறையோரிலும் சிவனடியார் உண்டு i—6—23
மனத்தில் நினைத்தவுடனே நினைக்கப்பட்டவர் வருதல் : i—4—2 ; 5—14 ; 7—2 ; i—9—3 ; 14—114 ; 17-1, 2
மீன்கள் பெயர்—iii—2—11 ; 4—11

முனிவர்-வேட வர்ணனை–ii–26–3
முப்பழங்கள்–தலை, இடை, கடை கொடைக்கு உவமை–நாட்டு–36
யான்–எனது–நீங்குதல் வேண்டும்–i–16–2
ரசவாதி ஒருத்தனுடைய வர்ணனை – (அவனுடைய மோசவார்த்தைகள்) –ii–5–117; (121–125)
ராகு கேது (செந்நாகம், கருநாகம்)–சூரியசந்திரரைப் பற்றுவது–ii–32–251
ஏழு கிரகங்களுடன் கூடியது–ii–32–26
தேவருடன் அமிர்தம் உண்டது–iii–16–29
லோகங்கள்–மண்டலங்கள் :
சுவர்க்கலோகம் – இந்திராதிதேவர் இருப்பிடம்–ii–11–64
மகலோகம்–மார்க்கண்டர் ஆதியமுனிவர் இருப்பிடம்–ii–11–64
சனலோகம்–பிதிர்தேவர்கள் இருப்பிடம்–ii–11–64
தவலோகம்–சனகர் முதலாயினோர் இருப்பிடம்–ii–11–65
சத்தியலோகம்–பிரமன் தலம்–ii–11–65
நாரணன் லோகம்–ii–11–65
சிவலோகம்–ii–11–67
அண்டகோளகை–ii–11–65
புவர்லோகம்–ii–11–63
[சூர்யமண்டலம், சந்திரமண்டலம், நக்ஷத்திரமண்டலம் – புதனுலகம், சுக்கிரனுலகம், அங்காரகனுலகம், பிருகஸ்பதி உலகம், சனி உலகம், சத்த ருஷிகள் உலகம், துருவ மண்டலம்–சத்த வாயுக்கள்]–ii–11–62, 63
வள்ளல்–இடைவள்ளல்களின் தன்மை–ஆற்று–39
வாத்தியம் பல கூறப்பட்டது–i–10–6; 13–9; 19–12; 20–24–திருமணவாத்தியம்–i–10–73–போர் வாத்தியங்கள்–iii–17–29
வாழ்த்து : முதற்பாயிரம் 5
விதியின் வன்மை–ii–5–214
வினைத்துயர் யாரை அண்டாது–ii–37–25
வைணவ அந்தணர்கள்–சிவநிந்தனை செய்தது–ii–28–2, 3
தக்கனார் வழிமுறையோர்–ii–28–7
யார் யார் சாபம் பெற்றவர்கள்–ii–28–8

## 16. வழக்கங்கள்

ஆண் குழந்தைகள் அணிந்த நகைவகை :
அரைஞாண், கழல், குண்டலம், சதங்கை, ஞெகிழி, தட்டை (தண்டை, மதாணி, வீரபட்டிகை–i–44–2
இடி இடிக்கும்போது மந்திரம் ஓதுதல்–ii–39–27
காஞ்சி நகரைச் சுற்றி அகழி, மதில், மதில்மேற் பொறிகள், மதில்மேற் கொடிகள்–கோபுரத்திற் கொடிகள்–நகர–9–19, 20, 25
சபையில் வெற்றிலை, பாக்கு, சுண்ணாம்பு இவை வைத்துள்ள தட்டு–ii–39–12
தரையின் கீழ் அறைகள்–செந்தரைக் கொண்ட கீழறை–iii–15–70
புலவர்கள் நிலை–நாளும் இரந்திடு தொழிலராகியிழுக்கம் உற்றார்கள்–ii–1–48
பெண் குழந்தைகளுக்கு இடும் நகைவகை :
அங்கதம், ஆரம், சங்கு, தண்டை, தொடி, தோடு, பரிபுரம், பாடகம், பாதசாலம், மணிச்சுட்டி மதாணி–i–2–27
மணப் பிள்ளையின் அடிகளை மாமியார் பாலினால் கழுவுதல்–i–10–39
மணமகளைத் தத்தஞ் செய்து கொடுத்தல்–i–10–70

விளையாட்டு வகை—(ஆண்கள்) (அசுரரின் பொழுதுபோக்கு) ஆட்டுக்கடா சண்டை—ii—40—6
யானைப்போர்—ii—40—7
கோழிப்போர் ii—40—8
படைக்கலம் பயிலுதல் ii—40—11, 12
குதிரை ஏற்றம், யானை ஏற்றம் முதலிய—ii—40—10
காற்றாடிப் பட்டம் விடுதல்—ii—40—9
குழல்—வீணை—இசை கேட்பது—ii—40—13
நாடகம் பார்ப்பது—ii—40—14
புனல் விளையாடல், சோலை விளையாடல்—ii—40-17
கள் குடித்தல்- ii—40—18
விளையாட்டு வகை (பெண்கள்)—அம்மனை, கழங்கு—iii—8-30
விளையில் அரசர்க்குக் கடன்முறை உதவுதல்—நாட்டு—25
விளையில் வேண்டுவன போக எஞ்சிநெற்குவையைக் குரம்பையில் நிரப்பி வைத்தல்—நாட்டு—26

## 17. பழமொழிகள், நீதிகள், உண்மைகள் ஆட்சிக்கு உரிய அடிகள்

அங்கியிற் றோன்றிய பொருள்கள் மேனி கன்றுவதன்றியே விளியுமோ அதனால்-i-25-7
அடைந்துளோர்க் கருளுமாறும் அல்லவர் தமக்குத் தண்டம் படுந்துணை தெரிந்துகாட்டும் பான்மையும் பரமன் செய்கை-i-7-13
அப்பதியே யதனுக்கிணையன்றிச்—செப்பரிதாற் பிற சீர்கெழு—காஞ்சி நகர—6
அரனே தொல்லை யூழ் முறை யுணர்த்திடும்-ii-43-65
அளகை நேடிப் பார்வல் வந்தணையுமா போல்-i-25-26
அன்றோ விதிவலியை யாரே கடந்தாரே-i-22-8
அற்றமில் வலியரைச் சிறியராயினோர் பற்றிடின் மேனெறிப் பாலராவரால்-ii-43-17
அனலிசேர் உலங்கென உலைந்தனர்—ii-14-80
ஆவி பொருளாக் கொள்ளாதார் நெஞ்சே பொருவுந் தீங்குறினும் நடுக்கஞ் செய்யார் இடர்ப்படியார் ii-43-25
ஆவி முத்தர்தம் விழியினன்றி முன்னுறு விமலமூர்த்தி-i-14-30
இருவினைக் கீடா அச்செடுத்திடும் உயிர்கள் மாய்ந்திடும் என் அறிஞர் நிச்சயித்தனர்-iii-21-137
இன்பம தடைந்தகாலை இனிதென மகிழ்ச்சி யெய்தார் முழுவதும் உணர்ந்த சீரார்-ii-21-32
இன்பமும் துன்பந்தானும் இவ்வுடற்கியைந்த என்றே முன்புறு தொடர்பை யோர்வார் முழுவதும் உணர்ந்த சீரார்-ii-21-32
இன்னல் இன்பம் இன்றாகிய பரமன் i-9-2
ஈசனே கப்பன் அல்லால் யாரையும் பிறரால் தம்மால் ஆசறப் போற்றலாகாது அது துணிவாகும்-i-2-33
உழுந்துருள்கின்ற முன்னர்-i-20-30
எல்லார் செயலும் இறைவன் இயற்றுவதே அல்லாதிலையோர் அணுவும் அசையாது, எவையும் நில்லாதருளின்றேல்-i-4-40
எள்ளிட வெள்ளிடம் இன்றென ஈண்ட—iii-12-25
எழிலி கான்ற கனையொலி கேட்ட பாம்பின்-i-11-12
என் (சுக்கிரன்) பொருட்டினால் மாமழை சொரிந்திடும்-ii-1-7
ஏதும் ஓர் பயன் இல்லதோர் சிறுதொழில் இயற்றிவேதனைப் படுகின்றது மேலவர் கடனோ-iii-21-102

கடற்சென்று நவ்விசேர் காகம தென்ன–i–18–30

கண்ணியுட் பட்டதோர் கலையின் மாழ்குவான்–ii–1–31

கள்ளிதான் அகரு நல்கி அமர்ந்தென–ii–19–23

கள்ளினும் உளது கொல் கருத்தழிப்பதே–நாட்டு–11

களத்தில் இரித்துளோரையும் தொடர்வரோ சூரர்தம் இனத்தோர் i–24–57

களிப்பவர் தமக்குமோர் கதியுண்டாகுமோ–நாட்டு–12

கனவு கண்ட கதையாயிற்றே–i–4–109

காதல் நீங்கலா தலமரும் ஆருயிர்க் காரணம் ஆதி யீசன தருளினால் அவனதாகிய போல்–i–25–22

காமர் கெழு பெண்மயல் கடக்க எளிதன்றே–iii–4–22

காருடங் கண்ட பாந்தட் கணமெனத் துடிப்ப–i–20–54

கான்கொண்ட எரிமண்டு சிறு புன்புதல் போன்று–ii–26–31

கான் முளை நெறியரேனுங் கடியரை முடிவு செய்தல் நூன்முறை இயற்கை யாகும் நுவலரும் அறனும் அஃதே. iii–1–3

கீள் கொடு நகங் கொடு கிள்ளு மொன்றினை வாள் கொடு தடியுயுமோ–iii–21–47

குரவரைச் சிறுபாலரை மாதரைக் குறைதீர் விரத நற்றொழில் பூண்டுளோர் தம்மை மேலவரை அருமறைத் தொழிலாளரை ஒறுத்தனர் அன்றோ நிரய முற்றவும் சென்று சென்றல மருநெறியோர்–iii–21–103

குற்றம் உண்டாயினன்றே பொறுப்பது–i–6–31

குற்றமே தெரிவார் குறுமாமுனி சொற்ற பாவினும் ஓர் முறை சொல்வரால்–அவை–6

குறை மதி நீரோ நின் போராற்றல்–ii–41–11.

கொண்டல் பேரொலியினால் தாவிலா மகிழ்வுறுஞ் சாதகத் தன்மையாய்–i–11–30

சிந்தை ஆமையின் ஒடுங்கல் பெற்றார் i–3–24

சிந்தை ஒன்றுந் திறன் அரிது–i–3–61

சிறியவர் உயர்ந்தோராவர் உயர்ந்துளோர் சிறியராவர்–ஈது......... ஞாலத்தியற்கை–ii–21–33

சிறியவர் ஒரு பிழை செய்யின் மேலவர் பொறையோடு பின்னரும் போற்றலல்லதை யிறையதும் வெகுள்வரோ–iii–21–170

சீயந் தனையும் நரி வெல்லது திண்ணமாமோ–i–20–73

சேமத் திரு நிதி பெற்றிடும் இரவோனெனத் திகழ்வான்–ii–3–5

ஞாளி தசையில்லா என்பு கறித்திட்டால் இருஞ்சுவையும் பெற்றிடுமோ–ii–5–23

ஞான போதம் பனுவலின் அளவன்று–i–3–13.

தஞ்சம் ஆருளர் தாதையர் அல்லது தனயர்க்கே–i–5–6

தந்தைதன் மெலிவு காணில் தங்குடித் தலைமை யெல்லாம் மைந்தர்கள் பிரித்துக் கோடல் வழக்கதாம் அறனும் அஃதே–ii–21–26

தம்மகவுரைக்குங் கூற்றம் தாதையர் வினவுமாபோல்–i–25–39

தம்மிடை யூறுகாட்டினர்க்கலால் உலோபர் ஈவதோ–நாட்டு–32

தவத்தினால் வரும் பேற்றினும் உளது கொல் பெருமைத் தானதே–ii–42–50

தவத்தினும் ஆக்கம் உண்டோ–ii–12–93

தவத்தினும் பெரிதொன்றுண்டோ–ii–19–5

தவமே அலதி யாவுள வேண்டியாங்குதவ நின்றனவே–iii–8–44

தவமே யன்றி நெடும் பொருள் பிறவும் உண்டோ–ii–25–6

தன்னாலுணர் வரிதென்பர்கள் தன் பேரழகு—ii–34–27

தன்னுரை கொளாத மனை வாழ்க்கையது தன்னில் வெந்நிரயம் வீழும் வகையே விழுமி தம்மா—ii–5–56

தாதையானவர் அளித்த மைந்தர்களை விரும்புறுவர் தாயர் பெற்ற மாதரார் பாலுவகை செய்திடுவர் ஈதுலக வழக்கம் என்பார்—ii–41–3

தாதை வன்மை—மகற்குறுதோ—iii–1–33

தாயுண்டாயின் மைந்தர் தமக்கோர் தளர் உண்டோ—ii–10–5

தாயெதிர்ந்திடு கன்றின் தகைமையாய்—பாயி—14

தீதினை யகற்றவும் திருவை நல்கவும் தாதையரல்லது தனயர்க்காருளர் i–18–32

தீயழல் வறியதே எனினும் சீரியோர் ஏயிது சிறிதென எள்ளற் பாலரோ iii–21–29

தீயழலின் விளக்கத்திற் படுகின்ற பதங்கத்தின் செயலிதன்றோ—i–4–108

தீயோர்க் காவதோர் அரணம் உண்டோ—iii–1–28

துய்த்திடுந் திருவினில் வலியில் சூழ்ச்சியில் எத்துணைப் பெரியர்தாம் எனினும்.........ஒருவினை செயக் கருதில் தம்முடை மெய்த்துணை யோரை முன்வினவிச் செய்வரால் iii–21–22

துயரகற்றிட வேண்டுமேற் கடிதே யாம் ஏத்தல் செய்வதே கடன்—i–5–4

துயரும் இன்பமும் மோகமும் உயிர்க்கெலாம் முறையிற் கூடுமால்—ii–37–26

துன்பம் அறுமுகப் பெருமானன்றி யாரிது நீக்கற் பாலார் iii–11–25

துன்பமதுற்றபோதும் துண்ணெனத் துளங்கிச் சோரார்—முழுவதும் உணர்ந்த நீரார்—ii–21–32

துன்புறின் எய்தி நீக்கல் காவற்குரியார் கடனும்—அக்கடமை தூக்கின் மேவற்கரிதாம் தனி முத்தியின் மேலதன்றோ—ii–23–4

தேன்மழை யுதவிப் போற்றினுங் கைத்திடல் தவிருமோ காஞ்சிரங் கனி—iii–21–163

நல்கூர்ந் தீதென இரக்கு நீரார்க் கிம்மியின் துணையதேனும் ஒகையால் வழங்கா நீதி ஒன்னலான் ஒருவன் செல்வம் போகுமா றென்ன—ii–2–21

நான் பெண் பிறந்து பட்ட பரிபவமென்று தீரும் ஐயோ—ii–41–2

நீயலால் தஞ்சம துளதுகோல் எம்மைத் தாங்கவே i–ii–59

நெறியிடை ஒழுகலா இழுதை நீரரை மறலிதன் நகரிடை வருத்தல் போலுமால்—நாட்டு—31

பட்டவர் தம்மையும் படுப்பரோ—i–24–38

பாட்டினில் அடங்காக் காஞ்சியின் பெருமை பகர்ந்திடத் தமியனுக் கெளிதோ—நகர—103

பாற்றியக்கமும் நீழலுமாமென–i–10–1

பிறப்பதும் வளர்வதும் பின்னர் மூப்புவந் திறப்பதும் வைகலும் உலகில் எய்ந்தென—நாட்டு—28

புகழ் செய்வார் ஏது வரினும் எதிர் செல்வார்—i–4–53

புணர்ச்சி வேட்டழுங்கி நைவதோர் மகன்றிலின் பரிசென வருத்தம் எய்தினன்—ii–1–30

புறநெறிக்கணே வீழ்ந்துளோர் சிவனருள் புகுங்கால் அறிவும் ஆற்றலும் குறிகளும் வேறுபட்டனபோல்—i–25–23

புன்மையாகித் தாழ்ந்திரு நிரப்பின் மேலோன் ஒருமகன் தலைமை தாங்கி வாழ்ந்தவர் தமக்குச் சொல்லும் சொல்லென வறிது மீண்ட—i–20–57

பெண்ணறி வெவையேனும் பேதைமை வழியன்றோ—i–7–15

